ஜடத்தைத் தொழவேண்டியதென்ன ? ஜடத்தைத் தொழுவோமென்றாலும் ஜடப்பொருள்களை அவைகள் உள்ள நிலையில் தொழாமல், அவைகளை உருக்கி அல்லது செதுக்கி கண் கால் முதலிய அவயவங்களைச்செய்து தொழவேண்டியதென்ன ? அவர்கள் கொள்கைப்படி எல்லாம் கடவுளாகவிருக்க, ஸாலிக்கிராமாதி சில பதார்த்தங்களை உயர்வென்றும, மற்றவைகளைத் தாழ்வென்றும் செய்யவேண்டிய காரணமென்ன ? விக்கிரகாராதனை செய்யலாமென்பதற்கு இவர்கள் சொல்லும் யுக்திநிலைக்கமாட்டாதென்று காணுகிறது.

இரண்டாவது விக்கிரகத்தில் அந்தரியாமியாயிருக்கும் கடவுளைத்தியானிக்கிறோமே தவிர விக்கிரகத்தை யல்லவென்று சொல்லும் யுக்தியும் நியாயமானதன்று, கடவுள் எல்லாவற்றிலும் அந்தரியாமியா யிருப்பதுபோல விக்கிரகத்திலும் இருக்கிறார் அதில கை, கால், முதலிய அவயவங்கள் செய்யு முன்னும் இருக்கிறார், பின்னும் இருக்கிறார். இப்படியிருக்க விக்கிரகஞ்செய்தபின் அதற்கு பிராணப் பிரதிஷ்டை செய்யவேண்டியதென்ன ? இப்படிசெய்யாது அதற்குமுன் அதில் கடவுளில்லையென்றும், செய்தபின்பே யிருக்கிறாரென்றும் தெரிவிக்கின்றதல்லவா ? மேலும் நம்மையும் அப்பொருளையும கடவுள் சிருஷ்டித்திருக்க நாம் அதை மறந்து அவரை அதில் சிருஷ்டிப்பதென்னவிநோதம் ? இந்த இரண்டாவது யுக்திக்காரர் விக்கிரகத்தைக் கடவுளென்று சொல்லுகிறதில்லையாகையால், அவர்கள் கண்ணுக்குப் புலப்படும் அந்த விக்கிரகரூபம் தியானத்திற்குப் பிரயோஜன மற்றது. அவர்கள் அதில் அந்தரியாமியாயிருக்கும் கடவுளைத் தியானமார்க்கத்தாலேயே யடையவேண்டிவரும். அப்போது அவர்களுக்கும், ஈசுவரனை ஒரு பொருளில் அல்ல, சிருஷ்டியின் எல்லாப் பொருள்களிலும் தமது ஆத்துமாக்களிலும் பார்க்கவேண்டுமென்று சொல்லும் பிருமமவாதிகளுக்கும் தியான திருஷ்டியின் அளவில் பேதமேத

விர குணத்திலில்லை. ஆகையால் இவர்கள் மானஸிகபூஜை யை யங்கீகரிக்கிறவர்கள் ஆகிறார்கள்.

மேல்கண்ட இரண்டு யுக்திகளையும் கொண்டு சிலர் விக்கிரகாராதனையைக் குறித்து வழக்காடினபோதிலும், அரூபியான கடவுளைத் தியானிப்பது அதிக கஷ்டமாகையால் அவரது அவதாரங்களை விக்கிரகமாகச் செய்து ஆராதிக்கிறோமென்பதே இந்துக்களில் அனேகருடைய கருத்து. இந்த அவதார விஷயத்தை நன்றாய் யோசிக்கவேண்டியது. அவதார புருஷர்களே கடவுளென்பது சிலருடைய கருத்து. ஆனால் இக்கருத்துப் பிசகு என்று நம்புகிறோம். எப்படியெனில், கடவுள் அணுமுதல் மகத்துவரையில் எல்லா சராசரங்களிலும் அந்தரியாமியா யிருக்கின்றார். எல்லாம அவரது சிருஷ்டிப் பொருள்கள். நம்மெல்லா ரிடமும் அவர் அந்தராத்துமாவாக விருக்கின்றார். நம்மெல்லாரிடத்திலும் அவரது தெவாம்சமிருக்கின்றது. அவர் நமக்கு கருணித்திருக்கும் சக்தி, குணம், புத்தி முதலியவைகளை நாம விருத்தி செய்து தர்மத்திலும் பக்தியிலும் ஞானத்திலும் சத்குணங்களிலும் உயர்வு அடைந்தால் நமது ஆத்மா மேன்மையுள்ளதாகின்றது. அப்போது அவரது அம்சம் விசேஷமாக நம்மிடம் பிரகாசிக்கின்றது. இப்படி சாதனையினால் மேன்மை யடைபவர்கள் சிலர். அன்றியும் எத்தேசத்திலாவது தெய்வபக்தியும் சன்மார்க்கமும் குறைந்து தாழ்வுநேரிடுவதாயிருந்தால் அத்தேசத்தில் அப்போதப்போது தமது தேவாம்சம் விசேஷமாக விளங்கத்தக்க மனுஷர்களையுண்டு பண்ணி, அவர்கள் மூலமாய் தெய்வபக்தி, சன்மார்க்கம் முதலியவைகளை ஸ்தாபிக்கின்றார். இவ்வித அவதாரபுருஷர்கள் இத்தேசத்தில் மாத்திரமல்ல, எல்லா தேசங்களிலும், எல்லாகாலங்களிலும் உண்டாகி தேசசீர்த்திருத்தங்களைச் செய்திருக்கின்றார்கள். நமது தேசத்தில் இராமகிருஷ்ணாதி அவதாரங்கள் எப்படியோ அப்படியே மோசே, கிறி

ஸ்து, கான்பூசி, மகம்மது முதலிய அவதார புருஷர்கள் உண்டாயிருக்கின்றார்கள். இவர்கள் தேவதா அனுக்கிரகம் பெற்று பெருங்காரியங்களைச் சாதித்திருக்கின்றார்கள். இக்கருத்தின்படி வியாசர், சங்கரர், ராமானுஜர், பவுத்தர் முதலிய அநேகர் அவதார புருஷர்கள். இப்படிச்கன்றி கடவுளே அவர்கள், அவர்களே கடவுள் என்று சொல்வோமானால் இது சுருதி யுக்தி அனுபவத்திற்கு விரோதமாகும். 'நஜாயதே ம்ருயதே வா' (கடவுளுக்கு பிறப்பு இறப்பு இல்லை) 'அஜோநித்திய:' (பிறப்பற்றவர், நித்தியர்) என்பனபோன்ற சுருதிக்கு விரோதமாகின்றது. அண்டாண்ட கோடிகளையும் கடந்து எல்லையற்றவராயிருக்கும் கடவுள் மானிட தேகமெடுத்து ஒரு ஊரில் வசித்தார் என்றால் அப்போது அவர் மற்றிடங்களில் இல்லையா? சிருஷ்டி ஸ்திதி முதலிய காரியங்கள் நின்று போய்விட்டனவா? அனுபவத்திலும் விசேஷ கியானமாவது சாமர்த்தியமாவது உள்ள புருஷனைப் பார்த்து இவன் அவதார புருஷனென்று சொல்லுகிறோமல்லவா? நமக்குத் தெரியாத சில அற்புத சங்கதிகளை நாம் சில சமயங்களில் சொல்லுங்கால் அதை ஈசுவர கருணையைத்தவிர வேறென்னவென்று சொல்லக்கூடும்? ஆகையால் அவதார புருஷர்களெல்லாம் ஈசுவர கருணையைப் பெற்ற மனிதர்களே தவிர கடவுள் அல்ல என்பது நிச்சயம். ஆகையால் அவர்கள் ஈசுவரனுக்குரிய ஆராதனைக்கும் தியானத்திற்கும் உரியவர்களல்லர். அவர்கள் நம்முடைய மரியாதைக்கும் நன்றிக்கும் பாத்திரமானவர்கள். ஆகையால் அவர்கள் ஆராதனை ஈசுவராராதனை ஆகாது. மனுஷ ஆராதனையாகும். தாய் தந்தைகளைப்போல இம்மகாத்துமாக்களையும் தேவதைகளாக கௌரவிக்கவேண்டும்.

இந்த அவதார புருஷர்கள் ஜீவந்தராக வில்லையாகையால் அவர்களுடைய ரூபங்களை விக்கிரகமாகவைத்து அவர்கள்செய்த நன்மைகளை ஸ்மரிக்கக் கூடாதாவென்றால், இது

வும் மந்தபுத்தி யுள்ளவர்களுக்குச்சேயன்றி அறிவாளிகளுக் கன்று. மந்த புத்தியுள்ளவர்கள் ஸ்தூலமாகிய தேகத்தைப் பார்க்கின்றார்கள். அதன் அழகில் சந்தோஷிக்கின்றார்கள். ஓர் விக்கிரகத்தை நின்ற நிலையில்வைத்து நன்றாய் அலங்கரித் திருந்தால் இன்றைக்கு பெருமாள் நின்றநிலையில் ஸேவை ஸாதித்தார் என்றும், ஸ்திரீவேஷம்போட்டு செவ்வையாய் அலங்கரித்திருந்தால் இன்றைக்குப் பெருமாள் என்ன ஸேவைசாதித்தார்! என்றும், அறிவீனர்கள் சொல்லுவார் கள். அறிவாளிகளோ ஸ்தூலப்பார்வையைவிட்டு சூக்ஷ்ம மான ஆத்மாவின் குணத்தையும், கியானத்தையும், தர்மத்தை யும் கிரந்தங்களைப் படித்து மனதினால் கிரகித்து ஆநந்தப்படு வார்கள். அன்றியும் அவைகளை திருஷ்டாந்தமாகக் கொண்டு தங்கள் நடவடிக்கைகளை திருத்திக் கொள்வார்கள்.

மேல்காட்டியபடி எவ்விதமாய் யோசித்தாலும் விக்கிர காராதனை தெய்வத்தன்மையை யுணராத அறிவீனர்களின் பொருட்டு ஒரு விதமானபக்தியாக ஏற்பட்டதே யொழிய வித்தியாபி விருத்தியுள்ளவர்களாய், விஷய விசாரஞ்செய்து தர்மாதர்மங்களையும் நன்மைதீமைகளையும் பகுத்து அறியும் சக்தியுள்ளவர்களுக்காக வல்ல.

இது பக்திமார்க்கத்தின் பால்யாவஸ்தை. இப்போதி ருக்கும் நிலைக்கும் மேலான நிலையை யடையவேண்டு மென் னும் விருப்பமுள்ள எல்லா மனிதர்களும் விக்கிரகாராதனை யாகிய புத்திகுன்றிய மார்க்கத்தில் தம்வாழ் நாளை வீணாக் காமல் ஸர்வாந்தரியாமியாயிருக்கும் கடவுளைத் தமது உள் ளும் புறம்பும் எங்கும் நிறைந்திருக்கின்றார் என்கிற கருத் தோடு தியானித்து ஆத்மோன்னதியை யடைந்து பரமேசு வரனது முக்திப் பிரஸாதத்தைப் பெறுவதே அறிவோடு கூடிய மானிட ஜனனத்தின் பிரயோஜனமாகும்.

இந்த ஆரிய தேசத்தின் ஆதி ஆரியர்கள் தொன்றுதொ ட்டுபிரம்மகுண நாம பாராயணர்களாகி,அப்பரமாத் மாவை

பல பொருள்களிலும், பிரசன்னமாக இருப்பதை தரிசித்து ஸ்தோத்திரம் செய்து வணங்கி வந்தார்கள். பருத்துப் பெருத்து பனிகளால் மூடப்பட்டு பிரகாசிக்கும் பருவத ப்ரதேங்களிலும், அலைகளால் கர்ச்சிக்கப்பட்ட சமுத்திரங் களிலும், தீவிரமாக ஓடும் திவ்ய நதிகளிலும், நிர்மானுஷ்ய மான வனங்களிலும், காடாந்தகரமான காடுகளிலும், மனங்கலங்கும்படி இடிக்கிற மேகங்களிலும், உஜ்வல ரூபத்துடன் உதயமாகிற சூரியனிலும், இரமணீயமான சந்திரனிலும், நிமிஷத்திற்குள் நிமிஷம் ஜொலிக்கும் நக்ஷத்திரங்களிலும், சுழன்று வீசும் சூறைக்காற்றிலும், சண்டமாருதத்திலும், தெவிட்டாத தென்றல் காற்றிலும், அற்புதமான அக்கினியிலும், விநோதமான விலங்குகளிலும், பற்பலவிதமான கிருமிகீடங்களிலும், உனர்வனங்களிலும், பாடியாடிப் பறக்கும் பக்ஷிகளிலும, அழகும் சுவாசனையுமுள்ள புஷ்பங்களிலும, பிரம்மதேஜஸையுடைய புருஷருடைய முகங்களிலும், பரிசுத்தமான பதிவிரதைகளின் ரூபலாவண்யத்திலும், கவலை யற்ற சிசுவின் முகத்திலும், சர்வேஸ்வரனுடைய சாணித்யத்தை சதாக் கண்டு கொண்டாடின வர்கள். ஆதி ஆரியர்கள். எக்காரியங்களைச் செய் யினும், ஈஸ்வரதியான மின்றி அவற்றையாரம் பிப்பதில்லை. அவர்கள் உண்ணும் போதும், உரங்கும் போதும், விழிக்கும் போதும், வீடுகளை கட்டும் போதும், கட்டி முடித்தபோதும், வீடு புகும் போதும், பிள்ளைகள் பிறக்கும போதும், அவர்களுக்கு உணவு ஊட்டும் போதும், பெயரிடும் போதும், வித்தியாபியாசம் செய்யும் போதும், உத்தியோகம் செய்யும்போதும், விதை விதைக்கும் போதும், நாற்றை நடும்போதும், அதை அறுக்கும் போதும், அருவடை செய்யும் போதும், விளைவுகள் மலிந்த போதும், விளைவுகளற்று வருந்தும் போதும், வியாதிகளுற்ற போதும், உலகத்தை விட்டுப்போகும் போதும், மற்றெல்லா விதக்காரியங்களிலும், ஈஸ்வரப் பிரார்த்தனையும், தியானமும் செய்து வந்தார்கள். இந்த பக்தி சிரத்தையினால் பர

தகண்டத்தார் இப்பூலோகத்திலுள்ள எல்லாத் தேசங்களி லும், எல்லா ஜாதியார்களிலும், எல்லாம் மதஸ்தர்களிலும், சிறந்து இணையற்றவர்களாகப் பிரகாசித்திருந் தார்கள்.

வினா.—இப்போது இந் நாட்டார் சந்தியா வந்தனம் முதலான கிரியைகளைச் செய்து வருகின்றார்களே அவைகளெல்லாம் வேதோக்தமான கர்மங்களல்லவா?

விடை.—அல்ல, சந்தியா வந்தனாதி களிலும் புராணங்களின் கருத்துக்களை நுழைத்து விட்டார்கள்.

வினா.—உண்மையும், வேதோக்தமான பிரார்த்தனா பாசனை யும், வேதோக்தமான கருமங்களு மிருப்பதாகச் சொல் லுகிறீர்களே, அவற்றில் சிலவற்றை சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—பாவ மன்னிப்புக்காக பரமேஸ்வானை உண்மை யான பக்தி சிரத்தைகளோடு பிரார்த்தித்து, அநுதாபத் தால் பாவனை ராசவேண்டியிருக்க, அவைகளை விட்டு, அசுவமே தாதியாகங்களைச் செய்து ஜீவஹிம்சை செய் தும், சகதிபூசை யென்னும் பெயரால் சிலர் மது மாம் சத்தை உண்டும், பிராயஸ் சித்த,ப் பஞ்ச கவ்யம், கங்கா யாத்திரை, உபவாசம், ஸ்ரீபாத தீர்த்தம் முதலிய சடங்கு களை நியமித்து மூடஜனங்களை ஏமாற்றி காலங்கழிக்க ஆரம்பிக்கவே, அநேகர் வேதோக்தமான சாமானிய தருமத்தை விட்டொழித்து, உபயோகமற்ற விசேஷ தருமங்களை யனுஷ்டித்து வருகிறார்கள்.

வினா—சாமானியதரும மென்றால் என்ன?

விடை.—சாமானிய தருமமென்றால் ஈஸ்வரனுடைய ஆக்கி னையாம். அதாவது சகல தேசத்தாருக்கும், சகல ஜாதியாருக்கும், பொதுவாகிய தருமங்களாம். அதை அருள்கடவுள் "நன்மைசெய் தீமைவிடு, என்னும் இர ண்டு வாக்கியத்திற்குள் ளடக்கி, ஒவ்வொருவருடைய

உள்ளத்திலும் பதித்து வைத்திருக்கிறார். [நன்மையென்றால் சத்தியம், சாந்தம், சுவாமிபக்தி, தயை, தானம், பச்சாதாபம், பரோபகாரம், முதலானவைகளாம்.]

தீமையென்றால் = பொய், பொறாமை, களவு, குரோதம், கொள்ளை, கொலை முதலானதுகளாம். ஆகவே=தீமையைவிட்டு நன்மையை நாடில், சாமானிய தருமத்தை யநுஷ்டிக்கலாம்.

வினா.—விசேஷதரும மென்றால் என்ன?

விடை.—அந்தந்த தேசத்திற்கும், காலத்திற்கும், ஜாதிக்கும், லோகவிவகாரார்த்தமாக நியமித்துக்கொண்ட சங்கேதங்களாம். எப்படியெனில் இந்நாட்டில் மிலேச்சரினும் வேறானவரென்று காட்ட குடுமியையும், சைவர்களென்று காட்ட விபூதி ருத்திராக்ஷத்தையும், வைணவர்களென்று காட்ட நாமத்தையும், இப்படியே வர்ணாசிரமாதி தருமங்களுக்கே விசேஷதருமமென்று சொல்லலாம்.

வினா.—இவ்விரண்டு தருமங்களிலும் சிறந்தது எது?

விடை.—ஈஸ்வரனுடைய ஆக்கினையாகிய சாமானிய தருமமேயாம். அது எக்காலத்திலும், எத்தேசத்திலும், எங்கே போனபோதிலும் சுகிர்தத்தை கொடுக்கும். இதுவே இப்பிரபஞ்ச ஜனசமூஹ பொதுதருமமாக பிரகாசிக்கிறபடியால் இதுவே சிறந்தது.

விசேஷ தருமமோவெனில் காலதேச வர்த்தமானங்களைத்தழுவி ஜனங்களால் நியமித்துக்கொண்ட மாநுஷிகக்கட்டளைகளாம். இதன் உண்மையை யறியாதார், இதில் யாதாவது கிஞ்சித்து பிசகிப்போனால் உலகமே முழுகிப்போனது

போல எண்ணி, அவைகள் இந்நாட்டில் நிலைகொள்ளவேண்டிய கட்டுப்பாடுகளையும், கிரந்தங்களையும், அநுஷ்டானங்களையும் நியமிக்கவே! இந்நாட்டில் உண்மையான பிரம்மஞானமும், சதாசாரமும் சீர்கெட்டுப்போக சம்பவித்தது.

வினா.—இப்படிக் கெல்லாம் செய்வித்தவர்கள் யாவர்?

விடை.—மத்தியகாலத்திற்றோன்றிய சிலமடாதிபதிகளும், சில ஆசாரியர்களும் இந்நாட்டுமடாதிபதிகளும், ஆசாரியர்களும் வேதமோதியும், வேதாந்த தியானம் செய்தும், பிரம்ம நாமபாராயணர்களாகியும், சிறந்த பிரம்மஞானிகளென்று பெரும்புகழைப்பெற்றவர்களல்லவா?

விடை.—ஆம் ஆதியிலிந்நாட்டிலிருந்த ஆசாரியர்கள் உண்மையான பிரம்மஞானிகளாகிப் பிரகாசித்தது உண்மையே, ஆனால் காலபேதத்தினால் தேசங்கடோறும் விருத்திக்ஷயங்கள் உண்டாவது போலவே, ஒரு காலத்தில் இத்தேசத்தில் பிரம்மஞானத்தினையும், சதாசாரத்தினையும், சிறந்த ஆசாரியர்கள் இப்போது வேதாதி உபநிஷத்துக்களைப் பாராயணம் செய்து, தத்துவஞானிகளாகப் பிரவர்த்திக்காமல், புராண இதிகாசாதி கிரந்தங்களையே யநுஷ்டித்து, அவைகளிற்கண்ட அநேக பொய்யான கதைகளை மெய்யானவைகளாக நம்பியும், பிறருக்கு போதித்தும், அப்புராணாதிகளிற் காணும் மனுஷர் முதலானவர்களை தேவ அவதாரங்களாகவும், அவர்களுக்கு பிரதிநிதிகளாக விக்கிரகங்களையும், அவ்விக்கிரகங்களுக்கு, மனைவிமக்களாதி குடும்பங்களையும், அக்குடும்பங்கள் குடியிருக்கக்கோயில் கோபுரங்களை கட்டிவித்தும், விக்கிரக வீண்பூஜைகளை செய்தும், பிறரையும அவர்கள் இஷ்டப்படி செய்வித்தும், அவர்கள் இஷ்டப்படி செய்யாதவர்களை சமயமற்ற சண்டாளர்

என்றும் கீழ்ஜாதியாராகச் சொல்லி நிந்தித்தும், வந்ததன்றியில் ஆதியில் ஒரே ஜாதியாராகி ஐகமத்தியம் பெற்றிருந்த பரதகண்டத்தில் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திராதி பேதங்களை கற்பித்தும், ஸ்திரீ சூத்திரர்களை கேவலமாகவும் சுதந்திரமற்ற அடிமைகளாகவும் கொண்டுவந்த தன்றியில் சிலர் தமது புத்தி, யுக்தி, சக்தி, சாதுரியத்தினால் மத்திய காலத்திலிருந்த மூடர்களான மன்னர்களுக்கு இராஜகாரியங்களுக்கு மந்திரிகளாகவும், வைதீககாரியங்களுக்கு ஆசாரியர்களாகவும், இருந்து அம்மூட மன்னரை தம்வசமாக்கி அவர்களுடைய திரவியசகாயத்தினால், தமக்கிஷ்டமான கோயில் கோபுரங்களை கட்டிவைப்பித்து பூஜை புனஸ்காரங்களுக்கு மானியங்களை விடச்செய்தும், அம்மானியவருப்படியால் தம்சீடர்கள் சுகமாக உண்டு உல்லாசராய்ச் சோம்பேறிகளாகச் செய்தும் தாம் பிரதிதினமும் பூஜைசெய்யவேண்டி தமது வீட்டு விக்ரகசுவாமிகளுக்கு பூஜை செய்ய வேறு உத்தியோகஸ்தர்களை நியமித்தும் வாத்தலைப்பட்ட தன்றியில், தமது மதசித்தாந்தத்திற்கு உட்படாதவர்களை சண்டாளரென்றும் சார்வாகரென்றும், சாங்கியரென்றும், பாஷாண்டிகளென்றும், புத்தரென்றும், நாஸ்திகரென்றும்திட்டி தூஷித்து மூடமன்னரான தம் சீடர்கள் சகாயத்தினால் அவர்களை செக்குகளிலும், கல்காணத்திலும் போட்டு பதைக்கப் பதைக்க கொல்லுவித்து வந்ததன்றியில், மூடஜனங்களுக்கு மதாவேசத்தையும், ஜாதிவைஷமியத்தையும், கற்பித்து வந்ததில் அவர்கள் என்தெய்வம் பெரிது, உன்தெய்வம் சிறிது. உன்ஜாதி சிறிது என்ஜாதிபெரிது என்று சண்டை சச்சரவுகள்செய்துவர இந்நாட்டின் ஒருமைப்பாடென்னும், ஒப்பற்ற காப்புப்பாழ்த்துப் போகவே இதை யறிந்த ஏனையநாட்டார் படை யெடுத்துவந்து

வெகுசனுவாகப்பிடித்து, இந்நாட்டின் கோயில் கோபுர விக்கிரகங்களை இடித்து கொள்ளையாடி அருமையான கிரந்தங்களை அக்கினிக்கு இறையாக்கி அநேகரைத் தம் மதத்திற்சேர்த்துக் கொண்டார்கள்.

வினு.—பரதகண்டத்தின் படிப்பாளிகளும் மஹாபுத்திமான்களுமாகி மடாதிபதிகளுடைய ஆசாரமும் அவர்களுடைய சீடர்களும் இப்படிப்பட்ட ஸ்திதிக்குவரவே மற்றவர்கள் என்ன ஸ்திதியை அடைந்தார்கள்?

விடை.—பரிசுத்தமான பிரம்மஞானத்திலும் சத்தியத்திலும், சதாசாரத்திலும், பற்றுள்ள சிலர் பாமரஜனங்களுக்குப் பயந்து நாட்டைவிட்டுக் காட்டுக்கும் வனங்களுக்கும், பருவதப் பிரதேசங்களுக்கும், நதி தீரங்களுக்கே கியும் சன்னியாசிகளாகவும், சாதுக்களாகவும், பைராகிகளாகவும், தபோதனர்களாகவும், பிரம்மகுணுனுபவத்தை யனுபவித்துக்கொண்டு துறவிகளானுர்கள்.

வினு.—அப்போது பாமரஜனங்கள் எந்த ஸ்திதியை யடைந்தார்கள்?

விடை.—அவர்களில் கிஞ்சித் புத்தியை யுடையார்கள் பிரம்மா, விஷ்ணு, சிவன், சுப்பிரமணியன் முதலான தேவர்களை புராணங்களில் சொல்லியபடி பூசை செய்து வீண்பகதி உற்சவங்களை செய்கிறுர்கள்.

வினு.—மற்ற பெரும்பான்மையான பாமரஜனங்கள் என்ன ஸ்திதியை யடைந்தார்கள்?

விடை.—சக்தி பூஜையென்னும் பெயரால் காளி, மாரிமுனியன், மொட்டையாண்டி, சடையாண்டி, பிடாரி, காட்டேரி, குட்டிச்சாத்தான், பெரியண்ணன், சின்னண்ணன் கன

ன்னிமார், இடும்பன், கடப்பன், மதுரைவீரன், மன்னா
ர்சாமி, இருளன், மருளன், பெரியாண்டவன், சின்னாண்
டவன், அங்காளம்மன், பூங்கோலம்பன், மல்லாயி முத
லான மனோகற்பிதமான தேவர்களையும் நம்பி, அவர்க
ளுக்கு ஆடு கோழி எருமைக்கடாக்களை கொன்று பலி
யிட்டும், பொங்கலிட்டும், மதுமாமிசங்களுடன் பூஜை
செய்தும், வெறிக்ககுடித்தும், கூத்தாடியும்வரவே, அவர்
களுடையபேதைப்பெண்கள் மஞ்சற்பிள்ளையார், சாணி
ப்பிள்ளையார், இறந்துபோன கட்டுக்கழுத்திகள் பாவா
டைக்காரிகள். பூவாடைக்காரிகள், ஏழுகிணறு இடிந்து
விழுந்தபாதாளப்பொன்னியம்மாள், பேராண்டாளு முத
லானவர்களை தேவர்தேவிகளாக கொண்டு நடுவீட்டில்
பூஜைகள் போட்டு வருகிறார்கள், சிலர் இறந்த புருஷனு
டன் உடன்கட்டை ஏறுகிறார்கள், சிலர் அக்கினிகுண்
டத்தில் குதிக்கிறார்கள். சிலர் கும்பம் போட்டு கரகமெ
டுத்தாடுகிறார்கள். சிலர் மஸானத்தில் மண்டையோட்
டில் கள்ளை வார்த்து குடித்தாடுகிறார்கள். சிலர் நரபலி
யும் ரகசியமாகக் கொடுக்கிறார்கள். சிலர் கங்கையில்
பெண்பிள்ளைகளைப்போட்டு விடுகிறார்கள், சிலர் பசு
வணியென்னும் பெயரால் சில பெண்களை கோயில்க
ளுக்கு தாஸிகளாக விடுகிறார்கள், சிலர் கோயில் இரத
உற்சவகாலத்தில் சிலபெண்கள் இத்தனை பெயரோடு
சங்கமம் செய்வதாக வேண்டிக்கொண்டு பலரோடு
சேருகிறார்கள். சிலர் குடித்து நிர்வாணமாக நடிக்கி
றார்கள், சிலர் திருப்பதிமலைக்குப்போய் வாய்பூட்டுபோ
ட்டு கொண்டு போகிறார்கள். சிலர் அள்ளைக்கம்பிகளை
யும் முதுகுக்கம்பிகளையும் நாக்குக்கம்பிகளையும் குத்
திக்கொள்ளுகிறார்கள். சிலர் லிங்கம் காணாமல்போன
போது நாக்கையறுத்து பாவாடம் போட்டுக்கொள்ளு
கிறார்கள். சிலர் வீதிகளில் அங்கபிரதக்ஷணமாக உரு
ளுதண்டம் செய்கிறார்கள். சிலர் மயிர்களை சடை

சடையாக வளர்க்கிறார்கள், சிலர் சிவன்கோயில்களில் பொட்டையடித்துக் கொள்ளுகிறார்கள். சிலர் திரு வாராதனை காலத்தில் மதுமாமிசத்தை வைத்து வண ங்கி வருகிறார்கள். சிலர் ரனிகலு பூஜைகளென்றும் பெயரால் சொல்லத்தகாத காரியங்களை செய்து வருகி றார்கள். சிலர் உச்சிசெடியில் பஞ்சசெடில்குத்தி யாடுகி றார்கள். சிலர் நாகூர் மீராசாஹிபையும், கோரிகட்டிய சாஹிபையும் வணங்கிவருகிறார்கள். இம்மட்டோ! சிலர் அல்லாபண்டிகை காலத்தில் நாடாக்களைத் தரி த்து புலி முதலான விகார வேடங்களைபோட்டு ஆடுகி றார்கள். சிலர் கிருஸ்து மாதாக்கோயிலுக்கு மெழுகு வர்த்திகளைக் கொடுத்துக் கும்பிடுகிறார்கள். இன் னும் சிலர் அநேக விந்தையான காரியங்களை யெல் லாம் செய்துவருகிறார்கள். அந்தோ! வரவர உயர்குல த்தாரும், புத்தியற்ற பிராமண ஸ்திரீகளில் சிலர் கோனியம்மன் மாரி, பிடாரி முதலான கோயில்களு க்குப்போய் கும்பிட்டு வர ஆரம்பித்து விட்டார்கள்.

வினா.—பிரம்மஞானத்திலும் சதாசாரத்திலும், பிரபஞ்சம் எங்கும் பிரசித்திப்பெற்ற இத்தேசத்திற்கு இப்படிப் பட்ட குத்சிதகுறைவுகளுண்டாகிடதே! ஐயோ! இப் படிப்பட்ட குறைவுகள் நீங்க வகை இல்லையோ?

விடை.—இப்படிப்பட்ட குறைவுளுண்டாகும் காலங்களில் (பகவத்கீதை, நான்காவது அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ் ணர் "யதாயதா ஹி தர்மஸ்ய கிளாநிர் பவதிபாரதா" எப்போது வேதோக்த கருமத்திற்கு அழிவும், அதர் மத்திற்கு விருத்தியும் உண்டாகிறதோ அப்பொழு துநான் சத்கருமங்களைக்காக்கும் பொருட்டு அவதரிக் கிறேன் என்று சொல்லியப்படி) பரமேசுவரன் தேச

காலக்ஷேமத்தைக்கருதி மஹாத்மாக்கள் சிலரை சிருஷ்டித்து சீர்திருத்தி வருகிறார்.

வினா.—அப்படி சிருஷ்டிக்கப் பட்டவர்களில் சிலருடைய பெயர்களையும் காரணங்களைப்பற்றி சொல்லுங்கள் கேட்போம்?

விடை.—இக்கேள்விக்கு முன்னமே விடை சொல்லி இருக்கிறோம். ஆயினும் அதைப்பற்றி பின்னும் சொல்லுகிறோம். வேதசாஸ்திரங்களின் கருத்துக்களைச் சரியாகயறியாமல் சாக்கியர், சார்வாகர், மாயாவாதிகள் முதலானோர் இந்நாட்டில் ஒருவித நாஸ்திக மதத்தை ஸ்தாபிக்கப் பிரயத்தனப்பட்டபோது, வாசிஸ்டர் பராசரர், வியாசர், சுகர், சவுனகர், சாண்டிலியர், நாரதர் முதலான மஹான்கள் அவதார புருஷர்களைப்போலப் பிறந்து பரமேஸ்வரனுடைய பக்தியை பிரபல்யமாக்கினார்கள். பிறகு சில பிராம்மணருடைய அறிவின்மையையும் அந்தஸ்தையும் கண்டித்து தேசத்தில் புத்திப் பிரகாசமும், பொதுஜன பரஸ்பர க்ஷேமமுண்டாக்கவும் புத்தர் அவதரித்து புத்தமதத்தை ஸ்தாபிக்கவும், பிறகு அந்த புத்தமதஸ்தரால் உண்டான சில குத்சித கொள்கைகளைக் கண்டிக்கவும், ஸ்ரீ சங்கராசாரியரும் அவதரிக்கவும், அவருடையஸ்வரூப அத்வைதத்தை கண்டிக்க ஸ்ரீ ராமானுஜாசாரியரும், மாத்துவ சாரியரும், ஜாதிபேதத்தைக் கண்டித்து பரமேஸ்வரனை பல்லோரும் பேதமற்று போற்றித்தொழ தென்தேசத்தில் சிவனடியார்களும், ஆழ்வார் ஆசாரியர்களும், வங்கநாட்டில் சைதனியரும் வடநாட்டில் இராமாநந்தர் கபீரும், பாஞ்சால நாட்டில் நானக், குருகோவிந்தரும் மேற்கு நாட்டில் துக்காராம், இராமதாஸ், துளசிதாசர் முதலானவர்களும் அவதாரப் புருஷர்களாக ஜனித்து சமரச ஞானத்தை ஸ்தாபித்தார்கள்.

வினா.—இப்படி இந்நாட்டில் காலத்துக்குக் காலம் மஹான் கள் ஜனித்து பொதுநலத்திற்கு உழைத்து வருவத னால் தேசக்ஷேமம் விருத்தியாகு மல்லவா ?

விடை.—விருத்தியாகுந்தான் ஆயினும் காலபேதத்தினால் நமது மதாசாரங்களை சீர்திருத்தவந்த மதங்களுக்குள் ளும் ஜாதிபேதங்களும், சமயபேதங்களும் அவைகளால் சண்டை சச்சரவுகளும் அதிகரித்து தேசக்ஷேமம் தத் தளித்து தயங்குகின்றது.

வினா.—இவ்வித கஷ்டங்களை நீக்க எவர் அவதரித்தார் ?

விடை.—பரிசுத்தமான கங்கை நதியில் கால பேதத்தினால் சேர்ந்த குப்பை சேறு முதலான அசங்கியங்கள் அதிக மாக அந்நதியை யாதாரமாகக் கொண்டு வாழும் பிரா ணிகள் (அச்சேற்றின் நாற்றத்தினால்) தவித்து வருந்து கையில், ஜகதீசுவரனுடைய அருள் ஜலத்தைப்போல பெய்யும் மழையின் பெருவெள்ளம் அக்கங்கையில் விழ அதனால் அதிலுள்ள சேறு முதலானவைகளை நீக்கி சுத்தமாகக் அந்த வாழும் பிராணி கோடிகளு க்கு பேரானந்தம கொடுப்பதைப் போலவே நமது நாட்டில் நவீனமாக நுழைந்த விக்கிரக வீண்பக்தி, மூடபக்தி,சமயபேதம்,ஜாதிபேதம்,சஹோதரவாஞ்சை ஒருமைப்பாடும் பாழ்த்துப்போய் தவிக்கும் இக்கால த்தில் முன்காலத்திலிருந்த சிறப்பையும் சீர்மையையும் பெருமையையும், மகிமையையும் அளித்த பரிசுத்த மான பிரம்மஞானத்தையும் சகோதர வாஞ்சையை யும், அதனால் ஒருமைப் பாட்டையும் விருத்தியாக்கி இகபரசுகத்திற்கு இன்றியமையாச் சாதனமானதும், மத்தியகாலத்தில் பாமரஜனங்களுக்கு பயந்து காடுகாடு களிலும் பருவதப்பிரதேசங்களிலும், நதி தீரங்களிலும், ரிஷிகளாகவும், சாதுக்களாகவும் போய் அந்தரங்கமாக

அனுஷ்டித்து வந்தப் பரிசுத்த ஆஸ்தீக மதசித்தாந்த மென்னும் பிரம்மஞானத்தை மறுபடியும் பரதகண்டத்தின் ஒவ்வொரு வீட்டிலும் குடும்பத்திலும் மீட்டுக்கொண்டுவந்து, அனைவரும் அனுஷ்டித் தானந்தமடைய கல்விக்கடலும் உத்தம பிராம்மணதிலகருமாகிய ஸ்ரீ ராஜாராம் மோஹனராயர் என்னும் மஹாபுருஷன் பிரம்ம ஸமாஜமென்னும் ஒரு சபையை யாரம்பித்தார்.

வினா.—அவர் ஆரம்பிப்பதற்கு சில முக்கிய காரணங்களுண்டோ? உண்டானால் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—அப்போது இந்நாட்டில், முக்கியமாக வங்கநாட்டில் சக்திபூஜை, சஹகமனம் ஒரு பக்கமும், சைதன்னியசந்நியாசம் ஒருபக்கமும்,பாலியர்புத்தியை பிரமிக்கச் செய்து வந்ததன்றியில், நாட்டிற்கு நவீனமாகவந்த மகமது கிருஸ்து முதலான மதஸ்தர்களுடைய போதனைகளினாலும் புத்தி பிரமை யடைந்து எம் மதத்தையும் பற்றாமல் சிம்மதிபாக நிரீசுவரர்களாகி மனம்போனபடி நடந்த மாசுற்றவர்களைத் திருத்தி அவர்கள் பிரம்மஞானத்தையும், சஹோதரவாஞ்சையுடன் வாழ்விக்கக்கருதியே பிரம்ம ஸமாஜத்தை ஆரம்பித்தார்.

வினா—அப்படியா? அவர் சரித்திர சங்கிரகத்தைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—அப்படியே சொல்லுகிறோம் கேளும்.

# Sree Raja Rama Mohana Roy.

## ஸ்ரீராமமோஹனராயர் சரித்திரம்.

---

இந்த மஹாத்மா வங்கநாட்டைச் சார்ந்த, ஹூக்ளி ஜில்லாவில் இராதா நாகூர் என்னும் பட்டணத்தில், கலியாப்தம் 4875-ல் (கி-பி- 1772-ல் மேமீ 22-தேதி அவதரித்தவர். இராமகாந்தராயர் இவருடைய தந்தை தாரணி தேவியார் இவருடைய தாயார், இவர் குடும்பத்தார் பரம்பரையாக பிராம்மண புரோஹித தொழிலைச்செய்து வந்தவர்கள். இவரதுகொள் பாட்டனார் மூர்ஷடாபாத்து நபாபிடத்தில் பெரிய உத்தியோகத்தைப்பெற்று பெரும் பொருளையும் பிரதிஷ்டையையும் பெற்றவர்.

இராமமோஹனருக்கு ஐந்தாவது வயதில் வித்தியாபியாசம் செய்விக்கவே கல்வியில் அத்யந்த விருப்ப மிருப்பதைக் காண்பித்தார். மேலும் அச்சிறு வயதிலேயே வீட்டிலிருக்கும் விக்கிரஹபூஜையில் அதிக சிரத்தையுடையவராகக் காட்டிவந்தார். பனிரெண்டுவயதாகவே அக்காலத்தில் இராஜபாஷைகளாக விருந்த பார்சி, அரபிபாஷைகளைகற்க அப்போது அப்பாஷைகளுக்கு சிறந்த பாடசாலைகளையுடைய பாட்னுபாடலீ புரத்திற்கு அனுப்பப்பட்டார். அங்கு இரண்டோரு வருஷகாலம் பார்சி அரபுபாஷைகளைக்கற்றபிறகு சமஸ்கிருதபாஷையையும், இந்து ஆகமவேத புராணசாஸ்திரங்களையும் கற்கும்படிக்குக் காசிபட்டணத்திற்கு (பனாரிசுக்கு) அனுப்ப, அங்குபோய் தமது பதினாறுவது வயது வரையில் படித்துவர, விக்கிரகபூஜை வீண்பக்தி என்று கண்டு பலரிடம் பிரசங்கம் செய்தும், அது விஷயமாக ஒரு

சிறுபுத்தகத்தையும் பிரசுரம் செய்தார். இதை யறிந்த தந்தை இராமமோஹனர்மேல் அதிக கோபமுற்று வீட்டை விட்டு ஓடிப்போகச் செய்தார். இதனால் இராமமோஹனர் நான்கு வருஷகாலங்களாக மதவிஷயவிசாரணைக்காக நாலா பக்கங்களில் திரிந்து, பிறகு சில பைராகிகள், சாதுக்களுடன்கூடி இமாசலத்தைக் கடந்து திபேத்து தேசத்திற்குப்போய் புத்த மதத்தைப் பூரணமாக அறிந்துப்ய முயன்றார். அந்த புத்தமதஸ்தர்களும் விக்ரக வீண்பக்திகளைச்செய்து வருவதைக்கண்டு அவர்களோடு தருக்கமாட, அவர்கள் மதவைராக்கிய கோபமூண்டு இராமமோஹனரை கொலை செய்ய பிரயத்தனஞ் செய்ப, சில புத்தமதஸ்தர்களுடைய சகாயத்தினால் அந்த ஆபத்திலிருந்து விடுபட்டவராகி இந்தியாவுக்குத் திரும்பிவர வழியில் கங்கைநதிக் கரையோரங்களில் அநேக இந்து குடும்ப விதந்து ஸ்திரீகளைப் பதைக்கப் பதைக்க உடன்கட்டை யேறச்செய்து கொன்றுவருவதைக் கண்ணாரக் கண்டு கலங்கிக்கொண்டு கல்கத்தாவுக்கு வரவே, தந்தையானவர் இராமமோஹனருக்கு நல்லபுத்தி வந்திருக்குமென்று நம்பி குடும்பத்திற் சேர்த்துக் கொண்டார்.

அப்போது இராமமோஹனருக்கு வயது இருபது அந்தவயதில் ஆங்கிலபாஷையையும், ஆரியபாஷையையும் கற்கத்தொடங்கி அவ்விருபாஷைகளிற் சிறந்த பண்டிதராகவே, கி. பி. 1800௵ முதல் 1813௵ வரையில் கவர்ண்மெண்டு உத்தியோகத்தில் அமர்ந்து கடைசியாக சிரஸ்த்ததார் என்னும் பெரிய வேலையில் அமர்த்தப்பட்டார். பிறகு கி. பி. 1814-௵ கல்கத்தாவுக்கு வந்து சமய சர்சைச்செய்ய 1816-வருஷம் தகப்பனர் பரமபத மடையவே சர்வ சுதந்தராகி வேதாந்தகிரந்த சங்கிரகமாக அநேக உபநிஷத்துக்களின் பொருளை வங்கபாஷையிலும், ஆங்கிலபாஷையிலும் எழுதி பதிப்பித்தார். கி. பி. 1817-௵ சென்னை ராஜதானியில்

ஸ்ரீ சுப்பிரமணியபண்டிதருடைய விக்கிரகாராதனை ஸ்தாபன சித்தாந்தத்தை பிரபல நியாயங்களால் கண்டித்து பரிசுத்த ஆஸ்திகமத சித்தாந்தத்தை ஸ்தாபித்தார்.

கி. பி. 1820-௵ ஏசுநாதருடைய நீதிகளைப்பற்றி வங்கபாஷையிலும் ஆங்கில பாஷையிலும் புத்தகங்களைப் பதிப்பிக்க, அவைகளை சில கிருஸ்துமத பாதிரிமார்கள் கண்டித்தெழுத அவைகளைக் கண்டித்து லத்தீன், இப்புரு கிரேகு பாஷைகளிலுள்ள பைபிள்களைப் படித்துத் தெளிந்து கிருஸ்துமதம் பேதத்துவமார்கமென்று பலபிரபல நியாயங்களில் நிரூபித்து மூன்று விண்ணபப் புத்தகங்களைப் பதிப்பித்தும் கனம் ஆடம் என்னும் பாதரியாரையும் ஏகேஸ்பரமதத்திற் சேர்த்தார்.

கி. பி. 1830-௵ ஜனவரி௴ 23-தேதி கல்கத்தாவில் முதல் முதல் பிரம்ம ஸமாஜத்தை ஸ்தாபித்து அதில் பிரமோபாசனையையும், பிரம்மசமய உபந்நியாசங்களையும் செய்ய ஆரம்பித்தார். பிறகு தத்வஞான விருத்தியின் பொருட்டு ஆத்மஞான சபையையும், பால்ய விவாஹங்களைத்தடுக்கவும், சஹகமனத்தைத்தடுக்கவும், விதவா விவாஹம் செய்விக்கவும், ஜனாசார சீர்திருத்தங்களைச் செய்விக்கவும், சுதேசிகளுக்கு உயர்தர கல்வியை கற்பித்துக் கொடுக்கவும், கவர்ன்மெண்டாரால் நீதி பரிபாலனம் கிரமமாக செய்விக்கவும், அச்சாபீசு சுதந்திரத்தையடையவும் அநேக சபைகளை ஸ்தாபித்தும், அநேக புத்தகங்களையும், விண்ணபங்களையும் எழுதிவருகையில் டில்லி சக்கிரவர்த்திக்கு பிரதிநிதியாகவும், சஹமன சட்டத்தை ஸ்திரப்படுத்தவும், தேசாபிமானத்தையும், ஜனாபிமானத்தையும் கருதி, 1831-௵ நவம்பர்௴ 19-ம் தேதி இங்கிலாந்துக்கு யாத்திரையாகப்போய் அவ்விடத்திய ஆங்கிலீ அரசாரையும், பிராஞ்சுதேசத்துக்குப் போய் அந்நாட்டு அரசரைக்கண்டு சிநேகிதராகியும் பிறகு

இங்கிலாந்துக்குப்போந்து அநேக படிப்பாளிகளையும், பிரமுகர்களையும், பார்த்து பார்லிமெண்டு சபைக்குப்போய் இத்தேசத்தின் க்ஷேமத்திற்கு உழைத்து வருகையில், 1883-ஞ செப்டம்பர்மீ 27-ந் தேதி ஜுரவியாதி பீடிதராகிப் பரமபதத்தை யடைந்தார். இந்த மஹாபுருஷனுடைய திருமேனியை பிரிஷ்டல் நகரத்தில அடக்கம் செய்து இதன்மேல் சிறந்ததோர் சமாதியைக்கட்டி கொண்டாடி வருகின்றனர். இப்போது இந்நாட்டில் உயர்தரகல்வி விருத்தியாகி வருவதற்கும் வருஷம் பிரதிவருஷம நாட்டின் நாலாபக்கங்களில் கூடி வரும; காங்கிரஸ் மஹாசபை, கான்பரன்சு மஹாசபைக்கும், இந்துக்களுடைய அச்சுசுதந்திரத்திற்கும் இவரே பிரதம பிதாவாகையால் சிறந்த தேசாபிமானி யாகிய இவர் பரமபதமடைந்த திருநக்ஷத்திரத்தை ஒரு விசேஷதினமாக சகல ஜாதியார்களும், சகல பதஸ்தர்களும் பிரதிவருஷமும் பலதேசங்களில் கூட்டங்கள்கூடி கொண்டாடி வருகிறார்கள்.

வினா.—ஸ்ரீ ராமமோஹனர் பரமபதமடைந்த பிறகு அவருடைய பிரம்மஸமாஜம் என்ன யாகியது?

விடை.—ஸ்ரீ ராமமோஹனருடைய ஆப்தர்களாகிய ஸ்ரீ துவரகநாத தாகூர் பண்டிதராமசந்திர வாகீசரால் கொஞ்சகாலம பரிபாலிக்கப்பட்டு வந்தாலும் ஸ்ரீ துவரகநாத தாகூரவாகள் குமாரராகிய ஸ்ரீ மஹரிஷி தேவேந்திர நாத தாகூர் அவர்கள் பிறகு அதைத் தக்கப்படியாதுகாத்து பிரபலமாக்கினர்.

வினா.—அந்த மஹரிஷி தேவேந்திரநாதருடைய சரித்திரத்தைச் சங்கிரகமாகச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—Maharishi Devendra Nath Taquar, ஸ்ரீ மஹரிஷி தேவேந்திரநாத தாகூரவர்கள் இந்த தேவேந்திர நாத தாகூரவர்கள் கலகத்தாவில் கல்வியிலும் செல்

வத்திலும் சிறந்த கோடீசுவர ரென்னும் தூவராகநாத தாகூரவர்களுடைய குமாரராக கி. பி. 1817-ஆ பிறந்த பிராம்மண சிரேஷ்டர் பிறவிச் செல்வம்பெற்றவராகிய இவர் சிலகாலம் இந்து கலாசாலையிற் கல்விகற்று வந்தாலும், தமது பதினாறாவது வயதுமுதல் இருபதாவது வயது வரையில் உலகசிற்றினப சுகசாகரத்தில் மூழ்கி தத்தளித்துக் கொண்டிருக்கையில் தன் குடும்பத்தில், ஒருவர் இறந்துப்போக, அப்பிரேதத்தோடு மயானத்திற்குப்போய் அப்பிரேதம் சுல்பகாலத்திற்குள் சாம்பலாகிப் போனதைக்கண்டும் க்ஷணபங்குரமான உலகவாழ்க்கையைக்கருதி சிந்தித்துக்கொண்டு வீடுவரவழியில் ஸ்ரீ ராமமோஹனரால் பதிப்பிக்கப்பட்ட ஒரு உபநிஷத்து வாக்கியத்தின் கருத்தைப்படிக்க, அதில் "உலகவாழ்வு சதமல்ல, உற்றார் பெற்றார் சதமல்ல, சுவர்ணகுவியலும் சுகவாழ்வுஞ் சதமல்ல, சர்வேசுவரனையடைந் தோருக்கே சாஸ்விதமான சுகமுண்டாகும்" என்றிருக்கக் கண்டு அதை பலதரம் வாசித்து, வாசித்து சிந்தனைச் செய்துக்கொண்டிருக்க திடீரென சுயம்பிரகாசஞானம் ஜனிக்க, அன்று முதல் மதவைராகிய முற்றவராகி 1843-ஆ பிரம்மஸமாஜத்தைச் சார்ந்து அதை யாதரிப்பவரானார்.

இவர் அதை அப்படி யாதரிக்கவே அந்த சமாஜத்தில் 1843ஆ 83 எண்ணினராக இருந்த அங்கத்தினர் 1847ஆ 578 அங்கத்தினராகி அச்சமாஜம் பிரபல ஸ்திதியையடைய ஆரம்பித்தது—ஆரம்பித்தாலு மென்ன?

சமாஜத்திற்கு வேதங்கள் யாவும் பிரமாணமா? அல்லது சிலபாகங்கள் மாத்திரம் பிரமாணமா என்கிற சந்தேகமதிகமாகவே 1845ஆ நான்கு பிராம்மண வாலிபர்களுக்கு வேண்டிய பொருளுதவிசெய்து அவர்களை காசிப்பட்டணத்திற்கு அனுப்பி ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேதத்தைப்

படித்தும், அவற்றின் உண்மையான கருத்தை வெளியாக்க வேண்டுமென்றனுப்ப, அந்நால்வரும் அப்படியேபோய்ப் படித்துவந்து, ஆரியர் வேதங்களில் ஓரிடத்தில், அத்துவைதமும் ஓரிடத்தில்,விசிஷ்டாத்துவைதமும் ஓரிடத்தில்,துவைதமும் இன்னும் பலவித்தியாசமான கருத்துக்களைப் பற்றிச் சொல்வதாக தெரிவிக்கவே பெரும்பான்மையான சமாஜத்தார் சுவதசித்தஞானமே பிரம்மஸமாஜத்தின் சிறந்த பிரமாணமாகக் கொள்ளவேண்டுமென தீர்மானித்தார்கள். 1850-வருஷம் தேவேந்திரநாத தாகூரவர்கள் ஸ்ருதி ஸ்மிருதி கிரந்தங்களிருக்கும் அநேக உத்தம பிரமாணங்களைத் திரட்டி பிரம்ம தருமம் என்னும் பெயரால் ஒரு சிறந்த கிரந்தத்தை பதிப்பித்த தன்றியில், தத்துவ சபையை ஸ்தாபித்து தத்துவ போதினி பத்திரிகையையும் பதிப்பிக்கத் தொடங்கினர். அப்பத்திரிகையை மஹா ஸம்ஸ்கிருத பண்டிதர்களான ஈசுவர சந்திர வித்யாசாகரர், அச்சய குமாரதத்தர், இராஜ நாராயணபாசு என்பவர்கள் எழுதிவந்தார்கள். இவர்களில் அச்சய குமாரதத்தர் இங்கிலீஷ் லத்தின் பிரான்சு முதலான பாஷைகளை சற்றறிந்தவர். இராஜநாராயணபாசு ஆங்கில முதலான பாஷைகளில் பண்டிதர். ஆதி பிரம்மஸமாஜத்துக்கு பிரசிடெண்டாக இருந்து அநேக கிரந்தங்களை இயற்றியனர். இவர் 1826௵ ஜனித்து 1899௵ செப்டம்பர்மாதம் 29-ந் தேதி பரமபதமடைந்தார். அநேக கிரந்தங்களை இயற்றியவர். பிறகு பிராம்மண பிள்ளைகளுக்கு பிரம்ம நிகேதனம் என்னும் பாடசாலையையும், வைதீக லௌகீக இராஜகீய விஷயங்களைப்பற்றி சர்சிக்க இந்தியதர்பணம் (The Indian Mirror) என்ற பத்திரிகையையும்ஸ்தாபித்தார். அநந்தரம் பிராமோபாசனை பத்ததியையும் எழுதி பதிப்பித்த தன்றியில் தமது ஜேஷ்ட குமார்த்தியின் விவாஹத்தை விக்கிரக வின்சடங்குகளற்ற பிராமவிவாஹமாகச் செய்வித்து தனது துவிதிய குமாராகிய ஸ்ரீ சத்தியேந்திரநாத தாகூரவர்களை சீமைக்கு அனுப்பி சிவில் சர்வேஸ் பரி

க்ஷையில் தேறும்படி செய்வித்ததன்றியில்தாம் காஷ்மீரம், பொம்பாய், இமயமலை முதலான இடங்களில் சஞ்சரித்து பிரம்மஞானம் போதித்து வந்தார். அப்போது அவருடைய தோழர்களில் சிரேஷ்டரான இந்த ஸ்ரீ இராஜநாராயணபோசலர்கள் சமாஜகாரியங்களை நடத்திவந்தார்.

தேவேந்திரநாதருடைய அந்தஸ்தை கருதிசவர்ணமெண்டரால் மஹாராஜாவென்றபிருது பட்டங்களை கொடுக்க வந்ததை யங்கீகரிக்கவில்லை. ஆனால் அவருடைய உபாசனையின் வலிமையையும் உபநியாசங்களின் உத்கிருஷ்டத்தையும் கண்டவர்கள் அவருக்கு மஹாரிஷி என்று பெயரிட்டுக் கொண்டாடினார்கள். உண்மையில் இவர் இக்கலியுகத்திற்சிறந்தமஹாரிஷியாகவே இருந்தரென்பதற்கு அவரது கிரந்தங்களே சாக்ஷியமாக இருக்கின்றன. அவர் எழுதிய சுயசரித்திரத்தில் அவர் பரமாத்துமாவை பிரத்தியக்ஷமாகக் கண்டதாக எழுதி இருக்கின்றனர். இந்த மஹாத்துமா கி. பி. 1905௵ ஜனவரிமீ 19-ந் தேதி இரவு பரமபதமடைந்தனர். அன்று அநேக பிரபுக்கள் வந்து மரியாதை செய்துபோனதன்றியில் ஸ்ரீ தர்பங்காமஹாராஜர் அக்கிராசனத்துக்குள் ஒரு பெருஞ்சபை கூடி கொண்டாடினார்கள்.

தேவேந்திரநாதர் பிரம்மஸமாஜம் விருத்தியாக்கி வந்த போது அநேக வாலிபர்கள் ஸமாஜத்தைச் சார்ந்தார்கள். அவர்களில் முதன்மையானவர் ஸ்ரீ கேசவசந்திரசேனர் இவருடைய பக்தி சிரத்தைகளைக் கண்டு இவருக்கு பிரம்மானந்தர் என்னும் பெயரை தேவேந்திரநாதர் கொடுத்து உபாசாரியராக இருக்க நியமித்தார்.—நியமித்தானுமென்ன ஸ்ரீ மஹாரிஷி தேவேந்திரநாதருடைய சமாஜத்தில் அநேக சிறந்த பிராம்மணப் பண்டிதர்கள் பூநூலைத்தரித்துக் கொண்டும் ஜாதிபேதத்தைப் பாராட்டியும் வந்தபடியால், வாலிப சமாஜத்தாருக்கு மனவருத்த முண்டாகி அச்சமாஜத்தைவிட்டு பிரிந்து வந்தார். இந்திய பிரம்மஸமாஜம் என்றும் பெய

ரால் வேறொரு கிளைஸமாஜத்தை ஸ்தாபித்தார்கள். அச்சமாஜத்திற்கு பிரம்மாநந்தர் கேசவசந்திரசேனர் தலைவரானார்.

வினா.—அந்த கேசவசந்திர சேனருடைய சரித்திரத்தையும், அவர் சமாஜத்தின் விவரத்தையும் சங்கிரகமாக சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—சொல்லுகிறோம் கேளும்.

## BABU KESVA CHENDRA SEN.

### பிரம்மாநந்தர் கேசவசந்திர சேனர்.

வங்கநாட்டில் பிரபலமான திவான் ராமகோமலசேனருடைய குமாரராகிய பியாரிமோஹன சேனருக்கு 1838-வருஷம் நவம்பர் மீ 19-ந் தேதி ஜனித்தார் கேசவசந்திரர் சிறுபிராயத்திலேயே அற்புத பிறவியாகத் தோன்றினர்.

1845 வரு இந்து கலாசாலையில் கல்விகற்கப் புகுந்து 1852 வரு அக்கல்லூரியின் உயர்ந்த வகுப்பையடைந்து பிறகு மேட்டர் பாலிட்டன கலாசாலையைச் சார்ந்து அங்கு கொஞ்சகாலமிருந்து மறுபடியும் 1858 வரு இந்து கலாசாலைக்கேவந்து வாசிக்கலாயினர். 1859 வரு பெங்காள பங்கியில் ஒரு குமாஸ்தாவேலையி லமர்ந்து உத்தியோகம் செய்து வந்தாலும் லௌகிக தொழிலில் இஷ்டமில்லாமையால் அந்தவேலைவிட்டு விட்டு வைதீகத்திற் பிரவேசித்தார். அவருக்கு 18 வயதான பிறகு ஒரு சிறு பெண்ணை விவாஹஞ்செய்வித்தாலும் அவர் மனது வைதீகவிஷயத்தில் அதிகப் பற்றுள்ளதாகி மனைவியையும் மனையையும் கவனிக்காமல் கவலையுற்றவராக இருந்தார்.

1857 வரு தமது தோழர்களின் விருத்தியைக்கருதி நல்லசகோதிரர்களுடைய சங்கம் The good will Fraterenity என்றுதி சங்கங்களை ஸ்தாபித்து வருகையில் பிரம்ம சமாஜத்தரால் பதிப்பிக்கப்பட்ட ஒரு சிறுபுத்தகம் கிடைக்கப்

பெற்று அதிற்கண்ட விஷயங்கள் தமது மனதிற்கு ஆறுதலை கொடுக்கக்கூடியதாக இருந்தமையால் அச்சமாஜத்தைச் சார்ந்து ஸ்ரீ தேவேந்திரநாதருடைய உண்மையான சீடரானர். அப்போது கேசவருடைய பக்திசிறத்தைகள் இணையற்றவைகளாக விருந்தமையால் ஸ்ரீ தேவேந்திரநாதருக்கு அவர்மேல் அத்தியந்த சிநேகிதம் அதிகரித்து அவருக்கு பிரமமஞானத்தை போதித்து 1862௵ அவருக்கு பிரம்மாநந்தர் என்றும் பெயரிட்டு உப ஆசாரியராக நியமித்தார். அதைக்கண்டு களிக்க தனது வாலிபமனைவியை தம் குடும்பத்திலிருந்து அங்கு அழைத்துவர, தம் குடும்பத்தாருக்குள் சச்சரவுகளுண்டாகி கேசவரையும் அவர்மனைவியையும் மஹரிஷி யவர்கள் தம்குடும்பத்தில் தம்மக்களைப் போல போஷித்து வந்தார் அன்று முதல் கேசவபிரம்மாநந்தர் அநேக கிரந்தங்களை எழுதி பதிப்பித்த தன்றியில் பல விடங்களிலும் பிரசண்டமாருதம்போல் பல பிரசங்கங்களைச் செய்து பிரம்ம சமயத்தை பிரபலமாக்கி வந்தார். வந்தாலு மென்ன?

மஹரிஷி தேவேந்திர நாதரும் அவருடைய பெரும்பான்மையான சிநேகிதர்களும் பிராம்மண ஜாதியாராகவும், பூணுநூலைதரித்துக்கொண்டு ஜாதிபேதத்தைப் பாராட்டுபவராகவும் இருந்தவர்களான படியால், வாலிபர்களும் சீர்திருத்ததில் சிரத்தையுள்ள வர்களுமான கேசவசந்திர சேனருடைய கூட்டாளிகளுக்கும் மனஸ்தாபங்களுண்டாகி 1865௵ பிப்ரவரி மாதம் கேசவ சந்திரரும் அவரைச்சார்ந்த வாலிபர்களும் அச்சமாஜத்தைவிட்டுப் பிரிந்து 1866௵ நவம்பர் மாதம் இந்தியபிரம்ம சமாஜம் என்னும் பெயரால் ஒரு புதுசமாஜத்தை ஸ்தாபித்து அதற்காக சுமார் 30,000 ரூபாய் செலவில் ஒரு சிறந்த மந்திரக கட்டடத்தை கட்ட ஆரம்பித்தனர். 1868௵ ஜனவரி மாதம் 24-ந் தேதி சமாஜத்தின் 38-வது வருஷ உற்சவத்தை கொண்டாடினர்கள். 1869௵ ஆகஸ்டு மாதம் பிரம்ம மந்திர கட்டடம் கட்டி

முடியவே அதன் கிரக பிரவேச உற்சவத்தை கம்பீரமாகக் கொண்டாடி ஸ்ரீ ஆநந்தமோஹனபோஸ், ஸ்ரீ சிவநாதசாஸ்திரி கிருஷ்ணபிஹாரிசேனர் இராஜனிகாந்தர் முதலான படிப்பாளிகளாகிய இருபத்திரெண்டு பெயரை பகிரங்கமாக பிரம்ம ஸமாஜத்திற் சேர்த்து அநேக உபாசனைகளையும் உபநியாசங்களையும் செய்வித்து வந்ததன்றியில் அநேக சிறந்த கிரந்தங்களையும் பதிப்பித்தனர். 1870ஹு பிப்பாவரிமீ இங்கிலாந்திற்கு யாத்திரைச்செய்து அங்கே கிறஸ்துமத தேவாலயங்களிலும், வேறிடங்களிலும் அநேக உபாசனைகளையும் உபநியாசங்களைச் செய்தும், அந்தள்ள படிப்பாளிகளால் பெருப் பிரதிஷ்டையும் பெற்றதோடு மஹாமாக்ஷிமைதங்கிய மஹாவிக்டோரிய சக்கிரவர்த்தி யவர்களுடைய யபேக்ஷையையும் பெற்று அவர்களாலும் புகழையும் பெற்றார். இப்படிக் கல்வியினாலும ஞானத்தினாலும், பக்தியினாலும் பிரசங்க சக்தியிலும் இணையற்ற சிறப்பைப்பெற்று சுமார் ஆறுமாதங்கள் நடந்தபிறகு இந்தியாவுக்குவந்து ஆண் பெண் மக்களுக்கு கல்விச்சாலைகளையும், சீர்திருத்தும் சாலைகளையும. பரத ஆசிரமமென்னும் வைதிகவாசஸ்தானத்தையும் ஸ்தாபித்து தமது பத்திரிகையாகிய இந்தியதர்ப்பணம் (The Indian Mirror) பத்திரிகையை தினப்பதிப்பு பத்திரிகையாக்கியதன்றியில் பிராமோபாஸிகள் தம்மிஷ்டப்படி விவாகம் செய்துக்கொள்வதற்காக 1872ஹு ஒரு புது விவாஹ சட்டத்தையும் கவரண்மெண்டாரால் பெற்றார். அச்சட்டத்தில் மாப்பிள்ளைக்கு 18-வயதும் பெண்ணுக்கு 14-வயதும் நிறைந்தபிறகே விவாஹம் செய்யவேண்டுமென்ற கட்டாயவிதி இருந்தது. அப்படிக் கிருக்க 1878ஹு குச்சுபேஹார் நாட்டின் இராஜகுமாரருக்கு சுமார் பதிமூன்றரை வயதுள்ள தமது குமாரத்தியை விவாஹம் சில காரணங்களால் செய்விக்க சம்பவித்தபடியால், அவருடைய சிடர்களில் சிலர் அப்படி சட்டவிருத்தமான விவாஹம் செய்யக்கூடாதென்று ஆக்ஷேபித்து 1878ஹு மே மாதம் 15-ந் தேதி

ஒரு சபைக்கூடி சாதாரண பிரம்ம ஸமாஜத்தை ஸ்தாபித்துக் கொண்டார்கள்.

இப்படி சிலர் அவரைவிட்டுப் பிரிந்து வேறுஸமாஜத்தை ஸ்தாபித்துக் கொண்டாலும், அவருடைய பரிசுத்த எண்ணத்தையும், பக்தி வைராக்கியத்தையும் நன்கறிந்த அநேகர் அவரைவிட்டுப் பிரியாமல் இருக்க அவர் ஸமாஜத்தை சமரச மதசித்தாந்தமாகி பிரகாசிக்க அதற்கு "நவவிதானம்" என்றும் பெயரைச் சூட்டி பக்தியோகம் ஞானம் என்னும் விஷயங்களைப் பற்றி பிரசிங்கித்துக் கொண்டுவர 1884-வருஷம ஜனவரி மாதம் 8-ம் தேதி நீரிழிவியாதியினால் தமது 44-வது வயதில் பரமபத மடைந்தனர். அவரது பிரிவாற்றாமையைப்பற்றி பல பிரபுக்களும் பத்திராதிபர்களும் ஆங்கில அரசியவர்களும் கவர்னர் முதலானவர்களும் வருந்தி அநுதாபத்தைக் காட்டினார்கள்.

வினு.—பிரம்மாநந்தர் கேசவருடைய சில சீடர்களுடைய பெயர்களைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—சொல்லுகிறேம் கேளும். பிரம்மாநந்த ரவர்களுக்கு பல சீடர்கள் இருக்கினும், அவர்களில் முக்கியமானவர்கள், பிரதாபசந்திர மஜும்தாரர், கௌரிகோவிந்தராயர், அமிர்தலால்போஸ், பிரசன்ன குமாரசேனர், மஹேந்திரநாதபோஸ் முதலானவர்களாம் அவர்களில்,

Babu P C. Mujumdar பிரதாப சந்திர முஜும்தாரர் 1840ஷு பிறந்து 65 வருஷகாலம் இந்நாட்டிலும் ஐரோபா அமெரிக்காவிலும் அநேக பிரபலமான பிரசங்கங்களைச் செய்து பிரபலமானவர், 1905ஷு பரமபத மடைந்தார். இவருடைய கிரந்தங்கள் தெள்ளத் தெளிவான பாஷையில் எழுதப்பட்டதாக ஆங்கிலேய பண்டிதர்களும் கொண்டாடி வருகின்றனர். உபநியாசங்களிலும் சிறந்தவர். உபாத்தியா

யர் கவுரி கோவிந்தராயர் ஸம்ஸ்கிருத பாஷையில் சிறந்த பண்டிதராகி கேசவருடைய அநேக கிரந்தங்களை ஆரியபாஷையில் மொழிபெயர்த்தவர் மற்ற சீடர்கள் புத்தமதம், மகமதுமத முதலானதுகளை நன்கறிந்த நிபுணர்கள்.

வினா.—சாதாரண பிரம்மஸமாஜமென்று முன் சொன்னீர்களே அதன் முக்கியஸ்தர்கள் யாவர்? அவர்கள் சரித்திரத்தைச் சற்று சங்கிரகமாகச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—சொல்லுகிறேம் கேளும்.

ஸ்ரீ பண்டித சிவநாதசாஸ்திரியார் ஆநந்தமோஹன போஸ், துர்கமோஹனதாஸ், சிவசந்திரதேவர், உமேஸ்சந்திரதத்தர், குருசரண் மஹலாநிபஸ், பண்டித சீதாநாததத்துவபூஷணர் ஹேரம்ப சந்திர மித்திரர் இராமாநந்த சட்டர்ச்சிசசிபாதபானர்ஜியார் டாக்டர் பி. சி. ஆசாரியர் முதலானவர்களே இவர்களில்,

## PANDIT SIVANATHA SASTRI M. A.

## பண்டிதர் சிவநாதசாஸ்திரியார்.

இவர் வங்கநாட்டைச் சார்ந்த மாஜில்பூரில் 1847௵ பண்டிதர் ஹராநந்த வித்தியாசாகரருடைய புத்திரராகப்பிறந்தவர். பண்டிதர் துவாரகநாத வித்தியபூஷணருக்கு நெருங்கிய பந்துவானவர். கல்கத்தா கலாசாலையிற் கல்விகற்று 1872௵ எம். ஏ. பரிக்ஷையில்தேறி ஸம்ஸ்கிருதபாஷையில் சாஸ்திரியார் என்ற பட்டத்தையும் பெற்றவர். பிறகு ஹரிநாபி ஸ்கூலின் தலைமை உபாத்தியாயராகி 1876௵ ஹேர்ஸ்கூலில ஸமஸ்கிருத பண்டிதராக நியமிக்கப்பட்டார். இந்த உலக சுகத்திற் கேற்ற உத்தியோகத்திலிருந்தால் நல்ல புகழும்,பென்ஷனும் பெறக்கூடும் ஆனால் உலக சுகத்தைவிட்டு வைதீகப்பற்றுள்ளவராக இருப்பதால் 1869-

வருஷம் முதல் பிரம்மஸமாஜத்தைச் சார்ந்து அன்றுமுதல் இன்று வரையில் இரவும் பகலும் உழைத்துவருகிறார். இவர் அநேக கிரந்தங்களை இயற்றிருக்கிறார்.

## SREE ANANDA MOHAN BOSE.

### ஸ்ரீ ஆநந்த மோஹனர்.

இந்த உத்தமபுருஷன் 1847ஞ மைமன் சிங்கைச்சார்ந்த ஜெயசித்தியில் ஜனித்து சிறுவயதிலேயே பிரவேசபரிக்ஷையிலும், எப். ஏ. பி.ஏ. எம். ஏ. பரிக்ஷைகளிலும் முதல் வகுப்பில் தேறி ராயிச்சந்து பிராமச்சந்து வெகுமதிபெற்று 1870ஞ ஸ்ரீ கேசவசந்திரரோடு இங்கிலாந்துக்குப்போய், கிரிஸ்டு காலேஜ் கேம்பிரிஜ் கலாசாலைகளிற் படித்து ராங்குலர் என்ற கணிதசாஸ்திர நிபுணர் என்னும் பிருதைப் பெற்று பாரிஷ்டர் பரிக்ஷையில்தேறி 1874ஞ கல்கத்தாவுக்குவந்து நியாயவாதம் செய்து பிரபலமடைந்தவர். கல்கத்தாவாலிபர் சங்கத்தையும், 1876ஞ வங்கமஹாலிய பெண் பாடசாலையையும், 1879ஞ ஸிடிகாலேஜ் என்னும நகர கலாசாலையையும் பின்னும் பல உபயோகமான ஸதஸ்தாபனைகளை நியமித்து கவரன்மென்டு சட்ட நிரூபணசபையிலும், வித்தியாவிர்த்தி சபையிலும் ஓர் அங்கததினராக இருந்து உழைத்துவிட்டு 1891ஞ சீமைக்குப்போய் தேசாபிமான விஷயமாக பல உபந்யாசங்களைச் செய்து வந்தும் 1892ஞ சென்னையிற் கூடிய காங்கிரஸ் மஹாசபைக்குத் தலைவராக இருந்து பிரபல உபந்யாசம் செய்தார். பிறகு வங்காளபிரிவின் காலத்தில் சுதேசியமாக மெத்த உழைத்து பிரடேஷன் ஹாலுக்கு கடைக்காலிட்டு 1906ஞ ஆகஸ்டு மாதம் பரமபத மடைந்தனர். இவர் உண்மையாகவே ஓர் சிறந்த ரிஷி யல்லது ஞானி என்று சொல்லத்துணிவோம். இப்படிப்பட்ட மஹாபுருஷர்கள் இந்த சமாஜத்தைச் சார்ந்து உழைத்து வருவதன்றியில், இப்போது சீமை இந்தியா ஸமஸ்தான செக்ரடெரி யவர்களுடைய சபையில் ஓர் அங்கத்தி

ஞராக இருக்கும் ஸ்ரீ சர் கிருஷ்ணகோவிந்த குப்தரும் இந்தியா கவர்ண்மெண்டு செக்ரெடேரி தேசாதிபதியவர்களுடைய சபையின் ஓர் அங்கத்திராகிய எஸ். பி. சிம்ஹாவும், இப்போது ஸ்தாவரசக்தி சாஸ்திரத்தில் பூலோகத்தில் சிறந்த பண்டிதராகிய ஜெகதீச சந்திரபோஸும், இரசாயனசாஸ்திர நிபுணரான பிரபுலா சந்திரராயரும், பிரபல கவிவாணரும், நாடறிந்த நாடகாசிரியருமான ரவீந்திரநாத தாகூரவர்களும் இன்னும் எம். எ. எம். டி. முதலான பலபட்டப்பிருதுகளைப் பெற்ற பிரமுகர்கள் அநேகர் இந்த பிரம்மஸமாஜத்தைச் சார்ந்தவர்களேயாம்.

வி஦ு.—இந்த பிரம்ம ஸமாஜக் கொள்கை வடதேசங்களிலுண்டா? அங்கு அதைப் பரவச்செய்தவர்கள் யாவர்.

விடை.—உண்டு. அதை சத்தியாநந்த அகினிஹோத்ரி அவினாசி சந்திரபோசு, குருதயாள சிங்குமாஜிஜர் ருசிராம் லால, பிரகாசதேவா சீதாராம்லாலா தயாளசிங்கு முதலானவர்களால், பாஞ்சாலம், லகோர் இராவல்பிண்டி, முதலான விடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற தன்றியில் குருதயாள சிங்கு அவர்களால் பெரிய பிரம்ம ஞான பாடசாலைகள் அநேக லக்ஷம் பொன் செலவில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. மேலும், ஆக்ரா, டில்லி, கான்பூர், அலகாபாத்து, சிமலா, ஐயோத்தி, லக்ஷ மணபுரி முதலான விடங்களிலும், ஸமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

வினா.—மேற்கு இந்தியா நாடுகளில் பிரம்ம ஸமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனவா. அவைகளை ஸ்தாபித்து பிரபலமாக்கிய யவர்களுடைய பெயர்களையும் அவர்களுடைய சரித்திர சங்கிரகங்களையும் சொல்லுங்கள் கேட்போம்,

விடை —சொல்லுகிறோம் கேளும்.

பொம்பாயில் டாக்டர் ஆத்மாராம் பாண்டுரங்கர், அபிமோட துவாரகதாஸ் சேட்டு, சதாசிவபாண்டுரங்க, கெல்கர், சிக்கிமஹாதேவ கோவிந்தரானடி, கணேஷ நாராயணசந்தாவர்கர் முதலானவர்கள் சமாஜத்தைச் சார்ந்தவர்கள். இவர்களில் Sree Mahadev Govenda Ranadi ஸ்ரீ மஹாதேவகோவிந்தரானடி என்பவர் 1842௵ ஜனித்து பல கலவிச்சாலைகளில்கற்று எம். ஏ. பி எல். பட்டங்கள் பெற்று பொம்பாய் ஐகோர்ட்டு ஜட்ஜியாகி ஜனசார சீர்திருத்த விஷயமாகவும், இராஜகிய சீர்திருத்தமாகவும் உழைத்து பரதவருஷமெங்கும் புகழ்பெற்று 1901௵ பரமபதமடைந்தவர். Sir G. N. Chandavarkor K. C. S I. ஸ்ரீ நாராயணராவ் சந்திரவர்கர் இவர் இப்போது பொம்பாய் ஐகோர்ட் ஜட்ஜிகளில் ஒருவர் சிறுவயதுவரையில் பலகல்விகளைக்கற்று ஜனசார சீர்திருத்த விஷயமாகவும், இராஜகிய விஷயமாகவும் உழைத்து இப்போது ஐகோர்ட்டு ஜட்ஜியாகி ஸமாஜவிஷயமாக உழைத்து வருகிறார். Sir Dr. R. G. Bandharkar K. C. S. I. ஸ்ரீ ராமகிருஷ்ண கோபாலபந்தார்க்கர் பூனாவில் ஸ்ரீ ராமகிருஷ்ண கோபால பந்தார்க்கர் முதலானவர்கள் சமாஜவிஷயமாக உழைத்துவருகிறார்கள். இவர்களில் ஸ்ரீ ராமகிருஷ்ண கோபாலபந்தார்க்கர் இந்த உலகம் யாவும் புகழும் ஸமஸ்கிருதபண்டிதர். எம். ஏ முதலான பிருதுகளைப் பெற்றவர். இப்படியே சிந்து கராச்சி அகமத்நகர் முதலான இடங்களிலும் இந்தூர் ஹோல்கார் ஸமஸ்தானங்களிலும் ஸமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

வினா.—சென்னையிலும் அதையடுத்தஜில்லாக்களிலும் பிரம்மஸபைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனவா அவற்றிற்கு முக்கியஸ்தர்களுடைய சரித்திர சங்கிரகங்களைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—சொல்லுகிறோம் கேளும்.

ஸ்ரீ பிரம்மானந்தர் கேசவ சந்திரசேனர் 1864௵ சென்னைக்குவந்து பிரம்மமத உபந்நியாசங்களைச்செய்ய 1864௵ ஏப்ரல்மாதம் 7-ம்தேதியில் ஸ்ரீ ராஜகோபாலாசாரியார், ஸ்ரீ சுப்பராயலுசெட்டியார், கனம் சஞ்சீவிராயர், வெங்கடபதிரா

யர் சைதாபுரம் காசி விஸ்வநாத முதலியார் பாரஸ்டர் இராமசுவாமி ராஜு ஸ்ரீ தொராலு நாயுடு புச்சைய பன்துலு சுந்தரம்பிள்ளை, ஜெயராம் பிள்ளை, பொன்னுசாமி பிள்ளை, இரங்கநாதம் நாயுடு முதலானவர்கள் சமாஜத்துக்காக தத்வபோதினி பிர்ம்ம தீபிகை ஆஸ்தீக்கன் முதலான பத்திரிக்கைகளை ஸ்தாபித்தும் அநேக புத்தகங்களை வெளியிட்டும் பாலிகா பாலிய பாடசாலைகளை ஸ்தாபித்தும் பொது நலத்துக்காக உழைத்துவந்தார்கள். இன்னும் சிலர் இப்போதுகூட உழைத்து வருகிறார்கள்.

---

## பெங்களூரில்.

1866ளு நவம்பர்மீ 11உ ஆதிவாரம் சமாஜத்தை ஸ்தாபித்து அதற்காக ஸ்ரீமான்களாகிய ஐயாசாமி முதலியாரவர்கள், தர்ம ரத்னகரம், ராவ்பகதூர், நாராயணசாமி முதலியார் அவர்கள், சந்தரசேகர அய்யர்ரவர்கள், சுபேதார் மேஜர் பகதூர் அப்பாவு பிள்ளையவர்கள், கோபாலசாமி அய்யரவர்கள், சதாசிவ முதலியாரவர்கள், டாக்டர். இராமசாமி அய்யங்காரவர்கள், சேஷாச்சல முதலியாரவர்கள், சாமிநாத திருவேங்கிடசாமி முதலியாரவர்கள் சேர்ந்து பிர்மஞான போதினி முதலான பத்திரிகைகளையும் புத்தகங்களையும் பதிப்பித்தும் பாலிகா பாடசாலைகளை ஸ்தாபித்தும் உழைத்து வந்தார்கள். இப்போதும் சிலர் உழைத்தும் வருகிறார்கள்.

---

## மங்களூரில்.

1870ளு ஜுன்மீ 13உ ஒரு சமாஜம் ஸ்தாபிக்கப்பட்டு ஸ்ரீமான்களாகிய அருளப்பா வ. ரகுநாத அய்யர், சுப்பிரமணிய சாஸ்திரி நாராயண ராவு முதலானவர்கள் சேர்ந்து அனேக புத்தகங்களை பதிப்பித்தும் பாடசாலை

களையும் வைத்திய சாலைகளையும் ஸ்தாபித்தும் உழைத்து வருகிறார்கள்.

---

### தெலுங்கு நாடுகளில்.

இராஜ மஹேந்திரத்தில் 1878ஆ ஒரு சமாஜம் ஸ்தாபிக்கப்பட்டு அதற்காக ராவ் பகதூர் வீரேசலிங்கம் பண்துலு அநேக பத்திரிகைகளையும் புத்தகங்களையும் பதிப்பித்தும் உபாசனு மண்டபத்தையும் ஹிதகாரி சபாமண்டபத்தையும் பாடசாலைகளையும் கட்டுவித்தும் உழைத்து வருவதில் தெலுங்கு நாடுகளில் பலவிடங்களில் பல சமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டன இத் தெலுங்கு நாட்டைச் சார்ந்த ஸ்ரீ மஹாராஜா கோடே நாரயண கஜபதி ராய்வர்களும் பூ. பிட்டாபூர் மஹாராஜர் அவர்களும் ஸமாஜத்தைச் சார்ந்து அது விஷயமாக அநேக அனுத தர்ம பாடசாலைகளை ஸ்தாபித்து ஆதரித்துவருகிறார்கள். இப்போது பிட்டாபுரம் சமஸ்தானம் கலாசாலை தலைவராகிய ராவ்பகதூர் வெங்கட் ரத்னம் நாய்டுகாரு முயற்சியினால் அநேக வித்தியார்த்திகள் பிரம்மோபாசிகளாகி வருகின்றனா.

---

### மலையாள நாட்டில்.

1898ஆ ஜனவரிமீ 14உ நாயிற்றுக்கிழமை ஒரு சமாஜம் ஸ்தாபிக்கப்பட்டு ஸ்ரீமான்களாகிய ஜி. சுப்பராவ் சி. கோபாலன் முதலானவர்கள் சமாச்சார பத்திரிகைகளை ஸ்தாபித்து உழைத்துவருகிறார்கள்.

திருநெல்வேலியில் ஒருசமாஜம் ஸ்தாபிக்கப்பட்டு அதற்காக ம-ா-ா-ஸ்ரீ கைலாசம் பிள்ளையவர்கள் பாலிகா பாடசாலைகளையும் ஸ்தாபித்து உழைத்து வருகிறார்கள்.

## தமிழ் நாட்டில்.

தஞ்சை, சேலம், கூடலூர், உடமலைப் பேட்டை முதலான விடங்களில் ஒரு கால் சமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன இப்போது கோயமுத்தூர் வட்டமலை பாளையம் முதலான விடங்களில்மாத்திரம் சமாஜங்கள் இருக்கின்றன. கோயமுத்தூரில் ஸ்ரீமான்களாகிய சே. ப. நரசிம்மலு நாய்டு டாக்டர். நாராயணசாமி பிள்ளை, விஜயரங்க முதலியார், பொன்னரங்க முதலியார், பார்த்தசாரதி முதலியார், சின்னப்ப முதலியார், முதலானவர்கள் 1881ஹு அக்டோபர்மீ 15வ ஒரு சமாஜத்தை ஸ்தாபித்தும் அதற்காக அநேக பத்திரிக்கைகளையும் புத்தகங்களையும் பதிப்பித்து உழைத்துவருகிறார்கள். இப்போது இத்தேசத்தில் எவ்வளவு சமாஜங்கள் இருக்கின்றன.

வினா.—அவற்றின் கணக்கைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—இப்போது இந்தியாவில் சுமார் 250 சமாஜங்களும் இங்கிலாந்து அமெரிக்கா ஜப்பான் முதலான வேறு விடங்களில் சில சமாஜங்கள் ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன.

வினா—இப்போது இச்சமாஜத்தைச் சார்ந்த ஆண் பெண் அடங்கலான குடித்தொகையைப்பற்றி சொல்லுங்கள்.

விடை.—சொல்லுகிறேம் கேளும்.

## நிகழ்ந்த 1911௵ காணிஷ்.வாரி கணக்கின்படி.

| மாகாணங்கள். | ஆண்கள். | பெண்கள். | மொத்தம். |
|---|---|---|---|
| பெங்காளத்தில் | 1361 | 1247 | 2608 |
| பெலுசிஸ்தானத்தில் | 25 | 25 | 50 |
| பொம்பாயில் | 3 | 58 | 131 |
| பீராரில் | 17 | 13 | 30 |
| ஆசாம் நாட்டில் | 681 | 607 | 1288 |
| சென்னை ராஜதானி | 219 | 155 | 374 |
| பாஞ்சால நாட்டில் | 386 | 302 | 688 |
| ஆகிரா நாட்டில் | 24 | 17 | 41 |
| ஐயோதியாவில் | 17 | 11 | 28 |
| பொம்பாய் நகரில் | 56 | 47 | 103 |
| இந்து நாட்டில் | 15 | 14 | 29 |
| ஆகிராநகரில் | 9 | 3 | 12 |
| சுதேச சமஸ்தானங்களில் | | | |
| பரோடாவில் | 4 | 2 | 6 |
| பங்காள் ஸமஸ்தானத்தில் | 31 | 34 | 65 |
| பொம்பாய் சமஸ்தானத்தில் | 2 | 2 | 4 |
| மத்திய இந்தியாவில் | 6 | 3 | 9 |
| சமஸ்தானங்களில் | 2 | 3 | 5 |
| ஆசாம் ஸமஸ்தானத்தில் | 6 | 5 | 10 |
| ஐதிராபாத்தில் | 18 | 18 | 36 |
| காஷ்மீரநாட்டில் | 7 | 9 | 3 |
| மைசூர் நாட்டில் | 31 | 34 | 65 |
| பஞ்சாபில் | 10 | 2 | 12 |
| ராஜபுடாணாவில் | 42 | 40 | 82 |
| கொச்சியில் | 1 | 1 | 2 |
| ஆக மொத்தம் | 2939 | 1565 | 5504 |

இந்த 5504 பெயர் இருத்தல் அதிக குறைவான எண்ணினர் என்று தோன்றலாம் பிரமோ பாசிகளில் அநேகர் கானிஷ்வாரி கணக்கு எழுதுவோருக்கு தம்மை இந்துக்கள் என்று சொல்லி விடுவதனாலும், கானீஷ்வார் கணக்கு எழுதுவோருக்கு இந்துக்களுக்கும் பிரமோ பாசிகளுக்கும் இருக்கும் பேதா பேதங்களையறிந்துய்யும் சக்தியின்மையால், அநேகபிரமோபாசிகளை இந்துக்களென்றே எழுதி விடுப்பதினாலும், பிரமோபாசிகளுக்குள், ஆதி சமாஜத்தார் இந்தியாசமாஜத்தார், சாதாரண சமாஜத்தார், நவவிதானிகள், பிரார்த்தனை ஸமாஜத்தார், என்றுதி பல பெயர்களைப் பெற்று பிரகாசிப்பதனால் சானிஷ்வார் கணக்கர்கள் பிரமித்து எல்லாரையும் இந்துக்களென்றே எழுதி விடுகிறார்கள். இப்போது கணக்குக்கு அகப்படாத பிரமோ பாசிகள் கணக்கருக்கு அகப்பட்ட வர்களைவிட அதிக எண்ணினர் இருக்கிறார்கள் இதேமாதிரியாவே இங்கிலாந்து அமெரிக்கா நாடுகளிலும் விருத்தியாகி வருகின்றனர் இனி கல்வியும், ஞானமும் விருத்தியாகில் உலகத்தின் பெரும் பாலார் பிரமோபாசிகளாவது திண்ணம்.

வினா.—இந்த சமாஜத்தின் முக்கிய நோக்க மென்ன?

விடை.—உலகத்தில் ஸனாதனமான பரிசுத்த ஆதி இந்து மத சித்தாந்தமாகிய பிர்ம்மஞானத்தை விர்த்தியாக்கியும் பிரஜைகளுக்குள் சகோதர சகோதரி வாஞ்சையையும் அதனால் பரஸ்பர க்ஷேமத்தையும் அதிகரிக்கவும் அதற்காக பல கல்விச் சாலைகளையும் கைத்தொழில் சாலைகளையும் வைத்திய சாலைகளையும் வைதீக சாலைகளையும் ஸ்தாபித்து ஜன சமூஹ பொது நலத்துக்கு உழைத்து வரவேண்டும் என்பதேயாம்.

வினா.—அப்படியானல் இந்நாட்டில் இச் சமாஜங்கள் சில விடங்களில் மாத்திரம் ஸ்தாபிக்கப் பட்டும் இதைச் சார்ந்தவர்கள் சுவல்ப எண்ணினராகவும் இருக்கவேண்டிய காரணம் என்ன?

விடை.—இச் சமாஜத்தை ஆரம்பித்த ஸ்ரீ ராஜா ராமமோஹனர் ஸ்ரீ மஹரிஷி தேவேந்தரநாதர் முதலானவர்கள் இந்நாட்டில் ஆதி ஆரியர் மதமாகிய ஸநாதன இந்து மத சித்தாந்தம் கால பேதத்தினால் சீர் கெட்டு இருப்பதை தக்க படி சீர் திருத்தி ஜனஸமூஹத்தார் இகபரசாதனம் பெற்று சுகமாக வாழ வேண்டு மென்னும் எண்ணத்தைக் கொண்டு இந்த பிர்ம சமாஜத்தை ஸ்தாபித்திருக்க அதன் கருத்தை அறியாத இப்போதிய வாலிப பிர்ம்மோபாஸிகள் முக்கியமாக வங்கநாட்டு வாலிபர்கள் நவ நாகரீகத்தை அனுசரித்து மேற்கு நாட்டாரைப் போல் அதாவது ஐரோப்பியர் ஆங்கிலேயரைப் போல், உண்ணவும் உடுக்கவும் சுபாசிக்கவும் உரங்கவும் உல்லாசமாக உலாத்தவும் ஆரம்பிக்கவே அவர்களைக் காணும் பாமரர்கள் பிரமித்து இந்த பிர்மசமாஜம் ஒரு வித புது கிறிஸ்த மதமென்றும் தேசாச்சார குலாச்சார மதாச்சார நீதி நன்னெறி பக்தி யற்றவர்க ளென்றும் எண்ணி இதற் சேர பயப்படுகிறார்கள் கல்வி கற்ற சிலரும் இச்சமாஜம் ஒரு வித கிறிஸ்த மதமென்றே எண்ணி கலக்க முற்று இதிற் கலக்க கலவரப் படுகிறார்கள்.

வினா.—இப்படி இச்சமாஜத்திற்கு இடையில் வந்திட்ட குறைவு குற்றங்கள் நீங்கி இச்சமாஜம் விர்த்தியாக வழியுண்டா ?

விடை.—உண்டு எப்படி யெனில் இச்சமாஜத்தைச்சார்ந்தோர் இத் தேசாச்சார, குலாச்சார, மதாச்சார நடைவுடை பாவனைகளை அனுசரித்தும் பரமாத்மாவை யடைய பக்தி யோகம் ஞானம் தியானம் முதலான இந் நாட்டுக் குறிய புராதன ஸநாதன ஆசாரங்களை அனுஷ்டித்து வருவார்களானால் இச்சமாஜ சித்தாந்தமானது உலகில் தினே தினே பல்கி பெருகி பிரஜைகளனைவர்க்கும் பேரானந்தத்தை தருமென்பது திண்ணம் திண்ணம்.

வினா.—அப்படியானால் இச் சமாஜ சித்தாந்தத்தின் கருத்தை சங்கரகமாக சொல்லுங்கள் கேட்போம்.

விடை.—சொல்லுகிறோம் கேளும்.






பரப்ரஹ்மணே நம:

# பிரஹ்மஸமாஜ *சித்தாந்த சாரசங்கிரஹம்.

(வினா - விடை.)

## முதல் அத்தியாயம்.

## GOD.

### பரமாத்மா அல்லது பிரஹ்ம லக்ஷணம்.

வினா—பிரஹ்ம ஸமாஜத்தாருடைய தெய்வம் யாது?

விடை—† பரப்ரஹ்மமேயாம்.

---

* சித்தாந்தம் – முடிந்தமுடிபு.

பிரஹ்மமென்னும் பெயர் வேதத்திற்கும், பிரகிருதிக்கும், யாகத்திற்கும் பின்னும் பலபொருள்களுக்கும் சொல்லப்பெற்றிருப்பதால்; அவற்றிற்குவேறான தனியேகமான பொருளென்றுகாட்ட பரப்ரஹ்மமென்று சொல்லப்பெற்றது.

வினா—பரம் என்றாலென்ன ?

விடை—இது பூரியதே இதிபர: ; ப்ரு-பகுதி, அப அல்லது அச் விகுதிசேர்ந்து பர: என்ற பதமாகியது. அது பாலனம், பூர்ணயோகம், பூர்த்தி, பூரியதே, காப்பாற்றுதல் என்றுதிபொருள்களைப்பெற்று நிற்கின்றது.

வினா—பிரஹ்மம் என்னும் பதத்திற்கு அர்த்தம் என்ன ?

விடை—பிருஹ்மதீதி பிரஹ்மம் (பிரஹி விருத்தவ்) பிரஹ் என்னும் பகுதிக்கு விருத்தி என்று பொருள் ; விருத்தியால் **பெரிது** என்றுபொருள். இந்தப்பெரித் என்பதற்கு அளவில்லை, அதாவது அளவற்று பெரியதாயிருக்கும் தன்மை. இந்த பிரஹ்ம பகுதி தாதுவோடு மணின் என்னும் விகுதியைச்சேர்க்க உள்ளது என்னும் பொருளைப் பெறுகிறது. ஆனது பற்றியே "யோ (அ)கில ஜகன் நிர்மாண நட் பிரஹ்ம திவாதியதிஸ் பிரஹ்மம்" சகல ஜகங்களையும் பாதுகாத்து போஷித்து வருபவனென்றும் "ப்ரஹங்தோஹீ யஸ்மின் குணாஹி இதிசுருதேவு குணபூர்ணாத்து விஸியாலப:" பூரணமான குணங்களை நிறையப் பெற்றவனென்றும் சுருதிகளிற் சொல்லப்பெற்றிருக்கின்றது. இந்தப்ரஹ்ம பதத்திற்குச் சரியான தமிழ்ப்பதம் கடவுள் என்று சொல்லலாம்.

---

## GOD IN VEDAS.



### வேதப்பிரமாணங்கள்.

---

வினா—இந்த பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி இந்த வேதங்களில் எவ்விதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது

விடை— இந்து வேதத்தைச்சார்ந்த—

ரிக்வேதம் 10-81-3-ல்.

விஸ்வதஸ் சக்ஷுருத விஸ்வதோ முகோ
விஸ்வதோ பாஹுரு ருத விஸ்வ தஸ்பாத்
ஸம்பா ஹுப்யாம் தமதி ஸம்பதத்ரைர் த்யாவா
பூமி ஜநயந் தேவ யேக ஃ

(இதன் பொருள்.)

எவனுடைய பார்வையானது எப்பக்கங்களிலும் இருக்கின்றதோ, எவனுடைய திருவாய் எப்பக்கங்களிலும் இருக்கின்றதோ, எவனுடைய கரசரணங்கள் எப்பக்கங்களிலும் இருக்கின்றனவோ, அவன் ஒருவனே கடவுள். அவன் மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் படைத்து (இரக்கை) கவசம்போன்ற தனது கரங்களால் காத்து வருகிறான். (என்றும்)

(இதன் இங்கிலீஷ் கருத்து.)

He who hath eyes on all sides, mouths on all sides, He the sole God, producing earth and he ven, weldeth them together with his arms as wings.

ரிக்வேதம் 10-82-3-ல்.

யோ நஃ பிதா ஜநிதா யோ விதாத
தாமாநி வேத புவநாநி விஸ்வா
யோ தேவாநாம் நாமதா ஏக ஏவ
தம் ஸம்ப்ரசநம் புவநா யந்த்யந்யா.

(இதன் பொருள்.)

அவன் (பிரஹ்மம்) நம்மைப் படைத்த பிதா. ஸர்வ காரணனாகிய அவன் சகல பொருள்களையும், சகல பிரா

ணிகளையும், சகல ஜாதிகளையும் ஏககாலத்தில் தெரிந்து கொள்ளத் தக்கவன். அத்தேவன் பல பெயர்களால் பிரகாசித்து சகல பொருள்களாலும் கருதப்பெற்றவன். (என்றும்)

Father who made us, who as disposer knoweth all races and all things existing. Even He alone, the bearer of names different Gods, is the ideal whom other beings seek to approach.

**யஜுர்வேதம் அதி. 13-4-ல்.**

ஹிரண்யகர்ப: ஸமவர்த் தாக்ரே
பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்
ஸ தாதார பிருதிவீம் தியாமு தேமாம்
தஸ்மை தேவாய ஹவிஷா விதேம.

(இ-ள்.) ஓ! மநிதர்களே! பிரஹ்மம் சிருஷ்டிக்கு முன் இருந்தவன்; அவன் சிருஷ்டி கர்த்தா; அவன் சூரியன் முதலான ஜோதிஸ்வரூபமான கிரஹாண்ட கோளங்களைத் தாங்கிக் காக்கப்பட்டவன்; அவன் முன் நடந்த சிருஷ்டிக்கும், இப்போது நடக்கும் சிருஷ்டிக்கும் கர்த்தா; அவன் இனி ஜநிக்கவேண்டிய ஜகங்களுக்கும் கர்த்தா; அவன் இந்த உலகத்தைச் சிருஷ்டித்து காத்து வருகிறான்; அவன் நிரந்தரமான பேராநந்தன்; நாம் யாவரும் அவனைத் துதித்துக் கொண்டாடுவோமாக. (என்றும்)

God, O man! existed in the beginning of the creation. He is the Creator, Supporter and Sustainer of the sun and other luminous worlds. He was the Lord of the past creation. He is the Lord of the present. He will be the Lord of the

unborn universe. He created the whole world and He sustains it. He is Eternal Bliss. May ye all praise and adore Him as we do.

யஜுர்வேதம் XL ம. 1-ல்.

ஈசா வாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்
தேந த்யக்தேந புஞ்சிதா மாகிருத: கஸ்ய ஸவித்தநம்.

(இ-ள்.) இந்த பிரபஞ்சங்களெல்லாம் ஒரே சிறந்த அரசனால் ஆளப்பட்டவைகளாக இருக்கின்றன. இயற்கையிலுள்ள ஒவ்வொரு உலகத்திலும் அவன் நிறைந்திருக்கிறான். அவன் ஒருவனே உண்மையான கடவுள். ஓ! மனிதனே! அவனுக்குப் பயந்து பிறர் பொருள்மேல் ஆசைப்படாதே. அக்கிரமங்களை விட்டொழித்து பரிசுத்தமான சந்தோஷத்தை அடைய விரும்புவாய். உண்மையான மதமென்னும் நீதியையும், ஸத் தருமத்தையும் தழுவி வருவதனால் உண்மையான ஆத்மாநந்தத்தை அடைவாய். (என்றபடி)

By one Supreme Ruler is this universe pervaded even every world in the whole circle of nature. He is the true God. Fear Him. O man! and covet not unjustly the wealth of any creature existing. Renounce all that is unjust and enjoy pure delight—true spiritual happiness by the practice of justice and righteousness which is another name for true religion.

அதர்வணவேதம் 4-16-1-ல்.

பிருஹந் நேஷா மதிஷ்டாதா அந்திகாதிவ பஸ்யதி
யஸ்தாயந் மந்யதே சரந்து ஸர்வம் தேவ இதம் விதுஹு:

(இ-ள்.) இவ்வுலகங்களை யெல்லாம் ஆளும் வல்ல அரசனாகிய பிரஹ்மம் எல்லாவற்றையும் தனக்கு அதிக சமீபத்தில் இருப்பதாகக் காண்கிறான். மநிதனுடைய ஒவ்வொரு எண்ணத்தையும் செய்கையையும் அப்போதைக்கப்போதே அறிந்துகொள்ளுகிறான். (என்றும்)

The mighty Ruler of these worlds beholds everything as if from close at hand. What the man thinks he does by stealth, all that God perceives and knows.

ரிக்வேதம் 1-164-46-ல்.

இந்திரம் மித்ரம் வருண மக்நி மாஹு
ரதோ திவ்யஃ ஸ ஸுபர்ணோ கருத்மாந்
ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்த்
யக்நிம் யமம் மாதரிஸ்வாந மாஹுஃ

(இ-ள்.) அவனை இந்திரனென்றும், மித்திரனென்றும், வருணனென்றும், அக்நியென்றும், தேவலோக கருத்மான் என்றும் ஞானிகள் சொல்லுகிறார்கள். ஆனால் பரப்ரஹ்மமாகிய அவன் தனியேகவஸ்து. அவனை ஞானிகள் அக்நி, யமன், மாதரிஸ்வான் முதலான பல பெயர்களால் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். (என்றும்)

They call Him Indra, Mitra, Varuna, Agni, and He is heavenly nobly winged Garutman. He is one; sages call Him by many names, *viz.*, Agni, Yama, Matarisvan, etc.

அதர்வணவேதம் 13-4-4-5-ல்.

ஸோஆர்யமா ஸவருணஃ ஸருத்ரஃ ஸமஹாதேவஃ
ஸோஅக்நிஃ ஸௌஸூர்ய ஸௌஏவ மஹாயமஃ

(இ-ள்.) அவன் ஆர்யமான், அவன் வருணன், அவன் ருத்திரன், அவன் மஹாதேவன், அவன் அக்நி, அவன் சூரியன், உண்மையாகவே மஹாயமன். (என்றும்)

He is Aryaman. He is Varuna. He is Rudra. He is Mahadeva. He is Agni. He is Soorya. He verily is Mahayama.

இப்படியே இருக்குவேதங்களில் பிரஹ்ம லக்ஷணங்களைப்பற்றி பின்னும் பலவிதமாக வர்ணிக்கப் பெற்றிருக்கிறது. விரிக்கிற்பெருகுமென்றெண்ணி விடுத்தாம்.

---

# God in Upanishads.

## உபநிஷத்து பிரமாணங்கள்.

வினா—பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி உபநிஷத்துக்களில் எவ்விதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது?

விடை—பிரஹ்ம லக்ஷணத்தைப் பற்றி உபநிஷத்துக்களின் கருத்தை இந்து பைபில் புத்தகம் முதற்பாகத்தில் விசேஷமாகச் சொல்லியிருக்கிறோம். ஆயினும் பின்னும் சில விசேஷ உபநிஷதங்களையுஞ் சொல்லுகிறோம், கேளும்.

### சாந்தோக்யம் 6-2-1-ல்.

ஸதேவ ஸௌம்ய இதமக்ர ஆஸீத்
ஏக மேவா த்விதீயம்.

(இ-ள்.) எனதன்புள்ள ஶ்வேதகேதுவே! ஆதியில் அது (பிரஹ்மம்) ஒன்றேயிருந்தது. அவனே ஏக

மேவாத்விதீயம். இரண்டற்ற தனியேக ஒரே பிரஹ்மம்.
(என்றும்)

In the beginning, my dear Swethakethu! there was That only, Which is one only without a second.

**தைத்ரீயம் 2- ஆநந்தவல்லி, மாண்டூக்யம் 3, முண்டகம், கண்டம் 1, வாக்யம் 7-ல்.**

ஸத்யம் க்ஞாந மநந்தம் ப்ரஹ்ம
ஆநந்தரூபம் அம்ருதம் யத் விபாதி
சாந்தம் சிவ மத்வைதம்.

(இ-ள்.) ஸத்ய ஸ்வரூபியும், ஞாந ஸ்வரூபியும், அநந்தஸ்வரூபியும், அமிர்தஸ்வரூபியுமாக எவன் விளங்குகிறனே, அவன் முடிவற்ற பெரியவன், சாந்தன், மங்கள ஸ்வரூபி, தனக்கு ஒப்பு உயர்வாவதான இரண்டாவது பொருளற்றவன், அத்விதீயன். (என்றும்)

The Reality, the Wisdom, the Infinite shining as Love and the Bliss, the Peace, the Goodness and the Holiness, the One undivided.

**சாந்தோக்யம், 3-14-1-ல்.**

ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம
தஜ்ஜலாநிதி சாந்த உபாஸித.

(இ-ள்.) இதோ இங்கிருக்கும் எல்லாவற்றிலும் பிரஹ்மமிருக்கிறது. இந்த பிரபஞ்சஉற்பத்தி லயகாரணங் கருக்குப் பிராணனாக இருக்கிற அதை மநிதன் தியானிக்கட்டும். (என்றும்)

All this is Brahman. Let a man calmly meditate on. It as that in which the universe has its being, ending and breathing.

**சுவேதாசுவதரர், 6-6-ல்.**

ஸ:வ்ருக்ஷ காலா க்ருதிபி: பரோந்யோ
யஸ்மாத் பிரபஞ்ச: பரிவர்த்ததேயம்.

"அவன் (பிரஹ்மம்) பிரபஞ்சத்திற்கும், காலத்திற்கும், உலகம் சுழலும் உருவத்திற்கும் வேறு பட்டவனும் சிரேஷ்டமானவனுமாக இருக்கிறான். (என்றும்)

**He is superior to, and different from, the universe, time and object having form, through Whom the world revolveth.**

**முண்டகோபநிஷத்து 2-2-5-ல்.**

தமே வைகம் ஜாநத ஆத்மாநம்
அந்யா வாசோ விமுஞ்சத அமிருதஸ்யைஷ ஸேது:

(இ-ள்.) அவனை (பிரஹ்மத்தை) மாத்திரம் அறிய விரும்பு. மற்ற வார்த்தைகளை விட்டுவிடு. அவன் நித்ய வாழ்வுக்கு சேதுவைப் போன்றவன். (என்றும்)

Know Him alone as the Self and leave of all other words. He is the bank of immortality.

**தைத்ரீய நாராயணம் 6-11-ல்.**

யச்ச கிஞ்சி ஜகதஸ்மிந் த்ருஸ்யதே ச்ரூயதேபிவா
அந்தர் பஹிஸ்ச தத்சர்வம் வியாப்ய நாராயண: ஸ்தித:

(இ-ள்.) இவ்வுலகத்தில் எதெது இருக்கிறதாகக் காண்கிறோமோ, எதெது இருக்கிறதாகக் கேட்கிறோமோ அவற்றின் வெளியிலும் உள்ளும் நாராயணன் (பிரஹ்மம்) சூழ்ந்துகொண்டு இருக்கின்றான். (என்றும்)

Whetever is, in this world, seen or heard of, Narayana pervades all that, inside and outside.

தைத்ரீயம் II-6-1-ல.

ரஸோவைஸ: ரஸம்ஹ்யேவ
அயம் லப்த்வாநந்தி பவதி.

(இ-ள்.) அந்த பிரஹ்மம் அருள்வடிவானதென்று அறிந்த பிறகு ஜீவாத்மா அந்த ஆநந்தத்தை அடைகின்றது. (என்றும்)

That Brahman is Bliss itself; on attaining this, the soul feels happy.

இன்னும் அநேக உபநிஷத்துக்கள் பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி புகழ்கின்றன.

---

## God in Brahma Sutras.

### பிரஹ்ம சூத்ர பிரமாணங்கள்.

வினா—இந்த பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி வியாசர் (பிரஹ்ம) சூத்திரத்தில் எவ்விதமாகச் சொல்லியிருக்கிறார்?

விடை—

பிரஹ்ம சூத்திரத்தின்
முதலத்தியாயம், 1-ம் பாதம், 1-வது சூத்திரம்.

"அதாதோ பிரஹ்ம ஜிக்ஞாஸா."

(இ-ள்.) கர்மங்களின் பலங்கள் அநித்யங்களாக இருக்கையாலே பிரஹ்மஞானத்திற்காக விசாரம் (செய்ய வேண்டும்). (என்றும்)

Then therefore enquiry into Brahman.

### முதலத்தியாயம், 1-ம் பாதம், 2-வது சூத்திரம்.

"ஜந்மாத்யஸ்ய யத:"

(இ-ள்.) ஜந்மாதி + அஸ்ய + யத:. அஸ்ய = ஜீவஜடாத்மகமான பிரபஞ்சத்தினுடைய, ஜந்மாதி = சிருஷ்டியாதியஷ்டகமான (அதாவது) சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், நியமநம், ஞாநம், அக்ஞாநம், பந்தம், மோக்ஷமென்னும் எட்டுவித கர்த்ருத்வம், யத: = எதனிடத்திலிருந்துண்டாகிறதோ (அதுவே பிரஹ்மம்). (என்றும்)

(That is Brahman) from which the origin, etc., of this (universe proceed).

### முதலத்தியாயம், 1-ம் பாதம், 3-வது சூத்திரம்.

"ஸாஸ்த்ரயோநித்வாத்."

(இ-ள்.) சாஸ்திர பிரமாணங்களினால் பிரஹ்மமே ஜகஜந்மாதி காரணமாம். (என்றும்)

For (the cause of origination, etc.) is that of which the only means of cognition (knowledge) is the authoritative word.

### முதலத்தியாயம், 1-ம் பாதம், 12-வது சூத்திரம்.

"ஆநந்தமயோப்யாஸாத்."

(இ-ள்.) "அந்யோந்தராத்மாநந்தமய:" என்ற தைத்ரீய வாக்கியத்தின்படி ஆநந்தமயாதி சப்தவாச்சியன் பிரஹ்மமேயாம். பிரகிருதி முதலானவைகளல்ல. (என்றும்)

The blissful (is Brahman only) from the repitition (of the term Brahman).

## முதலத்தியாயம் 1-ம் பாதம், 15-வது சூத்திரம்.

"மாந்த்ரவர்ணிகமேவசகீயதே."

(இ - ள்.) மாந்திரவர்ணிகம் + ஏவச + கீயதே = ஸத்யம்,ஞானம், பிரஹ்மம் என்னும் மந்திரவர்ணத்திலை சொல்லப்பெற்ற பிரஹ்மம் ஆநந்தமயாதி ஸப்தங்களிலை லே சொல்லப்படுகிறது. (என்றும்)

And because (That, *i.e.*, Brahman only) which is (distinctly) described by the Mantravarna (the Vedic Text) is denoted (by the terms Annamaya).

## முதலத்தியாயம், 1-ம் பாதம், 23-வது சூத்திரம்.

"அந்தஸ்தத்தர்மோபதேஸாத்."

(இ - ள்.) அந்தஃ பிரவிஷ்டமென்கிற சுருதியிலை ஹிருதய குகையில் இருக்கிறவன் பிரஹ்மமேயாம். (என்றும்)

(The One) who is (God only) on account of His qualities being declared of Him (the in-dweller).

## முதலத்தியாயம், 1-ம் பாதம், 23-வது சூத்திரம்.

"ஆகாசஸ்தல்லிங்காத்."

(இ - ள்.) 'அஸ்யலோகஸ்ய' என்ற சாந்தோக்கியத்தின்படி ஆகாச: + தத்லிங்காத் = ஆகாச ஸப்தவாச்சியன் பிரஹ்மமேயாம். இங்கு ஆகாசமென்றால் சாதாரண ஆகாசமல்ல. ஆ = சமந்தாத் + காஸஸ்தே = நாலாபக்கங்களிலும் பிரகாசிக்கிற வஸ்து. (என்றும்)

For (He is) Akasa (other) on account of the characteristic marks attributed to it being His.

**முதலத்தியாயம், 1-ம் பாதம், 23-வது சூத்திரம்.**

"அதஏவப்ராண:"

(இ-ள்.) 'தத்வைதத்வம் பிராணோ அபவ:' என்ற சுருதியின்படி பிராணனே பிரஹ்மமாம். (என்றும்)

For the same reason Breath is (Brahman).

**முதலத்தியாயம், 1-ம் பாதம், 24-வது சூத்திரம்.**

"ஜ்யோதிஸ்சரணாபிதாநாத்."

(இ-ள்.) இந்திரியங்களுக்கு அகோசரணைபடியினால் ஜ்யோதிஸ் சப்த வாச்சியன் பிரஹ்மம். (என்றும்)

The Light (is Brahman only) from the statement of the straying for (from the senses).

**முதலத்தியாயம், 3-ம் பாதம், 8-வது சூத்திரம்.**

"பூமா ஸம்ப்ரஸாதா தத்யுபதேஸாத்."

(இ-ள்.) பூமா = 'யோவைபூமா' என்னும் சுருதியில் பூம ஸப்தத்திற்கு பூரணனென்று பொருள். ஸம்பிரஸாதாத் = 'பூம்நஃ தத்சுகம்' என்கிற சுருதியில் பூரண சுகரூபத்துவம் சொல்லி இருப்பதனால் பூரண சுகரூபியானவன் பிரஹ்மமேயாம். (என்றும்)

The perfect one (is God only) on account of the absolutely blissfull nature described and His being declared superior to all.

இப்படியாக இன்னும் அநேக சூத்திரங்களிருக்கின்றன.

14

# GOD IN BHAGAVATH GEETHA.



## பகவத்கீதையின் பிரமாணங்கள்.

வினா — இனி இந்த பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி பகவத்
கீதையில் எவ்விதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது?

விடை —

### பகவத்கீதை,

### 10-வது அததியாயம், 8-வது சுலோகம்.

அஹம் சர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே
இதிமத்வா பஜந்தே மாம் புதாபாவ சமந் விதா:

(இ-ள்.) சர்வசிருஷ்டிகளுக்கும் நானே உற்பத்தி காரணமானவன். என் மகிமையால் சமஸ்த பிரபஞ்சங்களும் நடக்கின்றன. ஞானவான்கள் என் ஸ்வபாவத்தை இவ்வண்ணமுணர்ந்தவர்களாகி என்னைச் சேவை செய்கிறார்கள். (என்றும்)

I am the Creator of all things, and all things proceed from me. Those who are endued with spiritual wisdom believe this and worship me.

### 9-வது அத்தியாயம், 17-வது சுலோகம்.

பிதாஹ மஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ:
வேத்யம் பவித்ர மோங்கார ருக் ஸாம யஜுரேவச.

(இ-ள்.) இந்த ஜகத்திற்குத் தாயும், தந்தையும், கருமபலத்தை விதிப்பவனும், தாதாவும், அறிபொருளும், பாவன வஸ்துவும், ஓங்கார வர்ணமும், ருக் யஜுர் சாம வேதங்களும் நானே. (என்றும்)

I am the Father and the Mother of this world, the Grand Sire and the Preserver, I am the holy One worthy to be known, the mystic figure O. M., the Rig, the Sama and Yajur Vedas.

9-வது அத்தியாயம், 18-வது சுலோகம்.

கதிர் பர்தா ப்ரபுஸ் ஸாக்ஷீ நிவாசஸ் சரணம் ஸுஹ்ருத்
ப்ரபவ ꞉ ப்ரளய ஸ்தாநம் நிதாநம் பீஜ மவ்யயம்.

(இ - ள்.) கருமபலமும், போஷகனும், ஈஸ்வரனும், சர்வசாக்ஷியும், பிராணிகளின் நிவாசகனும், உபகாரியும், மித்திரனும், உற்பத்தியும், ஸ்திதியும், சம்ஹாரமும், நிக்ஷேபமும், ஜகத்தின் உற்பத்திக்குக் காரணமான அழியாத பீஜமும் நானே. (என்றும்)

I am the journey of the good and the Comforter, the Creator, the Witness, the resting place, the asylum and the friend. I am generation and dissolution; the place where all things are reposited, and the inexhaustible seed of all nature.

10-வது அத்தியாயம், 20-வது சுலோகம்.

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசய ஸ்திதঃ
அஹமாதிஸ்ச மத்யஞ்ச பூதாநா மந்தஏவச.

(இ - ள்.) அர்ஜுனா! சமஸ்த பூதங்களினிருதயத்திலுமுள்ள பரமாத்ம சொரூபியும் நானே, அவற்றின் உற்பத்தி ஸ்திதி நாசங்களுக்கும் காரணபூதனும் நானே. (என்றும்)

I am the Soul which st. ndeth in the bodies of all beings, I am the beginning, the middle and the erd of all things.

**18-வது அத்தியாயம், 61-வது சுலோகம்.**

ஈச்வரஸ் ஸர்வ பூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா.

(இ-ள்.) அர்ஜுநா! சமஸ்த பூதங்கட்கும் நியாமகனான ஈஸ்வரன் சகல பிராணிகளின் ஹிருதயங்களிலிருப்பவனாய், சூத்திரக்காரன் பதுமையை ஆட்டும் வகையாக மாயையால் பிராணிகளை பிரமிக்கச் செய்கின்றான். (என்றவாம்)

Easwara resideth in the bre?st of every mortal being—revolving with His supernatural power all thing which are mounted upon the universal wheel of time.

---

**மநுதரும சாஸ்திரம், பிருகுசங்கிதை.**

---

வினா—மநு முதலான சாஸ்திரங்களில் பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி எவ்விதமாகச்சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—

**முதலத்தியாயம், 7-வது சுலோகம்.**

யோஸாவதீந்திரியக்ராஹ்ய: ஸூக்ஷ்மோவ்யக்தஸ்ஸநாதந:
ஸர்வபூத மயோசிந்த்ய: ஸயேவ ஸ்வய முத்பவ:

(இ-ள்.) சகலவேத புராணங்களினாலே பிரசித்தனாகவும், மனதினாலே மாத்திரம் அறியத் தக்கவனாகவும், இந்திரியங்களாலே அறியத் தகாதவனாகவும், உருவ

மில்லாதவனுகவும், சர்வாந்தர்யாமியாகவும், இவ்வாறென்று சிந்திக்கத்தகாத மகிமையையுடையவனுகவும், பிறப்பிறப்பில்லாதவனுகவும் இருக்கப்பட்ட யாதொரு சுவாமியுண்டோ அவனே இந்த ரூபமாகிய பூதங்களாகப் பிரகாசிக்கின்றான். (என்றும்)

## முதலத்தியாயம், 8-வது சுலோகம்.

ஸோபித்யாய சரீராத் ஸ்வாதி ஸஸ்ருக்ஷுர் விவிதா ப்ரஜா:
அபயேவ ஸஸர்ஜாதவ் தாசுபீஜ மவஸ்ருஜத்.

(இ-ள்.) அந்தப் பரமாத்மாவானவன் சகல உயிர்களுக்கும் இருப்பிடமான தன் சரீரத்தினின்றும் நானாவிதமான பிரஜைகளைச் சிருஷ்டிக்க நினைத்து, பிரம்மாண்ட சிருஷ்டிக்கு முன்னம் ஜலத்தையுண்டுபண்ணி அதில் தன் சக்திரூபமான ஒரு விதையை விதைத்தான். (என்றும்)

## முதலத்தியாயம், 11-வது சுலோகம்.

யத்தத் காரண மவ்யக்தம் நித்யம் ஸதஸதாத்மகம் [தே.
தத்திவிஸ்ருஷ்டஸ் ஸபுருஷோ லோகேபிரஹ்மேதி கீர்த்தி

(இ-ள்.) பிரபஞ்சத்துக்காரணனுகவும், சரீரமில்லாதவனுகவும், அழிவில்லாதவனுகவும், வேதாந்தத்தினுல் அறியப்படுதலினுலே சத்து என்றும், கண் முதலிய புறவிந்திரியங்களினுல் அறியப்படாமையினுல் அசத்தென்றும் சொல்லப்பட்ட சுபாவத்தை உடையவனுகவுமிருக்கிற அந்தப் பரமாத்மாவினுல் முன்னர் சிருஷ்டிக்கப்பெற்ற ஒருஜீவனுக்கு பிரஹ்மாவென்று பெயருண்டாகியது. (என்றும்)

பின்னும் பலவிதமாக வர்ணித்துச் சொல்லப்பெற்றிருக்கின்றது.

# God in Agama Thanthras.

## ஆகம தந்திர பிரமாணங்கள்.

வினா—இனி ஆகமதந்திரகிரந்தங்களில் பிரஹ்மலக்ஷணத்தைப்பற்றி எவ்விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—

ஆகமதந்திரங்களிற் சிறந்த

**மஹா நிர்வாண தந்திரத்தில்.**

யதோஜகந் மங்கலாய த்வயாஹம் விநியோஜித
அதஸ்தே கத இஸ்யாமி யத்விசஹிதகுருத் பவேத்

க்ருதே விச்வஹிதே தேவி விச்வேச: பரமேச்வர:
ப்ரீதோ பவதி விச்வாத்மா யதோவிச்வ நதாச்ரதம்

ஸயேவ யேகவஸ்த்ரப: ஸத்யோத்வைத:பராத்பர:
ஸ்வப்ரகாசஸ்ஸதாபூயே: சச்சிதாநந்த லக்ஷண:

நிர்விகாரோ நிராதாரோ நிர்விசேஷோ நிராகுல:
குணாதீதஸ்ஸர்வசாக்ஷீ ஸர்வாத்ம ஸர்வத்ருக் விபு:

கூடஸ்ஸர்வேஷுபூதேஷு ஸர்வவ்யாபீஸநாதந:
ஸர்வேந்த்ரியகுணாபாஸ: ஸர்வேந்த்ரியவிவர்ஜித:

லோகாதீதோ லோகஹேது ரவாங்மாநஸ கோசர:
ஸவேக்திவிச்வம் ஸர்வக்ஞ நஸ்தம் நஜாநாதி கஸ்சந

ததாதீநம் ஜகத்ஸர்வம் த்ரைலோக்யம்ஸ சராசரம்
ததாலப்யந தஸ்திஷ்டே தவிதர்க்யமிதம்ஜகத்

தத்ஸத்யதாமுபாஸ்ரித்ய ஸத்தத்மாதிப்ருதக்ப்ருதக்
தனைநஹேதுபூதேந வாயம்ஜாதமஹேச்வரி
காரணம்ஸர்வபூதாநாம் ஸ.யேக:பரமேச்வர: ......

(இ-ள்.) ஓ தேவி! உலக ரக்ஷணார்த்தமாக என்னையும் உன்னையும் நியமித்த அந்தப்பரமேசுவரனைப்பற்றிச் சொல்லுகிறேன் கேள்! உலக ஆத்மாவாகிய அந்த மஹா புருஷனால் உலகம் தாங்கப் பெற்றிருக்கிறது. அவன் ஏகமேவாத்விதீயன், இரண்டற்ற ஸர்வவ்யாபி, காணப்படும் எப்பொருளுக்கும் பூரணமும், சிரேஷ்டமுமானவன். அவன் சத்பனும், ஞானஸ்வரூபியுமானவன். அவனுக்கு உருவம், பிறர் உதவியும், ஜனனமும், உலக குணங்களுமில்லை. அவன் எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் ஏககாலத்தில் பார்ப்பவன். அவன் எல்லா பூதங்களிலும் மறைந்து நிரந்தரமாக இருப்பவன். அவன் இந்திரியங்களுக்கு வன்மையைத் தருகிறவன். ஆனால் அவனுக்கு யாதொரு இந்திரியமுமில்லை. அவன் உலக சிருஷ்டிக்கு காரணனாக இருக்கினும், அவ்வுலகிற்கப்புறப் பட்டவன். அவனுக்கு எல்லாம் தெரியும், அவனைத் தெரிந்தவர்களில்லை. இந்த உலக முழுதும் அவனது ரக்ஷணையில் இருக்கிறது. ஓ பெருந்தேவியே! நாம் அவனால் சிருஷ்டிக்கப்பட்டவர்கள். அவன் எல்லாவற்றிற்கும் காரணபூதனான ஏகமேவாத்விதீயன். இந்த உலக சிருஷ்டிகளை ஞானிகள் சதா பாடிக்கொண்டாடுகின்றனர், ............ (என்றபடி)

## குலார்நவ தந்திரத்தில்.

தோயம்விநா யதாநாஸ்தி பிபாஸாநாசி காரணம்
தத்வத்க்ஞாநம் விநாதேவ ததாமுக்திர் நஜாயதே.

(இ-ள்.) ஓ தேவி! தண்ணீரில்லாமல் எப்படி தாக சாந்தியாகாதோ அப்படியே உண்மையாய் ஈசுவரனு

டைய (பிரஹ்ம) ஞானமில்லாமல் மோக்ஷம் கிடைக்காது. (என்றும்)

---

# God in Puranas.

## புராண பிரமாணங்கள்.

வினா— பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி புராணங்களிற் சொல்லியிருக்கும் கருத்துகளைச் சொல்லுங்கள்?

விடை— அப்படியே சொல்லுகிறோம், கேளும்—

### மத்ஸ்யபுராணம், அதி 2-6-16-ல்.

ஏகாமூர்த்திஸ்த்ரயோபாக ப்ரஹ்மவிஷ்ணுமஹேச்வரா:
சிவஸ்யஹ்ருதயேவிஷ்ணுர்விஷ்ணோஸ்சஹ்ருதயேசிவ:
யதாந்தரம்பச்யாமி ததாமேஸ்வஸ்திசாயுஷ:

(இ-ள்.) ஒரே மூர்த்தியானது பிரஹ்மா, விஷ்ணு, மஹேசுவரர்களாகிற மூன்று பிரிவாயிருக்கிறது. (என்றும்)

### கூர்மபுராணம், பூர்வபாகம், அதி. 15-ல்.

யஸ்துசைஷமஹாயோகி ரக்ஷகோவிஷ்ணுரவ்யய:
ஸதேவோபகவாந்ருத்ரோ மஹாதேவோநஸம்சய:
மந்யந்தேயேஜகத்யோநிம் விபிந்நம்விஷ்ணுமீச்வரம்...

(இ-ள்.) மஹா யோகியும், உலகரக்ஷகனுகவும், அழிவற்றவனுமாகிய விஷ்ணு யாரோ, அந்த தேவனே பகவானை ருத்ரனுகவும் மஹாதேவனுகவுமிருக்கிறான். இதற்குச் சந்தேகமில்லை....... (என்றும்)

## வராஹபுராணம், அதி. 4-55-ல்.

சதுர்முகோயஸ் ஸ்ருஜதேஸமக்ரம்
ரதாங்கபாணி: பரிபாலநாய
க்ஷயாயகாலா நலசங்நிபோஸ்தம்
யக்ஞமூர்த்திம் ப்ரணதோஸ்மிநித்யம்.

(இ-ள்.) யார் பிரஹ்மாவாகவிருந்து சிருஷ்டி செய்கிறானோ, விஷ்ணுவாயிருந்து பரிபாலநம் செய்கிறானோ, யார் பிரளய காலத்தில் காலாக்நி ஸ்வரூபமாயிருந்து சம்ஹாரஞ் செய்கிறானோ அப்படிப்பட்ட யக்ஞமூர்த்தியை நமஸ்கரிக்கின்றேன். (என்றும்)

## பத்மபுராணம், சிருஷ்டிகாண்டம், அதி. 3-6-28-ல்.

த்வம்கர்த்தாஸர்வபூதாநாம் த்வம்பர்த்தாத்வம்விநாசக்ருத்
ஸர்காதை:பரோப்ரஹ்ம விஷ்ணுருத்ராத்மரூபத்ருக்.

(இ-ள்.) ஓ பகவானே! நீ சகல பூதங்களுடைய உற்பத்திற்குக் காரணமாக இருக்கிறாய், நீ சகல பூதங்களுடைய இரக்ஷணையையும் நாசத்தையும் செய்கிறவனாக இருக்கிறாய், உத்பத்தியான பின் சிருஷ்டி காலத்தில் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரஸ்வரூபங்களை தரிக்கிறாய். (என்றும்)

## பத்மபுராணம், ஆதிகாண்டம், அதி. 50-4-19-ல்.

யோஹிமாம்விஷ்ணுமவ்யக்தம் தேவம்வாபிமஹேச்
ஏகீபாவேநபச்யந்தி நதேஷாம்புநருத்பவ: [வரம்

(இ-ள்.) யார் காணக்கூடாதவனும், பிரகாச ஸ்வரூபியுமான இந்த விஷ்ணுவையும், மஹேஸ்வரனையும் ஒரே ரூபியாகப்பார்க்கிறார்களோ அவர்களுக்கு மறுபிறப்பில்லை. (என்றும்)

## பிரஹ்மவைவர்த்தபுராணம், பிரஹ்மகாண்டம், அதி. 18-4-11-ல்.

யேநஸ்ரஷ்டாசுப்ரக்ருதிஸ் ஸர்வாதாரா பராத்பரா
ப்ரஹ்மவிஷ்ணுசிவாதீநாம் ப்ராகுர்யத்ரிகுணத்மிகா.

(இ - ள்.) சகலத்திற்கும் ஆதாரமானவளாயும், சிரேஷ்டத்திற்கெல்லாம் சிரேஷ்டமானவளாயும், பிரஹ்மா, விஷ்ணு, சிவன் முதலியவர்களைப் பெற்ற (உண்டாக்கின) வளாயும், முக்குண ஸ்வரூபமுள்ளவளாயும் இருக்கிற பிரகிருதியானவள் யாராலேசிருஷ்டிக்கப்பட்டாளோ அந்த பரமாத்துமாவுக்கு நமஸ்காரம். (என்றும்)

## பவிஷ்யத்புராணம் 3-4, அதி. 20-6-5-ல்.

'ஏகமூர்த்தே ச்ரிதாஜாத ப்ரஹ்மாவிஷ்ணு மஹேச்வர:'

(இ - ள்.) ஒரே மூர்த்தியினிடத்திலிருந்து பிரஹ்மா, விஷ்ணு, மஹேஸ்வரனென்ன மூன்றுக உண்டானார்கள். (என்றும்)

## பிருஹந்நாரதீயபுராணம், அதி. 3-ல்.

நாராயணோ அக்ஷரோநந்த ஸர்வவ்யாபீ நிரஞ்ஜந:
தேநேத மகிலம்வ்யாப்தம் ஜகஸ்தாவரஜங்கமம்...

(இ - ள்.) ஓ முநியே! அழிவற்றவனுகவும், முடிவற்றவனுகவும், எங்கும் நிறைந்தவனுகவும், சுத்தனுகவுமிருக்கிற நாராயணனாலே ஸ்தாவரஜங்கமங்களாயிருக்கிற இந்த சகல ஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. (என்றும்)

**பாகவதபுராணம், அதி. 8-32-2-ல்.**

ஓம் நமோபகவதே தஸ்மை யதயேதச்சிதாத்மகம்
புருஷா யாதிபீஜாய பரேச்சாய மிதீமஹி.

(இ - ள்.) எல்லா ஜீவகோடிகளுக்கு மனசாக்ஷியும், பிரபஞ்சத்திற்கு ஆத்மாவும், உலக சிருஷ்டிக்கு ஆதி மூலமும், சிரேஷ்டமுமான பகவானை தியானிப்போமாக. (என்றும்)

**விஷ்ணுபுராணம், அதி. 1-10-66-ல்.**

பிரஹ்மத்வே ஸ்ருஜதே விச்வம் ஸ்திதோ பாலயதேபுந:
ருத்ர ரூபாய கல்பாந்தே நமஸ்துப்யம் த்ரிமூர்த்தயே.

(இ ள்.) சகல பிரபஞ்சத்தையும் பிரஹ்மாவாக விருந்து சிருஷ்டிக்கிறாய். சிருஷ்டித்ததை விஷ்ணுவாக விருந்து இரக்ஷிக்கிறாய். கற்பத்தின் முடிவில் ருத்ர ரூபனாயிருந்து (உலகத்தை) அழிக்கிறாய். அப்படிபாக திரிமூர்த்திஸ்வரூபியான உனக்கு நமஸ்காரம். (என்றும்)

**ஸ்காந்தபுராணம், காசிகாண்டம், பூர்வார்த்தம், அதி. 23-6-41-ல்.**

யதாசிவஸ்ததாவிஷ்ணுர் யதாவிஷ்ணுஸ்ததாசிவ:
அந்தரம் சிவ விஷ்ணோஸ் சமாநாதபிந வித்யதே.

(இ - ள்.) சிவனெப்படியோ அப்படியே விஷ்ணுவும், விஷ்ணுவெப்படியோ அப்படியே சிவனும். சிவ, விஷ்ணுக்களுக்குள் அற்பமேனும் பேதமில்லை. (என்றும்)

**இலிங்கபுராணம், அதி. 95-4-37-ல்:**

நமச்சிவாய ருத்ராய சங்கராய சிவாயதே
மயஸ்கராய விச்வாய விஷ்ணவே பிரஹ்மணேநம:

(இ - ள்.) சிவனுகவும், ருத்ரனுகவும், சங்கரனுக வும், மங்கள ஸ்வரூபனுகவும், மோக்ஷத்தைத் தரத்தக்க வனுகவும், பிரபஞ்ச ஸ்வரூபனுகவும், விஷ்ணுவாகவும், பிரஹ்மாவாகவுமிருக்கிற உனக்கு நமஸ்காரம். (என்றும்)

**பிரஹ்மபுராணம், அதி. 71-6-7-ல்.**

நமோ ஹிரண்யகர்பாய ஹரயே சங்கராயச
வாஸுதேவாயதாராய ஸர்கஸ்தித்யந்தகாரணே.

(இ - ள்.) ஹிரண்யகர்பனும், ஹரியும், சங்கரனும், வாசுதேவனும், அழிவற்றவனும், சிருஷ்டி ஸ்திதி ஸம் ஹாரங்களைச் செய்கிறவனுமாக விருக்கிற உனக்கு நமஸ் காரம். (என்றும்)

பின்னும் பலவிதமாக வர்ணிக்கப்பெற்றிருக்கிறது.



# God in Ithikasas.

**இதிகாசப் பிரமாணங்கள்.**



வினு—இந்த பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி இதிகாசங் களில் எவ்விதமாகச் சொல்லப் பெற்றிருக்கிறது ?

விடை—

இதிகாசங்களிற் சிறந்த
**மஹாபாரதம், ஆரண்யபர்வம்,**
**அதி. 1-189-57-ல்.**

மார்க்கண்டேயர் சொல்லுவதாவது:—

ஸர்வேஷாமேவ பூதாநாம் பிதாமாதாச மாதவ:
கச்சத்வமேநம் சரணம் சரண்யம் புருஷர்ஷப.

(இ-ள்.) மாதவனாகிய பரமேஸ்வரன் எல்லா பிராணிகளுடைய பிதாவாகவும்,மாதாவாகவுமிருக்கிறான். ஆகவே, ஓ யுதிஷ்டிரா! நமக்கு அடைக்கல ஸ்தான மாகிய அவனை சரணமடையுங்கள். (என்றும்)

நதேரூபம்நசாகாரோ நாயுதாநிநசாஸ்பதம்
ததாபிபுருஷாகாரோ பக்தாநாம் த்வம்பிரகாசஸே.

(இ-ள்.) பகவானாகிய உனக்கு (எவ்வித) வருணமும், ரூபமும், ஆயுதங்களும், வசிக்கத்தக்க குறிப்பான இடமும் இல்லை. அப்படியிருந்தும் உனது பக்தர்களுக்குச்சேவை சாதிக்கின்றாய். (என்றும்)

---

## ஸ்ரீ ராமாயணம்.

(பிரஹ்மா சொல்லுகின்றார்.)

---

பவாந்நாராயணோதேவ: சிரிமாஸ்சரியத:ப்ரபு:
அக்ஷரம்பிரஹ்மஸத்யத்வம் மத்யேசாந்தேசராகவ.

(இ-ள்.) ஸ்ரீமந்நாராயணனாகிய இராகவனே! இணையற்ற ஆயுதங்களை யுடையவனே! நீ அழிவில்லாத உண்மையான பிரஹ்மமாயும், சிறந்த கர்த்தனாயும், எப்போதும், எவ்விடத்தும், ஆதியிலும், மத்திய காலத்திலும், அந்தத்திலும் சுயம்பிரகாசமாய் ஜ்வலிக்கின்றவன். (என்றும்)

லோகாநாத்வம்பரோதர்ம: புருஷ: புருஷோத்தம:
சரண்யம்சரணம்சத்வா முஹூர்திவ்யாமஹர்ஷய:

(இ-ள்.) நீ (பிரஹ்மம்) எல்லா உலகங்களிலும் சிரேஷ்டமான தர்ம ஸ்வரூபியானவன். நீ புருஷோத்

ஜமன் என்னும் பெயரால் புகழப்பெற்ற பராபரவஸ்து. நீஎல்லாருக்கும் அடைக்கல ஸ்தானமென்றும் எல்லாவித மநிதர்களை இரக்ஷிப்பவனென்றும்தேவரிஷிகள் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். (என்றும்)

த்வம்த்ரயாணும்ஹிலோகாநா மாதிகர்த்தாஸ்வயம்ப்ரபு:
த்வம்யஜஸ் த்வம்வஷட்கார த்வமோங்கார: பராத்பர:

(இ - ள்.) மூவுலகங்களை சிருஷ்டித்தவனும், சுவயம்பானவனும், யக்ஞத்தில் வஸத்தானவனும், ஓங்கார சப்தமானவனும், எல்லாவற்றிலும் சிறந்தவனுமாகத் தெரிவிக்கிறாய். (என்றும்)

## ஸ்காந்தபுராணம், காசிகாண்டம், பூர்வபாகம், அதி. 8-4-99-ல்.

" யமஉவாச "

கோவிந்தமாதவ முகுந்த ஹரேமுராரே
சம்போசிவேச சசிசேகர சூலபாணே
தாமோதராச்யுத ஜநார்த்தந வாசுதேவ
த்யாஜ்யபடாய இதிஸந்தத மாமநந்தி.

(இ - ள்.) ஓ படர்களே! எப்போதும் எவர்கள் கோவிந்தா, மாதவா, முகுந்தா, ஹரே, முராரே, சம்போ, சிவ, ஈச, சசிசேகரா, சூலபாணே, தாமோதர, அச்சுதா, ஜநார்த்தன, வாசுதேவா என்கிற இப்படிப்பட்ட நாமங்களைச்சொல்லி பிரஹ்மத்தைத் தியானிக்கிறார்களோ அவர்களை விட்டுவிடுங்கள் என்றும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

27

# God in Sidhanthas.

## சைவ வைணவ சித்தாந்த பிரமாணங்கள்.



வினா—பிரஹ்மலக்ஷணத்தைப்பற்றி சைவ சித்தாந்திகள் சொல்லும் விதத்தைச் சொல்லுங்கள்?

விடை—சொல்லுகிறேன்கேளும்.

பிரஹ்மத்துக்குப் பதி(சிவன்) என்னும் பெயருண்டு; சிவன் என்றால் மங்களகரமானவன் என்று பொருள். அவன் எங்கும் வியாபித்தவன், நித்யன், பந்தமற்றவன், ஸர்வக்ஞன், ஸ்வயம்பு, சகலத்திற்கும் கர்த்தன், சதா ஆநந்தமுடையவன், ஸர்வ சுதந்திரன். இந்தச் சிவபெருமானுக்கு ஐந்துவித தொழில்களுண்டு. அவையாவன-சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதாநம், அநுக்கிரஹமென்பவைகளாம். திரோதாநமாவது பசுக்களை யனாதி கருமவாசனையினால் பிரகிருதி சம்பந்தமான தேகத்தையும், சுகதுக்கமுதலிய அநுபவங்களையு மடையச்செய்வதாம். அநுக்ரஹமாவது மாயாகாரியத்தினால் உண்டாயிருக்கிற தேகத்தையடைந்த பசுக்களை மாயையிலிருந்து விடுவித்து ஸ்வஸ்வரூபத்தை யடையச் செய்வதாம். பசுக்களும், மாயையும் சிவபெருமானுக்கு அந்நியமானவைகளாம். உலகசிருஷ்டிக்குமாயையையேவு கிறதனால் சிவபெருமான் நிமித்த காரணனாகிறான். அந்தச் சிவனுக்கு ரூபம், அரூபம், ரூபாரூபமென மூன்று வகையான வடிவங்களுண்டாம். அப்பெருமான் அரூபமாக இருக்கும்போது சிவனென்றும், ரூபாரூபமாய் இருக்கும் போது ஸதாசிவனென்றும், ரூபத்தோடு இருக்கும்போது பரமேசுவரனென்றும் சொல்லப்படுகிறார். அந்தச்சிவன்

செய்யும் ஐந்து தொழில்களும் சுத்தமாயையைக்கொண்டு செய்யப்படுகின்றனவாம். அசுத்தமான மாயையைக்கொண்டு அவ்வைந்துகாரியங்களையும் அநந்தேசுவரனென்கிற பெயரையடைந்த தேவன் மூலியமாய் அவனுக்கதிஷ்டாதாவாய் இருந்து செய்கிறான். அந்த அநந்தேசுவரன் மூலியமாக ஸ்ரீகண்ட ருத்திரனென்கிற தேவனுக்கு அதிஷ்டானமாய் இருந்து பிரகிருதி சவுகரியங்களைச் செய்கிறதுமுண்டாம். ஸ்ரீகண்ட ருத்திரன் மூலியமாக பிரம்மாவுக்கு அதிஷ்டானமாகவிருந்து சிருஷ்டி காரியங்களையும், விஷ்ணுவுக்கு அதிஷ்டானமாக இருந்து ஸம்ஹார காரியங்களையும் செய்கின்றனர் என்று சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா—பிரஹ்ம[illegible]ணத்தைப்பற்றி வைணவ சித்தாந்திகள் சொல்லுவதைத் தெரிவியுங்கள் கேட்போம்?

விடை—தெரிவிக்கிறோம், கேளும்.

பிரஹ்மமென்னும் பதம் சர்வேஸ்வரனைச் சொல்லுகின்றது. அவ்வீஸ்வரன் ஸ்ரீய:பதியாகவும், அகிலஹேயப்பிரத்திய நீகாந்தனாகவும், அவாப்த சமஸ்த காமனாகவும், நிரங்குச ஸ்வதந்திரனாகவும், நிருபாதிக சர்வசேஷியாகவும், க்ஞானாநந்த ஸ்வரூபனாகவும், சகல ஜகத் சர்க்கஸ்திதி சம்ஹார கர்த்தனாகவும், ஆர்த்தோர்ஜிக்ஞாஸுரர்த்தார்த்தி க்ஞானி என்கிற சதுர்வித புருஷர்களுக்கும் ஆஸ்ரண்யனாகவும், தர்மார்த்த காமமோக்ஷமென்னும் சதுர்வித பலப்பிரதனாகவும், நித்தியங்களாய், நிஸ்ஸீமங்களாய், நிர்தோஷங்களாய், சமாநாதிகரண ரஹிதங்களாயிருந்துள்ள க்ஞானசக்தி பலைஸ்வர்ய வீர்ய தேஜஸுக்களையுடையவனாகவும், வாத்சல்ய, சௌசீல்ய, சௌவார்த்த, சௌலப்ய, ஸ்வாமித்வாத்வ, ஆஸ்ருத சம்ஸ்லேஷ தோஷபோக்யாதி திருக்கல்யாண குணகண விஷ்

ஷிதனுகவும், தயாசக்தி, க்ஷமாசக்தி, ஆனந்தசக்தி, சிற்சக்தி, பிரவிருத்திசக்தி, நிவர்த்திசக்தி, அநுக்ரஹசக்தி, இச்சாசக்தி, க்ஞானசக்தி, கிரியாசக்தி என்கிற அஷ்டசக்தி தொடக்கமாகிய மகா சக்தியுக்தனுகவும், அநாதி முக்த, நித்த, அப்ரமேயனுகவும், அப்ராகிருத தேவிபூஷணுயுதாலங்கார சௌந்தர்ய சௌகுமார்ய லாவண்ய விலக்ஷண யுஜ்வல விக்ரகனுகவும், விமலாநந்த க்ஞான ஸ்வரூபிகளான நித்தியசூரிகள் சேவிதனுகவும், பசிதாக சோக நரைதிரை மரணுதிரகிதனுகவும், ஹேயகுணுபாவனுதலால் நிர்க்குணனென்றும், பிரகிருதி சம்பந்திகளாயப்போகாத அப்ராகிருத சரீரனுதலால் அரூபியென்றும், மாயாவிகார ரகிதனுதலால் நிர்விகாரனென்றும் கூறப்பட்டவனுகவும், எல்லாமுடையவனுதலால் தனக்கொன்றில்லாதவனுகவும், ஜன்மரூபமில்லாதவனுதலால் நாமரூபரகிதனுகவும், உற்பத்தி ஸ்திதியில்லாதவனுதலால் ஆதிமத்யாந்த ரகிதனுகவும், சர்வார்த்த சரீரனுதலால் விஸ்வேஸ்வரனுகவும்.

"ஆணல்லன், பெண்ணல்ல னல்லவலியுமல்லன்" என்றபடி புருஷவியக்தி, ஸ்த்ரீ வியக்தி, அப்பிரயோஜன அலிவியக்தி யல்லாதவனுதலால் ஆண் பெண்ணலி யல்லாதவனுகவும், இயல்பாகவே பாசமற்ற இயற்கையறிவினனுய்ச் சகல பூதங்களினும் தனக்கோர் பற்றும் செய்கையும் இல்லாதவனுய்ப் பரிபூரணமாய் நிறைந்துள்ளவனுதலால் ஸ்ரீவிஷ்ணுவென்றும், நித்யவஸ்துக்களில் வசிப்பவனுதலால் வாசுதேவனென்றும், அறுகுணனுதலால் பகவனென்றும், அழிவிலனுதலால் அச்சுதனென்றும், இகமோக்ஷ பிரதனுதலால் முகுந்தனென்றும், விதி சிவ சரீரியாதலால் கேசவனென்றும், ஸகலாத்மதேகனுதலால் நாராயணனென்றும், இத்யாதி திருநாமத்தையுடைய பரிபூரணுத்மகனுகவும், மூன்று நாழியில் உயிரை நிறைத்துக்

கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போல மூன்று வேதமயமாயுள்ள பிரணவ சகிதமாகிய திருவஷ்டாக்ஷர வாசக வாச்சியனாகவும், நிரங்குச ஸ்வதந்திரனாகவும் இருந்துள்ள ஏகோ நாராயணனென்னுமவன் அந்த பரமேஸ்வரனாகிய ம்பெருமானும் எனச் சொல்லப்படுகிறது.

## God in Nature.

### (His attributes and different names.)

வினா—பிரஹ்மலக்ஷணத்தைப்பற்றி வேதம், உபநிஷத்து, சூத்திரங்களில் பிதா, மாதா, இந்திரன், மித்திரன், வருணன், வாயு, அக்நி முதலான பெயர்களால் வர்ணித்திருக்க, புராண இதிகாசங்களில் பிரஹ்மா, விஷ்ணு, சிவன், இராமன், கிருஷ்ணன் முதலான பல பெயர்களால் வர்ணித்திருக்கவேண்டிய காரணமென்ன ?

விடை—இந்நாட்டாருக்கு வேதங்களின் பொருளையறிந்து வேதோக்த அநுஷ்டானங்களைத் தழுவி ஏகமேவாத்விதீயனைத் துதித்துக் கொண்டாடும்படியான ஞானசக்தி காலவித்தியாசத்தினால் குறைந்துவிட்டமையினால், அந்த பரமாத்மாவை விண்ணுலகிலும், மண்ணுலகிலும் மற்றெங்கும் நிறைந்திருக்கும் தன்மையைக்கொண்டும் அந்த பிரஹ்மத்தின் அநந்த குணகர்மங்களைக் கருதியும் அவனுக்குப் பல பெயர்களை வைத்து வணங்க ஆரம்பித்தார்கள்.

வினா—அப்படி அந்த பரமாத்மாவின் குணகர்மங்களைக் கருதி வணங்கிவரும் பல பெயர்கள் எத்தனை ?

விடை—அந்த ஏகபராபரவஸ்துவை முப்பத்து முக்கோடி பெயர்களால் வர்ணித்தார்கள்.

வினா—இப்படி பரஹ்மத்திற்கு இடப்பெற்றிருக்கும் பல பெயர்களில் சில முக்யமான பெயர்களையும் அப் பெயர்களுண்டான காரணங்களைப்பற்றி சங்கிரஹ மாகச் சொல்லுங்கள் ?

விடை—சொல்லுகிறோம் கேளும்:—

ஆரியர் வேதங்களில் பிரஹ்மத்திற்கு ஓம் முதலான பெயர்கள் வழங்கப் பெற்றிருக்கின்றன உதாரணமாக.

**சாந்தோக்ய உபநிஷத்து மந்திரம் 1-ல்.**

"ஓமித்யேத தக்ஷரமுத்கீத முபாஸீத" என்றும்

**மாண்டூக்யம்—மந்திரம் 1-ல்.**

"ஓமித்யேததக்ஷரமிதகம், ஸர்வம் தஸ்யோப
வ்யாக்யானம்" என்றும்

**கடோபநிஷத்து வல்லி 2, மந்திரம் 15-ல்.**

"ஸர்வே வேதாயத்பதமா மந்த்ரபாசும்
ஸர்வாணிசயத்வதந்தி
யதிச்சந்தோ பிரஹ்மசர்யம் சரந்திதத்தேபதம்
சங்க்ரஹேண ப்ரவம்யோ மித்யேதத்" (என்றும்)

**மநுதர்மசாஸ்திரம் அத்தியாயம்,**

**12-22-123 சுலோகங்களில்.**

"பிரசாசிதாரம் ஸர்வேஷா மணியாம்ஸமணோரபி
ருக்மாம்பம் ஸ்வப்நாதிசம்யம் வித்யாத்தம்புருஷம்பரம்
ஏகமேகே தந்த்யக்நிம் மநும் யே ப்ரஜாபதிம்
இந்த்ரமேகே பரேப்ராணம்அபரப்ரஹ்ம சாஸ்வதம்."
(என்றும்)

## கைவல்ய உபநிஷத்தில்.

“ ஸபிரஹ்மா, ஸவிஷ்ணுః ஸருத்ரஸ் ஸசிவஸ்
ஸோக்ஷர ஸபரமః ஸ்வராட்
ஸ இந்த்ர ஸகாக்கி : ஸஸ்சந்த்ரமாః” என்றும்

## யஜுர்வேதம் அத்தியாயம் 13-18-ல்.

“ இந்த்ரோமாஹநரோதஸப ப்ரத்யக்ஷவ இந்த்ரః
ஸஹர்யமரோசயத் இந்த்ரேஹவிச்வாபுவகாநி
ஏயிர இந்த்ரேஸ்வாநாச இந்த்ரః” என்றும்.

இத்யாதி சுருதி முதலான பிரமாணங்களினுல் பரமேசுவரனுக்கு சுபாவகுண கர்மங்களை யனுசரித்து ஓங்காராதிப்பெயர்கள் வழங்கி வருவது பிரத்யக்ஷம்

## யஜுர். அதி. 80, மந்திரம் 17-ல்.

1. ஓம் க்கம் = “ அவதித்யோம் ஆகாசமிவ வியாபகத்வா க்கம் ஸர்வேப்யோ புருஷதாவாத்பிரஹ்ம’ இரக்ஷிப்பதனுல் ஓம் ஆகாசத்தைப்போல வியாபிக்கையாலும், க்கம் - எல்லாவற்றிற்கும் பெரியவனுகையாலும், பிரஹ்ம - ரமః என்று பரமேசுவரனுக்குப் பெயருண்டாகியது. அதாவது எவன் ஓம் என்னும் பெயரால் பிரகாசிக்கிறனே, எவன் என்றும் அழிவற்றவனே அவனை உபாசிப்பதே உத்கிருஷ்டமாகும் என்பதாம்.

2. ஓம்த்யே = வேதாதி சாஸ்திரங்களிலெல்லாவற்றிலும் பிரதானமும் உண்மையுமான பெயர் ஓம் என்பதாம், மற்ற பெயர்களெல்லாம் கவுணீக நாமங்களாம்.

3. ஸர்வேவேதா = எல்லா வேதங்களும், சகல தர்மாநுஷ்டான ரூப தபஸ்சரணங்கள் எவனை கோஷித்து கவுரவிக்கின்றனவோ, எவனை அடைய விரும்பி பிரஹ்ம

சரிய ஆச்ரமத்தை அநுசரிக்கின்றனரோ, அவனை ஓம் என்று சொல்லப்படுமாகையால் பரமேசுவரனுக்கு ஓம் என்னும் பெயருண்டாகியது.

4. பிரகாஸிதாரம் = எவன் எவரையும் சிருஷ்டிக்கவல்லவனோ, எவன் சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மமானவனோ, எவன் ஸ்வப்ரகாச ஸ்வரூபனோ, எவன் ஸமாதிஸ்த புத்தியால் அறியும் யோக்கியமானவனோ அவனே பரம புருஷன் என்று சொல்லப்படுகிறான்.

5. அக்நி = ஸ்வப்ரகாசனென்றும், விஞ்ஞான ஸ்வரூபனுகையால் மநு என்றும், அனைவரையும் பரிபாலிப்பவனுகையால் இந்த்ரனென்றும் அனைவருக்கும் ஜீவமூலமானபடியினுல் பிராணனென்றும், ஜகங்களையெல்லாம் சிருஷ்டிப்பவனுகையால் பிரம்மனென்றும், சர்வத்திலும் வியாபித்திருப்பவனுகையால் விஷ்ணு என்றும், துஷ்டர்களைத்தண்டித்து அழும்படி செய்பவனுகையால் ருத்திரன் என்றும், மங்களமயனும் யாவருக்கும் கலியாண கர்த்தனுமானபடியினுல் சிவன்என்றும், "யஸ்ஸர்வமஸ்நுதே நக்ஷரதி நவிநச்யதி தக்ஷரம், யஸ்ஸ்வயம் ராஜதேஸஸ்வராட், யோக்நி ரிவகால : கலயிதா பிரளய கர்த்தா சகாலாக்நி ரீச்வர :" = சகலத்திலும் வியாபித்து அவிநாசியாகையினுல் அக்ஷரன் என்றும், ஸ்வயம் பிரகாசனுகையால் ஸ்வராட் என்றும், பிரளய காலத்தில் அனைவருக்கும் காலத்திற்குக் காலமாகிறபடியினுல் காலாக்நி என்றும் பெயருண்டாகியது.

6. இந்த்ரம்மித்ரம் = அத்விதீய சத்ய பிரஹ்மவஸ்துவிற்கே இந்திராதி பெயர்கள். "திவுக்ஷி செத்தேஷ-பதராத்தேஷபவோ திவ்ய :" = பிரகிருதியாதி திவ்விய பதார்த்தங்களுக்குள் வியாப்தனுகையால் திவ்யன் என்

றும், உத்தமமான பாலனஞ் செய்பவனும் பூரணமான கருமத்தைச் செய்பவனுமாகையால் சுபாணன் என்றும், பெரிய ஸ்வரூபமுடையவனாகையால் குருதான்மா என்றும், வாயுவைப்போல அதிக பலசாலியானபடியினால் 'மாதரிசன்' என்றும் பெயர்களுண்டாயின.

7. பூமிரசி = 'பவந்திபூதான்யஸ்யாம்ஸாபூமி:' = இவனிடம் சகல பூத பிராணிகளுண்டாகிறபடியால் பரமேஸ்வரனுக்குப் பூமி என்று பெயர் உண்டாகியது.

8. இந்த்ரோமஹாந் = இப்பெயரும் பரமேஸ்வரனுக்கே சொல்லப்பட்டிருக்கின்றது.

9. பிராணன் = எப்படி பிராணனுடைய வசத்தில் சரீரமும் இந்திரியங்களும் இருக்கின்றனவோ, அது போல பரமேஸ்வரனுடைய வசத்தில் ஜகமெல்லாம் இருப்பதால் இப்பெயருண்டாகியது.

சிலர் இத்யாதி நாமங்கள் பிரபஞ்சத்திற்காணும் பல பொருள்களுக்கும் சொல்லிவருவதால் அப்பொருள்களும் பரமேஸ்வரனென்று மயங்கவேதுவாகும். பிரபஞ்சத்திற்காணும் பொருள்கள் ஒருகாலத்தில் ஜனித்து வேறொருகாலத்தில் மறைந்துவிடும். பரமேஸ்வரன் ஜனனமரணதிகளற்ற நிரந்தரனாகையால் அவனுக்கே மேற்குறித்த பெயர்கள் பொருந்துமென வியாகரணம், நிருத்தம், பிராமண சூத்திராதிகளும் ரிஷிமுனிவர்களும் வியாக்கியானம் செய்திருக்கின்றனர். அவற்றின் கருத்தை இதனடியிற் காணலாம்.

## பரபிரஹ்மத்திற்கு ஓங்காரார்த்தம்.

10. விராட்டு = உபசர்க்கபூர்வகமான 'ராஜ்ருதிப்தவ' தாது அல்லது பகுதியோடு 'க்விப்' பிரத்யயத்தைச்

சேர்ப்பதனால் விராட்டு சப்தம் சித்தமாகின்றது. "யோவி விதம்நாம சராசரம் ஜகத்ராஜயதிப்ரகாசயதி ஸ்வராட்" விவிதமென்றால் பலவிதமாக ஜகத்தைப் பிரகாசிக்கும்படி செய்கிறபடியால் விராட்டு என்னும் பெயர் பரமேசுவரனுக்கு சொல்லப்பெற்றிருக்கிறது.

11. அக்நி = (அஞ்புக்தி பூஜகயோ:) 'அக, அகி, இண்' கதியர்த்தக, தாதுவாம். இதிலிருந்து அக்நி சப்தம் சித்தமாகின்றது. "கதேஸ்திரயோர்த்நா: ஞாநம் கம்நம் பிராப்திஸ்சேதி, பூஜநம் நாமஸத்காரக: யோஞ்சதி அசயதேகத்நியம், கதியே திலோயமக்நி:" அவன் ஞானஸ்வரூபனும், ஸர்வக்ஞனும், தெரிவதற்கும், அடைவதற்கும் பூஜிப்பதற்கும் யோக்யனுமாகையால் பரமேஸ்வரனுக்கு அக்நி என்னும் பெயர் உண்டாகியது.

12. விச்வன் = (விச்பிரவேசன்) இந்த தாதுவிலிருந்து விச்வசப்தம் சித்தமாகின்றது. "விசந்தி பிரவிஷ்டாநி ஸர்வாணியாகாசாதீநி பூதாநிஸ்மின் யோவாகாசாதிஷமேதேஷு பிரவிஷ்ட: ஸவிச்வ ஈச்வர:" = அவனிடத்தில் ஆகாசாதி ஸமஸ்த பூதங்கள் பிரவேசிக்கின்றன. அல்லது அவைகளிலிருந்து வியாபகனாகி பிரவிஷ்டனாகிறபடியால் அப்பரமேஸ்வரனுக்கு விச்வன் என்று பெயருண்டாகியது.

இப்படிப்பட்ட பெயர்கள் ஓங்காரத்தினுடைய அகாரத்தின் மாத்திரையாலுண்டாகியதாம்.

13. ஹிரண்யகர்பன் = "ஜ்யோதிர்வை ஹிரண்யம் தேகோவை ஹிரண்யமித்தியை தரேயே சதபதேச பிராஹ்மணே யோஹிரண்யாநாம், சூர்யாதீநாம், தேஜஸாம் கர்ப உற்பத்தி நிமித்தமதிகரணம் ஸ ஹிரண்யகர்ப:" = அவனிடமிருந்து சூரியாதி தேஜோமயமாகிய

உலகங்கள் உற்பத்தியாகி அவனுடைய ஆதாரத்திலிருப்ப தனுலும், அல்லது அவன் சூரியாதி தேகஸ்வரூப பதார்த் தங்களுடைய கர்ப்பமாகி இருப்பதனுலும் — அதாவது உற்பத்தி ஸ்தானமாகி அவற்றின் வாசஸ்தானமாகையால் பரமேசுவரனுக்கு ஹிரணிய கர்ப்பன் என்னும் பெயருண்டாகியது. இதற்கு யஜுர்வேதத்தைசார்ந்த அதி.13, மந்திரம் 4-ல் " ஹிரண்ய கர்ப ஃ ஸமவர்த்தாதிரே பூதஸ்ய ஜாதபதிரேக ஆஸீத், ஸதாதார ப்ருதிவீம் தியாமுதேமாம் கஸ்மைதேவாய ஹவிஷாவிதேம " என்பது பிரமாணம்.

14. வாயு = (வாகதிகந்தநயோஹு) இந்த தாதுவிலிருந்து வாயு சப்தம் சித்தமாகின்றது. (கந்தநம் ஹிம்ஸநம்) ' யோவாதி சராசரம் ஜகத்ரதி பலிநாம்பலிஷ்டஃ ஸவாயுஃ ' = அவன் சராசரமாகிய ஜகத்தைத்தெரிந்து அதில் ஜீவிக்கவும், பிரளயமாகவும் செய்பவனும், பலவான்களிலெல்லாம் சிறந்த பலத்தையுடையவனுமாகையால் பரமேசுவரனுக்கு வாயு என்னும் பெயருண்டாகியது.

15. தேஜஸன் = (திஜநிசாநே) இந்த தாதுவிலிருந்து தேஜஃ சப்தமும் இதை நிதித்வம் செய்வதனுல் தைஜஸ என்னும் சப்தமும் சித்தமாகிறது. அவன் சுவயம்பிரகாசனுகி சூரியாதி தேஜோமயமான லோகங்களைப் பிரகாசிப்பிக்கின்றவனுகையால் அந்த பரமேசுவரருக்கும் தேஜஸன் என்னும் பெயருண்டாகியது.

இப்படிப்பட்ட பெயர் அர்த்தங்கள் ஓங்காரத்தின் உகாரமாத்திரையினுல் கிரஹிக்கப்படுகின்றன.

16. ஈச்வரன் = (ஈச ஐஸ்வர்யே) இந்த தாதுவிலிருந்து ஈசுவர சப்தம் சித்தமாகின்றது = " யஈஷ்டேஸர்வைஸ்வர்யாந் வர்த்தேத ஸ ஈச்வரஃ " = அவனுக்கு சத்ய

விசார சீலஞானமும், அநந்த ஐஸ்வரியமும் இருப்பதால் அந்த பரமாத்மாவுக்கு ஈச்வரன் என்னும் பெயருண்டா கியது.

**17.** **ஆதித்யன்** = (தோ அவகண்டனே) இந்த தா துவிலிருந்து 'அத்யு' என்பதை தத்திதம் செய்வதனால், ஆதித்ய சப்தம் சித்தமாகின்றது. "நவித்ய தேவிநா சோ யஸ்ய சோயமதிதி: + அதிரேவ ஆதித்ய:" = எவனு க்கு எப்போதும் விநாசம் உண்டாகாதோ அந்த பரமேச் வரனுக்கு ஆதித்யன் என்னும் பெயருண்டாகியது.

18\. பிராக்ஞன் = (க்ஞா - அவபோதனே) பிர பூர் வகமான இந்த தாதுவிலிருந்து 'பிரக்ஞயு' என்பதை தத்திதம் செய்வதனால், பிரக்ஞ சப்தம் சித்தமாகிறது. "பிரகிருஷ்டத் தயா சராசரஸ்ய ஜகதோ வியவஹாரம் ஜாநாதி ஸம்ப்ரக்ஞ: + பிரக்ஞவ பிராக்ஞ: = அவன் நிர்பிராந்தனும் ஞானயுக்தனும் ஸமஸ்த சராசர ஜகத்தி னுடைய விவஹாரத்தை இருப்பதை இருப்பதுபோல் தெரிந்துகொள்பவனு மாகையினால் பரமேச்வரனுக்கு பிராக்ஞன் என்னும் பெயர் உண்டாகியது.

இப்படிப்பட்ட பெயரர்த்தங்கள் ஓங்காரத்தின் மகார மாத்திரையினால் கிரஹிக்கவேண்டும்.

**19.** **மித்திரன்** = (ஞிமிதாஸ்நேஹநே) இந்த தாது விற்கு 'அவ்நாதிகத்கிரு' பிரத்யயம் பரமாவதால் மித்ர சப்தம் சித்தமாகிறது. சகல ஜந்துக்களுக்கும் சிநேகிதனுகி பிரியப்படச் செய்பவனுகையால் பரமேச்வரனுக்கு மித் திரன் என்னும் பெயருண்டாகியது.

**20.** **வருணன்** = (வ்ரு - வருணே வரஇப்சாயாம்) இந்த தாதுவுக்கு 'உணதி' (உநக்) பிரத்யயம் பரமாகிறத னல் வருணசப்தம் சித்தமாகிறது. "ய: ஸர்வக்ஞகனுன்

சிஸ்டான் முமுக்ஷூ ரெ தர்மாத்மனோவ்ருணோதியதவாயு: சிஷ்டைர் முமுக்ஷூபிர் தர்மாத்மபிர் வியதேவர்யதேவா ஸவருண: பரமேஶ்வர:" = அவன் ஆத்மயோகிகளையும், வித்துவான்களையும், முத்தியை விரும்புவர்களையும், தர்மாத்மாக்களையும் ஸ்வீகரிப்பதனாலும், அல்லது சிஷ்டர்களாலும், முமுக்ஷுக்களாலும், தர்மாத்துமாக்களாலும் கிரஹிக்கப்படுகிறவனாகையாலும், பரமேச்வரனுக்கு வருணசஞ்சகன் அல்லது 'வருணோநாமவர: வர: சிரேஷ்ட;' பரமேச்வரன் அனைவரிலும் சிரேஷ்டனாகையால் அவனுக்கு வருணன் என்னும் பெயருண்டாகியது.

21. அர்யமான் = (ரிகதிபிராபண்யோ:) இந்த தாதுவுக்கு 'யத்' பிரத்யயம் பரமாவதனால் 'அரிய' சப்தம் சித்தமாகிறது. 'அரிய' பூர்வக (மாஜமானே) இந்த தாதுவோடு 'கநிந்' பிரத்யயஞ் சேர்ப்பதனால் அரியமா சப்தம் சித்தமாகின்றது. "யோரியாண் ஸ்வாமினோநியாய நீசாஸ்மிநிதேமானியாந் கரோதி ஸோர்யமா" = சத்யமாக நியாயத்தைச் செய்யும் மநுஷ்யர்களையும் மாநியம் அல்லது ஆதரனை செய்பவனும், பாவபுண்ணியங்களைச் செய்பவருக்கு பாவ புண்ணியங்களுடைய பலனுக்குத் தக்கபடி நியமனம் செய்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு அர்யமன் என்னும் பெயருண்டாகியது.

22. இந்த்ரன் = (இதிபரமைஶ்வர்யே) இந்ததாதுவோடு 'ரன்' பிரத்யயத்தைச் சேர்ப்பதனால் இந்திர சப்தம் சித்தமாகிறது. "யஇந்த்ர பரமைஶ்வர்யவான் பவதி ஸஇந்த்ர பரமேஶ்வர:" = அகில ஐஶ்வரிய யுக்தனாகையால் பரமேஶ்வரனுக்கு இந்திரன் என்னும் பெயருண்டாகியது.

23. ப்ருஹஸ்பதி = (பிருஹத்சப்த பூர்வகமாகும் பாரக்ஷணே) இந்த தாதுவுக்கு 'டதி' பிரத்யயத்தையும்

"பிருஹத்" என்பதன் தகாரத்திற்கு லோபமும் உண் டாவதனால் பிருஹஸ்பதி என்னும் சப்தம் சித்தமாகி றது. "யோ பிருஹதா மாகாசாதீநாம் பதி: ஸ்வாமி பாலயிதாச பிருஹஸ்பதி:" = பெரியோருக்கெல்லாம் பெரியவனுகி, பெரிதாகிய ஆகாசாதி பிரம்மாண்டங்க ளுக்கு சுவாமியாகிறபடியால், பரமேச்வரனுக்கு பிரு ஹஸ்பதி என்னும் பெயருண்டாகியது.

24. உருக்மன் = "உருர்மஹான், கிரம: பராக்ர மோ யஸ்ய ஸ உருக்ரம:" = அநந்த பராக்கிரம யுக்தனு கையால் பரமேச்வரனுக்கு உருக்ரமான் என்னும் பெயர் உண்டாகியது.

(உருக்ரம:) மஹா பராக்ரம யுக்தனும், (மித்ர:) அனை வருக்கும் சுஹிருத்து என்றால் அவிரோதியும், (சம்) சுகாகாரமானவனும், (வருண:) ஸர்வோத்தமனும், (சம்) சுகஸ்வரூபனும், (அர்யமா) நியாயாதீசனும், (சம்) சுக பிரசாரகனும், (இந்திர:) சகல ஐச்வரியமுடையவனும், (சம்) சகல ஐச்வரிய தாயகனும், (பிருஹஸ்பதி) அனை வருக்கும்அதிஷ்டத்ரு, (சம்) வித்யாபிரதனும், (விஷ்ணு:) எல்லாவற்றிலும் வியாபகனும் ஆகிய அந்த பரமாத்மா (ந:) எங்களுக்கு கலியாண காரகனுக (பவது) ஆவானுக என்று பொருள்.

25. பிரஹ்மன் = "வாயோதே பிரஹ்மணே நமோ ஸ்து பிருஹபிருஹி, விருத்தௌ" இந்த தாதுக்களிலி ருந்து பிரஹ்ம சப்தம் சித்தமாகின்றது. எல்லாவற்றின் மீது விராஜமானவனும், எல்லாவற்றைப் பார்க்கிலும் பெரியவனும், அநந்த பலசாலியும் ஆகிய பரமாத்மாவா கிய ப்ரஹ்மத்தை நமஸ்கரிக்கின்றோம் என்பதாம்.

26. சூர்யன் = "சூர்ய ஆத்மா இகதஸ் தஸ்துஷ சூ" இந்த யஜுர் வேத வாக்கியத்தினல் 'ஜகத்' என்

றால் பிராணி; அதாவது சேதன ஜங்கமங்களாகின்றன. 'தஸ்துஷ:' என்றால் அப்பிராணி அதாவது ஸ்தாவர ஜடபதார்த்த பிருதிவியாதிகள். இவற்றிற்கெல்லாம் ஆத்துமாவாகிய ஸ்வப்ரகாசனும் எல்லாவற்றையும் பிர காசிக்கும்படி செய்பவனுகையால் பரமேச்வரனுக்கு சூர் யன் என்னும் பெயருண்டாகியது.

27. ஆத்மன் = (அ தசாதத்யாகமனே) இந்த தாது விலிருந்து ஆத்மசப்தம் சித்தமாகிறது. "யோத திவியாப் னோதிஸ ஆத்ம" = ஸமஸ்தஜீவாதி ஜகத்தில் சதா வியா பித்திருப்பவனுகையால், பரமேச்வரனுக்கு ஆத்மன் என் னும் பெயருண்டாகியது.

28. பரமாத்மா = "பரஸ் சாஸாவாத் மாச்சய ஆத்மப்யோஜீவேப்ய: ஸூக்ஷ்மேப்ய: பரோதி சூக்ஷ்ம: பரமாத்துமா" = அவன் சகல ஜீவர்களைப் பார்க்கி லும் உத்கிருஷ்டனும், ஜீவ பிரகிருதி ஆகாசாதிகளைப் பார்க்கிலும் அதிக சூக்ஷ்மமானவனும், சகல ஜீவர்களின் அந்தர்யாமியானபடியினால் பரமேச்வரனுக்கு பரமாத்மா என்னும் பெயருண்டாகியது.

29. ஈஶ்வரன் = சகலசாமர்த்தியங்களும் உடைய வனுகையால் பரமேச்வரனுக்கு ஈஶ்வரன் என்னும் பெய ருண்டாகியது.

30. பரமேஶ்வரன் = ய ஈஶ்வரேஷு ஸமர்த்தேஷு பரம: ஶ்ரேஷ்ட: ஸ பரமேஶ்வர:" = ஈஶ்வரருள் என்றால் வீரர்களில் வீரனும், தனக்குச் சமானமற்றவனு மாகையால் பரமாத்துமாவுக்கு பரமேச்வரன் என்னும் பெயர் உண்டாகியது.

31. சவிதா = (ஷூஞ் அபிஷவேஷூஞ் பிரா ணிகர்ம விமோசனே) இந்த தாதுக்களிலிருந்து 'சவிது'

என்னும் சப்தம் சித்தமாகிறது. "அபிஷேல: பிராணி கர்மவிமோசனம்கோப்தாதகம் யஸ்சராசரம் ஜகத் சுநோ திநாதேவோத் பாதயதி ஸ சவிதா" = பரமேச்வரன் சகல ஜகங்களையும் சிருஷ்டிக்கிறுறைகையால் சவிதா என்னும் பெயருண்டாகியது.

32. தேவன் = (திவுகிரீடா விகிஷா வியவஹார த்யுதிஸ்து திமோதமத ஸ்வப்நகாந்திகதிஷு) இந்த தாதுவிலிருந்து தேவசப்தம் சித்தமாகிறது.

இந்த தாது வாக்கியத்தின் பொருளாவது:—

கீரீடா = சுத்தமாகிய ஜகத்தை கிரீடிப்பவன்.

விஜிகீஷா = தர்மிகாளை தயிக்கும்படியான இச்சையையுடையவன்.

வியவஹாரா = அனைவர்களுடைய சேஷ்டைகளுக்கு சாதனோபசாதனங்களைக் கொடுப்பவன்.

த்யுதி = சுவயம் பிரகாச ஸ்வரூபனும், அனைவற்றிற்கும் பிரகாசமுமுடையவன்.

ஸ்துதி = பிரசம்ச அல்லது ஸ்தோத்திரத்திற்கு யோக்யன்.

போதா = தான் ஆநந்தஸ்வரூபனுகி இதாளுக்கு ஆநந்தத்தைக் கொடுப்பவன்;

மத = மதோன்மத்தரைத் தாடிப்பவன்.

ஸ்வப்ந = எல்லாருடைய நித்திரையின் பொருட்டு இராத்திரியையும் மற்ற பிரளயங்களையும் செய்விப்பவன்.

காந்தி = காமிப்பதற்கு யோக்யன்.

கதி = ஞானஸ்வரூபனாகையால் பரமேச்வரன் 'யோ திவ்யதி க்ரீடதி ஸதேவ:' = தனது ஸ்வரூபத்தில் தானே ஆநந்தத்துடன் க்ரீடிப்பவனாகி, யாருடைய சகாயமின்றிக்கே க்ரீடை மாதிரியாக சஹஜ சுபாவத்தினால் சகல ஜகங்களையும் சிருஷ்டித்து சகல க்ரீடைகளுக்கு ஆதாரமாக இருப்பவன்.

"விஜிகீஷதே ஸதேவ:" = எவரையும் ஜயிப்பவனாகி எவராலும் ஜயிக்கப்படாதவன்.

வியவஹாரதி ஸதேவ: = ந்யாயாந்யாய ரூப=விவஹாரங்களைத் தெரிந்தவன்.

யஸ் சராசரம் ஜகதியோதியதி ஸதேவ: = அனைவத்திற்கும் பிரகாசமுள்ளவன்.

யஸ் தூயதே ஸதேவ: = அனைவருடைய பிரஸம்ஸத்துக்கு யோக்யனானவன்.

யோ மாதயதி ஸதேஸ்வயம் = ஆநந்த ஸ்வரூபனும், பிறருக்கு ஆநந்தமுண்டாக்குபவனும், துக்கமில்லாதவனும்.

யோ மகதயதி ஸதேவ: = சதாஹர்ஷனும், சோகமற்றவனும் இதரானை ஹர்ஷிப்பச் செய்பவனும் துக்கத்தைவிட்டு தூரத்தில் வைப்பவனும்.

ய: ஸ்வபயதி ஸதேவ: = பிரளயகாலத்தில் அவ்யக்தத்தில் சகலபிராணிகளையும் தூங்கிக்கிடக்கச் செய்பவன்.

ய: காம்யதே காமீயதேவா ஸதேவ: = அவனுடைய தெல்லாம் காமியமானதாகி அவனை அடைவதற்கு ஜீவர்கள் யாவரும் காமிக்கும்படியானவன்.

யோ கச்சதி கம்யதே வா ஸதேவ: = எல்லாவற்றி லும் வியாப்தனாகி தெரிந்துய்வதற்கு யோக்யதை யுடையவனாகையால் பரமேச்வரனுக்கு தேவன் என்னும் பெயர் உண்டாகியது. தேவ சப்தத் திற்கு எத்தனைவித பொருள்கள் சொல்லப்பட் டனவோ அவையாவும் இந்த தேவ சப்தத்திற் கும் பொருந்தும்.

33. குபேரன் = (குவி அச்சாதனே) இந்த தாது வினால் குபேரன் என்னும்பதம் சித்தமாகிறது. "ய: ஸர் வம் குவதி ஸ்வவியாப்தி யாச்சாதயதி ஸகுவேர:" = தன துவியாப்தியினால் சகலத்தையும் ஆதரிப்பதனால் பரமேச் வரனுக்கு குபேரன் என்னும் பெயருண்டாகியது.

---

## பஞ்சபூதங்களில் பிரஹ்ம வர்ணனை.

---

34. பிருதிவீ = (பிரதவிஸ்தாரே) இந்த தாதுவி லிருந்து பிருதிவி என்னும் பதம் சித்தமாகிறது. "ய: பிரததே ஸர்வஜகத்ருஸ்வனாத ஸபிருதுவி" = சகல பொ ருள்களடங்கிய விசகிருதகத்தை விஸ்தரிக்கச் செய்பவனா கையால் பரமேச்வரனுக்கு பிருதுவி என்னும் பெயருண் டாகியது.

35. ஜலம் = (ஜலகாதனே) இந்த தாதுவிலிருந்து ஜலசப்தம் சித்தமாகிறது. "ஜாலதி தாதயதி துஷ்டான் ஸங்காதயதி அவ்யக்த பரமாண்வாதீன் தத்பிருஹ்ம ஜலம்" = துஷ்டர்களைக் கண்டிப்பவனும், அவ்யக்தத் தினுடையவும் பரமாணுக்களுடையவும் அந்யோந்யவி யோக சம்யோகங்களைச் செய்பவனுமாகையால் பரமேச் வரனுக்கு ஜலம் என்னும் பெயருண்டாகியது.

36. ஆகாசன் = (காஸ்ருதீப்தவ்) இந்த தாதுவிலி ருந்து ஆகாச சப்தம் சித்தமாகிறது. "ய : ஸர்வத : ஸர்வம் ஜகத் பிரகாசயதி ஸ ஆகாஸ :" எல்லா பக்கங்களிலு மிருந்து ஜகத்தைப் பிரகாசிப்பிக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு ஆகாசன் என்னும் பெயருண்டாகியது.

37. அங்கம் = (அத்பக்ஷணே) இந்த தாதுவிலிருந்து அங்கசப்தம் சித்தமாகிறது. "அத்தியதேத்தி சபூதானி தஸ்மாதந்நந் ததுச்யதே" = (1) "அஹமந்நமஹமந்நம் அஹமந்நாதோஹமந்நாதோஹமந்நாத :"—(தைத்ரீ. அநு. 2-10.) 'அத்தாசராசர கிரஹணாத்'—(வேதாந்த தரிசனம். அதி - 1, பா - 2, சூ - 9.) = என்றால் சகலத்தையும் தனக்குள்ளாக வைத்திருப்பவனும், அனைவரும் கிரஹிக்கும்படியான யோக்யனும் சராசரமான ஜகத்தைக் கிரஹிப்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு அங்கம் என்னும் பெயருண்டாகியது.

38. வசுவன் = (வஸநிவாஸே) இந்த தாதுவிலிருந்து வசுசப்தம் சித்தமாகின்றது. "வஸந்தி பூதானி யஸ்மிந்நதவாயு : ஸர்வேஷ் திவே ஸதி ஸைவஸ்வுரீப்வர :" = அவனிடத்தில் ஸமஸ்த ஆகாசாதி பூதங்கள் வசிக்கின்றன; மேலும் அவன் எல்லாவற்றிலும் வசிக்கிறபடியால் பரமேச்வரனுக்கு வசுவன் என்னும் பெயருண்டாகியது.

39. ருத்ரன் = (ருதிர் அச்ருவிமோசனே) இந்த தாதுவுக்கு 'ணிச்' பிரத்யயம் பரமாவதனால் ருத்ர சப்தம் சித்தமாகிறது. "யோ ரோதயதந்யாய காரிணோஜ்ஜ ஸருத்ர :" = துஷ்ட கிருத்தியங்களைச் செய்பவனை அழும்படி செய்பவனாகையால் பரமேச்வரனுக்கு ருத்திரன் என்னும் பெயருண்டாகியது.

## சந்தியாவந்தனப் பெயர்களில் பிரஹ்மவர்ணனை.

40. கேஶவ: = கோ பிரஹ்ம + ஈச: ருத்ர தவ் ஆத்மநிஸ்வரூபே லயதி ப்ரளயே உபாதி ரூபமூர்த்தி த்ரையம் முக்த்வா ஏகமாத்ர பரமாத்ம ஸ்வரூபேணு வதிஷ்டதேதி; கஸ்ச அஸ்ச, ஈஶஸ்ச தேகேசா ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரா:, நியம்யத யாஸந்தி யஸ்ய ஸ: கேஶவ: = பிரவிர்த்திகாலத்தில் பிரஹ்ம விஷ்ணு ருத்ரஸ்வரூபங்களாகவும், லயத்தில் ஒரேபரமாத்மாவாகவும் இருப்பதால் பரமேச்வரனுக்கு கேசவன் என்னும் பெயருண்டாகியது.

41. நாராயண: = "அபோ நாரா இதிப்ரோக்தா ஆபோவை நரஸூநவ: தாயதஸ்யாயநம் பூர்வம்தேந நாராயண ஸம்ருத:" = ஜலத்திற்கும் ஜீவர்களுக்கும் நாரம் என்னும் பெயர். அது அவனுக்கு அயநம் என்றால் நிவாசஸ்தானமாகைபால் (சகல ஜீவர்களுக்கும் வாஸஸ்தானமாக இருக்கிறபடியால்) பரமேச்வரனுக்கு நாராயணன் என்னும் பெயருண்டாகியது.

42. மாதவ: = "மாயாவித்யா யஸ் தஸ்யா:, து நோதி கம்பயதி, மவுநாதியா நாச்ச, யோகச்ச வித்தி பாரத மாதவம்" = மாயை அவித்தைகளை வணங்கும்படி செய்பவனும் மவுந, தியான, யோகங்களினால் அடையக் கூடியவனுமாகையால் பரமேச்வரனுக்கு மாதவன் என்னும் பெயருண்டாகியது.

43. கோவிந்த: = "கா மந: ப்ரதாநநி ந்த்ரியாணி தேஷாம் விந்த:" = ப்ரவர்த்தகாயிதா சேதயிதா அந்தர்யாமி மநமுதலான சகலேந்திரியங்களை நடத்துபவனைக

யால் பரமேச்வரனுக்கு கோவிந்தன் என்னும் பெயருண்டாகியது.

44. விஷ்ணு := "வேவேஷ்டி வ்யாப்நோதி விஶ்வத் வேஷதி ஸிஞ்சதி, ஆப்யாயதே விஶ்வமிதி, சர்வபூதானி அத்ரேதி, விசதாதோ: ப்ரவேசநாத்" = சகலத்திலும் புகுந்து வியாபித்திருப்பவனுகையால் பரமேச்வரனுக்கு விஷ்ணுவென்னும் பெயருண்டாகியது.

45. மதுஸூதன := "மதும்ஸூதயதி (நாசயதி) அஸுரஸ்வபாவ சம்ஹாரகாத்வாத்" = அசுர சுபாவத்தை நசிக்கச் செய்பவனுகையால் பரமேச்வரனுக்கு மதுஸூதனன் என்னும் பெயருண்டாகியது.

46. திரிவிக்ரம := "த்ரிலோகாந் விசேஷேண கிராமதி (வியாம்நோதி)" = சலக ஜகங்களையும் வியாபித்திருப்பவனுகையால் பரமேச்வரனுக்கு திரிவிக்ரமன் என்னும் பெயருண்டாகியது.

47. வாமந := "வாமநா மங்களரூபைர் வேதாதிபிர் நயதே கீயத இதி" = மங்களகரமான வேதங்களினுல் புகழப்பெற்றவனுகையால் பரமேச்வரனுக்கு வாமநன் என்னும் பெயருண்டாகியது.

48. ஸ்ரீதர := (ஸ்ரீயந் தரதீதி) கீர்த்தி வஹிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு ஸ்ரீதரன் என்னும் பெயருண்டாகியது.

49. ஹ்ருஷீகேஶ := "ஹ்ருஷீகாணும் இந்த்ரியாணும் ஈஶ: (நியாமிக:)" = இந்திரியங்களை நியமிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு ஹ்ருஷீகேசன் என்னும் பெயருண்டாகியது.

50. பத்மநாப : = "ஹ்ருதய பத்மமஸ்ய நாபவநா பேரிஷடு பரபாகே ப்ரகாஸநாத்" = ஹிருதய கமலத்தில் பிரகாஸிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு பத்மநாபன் என்னும் பெயருண்டாகியது.

51. தாமோதர : = "தாமாதி ஸாதனே னோதார உத்க்ருஷ்டா மிதரியாதயா கம்யதே இதி" = ஸமதமாதி ஷட்க சம்பத்தினுல் சம்ஸ்கரிக்கப்பட்ட சுத்தமான மன தினுல் அடையக்கூடியவனுகையால் பரமேச்வரனுக்கு தாமோதரன் என்னும் பெயருண்டாகியது.

52. ஸங்கர்ஷண: = "ஸம்யக் பாபாநி துக்காநி கர்ஷதீதி" = நன்றாக பாவத்தைப் போக்குவோனுகையால் பரமேச்வரனுக்கு ஸங்கர்ஷணன் என்னும் பெயருண் டாகியது.

53. வாசுதேவ : = "ஸர்வத்ரா சவ்வ ஸத்யாத்ம ரூபேண விஸ்வம் பரத்வாதிதி" = எவற்றினும் ஆத்மஸ்வரூபமாக வஸிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு வாசுதேவன் என்னும் பெயருண்டாகியது.

54. ப்ரத்யும்ந : = "ப்ரகர்ஷேண த்யோதயதி, ஸ்வயம் ஜோதி ரூபத்வாத்" = ஸ்வயஞ் சோதி ரூபனுகையால் பரமேச்வரனுக்கு பிரத்யும்நன் என்னும் பெயருண் டாகியது.

55. அநிருத்த : = "நதிருத்தே ஸாவநிருத்த: (அப்ரதிபந்த :) ரோத சூந்ய :, பரநிர்பந்த சூந்யத்வாத்" = பந்தரஹிதனுகையால் பரமேச்வரனுக்கு அநிருத்தன் என்னும் பெயருண்டாகியது.

56. புருஷோத்தம : = "புருஷ ஜீவேஷு வியாபகத்வாதி புருஷ: ஸச ஸாவுத்தமஸ்ச புருஷோத்தம :" =

சகல ஜீவர்களிடத்திலும் வியாபித்திருக்கும் சிரேஷ்டனு கையால் பரமேச்வரனுக்கு புருஷோத்தமன் என்னும் பெயருண்டாகியது.

57. அதோக்ஷ: = "ஞாத்ருத்வாபாவாத் ஹீநம், பிரத்யக்ஷக்ஞாநம் யஸ்ய ஸ: இந்த்ரியாகோசரத்வாத் பஞ்சமஹாபவதி கேந்திரியம் கம்ய இத்யர்த்த:" = சகல இந்திரியங்களினால் தெரிந்துகொள்ளப்படுகிறவனுகை யால் பரமேச்வரனுக்கு அதோக்ஷன் என்னும் பெயரு ண்டாகியது.

58. ந்ருஸிம்ஹ: = "அவியோக நஷீயதே நக்ஷீயத இதி சதுர்வித நாசரஹித இத்யர்த்த:" = எவ்விதமான நாசத்தையும் அடையமாட்டாதவனுகையால் பரமேச்வர னுக்கு ந்ருஸிம்ஹன் என்னும் பெயருண்டாகியது.

59. அச்யுத: = "நச்யவத இத்யச்சுத: (ஸ்வரூப ஸாமர்த்ய த்யுக்த்யாத வாத்வா ஸ்வபச்சவ நாபாவாதித் யாதய:)" = யாவும் நசித்தாலும் தான்மாத்திரம் நசித்துப் போகாதவனுகையால் பரமேச்வரனுக்கு அச்யுதன் என் னும் பெயருண்டாகியது.

60. ஜநார்த்தந: = "ஜந்மமரணுக் யர்தயதி (நாசய தீதி)" = ஜநநமரணங்களைப் போக்குவோனுகையால் பர மேச்வரனுக்கு ஜநார்த்தனன் என்னும் பெயருண்டா கியது.

61. உபேந்த்ர: = "உபோதி கேசேது ஸாேந்த்ராது பவியதிக: பரமைஸ்வர்ய வய: ஸ உபேந்த்ர:" = பரமேச் வரன் பரம ஐஸ்வர்ய வஸ்துவாகையால் உபேந்திரன் என் னும் பெயருண்டாகியது.

62. ஹரி : = (பக்தாநாம் பாபம் ஹரதிதி) = பக்தர்களுடைய பாவங்களை நீக்குபவனாகையால் பரமேச்வரனுக்கு ஹரி என்னும் பெயருண்டாகியது.

63. கிருஷ்ண : = கர்ஷதி (ஆத்மஸாத்கரோதி) ஆநந்தத்வேந, பக்தாநாம் மந : பரிணம்பதி = பக்தர்களுடைய மனதை ஆநந்திக்கச் செய்பவனாகையால் பரமேச்வரனுக்கு கிருஷ்ணன் என்னும் பெயருண்டாகியது.

## நவக்ரஹங்களில் பிரஹ்ம வர்ணனை.

64. ஸூர்யன் = (ஸூர்ய : + ச = ஸூரிபி : பிராப்யத்துவாத் ஸூர்ய :) = ஞானத்தினால் அடையக்கூடியவனாகையால் பரமேச்வரனுக்கு ஸூர்யன் என்னும் பெயருண்டாகியது. அல்லது சராசரமாகிய ஜகத்துக்கு ஆத்மாவாக இருப்பவனென்றும் சொல்லலாம்.

65. சந்திரன் = (சதி ஆஹ்லாதே) இந்த தாதுவிலிருந்து சந்திர சப்தம் சித்தமாகிறது. "யஸ்சத்தி சந்திவாச சந்திர :" = ஆநந்தஸ்வரூபனும் அனைவருக்கும் ஆநந்தத்தைக் கொடுப்பவனும் ஆகையால் பரமேச்வரனுக்குச் சந்திரன் என்னும் பெயருண்டாகியது.

66. மங்களன் = (மகிதத்தியர்த்த :) இந்த தாதுவிலிருந்து 'மங்கேரலச' என்னும் சூத்திரத்தினால் மங்களன் என்னும் பதம் சித்தமாகிறது. "யோமங்கதி மங்கயதிவா ஸமங்கல :" = தான் மங்கள ஸ்வரூபனும் சகல ஜீவர்களுடைய மங்களத்திற்குக் காரணனுமாகையால் பரமேச்வரனுக்கு மங்களன் என்னும் பெயருண்டாகியது.

67. புதன் = (புத அவகமநே) இந்த தாதுவிலி ருந்து புதன் என்னும் பதம் சித்தமாகிறது. "யோ புத்யதே போதயதிவா ஸபுத:" = ஸ்வயம் போதஸ்வ ரூபனும் சகல ஜீவர்களுடைய போதத்துக்குக் காரண னுமாகையால் பரமேச்வரனுக்கு புதன் என்னும் பெயரு ண்டாகியது.

68. ப்ருஹஸ்பதி என்னும் பதத்தின் பொருளை முன்னமே 14-வதில் சொல்லியிருக்கிறது.

69. சுக்கிரன் = (ருஶ—சிர்பூதி பாவே) என்னும் தாதுவிலிருந்து சுக்ர சப்தம் சித்தமாகிறது. "ய: ஶுசய தி ஶோசயதிவா ஸ சுக்ர:" = அவன் ஆதியந்த பவித்ரனு கியும், அவனுல் அநந்த ஜீவர்கள் பவித்ரர்களாகும்படிச் செய்வதனுலும் பரமேச்வரனுக்கு சுக்கிரன் என்னும் பெயருண்டாகியது.

70. சநீஶ்வரன் = (சரகதிபக்ஷணயோ:) இந்த தாதுவுக்கு 'சனநஸ்' என்னும் அவ்யயம் உபபதமாகி சநீஶ்வரன் என்னும் பதம் சித்தமாகிறது. "ய: சன ஶ்சரதி சனச நஸ்சர:" = எல்லாவற்றிலும் சஹஜமாக பிரவேசிக்கும் தைரியவானுகையால் பரமேச்வரனுக்கு சநீஶ்வரன் என்னும் பெயருண்டாகியது.

71. ராகு = (ரஹதியாகே) இந்த தாதுவிலிருந்து ராகு சப்தம் சித்தமாகிறது. "யோ ரஹதி பரிதிய இதி 'துஷ்டாந் ராஹயதித்யாகியதிவா ஸ ராஹு—ரீஶ்வர:"= ஏகாந்தஸ்வரூபனும், தனது ஸ்வரூபத்தில் வேறு பதார் த்த சம்புக்தமில்லாதவனும், பிறரைத் துஷ்டர்களைவிட்டு நீக்குபவனுமாகையால் பரமேச்வரனுக்கு ராகு என்னும் பெயருண்டாகியது.

72. கேது = (கிதனிவாஸே ரோகாப நயநேச) இந்த தாதுவிலிருந்து கேது என்னும் சப்தம் சித்தமாகி

றது. "ய: கேதயதி சிகித்ஸதிவா ஸ கேதுரீச்வர:" = ஸமஸ்த ஜகங்களுக்கு வாசகனும் ஸமஸ்த ரோகங்களற்றவனும், முமுக்ஷுக்களை முக்தி காலத்தில் சகல ரோகங்களிலிருந்து நீக்குபவனுமாகையால் பரமேச்வரனுக்கு கேது என்னும் பெயருண்டாகியது.

## யாகங்களில் பிரஹ்மவர்ணனை



73. யக்ஞன் = (யஜ தேவ பூஜைசங்கதி கருணு தாநேஷு) இந்த தாதுவிலிருந்து யக்ஞ சப்தம் சித்தமாகிறது. "யக்ஞோவை விஷ்ணு:" இது பிராம்ஹண கிரந்த வாக்கியம். "யோ யஜதி வித்வத்பி ரிஜியதேவா ஸ யக்ஞ:" = சகல உலகங்களுடைய பதார்த்தங்களை சம்யுக்தம் செய்பவனும், சகல வித்வான்களுக்கும் பூஜ்யனுமாகி பிரமாமுதல் சகல ரிஷிமுனிகளுக்கு பூஜ்யனும், பூஜியனுவோனும், பூஜிக்கப்படுபவனுமாகையால் பரமேச்வரனுக்கு யக்ஞன் என்னும் பெயர் உண்டாகியது. யக்ஞன் சர்வவியாபியாம்.

74. ஹோதா = (ஹுதாநா தநயோ: ஆதான் சேதேக்யே) இந்த தாதுவிலிருந்து ஹோதா சப்தம் சித்தமாறது. "யோ ஜுஹோதி ஸ ஹோதா" = ஜீவர்களுக்கு கொடுக்கத்தக்க பதார்த்தங்களைக் கொடுப்பவனும் பெற்றுக்கொள்வதற்கு யோக்யமுள்ளவர்களுக்குக் கொடுக்கக்கூடியவனுமாகையால் பரமேச்வரனுக்கு ஹோதா என்னும் பெயருண்டாகியது.

75. பந்து = (பந்தபந்தநே) இந்த தாதுவிலிருந்து பந்து சப்தம் சித்தமாகிறது. "ய: ஸ்மிந் சராசரம் ஜகத் பந்தாதிபந்து வர்த்தராத்மாநா சகாய சஹாயோ வாவ உக்ததே ஸ பந்து:" = தன்னிடம் சகல லோகா

லோகங்களையும் நியமனத்தினால் பதிந்து வைத்திருக்கிறவனும், சகோதரனைப்போல் சஹாயஞ் செய்பவனும், பிருதிவ்யாதி லோகங்களைச் சிருஷ்டித்து ஆதரித்து வருபவனுமாகையால் பரமேச்வரனுக்கு பந்து என்னும் பெயருண்டாகியது.

76. பிதா = (பாரக்ஷணே) இந்த தாதுவிலிருந்து பித: என்னும் சப்தம் சித்தமாகிறது. "ய: பாதி ஸர்வான் ஸ பித:" = அனைவருடைய ரக்ஷகனும் எப்படி ஒரு குடும்பத்தின் பிதாவானவன் தனது சந்ததிகளிடம் கிருபையுடையவனாகி அவர்களுடைய மனோநந்த விருத்தியை விரும்புவானோ, அப்படிச் சகல பிராணிகளுடைய உந்நதியை விரும்புகிறவனாகையால், பரமேச்வரனுக்கு பிதா என்னும் பெயருண்டாகியது.

77. பிதாமஹன் = "ய: பித்ரூணாம் பிதா ஸ பிதாமஹ:" = தந்தைமார்களுக்கெல்லாம் தந்தையாகையால் பரமேச்வரனுக்கு பிதாமஹன் என்னும் பெயருண்டாகியது.

78. மாதா = "யோ மிமீதே மாநயதி ஸர்வாந் ஜீவாந் ஸ மாதா" = எப்படி பூர்ண கிருபையுடையளாகிய தாயார் தன்மக்களுடைய சுகத்தையும், உந்நதியையும் விரும்புவாளோ, அப்படிப் பரமேச்வரன் சகல ஜீவர்களுடைய சுகத்தையும் உந்நதியையும் விரும்புகிறபடியால் பரமேச்வரனுக்கு மாதா என்னும் பெயருண்டாகியது.

79. ஆசார்ய: = (சரகதிபக்ஷணயோ:) 'அஜ்' பூர்வகமான இந்த தாதுவிலிருந்து ஆசாரிய சப்தம் சித்தமாகிறது. "யோ ஆசாரம் கிராஹ்யதி ஸர்வா வித்யாவாபோதயதி ஸ ஆசார்ய:" = சுபத்தியமான ஆசாரத்தைக்

கிரஹிக்கும்படி செய்பவனும், சகல வித்தைகளின் பிராப்திக்கு ஹேதுவானவனும், சகல வித்தைகளையும் அடையும்படி செய்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு ஆசாரியன் என்னும் பெயருண்டாகியது.

80. குரு = (குருஸப்தே) இந்த தாதுவிலிருந்து குருசப்தம் சித்தமாகின்றது. "யோ தர்ம்யான் சப்தான் கிருணாது யபதஸதி ஸ குருஃ" "ஸர்வேஷாமபி குருஃ காலேநா நவச்சேதாத்" (யோக சூத்திரம், சமாதிபாதம், 26-வது சூத்திரம்) = ஸத்யதர்ம பிரதி பாதகனும், சகல யுக்தமான வேதங்களையும் உபதேசிப்பவனும், சிருஷ்டியாரம்ப காலத்தில் அக்கினி, வாயு, ஆதித்ய, அங்கிர, பிரமமுதலான குருமார்களுக்குக் குருவாகி எப்போதும் நாசமற்றவனுமாகையால் பரமேச்வரனுக்கு குரு என்னும் பெயருண்டாகியது.

81. அஜன் = (அஜகதி க்ஷேபணயோஃ ஜநிபி ரதுர்பாவே) இந்த தாதுவிலிருந்து அஜன் என்றும் சப்தம் சித்தமாகிறது. "யோ ஜகதி ப்ருஷ்டிம் ப்ரதி ஸர்வான் ப்ரக்ருத்யாதீந் பதார்த்தாந் ப்ரக்ஷிபதி ஜாநாதிவா கதாசிந் நஜாயதே ஸோ஽ஜஃ" = சமஸ்த பிரகிருதியினுடைய அவயவங்களாகிய ஆகாசாதி பூத பரமாணுக்களையும் யதாயோக்யமாக சேர்ப்பவனும், சரீரத்தினால் ஜீவர்களைச் சம்பந்தப்படுத்தி ஜனிக்கச்செய்தும், தான் எப்போதும் ஜனனமற்றிருப்பவனாகையால் பரமேச்வரனுக்கு அஜன் என்னும் பெயருண்டாகியது.

82. அநாதி = (குதாஞ்தானே) இந்த தாதுவிலிருந்து 'அஜ்' பூர்வகமாகியும் ஆதி சப்தம் 'நஞ்' பூர்வகமாகிறது. "யஸ்மாத் பூர்வம் நாஸ்தி பரம சாஸ்திச ஆதிரிதியுச்சதே நவித்யதே ஆதிஃ காரணம் யஸ்ய ஸோ஽நாதிரீஸ்வரஃ" = எதற்குமுன் ஒன்றுமில்லாமல் பரம் மாத்தி

ரம் இருக்குமோ, அதாவது சகல சராசர பொருள்களுக்கும் ஆதியாக இருப்பவனுகையால் பரமேச்வரனுக்கு அநர்தி என்னும் பெயருண்டாகியது.

83. ஆநந்தன் = (டுநதி ஸம்ருத்தவ்) 'அஜ்' பூர்வகமான இந்த தாதுவிலிருந்து ஆநந்த சப்தம் சித்தமாகிறது. "ஆநந்தந்தி ஸர்வே முக்தாயஸ்மிந் யத்வாய ஸர்வாந் ஜீவநாநந்தயதி ஸ ஆநந்த:" = ஆநந்த ஸ்வரூபனுகையாலும், சகலமான முக்த ஜீவர்கள் அவனிடம் ஆநந்தமடைவதனுலும், தர்மார்த்தாளான ஜீவர்களை ஆநந்தயுக்தர்களாகச் செய்விப்பவனுகையாலும் பரமேச்வரனுக்கு ஆநந்தன் என்னும் பெயருண்டாகியது.

## தத்துவ சாஸ்திரங்களில் பிரஹ்ம வர்ணனை.



84. ஸத் = (அஸபவி) இந்த தாதுவிலிருந்து ஸத் சப்தம் சித்தமாகிறது. "யதஸ்தி திருஷு கொலேஷு நபாதியதே தத்ஸச ப்ரஹ்ம" = (சதா வர்த்தமானனும் என்றால்) நிகழ்காலம் வருங்காலம் இறந்தகாலமாகிய கால பேதங்களால் பாதிக்கப்படாதவனுகையால் பரமேச்வரனுக்கு ஸத் என்னும் பெயருண்டாகியது.

85. சித் = (சிதி ஸஃ ஜ்ஞானே) இந்த தாதுவிலிருந்து சித் சப்தம் சித்தமாகிறது. "யஸ்சேததி சேதயதி ஸங்க்யா பயதி ஸர்வாந் ஸஜ்ஜநாந் யோகிநஸ்த சித்பரம் ப்ரஹ்ம" = சைதந்யஸ்வரூபனுகி சகல ஜீவர்களையும் ஞானத்தோடு சேர்த்து சத்யாசத்யங்களை அறிவிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு சித் என்னும் பெயருண்டாகியது. இம்மூன்று பதங்களும் விசேஷமானவைகளானபடியினுல் பரமேச்வரனுக்குச் சச்சிதாநந்தஸ்வரூபன் என்ற பெயருண்டாகியது.

86. நித்தியன் = "யோ நித்ய திருவோசல விநாசி ஸநித்ய:" = நிஸ்சலனும் அவிநாசியுமாகையால் பரமேச்வரனுக்கு நித்தியன் என்னும் பெயருண்டாகியது.

87. சுத்தன் = (சுந்த சுத்தவ்) இந்த தாதுவிலிருந்து சுத்தன் என்னும் சப்தம் சித்திக்கிறது. "ய: சுந்ததி ஸர்வாந் சோதயதிவா ஸ சுத்த ஈஸ்வர:" = ஸ்வயம் பரிசுத்தனும், சகல அசுத்தங்களிலிருந்து வேறானவனும், அனைவரையும் பரிசுத்தமாக்குவோனுமாகையால் பரமேச்வரனுக்கு சுத்தன் என்னும் பெயருண்டாகியது.

88. முக்தன் = (முச்ருள் மோக்ஷநே) இந்த தாதுவிலிருந்து முக்த சப்தமுண்டாகிறது. "யோ முஞ்சதி மோசயதி வாமுமுக்ஷூபிர் ஸ முக்தோ ஜகதீஸ்வர:" = சதா அசுத்தங்களிலிருந்து வேறானவனும் முமுக்ஷுக்களனைவரையும் கிலேசத்திலிருந்து நீக்குபவனும் ஆகையால் பரமேச்வரனுக்கு முக்தன் என்னும் பெயருண்டாகியது. "அதஏவ நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவோ ஜகதீஸ்வர:" = பரமேச்வரனுடைய ஸ்வபாவம் நித்திய சுத்தபுத்த யுக்தமானது.

89. நிராகாரன் = ('நிர் அஜ்' பூர்வகமான 'டுக்ருஞ் கரனே') இந்த தாதுவோடு சேர்ந்து நிராகார சப்தம் சித்தமாகிறது. "நிர்கத ஆகாராச்ச நிராகார:" = அவனுக்கு எவ்வித ஆகாரமும் இல்லை; அவன் எப்போதும் எவ்வித சரீரத்தையும் தரிக்கமாட்டானாகையால் பரமேச்வரனுக்கு நிராகாரன் என்னும் பெயருண்டாகியது.

90. நிரஞ்சனன் = (அஞ்ஜூல்யமிரக்ஷ்ண காந்தி கதிஷு) இந்த தாதுவினால் அஞ்ஜன் சப்தமும், 'நிர்' உபசர்க்கயோகத்தினால் நிரஞ்சன சப்தமுமுண்டாகிறது. வியக்தி என்றால் ஆகிருதியிலிருந்தும் மிலேச்ச சாரக்கி

லிருந்தும் துஷ்ட கோரிக்கைகளிலிருந்தும் சக்ஷுராதி இந்திரிய விஷயங்களிலிருந்தும் வேறானவனைகையால் பரமேச்வரனுக்கு நிரஞ்சனன் என்னும் பெயருண்டாகியது.

91. கண்பதி (கணேசப்ன்) = (கணஸங்க்யானே) இந்த தாதுவிலிருந்து கணசப்தம் சித்தமாகிறது. இதற்கு ஈச சப்தமாவது அல்லது பதி சப்தமாவது மூன் சேர்ப்பதனல் கணேச அல்லது கணபதி சப்தமுண்டாகிறது. "பேரகிருதியாதயோ ஜடஜீவஸ்ய கணியயந்தே தேஷாமீச ஃ ஸ்வாமீ பதி பால் கோவா" = பிரகிருதியாதி ஜடம் சமஸ்த ஜீவர்கள் பிரக்யாத பதார்த்தங்களுக்கும் சுவாமியாகி பாதுகாப்பவனைகையால் பரமேச்வரனுக்கு கணபதி என்னும் பெயருண்டாகியது.

92. விஶ்வேஶ்வரன் = "யோ விஶ்வமீஸ்டே ஸ விஶ்வேஶ்வர ஃ" = சம்சாரத்துக்கு அதிஷ்டானனைகையால் பரமேச்வரனுக்கு விசுவேசுவரன் என்னும் பெயருண்டாகியது.

93. கூடஸ்தன் = "ய ஃ கூடே யநேகவித வியவஹாரேசு ஸ்வரூபேணைவதிஷ்டதி ஸ கூடஸ்த ஃ பரமேஶ்வர ஃ" = சகல வியவஹாரங்களிலும் வியாப்தனும் ஸமஸ்த வியவஹாரங்களுக்கும் ஆதாரமானவனுமாயிருப்பதால் பரமேச்வரனுக்கு கூடஸ்தன் என்னும் பெயருண்டாகியது.

## புராண இதிஹாசங்களில் பிரஹ்ம வர்ணனை.



94. ஶக்தி=(சக்லக் சக்தவ்) இந்த தாதுவிலிருந்து சக்தி சப்தமுண்டாகிறது. "ய ஃ ஸ ஸர்வம் ஜகத்கர்த்

தும் சக்3நாதி ஸ ஶக்தி:" = சகல ஜகத்கோடிகளை சிருஷ்டிப்பதில் சாமர்த்தியமுடையவனுகையால் பரமேச்வரனுக்கு சக்தி என்னும் பெயருண்டாகியது.

95. ஸ்ரீ = (சிரஞ்சேவாயாம்) இந்த தாதுவிலிருந்து ஸ்ரீ சப்தம் சித்தமாகிறது. "ய: ஸ்ரீயதே ஸேவ்யதே ஸர்வேண ஜகதா வித்வத்பிரி யோகிபிஸ்ச ஸ: ஸ்ரீரீஸ்வர:" = அவனுடைய சேவையை சகல ஜகங்களும் வித்துவான்களும் யோகிகளும், செய்கிறுர்கள். ஆகையால் பரமேச்வரனுக்கு ஸ்ரீ என்னும் பெயருண்டாகியது.

96. இலக்ஷ்மீ = (லக்ஷ்ம தர்சநா ஞானயோ:) இந்த தாதுவிலிருந்து லக்ஷ்மி சப்தம் சித்தமாகிறது. "யோ லக்ஷ்யதி பஶ்யதி யக்ஞதே சிஹ்நயதி சராசரம் ஜகத் தவா வேதைராப்தை ரோகிப் ஸ:யோ லக்ஷ்யதே ஸலக்ஷ்மீ: ஸர்வ ப்ரியேஸாவ:" = சராசரமாகிய சகல ஜகங்களைப் பார்ப்பவனும், திருசியமாகச் செய்பவனும் என்றால் சரீரத்தில் கண், மூக்கு முதலானவைகளையும், மரங்களில் இலை பூக்கனிகளையும், பிருதிவியில் மண், கல் சூரிய, சந்திரன் முதலான சின்னங்களையும் சிருஷ்டிப்பவனும், சகல சுகங்களுக்கும் சுகமானவனும், வேதாதி சாஸ்திரங்களுக்கும் தார்மிகர்களுக்கும், வித்வான்களுக்கும், யோகிகளுக்கும் லக்ஷ்யமானவன் அல்லது பார்ப்பதற்கு யோக்யமானவனுமாகையால் பரமேச்வரனுக்கு லக்ஷ்மி என்னும் பெயருண்டாகியது.

97. சரஸ்வதீ = (ஸ்ருக்தவ்) இந்தாதுவிலிருந்து ஸரஸ் என்ற சப்தமுண்டாகி அத்தோடு (மதம்) 'ஙீப்' பிரத்யயங்களைச் சேர்ப்பதனால் சரஸ்வதி என்னும் சப்தம் சித்திக்கிறது. "ஸரோ விவிதக்ஞாநம் விதீயதேயஸ்யா: சிதிஸ் ஸா ஸரஸ்வதி" = அவனுக்கு விவிதஞானம் அதாவது சப்தார்த்த சம்பந்தமான யதார்த்தமான ஞானமிருப்

பதால் பரமேச்வரனுக்கு ஸரஸ்வதி என்னும் பெயருண் டாகியது.

98. சர்வ சக்திமான் = "ஸர்வா: சக்தயே வித்தி யம்தே யஸ்மின் ஸ ஸர்வ சக்திமாந்" = தனது காரியங் களைச் செய்யும்போது ஏனையோர் சகாயத்தைக் கருதா மல் தனது சொந்த சக்தியினாலேயே சகல காரியங்களை யும் பரிபூரணமாகச் செய்ய வல்லவனாகையால் பரமேச் வரனுக்கு சர்வ சக்திமான் என்னும் பெயருண்டாகியது.

99. நியாயகாரி = (ணிக்ஞ் பிராம்ணே) இந்த தாதுவிலிருந்து நியாய சப்தமுண்டாகிறது. "பிரமாணை ரர்த்த பரிக்ஷணம் ந்யாய:." இது நியாய சூத்திரத்தின் மேல் வாஸ்சாயனமுனி பாஷியத்தின் வாக்கியம். "பக்ஷ பாதராஹித்யா சரணம் ந்யாய:" = பிரத்யக்ஷாதி பிரமா ணங்களினால் சத்தியம் தெரியும் பக்ஷபாத ராஹிதமான தர்மரூப ஆசரணம் நியாயமாகும். "நியாயகர்த்தும் சீலம் சியச நியாயகாரி அவர:" = அவனுக்கு நியாயமென்றால் பக்ஷபாதராஹித தருமத்தைச் செய்வதே சுபாவமான படியால் பரமேச்வரனுக்கு நியாயகாரி என்ற பெயருண் டாகியது.

100. தயாளு = (தயாதனக் கிரக்ஷணஹிம் சாதா ணேசு) இந்த தாதுவிலிருந்து தயாசப்தம் உண்டாகிறது. "தயதே ததாதி ஜானாதி கச்சதி ரக்ஷதி ஹி நஸ்த்யயா பாதய: பஹ்வீதயா வித்யதே யஸ்ய ஸ தயாளு: பர மேஸ்வர:" = அபயத்தைத் தருபவனும், சதி சத்யங்க ளையும், சகல வித்தைகளையும் தெரிந்தவனும், சகல சர் ஜனர்களையும் இரக்ஷிப்பவனும், துஷ்டர்களைத் தண்டிப்ப வனுமாகையால் பரமேச்வரனுக்கு தயாளு என்ற பெய ருண்டாகியது.

**101.** அத்வைதன் = (த்வயோர் பாவோ த்வித்
வாபியாமிதம் த்விதம்வா சைவ தத்தேவாத்வைதம்) "ஸஜி
தியதே துவைதம் துவிதியேஸ்வர பாவோ யஸ்மிம் ஸதத்
வைதம் அர்தாத் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேத சூந்யம்
பிரஹ்மம்" = இரண்டு மிரண்டுஞ் சேர்ந்திருப்பது த்வை
தாத்வைதங்களென்னப்படும். இதனால் ரஹிதமானது
அத்வைதம். மநுஷ்யனுக்கு மநுஷ்யன் சஜாதீயம்; மநு
ஷனுக்கு மநுஷனைவிட கீழ்ப்பட்ட விருக்ஷாதிகள் விஜா
தீயம்; சரீரத்திற்காணும் காது, மூக்கு, முதலானவைகள்
ஸ்வகதம். இப்படி இரண்டாவது ஸஜாதீய ஈசுவரனாகி
லும் விஜாதிய ஈசுவரனாகிலும் தனது ஆத்மாவில் தத்து
வாந்தர வஸ்துவாகிய ஸ்வகத பேதமுமில்லாத ஈசுவரன்
ஒரே ஒருவனாக இருப்பதால் பரமேச்வரனுக்கு அத்வை
தன் என்கிற பெயருண்டாகியது.

**102.** நிர்க்குணன் = (கன்யந்தே யேதே குணன்
யைப்பா கண்யந்தி தேகுணா:) "யோ குணைப்யே
அநிர்கத: ஸ நிர்குண ஈஶ்வர:" = ஸ்தாவர ஜங்கமங்
கள் ரூபரசஸ்பரிஸகந்தங்களும் ஜடத்தின் குணங்கள்.
அல்பக்ஞ ராகத்வேஷ அவித்யாதி க்லேச சமூகங்கள்
ஜீவ குணங்கள். இவைகளிலிருந்து வேறானவன் ஈச்
வரனாகையால் பரமேச்வரனுக்கு நிர்க்குணன் என்கிற
பெயருண்டாகியது.

**103.** ஸகுணன் = "யோகுணை: ஸஹவர்த்ததே ஸ
ஸகுண:" = ஸர்வஞானமும், ஸர்வசுகமும், பவித்திர
மும், அநந்த பலாதி குணங்களினால் சிரேஷ்டமுமுடைய
னாகையால் பரமேச்வரனுக்கு ஸகுணன் என்கிற பெய
ருண்டாகியது.

**104.** அந்தர்யாமி = "அந்தர்யாம்தும் நியமதம் சி
லம் யஸ்ய ஸோயமந்தர்யாமி" = ஸமஸ்தமான பிராணி

அப்ராணி ரூபமான ஜகத்தெல்லாம் வியாபித்து நியமிப்பவனுகையால் பரமேச்வரனுக்கு அந்தரியாமி என்கிற பெயருண்டாகியது.

105. தர்மராஜன் = "யா தர்மராஜதே ஸ தர்மராஜ:" = தர்மத்திலேயே பிரகாசிப்பவனும், அதர்ம ரஹிதனும், தர்மத்தைப் பிரகாசமாக்குவோனுமாகையால், பரமேச்வரனுக்கு தர்மராஜன் என்கிற பெயருண்டாகியது.

106. யமன் = (யமுஉபரமே) இந்த தாதுவிலிருந்து யமசப்தம் சித்தமாகிறது. "ய: சர்வாந் பிராணிநோர் நிச்சதி ஸ யம:" = சகல பிராணிகளுடைய கர்ம பலத்தைக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்கிறவனுகையாலும், சகல அநியாயங்களுக்கு வேருனவனுகையாலும் பரமேச்வரனுக்கு எமன் என்கிற பெயருண்டாகியது.

107. பகவான் = (பஜ சேவாயாம்) இந்த தாதுவிலிருந்து பகசப்தமும், இதனேடு 'மதப்' சேர்ந்து பகவான் என்ற சப்தம் சித்தமாகிறது. "பக: ஸ சகலைஸ்வர்யம் ஸேவநம்வா வித்யதே யஸ்ய ஸ பகவான்" = ஸமஸ்த ஐசுவரியமுடையவனும், பஜிப்பதற்கு யோக்யமானவனுமாகையால் பரமேச்வரனுக்கு பகவான் என்கிற பெயருண்டாகியது.

108. மநு = (மநக்ஞாநே) இந்த தாதுவிலிருந்து மநுசப்தமுண்டாகிறது. "யோ மந்யதே ஸ மநு:" = மநு என்றால் விக்ஞான சீலனென்று நம்புவதற்கு யோக்யனுகையால் பரமேச்வரனுக்கு மநு என்கிற பெயருண்டாகியது.

109. புருஷன் = (பூபாலந பூர்ணயோ:) இந்த தாதுவிலிருந்து புருஷ சப்தமுண்டாகிறது. "ய: ஸ்வ

வ்யாப்தா சராசரம் ஜகத் பூரயதிவா ஸ புருஷ:" = ஜக மெங்கும் பூர்ணமாகி இருப்பவனாகையால் பரமேச்வர னுக்கு புருஷன் என்கிற பெயருண்டாகியது.

110. விஶ்வம்பரன் = (டுபுருஞ் தாரண போஷ ணயோ:) விஸ்வ பூர்வகமான இந்த தாதுவிலிருந்து விஸ்வம்பர சப்தம் சித்திக்கிறது. "யோ விஸ்வம் பிபர்தி தாதி புஷ்டாதி ராச விஸ்வம்பரோ ஜகதீஶ்வர:" = ஜகத்தைத்தரித்து போஷிப்பவனாகையால், பரமேச்வர னுக்கு விசுவம்பரன் என்கிற பெயருண்டாகியது.

111. காலன் = (கல ஸங்க்யானே) இந்த தாதுவிலி ருந்து கால சப்தம் சித்தமாகிறது. "காலயதி சங்க்யாதி சர்வாந் பதார்த்தாந் ஸ கால:" = ஜகத்தின் சகல பதார் த்தங்களையும் ஜீவர்களையும் எண்ணுகிறவனைபடியால் பரமேச்வரனுக்கு காலன் என்கிற பெயருண்டாகியது.

112. சேஷன் = (இஶ்ன்ரு சேவனே) இந்த தாது விலிருந்து சேஷசப்தமுண்டாகிறது. உற்பத்தி பிரள யங்களிலிருந்து சேஷித்தவன் அல்லது மீறினவனாகை பால் பரமேச்வரனுக்கு சேஷன் என்கிற பெயருண் டாகியது.

113. ஆப்தன் = (அல்புரு வியாப்தோ) இந்த தா துவிலிருந்து ஆப்த சப்தமுண்டாகிறது. "ய: சர்வாந் தர்மார்த்தாந் ஆப்னோதிவா சர்வை தர்மாதர்ம ப்ராப்ய தேசாதி காலரஹித: ஸ ஆப்த:" = சத்தியோபதேசக னும், சகல வித்யாயுக்தனும், சமஸ்த தர்மாத்மாக்களுக் கும் பிராப்தமாவோனும், தர்மிகளால் பிராப்தி யடைவ தற்கு யோக்யனும், தேசகாலாதிகளால் ரஹிதமானவ னுமாகையால் பரமேச்வரனுக்கு ஆப்தன் என்கிற பெய ருண்டாகியது.

114. ஶங்கரன் = (டுக்ருஞ கரணே) 'ஶம்' பூர்வக மான இந்த தாதுவிலிருந்து சங்கரன் என்ற சப்தமுண்டாகிறது. "ய: சங்கல்யாண: ஸ ஶங்கரோதி ஸ ஶங்கர:" = (கலியாணம் என்றால்) சுகத்தைச் செய்பவனாகை யால் பரமேச்வரனுக்கு சங்கரன் என்கிற பெயருண்டாகியது.

115. மஹாதேவன் = மஹத் சப்த பூர்வக சப்தத்தோடு தேவ சப்தம் சேர மஹாதேவன் என்ற சப்தம் சித்தமாகிறது. "மஹதாம் தேவ: ஸ மஹாதேவ:" = பெரியதான தேவர்களுக்கெல்லாம் தேவனும், பெரிய வித்துவான்களுக்கெல்லாம் பெரிய வித்துவானும், சூர்யாதிகளுக்கு பிரகாசத்தைக் கொடுப்பவனுமானகை யால், பரமேச்வரனுக்கு மஹாதேவன் என்கிற பெயருண்டாகியது.

116. பிரியன் = (பிரிஞ் தர்பணே காந்தவ்ச) இந்த தாதுவிலிருந்து பிரிய சப்தமுண்டாகிறது. "ய: ப்ரீணாதி ப்ரியதேவா ஸ ப்ரிய:" = சகல தர்மாத்மாக்களையும் முமுக்ஷுக்களையும், யோக்யர்களையும், பாதுகாப்பவனும் அனைவரும் விரும்பும்படி செய்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு பிரியன் என்னும் பெயருண்டாகியது.

117. ஸ்வயம்பு = (பூசத்தாயாம்) 'ஸ்வயம்' பூர்வகமான இந்த தாதுவிலிருந்து ஸ்வயம்பு சப்தம் சித்தமாகிறது. "ய: ஸ்வயம் பவதி ஸஸ்வயம்புரீஶ்வர:" = எப்போதும், எதனாலும், எவனாலும் உற்பத்தியாகாதவனும், தனக்குத் தானாகவே இருப்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு ஸ்வயம்பு என்னும் பெயருண்டாகியது.

118. கவி = (குசப்தே) இந்த தாதுவிலிருந்து கவி சப்தம் சித்தமாகிறது. "ய: கவுதி சப்தயதி ஸர்வாவித்யா: ஸ கவிரீஶ்வர:" = வேதங்களின் வழியாக சகல

வித்தைகளையும் உபதேசித்து, சகலத்தையும் அறிபவனு கையால் பரமேச்வரனுக்கு கவி என்னும் பெயருண்டாகியது.

119. ஶிவன் = (சிவு கல்யாணே) இந்த தாதுவினின்று சிவ சப்தமுண்டாகிறது. "ப்ரஹ்ம உபமேதந்நிதர்சநம்" இதனால் சிவு தாதுவை என்னப்படும். கல்யாண ஸ்வரூபனும் கல்யாணம் செய்பவனுமாகையால் பரமேச்வரனுக்கு சிவன் என்னும் பெயருண்டாகியது.

இப்படியே பரப்ரஹ்மத்தின் குணகர்மங்களைக்கருதி அநந்தம் பெயர்களால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

வினா—சிலர் ஏகாக்ஷரம், பஞ்சாக்ஷரம், ஷடாக்ஷரம், அஷ்டாக்ஷரம் என்னும் பெயர்களால் பிரஹ்ம லக்ஷணத்தைச் சொல்லுகிறார்களே அவற்றின் விவரங்களைச்சற்று தெரிவியுங்கள் கேட்போம்?

விடை—அப்படியே தெரிவிக்கிறோம் அவைகளில் முதலாவது—

## ஏகாக்ஷரம் ஓம் என்பதாம்

### நாராயண உபநிஷத்து

உ-வது அநுவாகம்.

காயத்திரி

ஓம் பூர் புவ: ஸுவ: ஓம்தத்ஸ விதுர்
வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹீ
தியோயோ ந: பிரசோதயாத்.

பொழிப்புரை.

சிருஷ்டி ஸ்திதி லய காரண பூதனாய், திரிலோக வியாபியாய் எமது மனோவிருத்திகளைப் பிரேரேபிக்கா நின்ற ஓ பரமாத்துமாவே! உன்னைத்தியானிப்போமாக.

எவன் யாவற்றையும் விளங்கச்செய்கிறானோ, எவன் எல்லாவற்றையும் ரக்ஷிக்கிறானோ, எவனிடத்தினின்று யாவும் ஜனிக்கின்றனவோ, எவனிடத்து யாவும் மீண்டு லயிக்கின்றனவோ, எவன் மோக்ஷத்தின் பொருட்டு எம் மனோ விருத்திகளைச் சன்மார்க்கத்தில் பிரவர்த்திக்கும் படி உதவுகின்றானோ, அப்படிப்பட்ட திவ்ய ஸவிதாவாகிய தேஜோமயனே! உன்னை மேன்மேலும் கொண்டாடித் தொழுவோமாக.

## தைத்ரீய உபநிஷத்து

### சிக்ஷாவல்லி.

ஓமிதிப்ரஹ்ம ஸர்வேஸ்மைதேவா பலிமாஹரந்தி மத்யேவாமகமாஸீநம் விஸ்வேதேவா உபாஸதே.

### பொழிப்புரை.

ஓம் என்கிற எழுத்தினால் விளங்குகிறதெதுவோ அது பிரம்மம். சகல தேவதைகளும் அதைப் பூஜிக் கின்றனர். பிரபஞ்சத்தினிடையேயிருக்கும் பூஜிக்கப் படத்தக்க பரமாத்துமாவை எல்லாதேவதைகளும் நியத மாக உபாஸிக்கின்றனர்.

### விசேஷ உரை.

ஓம் என்னும் பிரணவாக்ஷரம் பார்வைக்கும் கேள் விக்கும் ஒரே அக்ஷரமாகத் தோன்றினும், அதில், அ - உ - ம் என்னும் மூன்று எழுத்துக்கள் அடங்கியிருக் கின்றன. இம்மூன்று எழுத்துக்களுக்குள் உலகத்தில் வழங்கும் சகல எழுத்துக்களும், சகல காரண காரியங் களும் அடங்கியிருக்கின்றன. எழுத்துக்களில் (யாதொரு உதவியின்றி) இயற்கையாக உச்சரிக்கும் எழுத்துக்க ளுக்கு உயிரெழுத்துக்களென்றும், உயிரெழுத்துக்களின்

உதவியால் உச்சரிக்கும் எழுத்துக்களுக்கு உயிர்மெய் எழுத்துக்களென்றும் சொல்லுகிறோம். உயிரெழுத்துக் களாகிய அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்னும் எழுத்துக்களை தக்கபடி பரிக்ஷிப்போமாகில், அவற்றில் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ஆகிய ஏழு எழுத்துகளும் அகர எழுத்தின் திரிபாகும்; உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற ஐந்து எழுத்துக்களும் உகர எழுத்தின் திரிபாகும்; ஆகவே இந்த அ, உ என்னும் எழுத்துக்க ளுடன், உயிரைப்போல் தொனிக்கும் அநுஸ்வரமாகிய புள்ளி (o) ம், சேர்க்க அ, உ, ம்=ஓம், என்றாகிறது. இவ்வமைப்பு கேவலம் இந்நாட்டுக்குரிய கீர்வாணம், ஆந்திரம், தமிழ், கன்னடம், துளுவம், இந்துஸ்தானி, வங்கம், குஜராத்தி, மஹாராஷ்டிரம், மலையாளமுதலான பாஷைகளில் மாத்திரமல்ல; அரபுபாஷையின் முதல் எழுத்தாகிய (*Hamza*) அம்ஸா என்பதும், பாரசீக பாஷையின் முதல் எழுத்தாகிய (*Alf*) அலிப் என்பதும், ஆங்கிலேய பாஷையின் முதல் எழுத்தாகிய (A) ஏ என்பதும் அகரஉயிரின் திரிபேயாகும்; இப்படி உலகத்தி லுள்ள சகல பாஷைகளின் உயிரெழுத்துக்களை எல்லாம் தக்கபடி பரிசோதிப்போமாகில் அவைகள் யாவும் "அகர முதலவெழுத்தெல்லாமாதி, பகவன் முதற்றேயுலகு" என்னும் திருக்குறள் மொழிப்படியாகும். ஆகவே,

ஓங்காரமே பிரஜைகளின் பாஷை.

இப்பிரபஞ்சத்தில் பகுத்தறிவோடு பேசும்பாஷைக் குரிய பிராணிகளாகும் நம் மானவஜாதியின் மக்கள் ஜகத்தில் ஜனித்தவுடனே யாதொரு உபாத்தியாயருடைய உதவியில்லாமல் இயற்கையாக உச்சரிக்கும் எழுத்துக்கள் அ - உ - உங் என்பவைகளே. பிள்ளைகள் பசித்தபோது அழும் சப்தமும் உங்கா! ஊங்கா என்னும் ஓங்கார சப்த மேயாம். தம்மை விட்டுப் பிரிந்து தூரத்திலிருக்கும்

மாதாமுதலானவர்களை அழைக்க அ உ ஒ! ஓ! ஓம் என்னும் எழுத்துக்களையே திரிபாக உச்சரிக்கின்றன அவைகளுக்கு வியாதி, வருத்தம் உண்டாகும்போது அம் உம் அஹூம் ஓம் என்றே உச்சரிக்கின்றன. சுக சந்தோஷமுண்டாகும்போது ஆஹா ஓஹோ ஊஹூ என்பனவும் ஓம் என்பதின் திரிபான உச்சரிப்புகளே. கஷ்டங்கள் சம்பவித்து வருந்தும் உலகத்தாரனைவரும் கடவுளை, ஓங்! ஓங்! கடவுளே என்று கதறி அழைப்பது பிரத்தியக்ஷம்; ஆகவே, மானவஜாதியார் பிறந்தது முதல் இறக்கும் வரையில் உச்சரிக்கும் வார்த்தைகள் ஓங்காரமே. காலதேச வர்த்தமானங்களினால் இந்த ஓங்கார சப்தத்தை வேறு வேறு விதமாக உச்சரித்து வந்தாலும் அதன் பெருமை பிரபஞ்ச வெளிப்பொருள்களிலும் பிரத்யக்ஷம். ஆகவே,

ஓங்காரமே பஞ்சபூதாதி பிராணிகளின் பாஷை.

பூதபேதகம்பூண்ட வெண்கலம், இரும்பு, வெள்ளி முதலானவைகள் ஒன்றோடொன்று தாக்கும்போது உண்டாகும் சப்தத்தைக் கவனித்தால் அதுவும் ஓங்காரத்தின் சப்தமாகும். பெருங்கடல்களிலிருந்து பெரும் பர்வதங்களைப்போல எழும்பும் பேரலைகளின் சப்தத்தை கவனிப்போமாகில் அதுவும் ஓங்கார சப்தமாகும். சண்டமாருதம் வீசும் சப்தத்தைக் கவனித்துக்கேட்போமாகில் அதுவும் ஓங்காரசப்தமேயாகும்; பற்பலவித விருக்ஷங்கள் காற்றிலசைந்து சப்திக்கும் சப்தத்தையும், பற்பலவித கட்டைகள் தீயிற்கலந்து எரியும்போதுண்டாகும் சப்தத்தையும், கவனிப்போமாகில் அவைகளும் ஓங்காரசப்தமேயாகும். பற்பலவித பூச்சிகள் வண்டுகள், பக்ஷிகள், மிருகங்களின் சப்தங்களைக் கவனிப்போமாகில் அவைகள் யாவும் ஓங்காரசப்தத்தின் திரிபான சப்தங்களாகும். சகல ஜந்துகோடிகளுக்கும் ஆநந்தத்தை விளைவிக்கும்

சங்கீதத்தின் உற்பத்தியைப்பற்றி பரீக்ஷிப்போமாகில், அதுவும் ஓங்காரத்திலிருந்தே ஜனித்தல் ஸ்பஷ்டமாகும். ஆகவே,

## ஓங்காரமாகிய

| | | | |
|---|---|---|---|
| அ | உ | ம் | 3 எழுத்துகளிலிருந்தே |
| ஸ்தூல | சூக்ஷ்ம | காரணம் | 3 தேகங்கள் |
| ஆண் | பெண் | அலி | 3 பால்கள் |
| வாலிபம் | யவ்வனம் | முதுமை | 3 தசைகள் |
| ஜாக்ரத் | ஸ்வப்ன | சுஷுப்தி | 3 அவஸ்தைகள் |
| அத்யாத்மிகம் | ஆதிதைவிகம் | ஆதிபவுதிகம் | 3 தாபங்கள் |
| விஷயானந்தம் | வாஸனாநந்தம் | பிரம்மாநந்தம் | 3 சுகங்கள் |
| புண்ணியம் | பாவம் | மிஸ்ரம் | 3 கர்மங்கள் |
| ஜீவ | ஈசுவர | பிரதியுக்தம் | 3 கர்த்ருத்வங்கள் |
| ஸாத்விக | ராஜஸ | தாமசம் | 3 புத்திகள் |
| இருக்கு | யஜுர் | சாமம் | 3 வேதங்கள் |
| பெயர் | வினை | உரி | 3 சொற்கள் |
| தன்மை | முன்னிலை | படர்க்கை | 3 இடங்கள் |
| ஒருமை | பன்மை | பலவை | 3 எண்கள் |
| குரு | சாஸ்திர | நிஷ்டை | 3 விசுவாசங்கள் |
| இச்சை | ஞானம் | கிரியை | 3 சக்திகள் |
| பூத | பவிஷ்ய | வர்த்தமானம் | 3 காலங்கள் |
| சுவர்க்க | மத்திய | பாதளம் | 3 உலகங்கள் |
| அசுரர் | ருத்திரர் | ஆதித்தியர் | 3 தேவர்கள் |
| பிரம்மா | ருத்திரர் | விஷ்ணு | 3 மூர்த்திகள் |
| சாந்தம் | கோரம் | மூடம் | 3 விருத்திகள் |
| நாபி | ஹிருதயம் | பூமத்தியம் | 3 ஸ்தானங்கள் |
| விசுவன் | தைஜஸன் | பிராக்ஞன் | 3 ஜீவர்கள் |
| விராட்டு | ஹிரண்யகர்ப்பன் | அவ்யாகிருதன் | 3 ஈசுவரர்கள் |
| ஐஹிகம் | ஆமுஷ்திகம் | வைராக்கியம் | 3 விரக்திகள் |
| பாஹியம் | அநர்ஸியம் | ஏகாந்தம் | 3 பக்திகள் |

| | | | |
|---|---|---|---|
| திருக்கு | வாக்கு | ஸ்பரிசம் | 3 தீக்ஷைகள் |
| வாம | தக்ஷிண | நாஸாக்ரம் | 3 நேத்திரங்கள் |
| அந்தரம் | மத்யம் | பாஹ்யம் | 3 லக்ஷ்யங்கள் |
| ஸம்ஞானம் | விக்ஞானம் | பிரக்ஞானம் | 3 ஞானங்கள் |
| ஸோமன் | சூர்யன் | அக்நி | 3 மண்டலங்கள் |
| சுவாதிஷ்டான | பூரண | துரியம் | 3 நிலைகள் |
| கிரமமுக்தி | ஜீவன்முக்தி | விதேஹமுக்தி | 3 முக்திகள் |

ஆக இத்தொண்ணூற்றாறையும், (96) இவைகளுக்கு இணமானவைகளையும் இவைகளுக்குட்பட்ட திரிவர்ணக மானவைகளையும் எங்கும் காணலாம்.

ஓங்காரத்தின் திரிவர்ணகங்களின் ஜனன விவரம்.

இந்த திரிவர்ணகமானவைகளில் (1) சில பஞ்சேந் திரியங்களால் அறியக்கூடியவைகளாகவும் (2) சில மனதி னால் மாத்திரம் அறியக்கூடியவைகளாகவும் (3) சில மனதினாலும் அறிய முடியாமல் கேவலம் சஹஜஞானத்தி னால் மாத்திரம் அறியக்கூடியவைகளாகவும் இருத்தல் பிரத்தியக்ஷம். இவற்றில் பஞ்சேந்திரியங்களால் கிரஹிக் கக்கூடிய ஜடஜகபதார்த்தங்கள் ஓங்காரத்தின் முதல் எழுத்தாகிய அகாரத்தையும், (2) பஞ்சேந்திரியங்களுக்கு கோசரமாகாமல் மனதினால் மாத்திரம் கிரஹிக்கக்கூடிய வை ஓங்காரத்தின் இரண்டாவதெழுத்தாகிய உகாரத்தை யும், மனதினாலும் கிரஹிக்கமுடியாமல் கேவலம் சஹஜ ஞானத்தினால் மாத்திரம் ஊஹித்தறியக்கூடியவைகள் ஓங்காரத்தின் மூன்றாவது எழுத்தாகிய இம் என்னும் அநஸ்வரரூபம் சேர்ப்பதனால் மாத்திரம் ஸப்திக்கும் மகாரத்தையும் சார்ந்ததாகும்.

ஓங்காரம் திரிவர்ணகமானவைகளுக்குக் காரணம்.

இப்படி எங்கும் எப்போதும் திரிவர்ணகமான வைகள் இருத்தல் பிரத்தியக்ஷம். இவைகள் உண்டாவ தற்குக் காரணம் யாது ? சர்வ சூனியத்திலிருந்து ஒன்றும்

உண்டாகாதே. ஆகவே, இவைகளை யாதாவது ஒரு பொருள் சிருஷ்டித்திருக்கவேண்டும். இப்படி சிருஷ்டித்த பொருள் மேலே சொன்ன (96) தொண்ணூற்றாறு திரிவர்ணகமான பொருள்களில் தோன்றுமையால், இத்திரிவர்ணகமானவைகளாவது தம்மைத்தாம் சிருஷ்டித்துக்கொண்டிருக்கவேண்டும். அப்படி சிருஷ்டித்துக்கொண்டதாகில், அவைகள் சுவதந்திரமும் பூர்ணமுமானவைகளாக இருக்கவேண்டும்; ஆனால், இத்திரிவர்ணகமானவைகளோ பரதந்திரமும் அபூர்ணமுமானவைகளாக இருத்தல் பிரத்தியக்ஷம்; ஆனதால் அவைகளை சிருஷ்டித்துக்கொள்ளும் சக்தியுடையவைகளல்ல; அல்லாமற்போகவே, இத்திரி வர்ணகமானவைகளுக்கு ஆதாரமாகிய அகார, உகார, மகாரம் என்னும் எழுத்துக்களாவது சிருஷ்டித்திருக்கவேண்டும்; இந்த ஓங்காரத்தின் எழுத்துக்களை கடிதம் முதலானவைகளின்மேல் எழுதிப் பார்க்கில், அதில், இந்த ஓங்காரத்தைச்சார்ந்த அகார உகார மகார எழுத்துக்களைத்தவிர வேறு எழுத்துக்கள் தோன்றவில்லை. அல்லது அந்த ஓங்கார சப்தத்தைக் கேட்கும்போதும் அத்துடன் வேறு சப்தமுங்கேட்கவில்லை. அன்றியும் இந்த அகார உகார மகார எழுத்துக்களுக்கும் ரூப ஸப்த மாத்திரைகள் இருப்பதால் இவைகளும் பரதந்திரமும் அபூர்ணமுமானவைகளாகவே தோன்றும்; அப்படித்தோன்றினும், இந்த அகார உகார மகார மயமாக எங்கும் எப்போதும் தோன்றி இருக்கும் பரதந்திரமும் அபூர்ணமுமான பொருள்களின் இருப்பின் நம்பிக்கையினால் அதற்குள் பூர்ணமும், சுதந்திரமுமான ஒரு பொருள் இருக்கிறதென சஹஜஞானம் நம்பும்படி செய்கின்றது.

இந்த நம்பிக்கை தானாக உள்ளது; இதுவே இயற்கையறிவு அல்லது ஸஹஜ ஞானம். இந்த ஸஹஜ

ஞானத்தைக்கொண்டு ரூபம், சப்தம், மாத்திரைகளை யுடைய அகார உகார மகாரமயமான ஓங்காரத்தைப் பரீக்ஷிப்போமாகில், அதற்குள் மாத்திரை முதலான வைகளில்லாமலும், அது சத்தியமாக இருக்கிறது என்னும் பொருள்படும் தத்ஸத் (அது சத்தியமாக இருக்கிறது) என்னும் பொருள் அடங்கி இருக்கிறது. ஆகவே ஓங் காரத்தை நான்கு வகுப்புகளாக வகுத்து, அதில் மாத் திரைகளையுடைய அகார உகார மகார எழுத்துக்களை மூன்று வகுப்புகளாக்கி, அவைகளின் இருப்புக்கு ஆதார மானதும், அமாத்திரையானதும் எதுவோ, அதுவே தத்ஸத் என்னும் பொருள் என்றும், அதுவே மேலே சொன்ன தொண்ணூற்றாறு திரிவர்ணகமானவைகளின் ஆதாரமான ஓங்காரத்துள் நடுநாயகமாக இருக்கிறது என்றும், ஆகவே ஓங்காரம் என்பதற்கு அது சத்தியமாய் இருக்கிறது (Beness) என்றும் பிரம்ம வாதிகளுரைக் கின்றனர்.

ஆனதுபற்றியே ஓம்—தத்—ஸத் என்பதில்
ஓம் என்றால் (பிராகிருத அபிராகிருதமான சகல பதார்த் தங்களையும் படைத்து அழித்து ஆக்கவல்ல)
முதற்காரணம்
(ஆகியதெதுவோ)
தத் என்றால் (ஆண் பெண் அலிபற்றதாகிய) அது
ஸத் என்றால் (எப்போதும் சத்தியமாக) இருக்கிறது.
அதுவே, சத், சித், ஆநந்தமாகிய சச்சிதாநந்தம்
இந்த ஓங்காரத்தின் மகிமை இப்படிப்பட்டதாகையால்,

## பகவத்கீதை

7-வது அத்தியாயம் 8-வது சுலோகத்தில்.

“ எல்லா வேதங்களிலும் நானே ஓங்காரமாக இருக் கிறேன் ” என்று கிருஷ்ணர் சொன்னர். இப்போது

இந்நாட்டிலிருக்கும் ஸ்மிருதி சாஸ்திர புராணங்களையும் பக்தசிரோன்மணிகளுடைய காவியங்களையும் சோதிப் போமாகில், அவைகள் இந்த ஓங்காரத்தையே ஆதார மாகக் கொண்டிருக்கின்றன.

## மநுதர்ம சாஸ்திரம்.

2-வது அத்தியாயம் 74-முதல் 85-வது வாக்கியங்களில்.

ஓங்காரத்திலிருந்து பூலோகம், புவர்லோகம், சுவர் லோகம் உண்டாயிற்று என்றும்,

பிராம்மணர்கள் வேதபாடங்களை ஆரம்பிக்கும் போதும், முடிக்கும்போதும் ஓம் என்ற பிரணவத்தை யுச்சரிக்கவேண்டும். அப்படி உச்சரிக்காவிட்டால் அவனு டைய படிப்பு பாழ்த்துப்போம் என்றும்,

இந்த ஓம் பிரணவத்தை மூன்று வருஷம் விடாமல் உச்சரிக்கிறவர்கள் பரமாத்துமாவின் சன்னிதானத்தை நாடி புனிதராகி பரலோகத்தை அனுபவிப்பார்கள் என்றும், பின்னும் பலவிதமாகவும் வர்ணித்தார்.

உபாத்தியாயன், வீரன், வர்த்தகன் மற்றெவனுகி லும் இந்த ஓங்காரத்தை உச்சரிக்காமல் செய்யும் விரதங் கள் நிந்திதமானவைகளே என்றும், வேதங்களை யறிந்த புரோஹிதன் மூன்று எழுத்துக்களால் உண்டான ஓங்கார மென்னும் பிரணவத்தை காலை மாலைகளில் உச்சரித்தால் வேதாப்பியாசத்தினாலுண்டாகும் பலனை யடைகிறான் என்றும் சொல்லப்பட்டது,

இம்மட்டோ! இவ்வுலகிலுள்ள சமய நூல்களையும், சமயாசார கருத்துகளையும், சுவாமிகளின் பெயர்களையும் சாஸ்திரோக்தமாகச் சோதிப்போமாகில் அவைகள்

யாவும் ஓங்கார சப்தத்திற்குட்பட்டதாகவே பிரத்தியக்ஷ மாகும். அதாவது,

பாரஸீகருடைய பிரதம தேவனுடையபெயர் ஜந்து பாஷையில் (Ahurmuzd) அஹுர்மஸ்ட் என்பதாம்; இந்த வார்த்தையிலுள்ள (A. W. M.) அ உ ம் எழுத்துக் களும் ஓங்காரத்தையே காட்டும்.

சீனு, ஜப்பான், திபேத்து முதலான பவுத்த லாமாக் களின் துவஜம்மணி பத்மி ஹோம் (Mani Padmi Hom) என்பதாம். இந்த மஹாவாக்கியத்திலும் அ - உ - ம் என்னும் ஓங்காரத்தைச்சார்ந்த பிரணவாக்ஷரங்கள் இருப்பன பிரத்தியக்ஷம்.

யூதமதஸ்தர்களுடைய கடவுளின்பெயர் (Jehova) இஹோவா. இந்த இஹோவா என்னும் பதத்துக்கு (Hebrue) ஹீப்ரு பாஷையில் இருக்கிறேன் என்று பொருள். இந்தப்பொருளுள்ள இஹோவா (Jehova) என்னும் பதத்திலுள்ள (E A O) இ, எ, ஒ.அல்லது (A W O) அ உ ஒ என்ற உயிர்கள் ஓங்காரத்தின் பொருளாம். இந்த இஹோவா என்ற பதத்தை கிரேக்கு பாஷையின் படி பரீக்ஷிப்போமாகில் ஓம் யப "நான் இருக்கிறேன்" என்றும், யப (HI) என்ற வினையால் (To Be) இருத்தல் என்றும் (Septugent) செப்டூஜண்டில் ஒய் என்பதைப் போன்ற யப (*Ever Existing God*) பதத்திற்கு எப்போ தும் இருக்கும் ஈசன் அல்லது நான் இருக்கிறேன் என்றும் பொருளாகும்.

கிறிஸ்து மதத்தார் கடவுளுக்குச் சாதாரணமாக வழங்கும் எஹோவா என்றுதி பதங்களையும், ஆமென் என்ற பதத்தையும் சோதிப்போமாகில் அவைகளில் அ - உ - ம் என்னும் பிரணவாக்ஷரங்கள் அடங்கி இருத்

தல் பிரத்தியக்ஷம். இதைப்பற்றியே (In the Gospel of John, the Apostle, in Chapter I Verses 1-5) யோவான்எழுதிய சுவிசேஷம், அதிகாரம் 1-5-ல் (In the beginning was the *Word* and the *Word* was with God, and the *Word* was God) ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்தவார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தையே தேவனாய் இருந்தது என்று சொல்லப் பட்டிருக்கிறது. இந்த வார்த்தையே ஓங்காரமாகிய வார்த்தை. இந்த வார்த்தைக்குள்ளிருந்தே பிதா, குமாரன், பரிசுத்தாவி என்ற திரியேகத்துவம் உண்டாகியதாம்.

மகம்மது மதஸ்தருடைய குறானில் கடவுளைக் குறிக்கும் அலீப்-லாம்-மீம் A. L. M. என்பவைகளே மகா மகிமையுள்ளவைகளாக முதலில் உபயோகப் படுத்தப் பட்டுவருவது பிரத்தியக்ஷம். அரபுபாஷையில் (Karam-al-din) காரம்-அல்-டீன் என்பதில் (Alip) அலிபுக்கு முன் உச்சரிக்கும்போது ல எழுத்து (Karam-ud-din) காரம் உடீன் என்று உகரமாக உச்சரிப்பது சஹஜ மாகையால், இந்த அலிப் - லாம் - மீம் என்னும் வார்த்தையிலிருக்கும் லகரம் உகரமாக மாற அ - உ - ம் என்னும் ஓங்காரத்தைக் காட்டும். மேலும் மகம்மதியருடைய (Kalima) கலிமா பரிசுத்த வார்த்தையாகிய (La-ilaha-il-lal-lahu-wa-Mahammed-ur-Rasul-ulla) லா-இல்லாஹா இல்லல்லாஹு வா மஹமத்-உர்-ரசூல் உல்லா என்றால் அல்லாவாகிய ஆண்டவர் ஒருவர் தவிர வேறு கடவுள் இல்லை, மகம்மது அவரால் அங்கீகரிக்கப்பட்ட நபிநாயகமாவார் என்பதாம். இந்த கலிமாவில் லா என்பதிலுள்ள அகரமும், ஹு என்பதிலுள்ள உகரமும், மஹம்மத் என்பதிலுள்ள மகரமும் ஓம் என்னும் ஓங்காரத்தையே காட்டும். இப்படி இவ்வுலக சமயங்களி

லெல்லாம் மறைந்து நிற்பது ஓங்காரமே; ஆகையால் மகா பக்தசிகாமணியாகிய,

தமிழ் நாட்டிற்சிறந்த நம்மாழ்வார் இயற்றிய,

(2) உயர்வற உயர்நல முடையவன் யவனவன்
(3) மயர்வற மதிநல மருளினன் யவனவன்
(1) அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
(4) துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.
என்னும் பாட்டில்

1, 2, 3 இலக்கமிட்ட வரிகளிலுள்ள (1) அகர, (2) உகர, (3) மகரமாகிய மூன்று வரிகளில் முதல் எழுத்துக்கள் ஓங்காரத்தைச் சார்ந்தவையாகவும், நான்காவது வரியின் (4) முதலெழுத்தாகிய து என்பது அது ஓங்காரத்தின் இருப்பை ஸ்தாபிக்க தத், ஸத் என்பதைக்காட்ட நிற்பது பிரத்தியக்ஷம் ஆகவே,

## முண்டகோபநிஷத்து

உ-வது முண்டகம், உ-வது கண்டம், ௬-வது வாக்கியம்.

ஓமித்யேவம் த்யாயத ஆத்மாநம் ஸ்வஸ்தி வ:
பராயதமஸ: பரஸ்தாத்; ஓங்காரேணைவாயத
நேநாங்வேதி வித்வான் யத்தச்சாந்தமஜர
மம்ருதமபயம் பரஞ்ச.

மொழிப்புரை.

"ஓங்காரப் பிரதிபாத்தியமான பிரம்மத்தைத் தியானியுங்கள், அஞ்ஞான இருளினின்று நீங்குவதில் உங்களுக்கு நிர்விக்கினமுண்டாவதாக. ஞானி ஓங்கார சாதனத்தைக்கொண்டே அந்த சாந்தரும், மூப்பற்றவரும், சாவற்றவரும், பயம் நீங்கியவரும், நிரதிசயருமானவரை அடைகின்றார்." என்று சொல்லியிருப்பதால் நாம் யாவரும் இந்த ஓங்கார பிரதிபாத்தியமான பிரம்மத்தை நாடி தியானித்து இகபரசுகமடைவோமாக. ஓம் தத்சத்.

## இரண்டாவது நமசிவாய என்னும்
## பஞ்சாக்ஷரமாவளி.



பஞ்சாக்ஷரம் என்பது சைவர்களால் சிவமூல மந்திரம் என்னும் பெயரால் உபதேசமுக்யமாக அநுசந்திக்கும் நமசிவாய என்பதாம்.

இந்த நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரத்திற்கு முன்பு

"ஓநமச்சிவாயமே யுலகமாவதுலகெலா"
"மோநமச்சிவாயமேயுணர்த்தும்

என்றுதி வாக்கியங்களின்படி ஓங்காரமாகிய பிரணவத்தைச் சேர்த்து "ஓம் நமசிவாய" என ஷடாக்ஷரமாக சிலர் அநுஷ்டித்து வந்தாலும், "ஓமர்த்தம் மந்த்ர ரூபாய மூல பஞ்சாக்ஷராத்மநே" என்றுதி மயல்கிருத வாக்கியங்களினாலும், (ஓங்காரமே நற்பிரசவாசி யுற்றதனி னீங் காவெழுத்தே நிறை சுடராய்," "ஓமென்னு மோங்காரத் துள்ளே யொருமொழி"

"காட்டுமோமெனுமெழுத்து நிட்களசிவன்றன்னை"
"இறைசத்திபாசமெழின்மாயையாவி
"யுறநிற்குமோங்காரத்துள்"

என்றுதி வாக்கியங்களினாலும், பிரணவவாச்யராகிய சிவ பெருமான் ஓங்காரத்தைத் திருவாசியாகக்கொண்டும் அதினுள் சூக்ஷ்மாகாரமாக பிரகாசிக்கும் நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரம் அகத்துறுப்பாகக் கொண்டும் ஆத்மாநுக்ரஹ நிமித்தம் சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களை இயற்றிவருவதனாலும்; அஷ்டாக்ஷரம் முதலான மந்திரங்கள் ஓங்கார சகிதமாய் இயங்கிப் பலனைக்கொடுத்து நிற்பதைப்போலன்றி ஓங்காரத்தைப் புறத்துறுப்பாகவும், அலங்கார விசேஷணமாகவும், ஓசை நிறைவின் பொருட்டாகவும்; பஞ்சாக்ஷரத்தை அகத்துறுப்பாகவும், சிவபெருமானே அதன் உண்மைப்பொருளாகவும், இயங்கி

சாதன கிரமத்தில் தீவிரமாய்ப் பலன் கொடுத்து வருவதாக பெரும்பான்மையான சைவர்கள் பஞ்சாக்ஷரத்திற்கு முன்பு பிரணவமாகிய ஓங்காரத்தைச் சேர்ப்பதில்லை. இதற்கோர் உபமான உபமேய உதாரணம்.

## நெல்லைப்போலும், அரிசியைப்போலும்.

பிரணவமாகிய ஓங்காரம் நெல்லைப்போலும், நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரம் அரிசியைப்போலு மிருக்கிறது. நெல்லினின்று அரிசி வேறாகாததுபோல, பிரணவமாகிய ஓங்காரத்தினின்று பஞ்சாக்ஷரம் வேறாகமாட்டாது. நெல்லின் பிரயோசனமே அரிசியாயினாற்போல, ஓங்காரத்தின் பிரயோஜனமே பஞ்சாக்ஷரமாகிறது. அரிசியினால் அன்னமுண்டாவதுபோல, பஞ்சாக்ஷரத்தினால் சிவஞானமுண்டாகிறது. அன்னத்தினால் பசி நீங்கித் திருப்தி இன்பமுண்டாவதுபோல, சிவஞானத்தினால் மல நீக்கமும், மோக்ஷ இன்பமும் உண்டாகுமென்பது திண்ணம். நிற்க.

## பஞ்சாக்ஷரத்தின் பெருமை.

" பஞ்சாக்ஷரமயஸ்ஸம்பும் பரப்ரஹ்மஸ்வரூபிணம்
நகாராதி யகாராந்தம் ஞாத்வாபஞ்சாக்ஷரம் ஜபேத் "

என்றுதி பிரமாணங்களின்படி அகண்டாகார சதாவியாபக சச்சிதாநந்த ஸ்வரூபியாகிய சிவபெருமானுடைய திருநாமமே நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரமாம். இந்தச் சிவமந்திரமாகிய—

ந 1 + ம 2 + சி 3 + வா 4 + ய 5 = நமசிவாய

என்னும் ஐந்து எழுத்துக்களில், முதல் எழுத்தாகிய நகரத்தின் பொருளென்னவெனில் திரோதாநமாம், அதாவது மறைக்கும் சக்தியாம்.

" மாலார் திரோத மலமுதலாய் மாறுமேச,
மேலாசுமீளாவிடின். "

என்றுதி திருவருட் பயன் முதலான சித்தாந்த சுவாமிகளின் கருத்தின்படி சிவபெருமானுடைய அருட்சத்தியானது ஆணவமலத்தோடு கூடித் திரோபவித்து நின்று காரியப்படுத்துகையால் மூலமலமென உபசரிக்கப்பட்டு, திரோதமாய் நின்றும் காரியப்படுத்தி மலபாகம்வருத்தின அருளானது அவர்களிடத்து கிருபை ஜனிப்பித்து சிவபெருமானோடு பொருந்தும் முறைமையை உண்டாக்குவதாம். ஆதி சத்தியாகிய இந்த திரோதானத்தைச் சிவபெருமான் தனக்குச் சம்பந்த காரணமாக்கிக்கொண்டு, தனுகரணபுவன போகங்களைக்கொண்டு ஜீவாத்மாவுக்கு சஹஜமான ஆணவகன்மங்களை நீக்கியும், இதை நீக்கும்போது தனுவாதி நான்கையுங்கூட நீக்கியும், ஜீவாத்மாவைப் பரிசுத்தனாக்கி தன்னோடு சேரும்படி செய்யும் சத்தியேயாம். அதாவது ஜீவாத்மாக்களின் கன்ம பரிபாகத்தின் பொருட்டு சிவபெருமானுடைய சக்தியே திரோதான சத்தியாய் மல கன்மங்களோடு விரவி, பெத்தத்தில் வேறுப் நின்று புண்ணியபாவமென்னும் இருவினைப் போகம் புசிப்பித்து, பரிபாகம் வருவித்து முக்தியில் உடனாய் நின்று ஐக்ய ஞானத்தை அறிவித்துப் பேரின்பத்தை அநுபவிக்கும்படிச் செய்யும் ஆதிசக்தியேயாம்.

இனி இரண்டாவது எழுத்தாகிய மகாரத்தின் பொருளை விசாரிப்பாம்.

மகாரம் மலத்தை அறிவிக்கிறது. அதாவது ஜீவாத்துமாக்களுக்கு "அறியாமை மிக உண்டாகும்படி சஹஜமாயும், அனாதியாயும் இருக்கும் ஆணவமலம் ஒன்று, இந்த ஆணவமலத்தோடு கூடிநின்று அது பக்குவமாகும ளவும் ஜீவாத்துமாவை மறைத்து அந்த மலத்தைப்பாகம் வருவிக்கின்ற திரோத மலமொன்று, ஜீவாத்மாக்களுக்கு தனுவாதிகளைக்கொடுத்து மயங்கச்செய்யும் மாயாகாரண

மலமொன்று, ஜீவாத்மாக்கள்தோறும் விரிந்து அநுபவமாய் நிற்குங் கன்மமலமொன்று, ஜீவாத்துமாக்களின் சுகதுக்கவினைவுக்கெல்லாம் இடமாய் நின்று அவற்றின் அறிவு இச்சை, செயல்களை ஏகதேசப்படுத்தும் மாயேயமலமொன்று ஆக ஐந்து வகையாம். இம்மலமே பாசம் அல்லது பந்தமென்றுஞ்சொல்லலாம். அதாவது:—

"மும்மலநெல்லினுக்குமுளையொடுதவிடுமிப்போன்
மம்மர்செய்தணுவினுண்மைவடிவினைமறைத்துநின்று
பொய்மைசெய்போகபந்த போத்திருத்துவங்கள்பண்ணு
மிம்மலமூன்றினோடு மிருமலமிசைப்பனின்னும்."

என்று சிவஞானசித்தியார் முதலான நூல்களின்படி செம்புக்குக் காளிதம் போலும், நெல்லுக்கு முளை தவிடு உமியைப்போலும் ஜீவாத்துமா தன்னைத் தலைவனை யறியாமல் மூடப்பட்டிருப்பதே மலமாம்.

இனி மூன்றாவது எழுத்தாகிய மகாரத்தின் பொருளைப்பற்றி விசாரிப்பாம்.

"ஸிவ: பதம் தத்பரமாத்வாசி" என்றும்
"அவ னவ ளது வெனு மனவமூவினையிற்
றோற்றியதிதியே யொடுங்கிமலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்"

என்ற ச்ருதி வாக்கியங்களின்படி மகி என்பது சிவத்தின் பொருளாம். அதாவது மங்கள ஸ்வரூபன் என்பதாம். இந்த மங்கள ஸ்வரூபனையே சைவர்கள் பதி என்பார்கள். பா + தி = பதி: என்றால், பா = காத்தல், ஆதரித்தல் என்ற பொருள். தி = வினைமுதற்பொருள் விகுதி; ஆக பதி என்றால் "பாதுகாக்கிறவன்" என்பது கருத்தாம். பசுக்களாகிய ஜீவாத்துமாக்களைப் பாதுகாக்கும் பரமேசுவரன், ஆதியந்தமில்லாதவனும், அளவிடற்கரியவனும், அசலனும், ஆநந்த ஸ்வரூபனும், நின்மலனும், நித்தியனும், ஏகனும், எங்கும் நிறைந்தவனுமாம்.

இனி நான்காவது எழுத்தாகிய வகாரத்தின் பொருளை விசாரிப்பாம்.

வ என்றால் அருள் அதுவே சிவ சக்தி.

" அருளதுசத்தியாகுமரன்றனக்கருளையின்றித்
தெருள்சிவமில்லையந்தச்சிவமின்றிச்சத்தியில்லை
மருளினையருளால்வாட்டிமன்னுயிர்க்களிப்பன்கண்கட்
கிருளினையொளியாலோட்டுமிரவியைப்போலவீசன்."

என்று சிவஞான சித்தியார் கூறியபடி, அருளானது அரன்றனக்குச் சக்தியாகும். அப்படிக்கொடுத்துக்காட்டி அளிப்பதாகிய அந்தக்கருணை இறைவனுக்கு இயற்கைக் குணமென்னும் சக்தியாம். அருளையின்றித்தெருள் சிவமில்லை, அந்தச்சிவமின்றிச் சக்தியில்லை, அவ்வருள் குணத்தையின்றி குணியாகிய தெருள்சிவமில்லை. அச்சிவத்தையின்றி அருள் நிற்றல் இல்லை. ஆகவே கண்களுக்கு இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப்போல ஜீவாத்துமாக்களின் மலமயக்கத்தினைத் தனது அருளால் நீக்கி அநுக்கிரகம் செய்வான் என்பதாம். இதனால் அருளானது ஆநந்த ஸ்வரூபனுக்கு இயற்கை அணிகலமாயிருக்கிறது.

இனி பஞ்சாக்ஷரத்தின் ஐந்தாம் எழுத்தாகிய யகாரத்தின் பொருளை விசாரிப்பாம்.

யகாரம், ஆன்மா அல்லது ஜீவாத்மாவாம். இதுவே பசு அதாவது பச் + உ = பசு; (பச்) பந்தித்தல், (உ) செயப்படுபொருள் விகுதி; ஆகவே பாசபந்தம் பெற்றிருத்தலால் பசு என்று சொல்லப்படுகிறது.

" ஆன்மாவின்வடிவுதானேயகோர்தங்கூட்டமென்னிற்
பார்ப்பார்கட்கான்மாவின்றுய்ப்பலபொருளுண்மையாகும் "
" கருவியாமனமும் புத்தி யகங்காரஞ் சித்தநான்கும் [என்றும்,
மருவியான்மாவேயென்னவருந்தீபமெனத்தெரிந்து " என்றும்,

சிவஞானசித்தியார் சொல்லியிருக்கிறபடி ஆன்மாக்கள் அநாதியாய், அழியாதவராய், இலக்கத்தினால் அளவு படுத்தற்கரியதாய், அஞ்ஞானமாகிய ஆணவ மலத்தினால் மறைப்புண்டுகிடந்து தத்தமக்குண்டான புண்ணியபாவங்களுக்கீடான ஒருடல்களைப்பரமேசுவரனுடைய காருண்யத்தினால் பொருந்தி அவன், அவள், அதுவாகிய உடம்பென்னத்தானென்னத்தோன்றாமல் பிரிவற்று நின்று அவ்வுடம்போடு கூடுகையில் கணக்கற்ற போகங்களை முயற்சியால்புசித்து, அந்தந்தப் புசிப்பாலுண்டாகிய இதாஹிதங்களினால் மறுபடியும் புண்ணிய பாவங்களைச் சம்பாதித்துக்கொண்டும் அவற்றால் இறந்தும் பிறந்தும் வருபவர்களேயாம். இவ்வான்மாக்களில் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர், என மூவகைப்பட்டிருப்பர். அதாவது விஞ்ஞானமென்னும் பிரபோதத்தால் கட்டுப்பட்டிருக்கிறபடியால் விஞ்ஞானகலரென்றும், பிரளயத்தில் மாயாதத்துவத்தில் கட்டுப்பட்டிருக்கிறபடியால் பிரளயாகலரென்றும், கலாதிகளினால் முற்றும் கட்டுப்படுகிறபடியால் சகலரென்றும் சொல்லப்பட்டனர். இத்தியாதி பொருள்களினால் பஞ்சாக்ஷரம் என்பது ஐந்து பதார்த்தங்களாகியும், அவ்வைந்து பதார்த்தங்களினால் பஞ்சமலங்களைப் பொருந்தி அலையும் ஜீவாத்துமாக்கள் பரமேசுவரனுடைய கிருபா ஒளியினால் இருள் நீங்கி அருள் பெற்று அப்பரமேசுவரனிடம் ஆநந்தமடையும் என்பதாம். இதனால் பஞ்சாக்ஷரமானது பாரமார்த்திக மோக்ஷசாதனத்திற்கு மூலமாயிருப்பது பிரத்தியக்ஷம். இப்படி இம்மந்திரம் கேவலம் மோக்ஷசாதனத்துக்கு இன்றியமையாததாயிருக்கினும், சிலர் தம்பனம், மோகனம், வசியம், உச்சாடனம், மாரண முதலான அஷ்டகரும வித்தைகளில் உபயோகித்து அபீஷ்ட சித்திகளை யனுபவிப்பது அனுபவப்பிரத்யக்ஷம். அன்றியும்,

" நமஃபதம்தத்துவஜீவவாசி, சிவஃபதம்தத்பரமாத்மவாசி
ஆயேதிதாதாத்ம்யமிதம்பிரசித்தம், நமசிவாயேதிஜகாதமந்திரஃ

என்றுதிவாக்கியங்களின்படி நம + ஶிவ + ஆய என்று பதங்களாகப் பிரித்து நம = ஜீவாத்மா எனவும், ஶிவ = பரமாத்துமா எனவும், ஆய = ஐக்யம் அதாவது பரமாத்மாவிடம், ஜீவாத்மாவை ஐக்யப்படுத்தும் மந்திரமென மூன்று பதார்த்தங்களாகவும் சொல்லலாம். மேலும் நமஶிவாய என்னும் பஞ்சாக்ஷரத்தினுள் திரோதமாகிய நகாரமும், அருளாகியவகாரமும், சிவாக்ஷரமாகிய சிகாரத்திலடங்கச் சிகாரம் பதியாகவும், யகாரம் பசுவாகவும், மகாரம் பாசமாகவும் நின்று பதீ + பசு + பாசம் என திரிபதார்த்தங்களாகவே விளங்கும். அன்றியும்,—

" அஞ்செழுத்தினிலொருபுடை பதியெனவமரும்
வஞ்செழுத்துளவொருபுடை பாசமாய்வதியுந்
துஞ்சலின்றியே யொருபுடைபசுவெனத்துலங்கு
மஞ்செழுத்தினின் மும்முதலறிந்தவர்பிறவார்"

என்றுதி வாக்கியங்களின்படி திரோதான சக்தியானது முக்தி தசையில் அருளாக விளங்குவதாயினும், பெத்த தசையில் பாசமென்னும்படி நிற்றலால் அதனையும் பாசத்தின்பாற்பட வைத்து, நகார மகாரங்கள் பாசமாகவும், சிகார வகாரங்கள் பதியாகவும், யகாரம் ஜீவாத்மாவாகவும் சொல்லினும் பொருந்தும்.

இப்பஞ்சாக்ஷரம் இத்தன்மைப் பொருளியல்பையுடையதாதலால்—

" அஞ்செழுத்தாலைந்து பூதம்படைத்தன
னஞ்செழுத்தாற்பலயோனிபடைத்தன
னஞ்செழுத்தாகிய வக்கிரசக்கிர
மஞ்செழுத்துள்ளே யமர்ந்திருந்தானே."

" ஐந்துபூதமைம்பொறிகளோடைம்புலனயர்ந்த
வைந்தெனுங்கருமேந்தியமவர்காரணரா
மைந்தெனுந்தொழிலைம்பெரும்பிரமங்களனைத்து
மைந்தெழுத்தினிலுணர்ந்துவரறிவறிந்தவரே."

என்றுறி தமிழ் வாக்கியங்களிற் சொல்லியபடி,

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வா | ய என்ற ஐந்து எழுத்துக்களும் முறை [யே |
| பிருதிவி | அப்பு | தேயு | வாயு | ஆகாயம் என்னும் 5-பூதங்கள் |
| சுரோத்ரம் | துவக்கு | சட்சு | சிங்குவை | ஆக்கிராணம், 5 ஞானேந்திரியங்கள் |
| வாக்கு | பாதம் | பாணி | பாயுரு | உபஸ்தம், 5 கன்மேந்திரியங்கள் |
| சத்தம் | பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம், 5 தன் மாத்திரைகள் |
| நிவர்த்தி | பிரதிஷ்டை | வித்தை | சாந்தி | சாந்தியதீதை, 5 கலைகள் |
| கன்மசா தாக்கியம் | கர்த்ருசா தாக்கியம் | மூர்த்திசா தாக்கியம் | அமூர்த்தி | சிவசாதாக்கியம், 5 சாதாக்கியங்கள் |
| கிரியாசக்தி | ஞானசக்தி | இச்சாசக்தி | ஆதிசக்தி | பராசக்தி, 5 சக்திகள் |
| சத்தியோ சாதம் | வாமதேவம் | அகோரம் | தற்புருஷம் | ஈசானம், 5 பிரமங்கள் |
| பிரமா | விஷ்ணு | உருத்திரன் | மகேசுரன் | சதாசிவன், 5 கர்த்தர்கள் |
| சிருஷ்டி | ஸ்திதி | சங்காரம் | திரோபவம் | அநுக்ரஹம், 5 கிருத்தியங்கள் |
| அகாரம் | உகாரம் | மகாரம் | விந்து | நாதம், 5 வர்ணங்கள் |
| வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில், 5 பக்ஷிகள் |

ஆகிய இவைகளை தம்முள் அந்தர்ப்பாவமாய்க்குறிப்பித்து விளக்கிக்கொண்டு சத்தார்த்த பிரபஞ்சங்களுக்கெல்லாம் பிரேரக நிலயாதாரமாகவிருக்கிறது.

இந்த பஞ்சாக்ஷர மந்திரம் ஜடமாயும், அநித்திய மாயும் இருத்தலால், இவ்வநித்திய ஜட பதார்த்தமாகிய மந்திரம் நித்திய சித்பதார்த்தமாகிய ஜீவாத்துமாவை எப்படி இரக்ஷிக்கும் எனில், இம்மந்திரம் ஜீவாத்துமா அநுக்கிரஹ நிமித்தம் பல வேறு வகைப்பட்ட அக்ஷர சமூஹங்களினால் நாதரூபமாய் உண்டாக்கப்படுகின்றமை யாலும், அந்நாதரூப அக்ஷரங்கள் எல்லாம் சிவசத்தியா காரமென்று கேட்கப்படுகின்றமையாலும், அவ்வக்ஷர ரூபிணியாகிய சிவசக்தியே இம்மந்திரத்தையும் அதிட்டித்து நின்று பலன்கொடுத்து ஜீவாத்மாக்களை ஆதரித்து பக்திநெறியில் செலுத்துமாகையால், இம்மந்திரத்தை வாசக மந்திரமென்றும், வாச்சிய மந்திரமென்றும், இரண்டுவகையாக பெரியோர் வகுத்திருக்கின்றனர்.

இவ்விரண்டில், ஜீவாத்துமாக்கள் உச்சரிக்கும்படி பலவகை அக்ஷரங்களாகும் நாதாகாரமாகிய வாக்கியமே வாசக மந்திரமென்னப்படும். அம்மந்திரத்தில் அதிஷ்டானமாய் நின்று சாதகனுக்கு பலன் கொடுக்கும் அருள் சக்தியே வாச்சியமந்திரமெனப்படும். எப்படியெனில், வாசகமந்திரம் கரியைப்போலவும், வாச்சியமந்திரம் அக்கினியைப் போலவுமாம். கரியை அக்கினியில்போட்டு ஊதலூத அக்கினியானது அக்கரியின்கண் மேன்மேலு மூண்டு பிரகாசித்தல்போல, ஜீவாத்துமா வாசகமந்திரத்துக்கொப்பாகிய கரியை அறிவு தருத்தியினால் இடைவிடாமல் ஊதலூத வாச்சிய மந்திரத்தைப்போன்ற அருள் சக்தி என்னும் அக்னி இம்மந்திரக்கரியினிடம் தோன்றி அநுக்கிரகம் செய்யும். இங்க, இப்பஞ்சாக்ஷரம் சாதக அதிகாரிகளின் பக்குவ தராதரத்தின்படி சோபான கிரமத்தில்முறையே ஸ்தூல, சூக்ஷ்ம, காரண, மஹாகாரண, முத்தி என்னும் ஐந்து வகையாக பெரியோர் வகுத்திருக்கின்றனர். அவைகளில்,

1. ஸ்தூல பஞ்சாக்ஷரம் என்றால் ஆத்ம எழுத்தாகிய யகாரத்தை இறுதியிலும், நகாரத்தை முதலிலும் அதாவது ந, ம, சி, வா, ய என்று ஜபிப்பதாம்.

2. சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமென்றால் ந, ம, இறுதியிலும், சி, வ, முதலிலும், ய இடையிலும் சிவாயநம என்று ஜபிப்பதாம். இந்த சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தின் அநுபவ இலக்ஷணம் என்னவெனில், முன்சொன்ன ஸ்தூல பஞ்சாக்ஷரத்தை நகரமுதலாக உச்சரித்து நிற்கும்போது, ந என்னும் திரோதையானது இன்மைப் பொருளைத்தருதாய்த் தானும் தன்னால் சேட்டிக்கப்படும் ஆணவமும், ஆணவ சக்தியை இழப்பிக்கும் சிவமும், சிவத்துக்கு அங்கமாய் நிற்கும் அருளும், அங்கு மயங்கி நிற்கும் ஜீவாத்துமாவும், ஆகிய பாகுபாடுகளெல்லாம் அறவே சூன்யம் பண்ணுதலால் யாவும் இல்லையென்னும் படி நின்ற ஸ்திதியைப்பார்த்தபிறகு, ஆன்மோபாதியாகிய ஆணவத்தையும், சிவோபாதியாகிய திரோதையையும், உணர்ந்து முன்னர் கீழாகி நின்ற அருளும் சிவமும் மேற்பட்டு திரோதையும் மலமும் கீழ்ப்பட ஜீவாத்துமாவாகிய யகாரம் அருளினிடமாகச் சேர்ந்து மத்தியில் விளங்கிக் கொண்டிருப்பதேயாம்.

இதில் சிகாரமாகிய சிவம் ஆநந்தமும், அவ்வாநந்தத்தைக் கொடுப்பது வகாரமாகிய அருளும், அவ்வாநந்தத்தை சதா அனுபவிப்பது யகாரமாகிய ஜீவாத்துமாவும், அவ்வாநந்தானுபவத்துக்கு சஹகாரியாக இருப்பது நகாரமாகிய திரோதையும், அவ்வானந்தானுபவம் வளர்தற்கு தான் கெட்டு இடங்கொடுத்து நிற்பது மகாரமாகிய ஆணவமலமுமாம். அன்றியும் இந்த சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமாகிய சி - வா - ய - ந - ம என்னும் ஐந்தெழுத்துக்களுக்குள் சிகாரம் சூரியனைப்போலவும், வகாரம்

சூரியனொளியைப்போன்றும், யகாரம் கண்ணொளியைப் போன்றும், நகாரம் விளக்கொளியைப்போன்றும், மகாரம் அந்தகாரத்தைப் போன்றுமிருக்கிறது. சூரியப்பிரகாசமில்லாமையால் கண்ணொளி கொஞ்சமும் விளங்காமல் சகலமும் இருட்டாகத் தோன்றும்; சிறிய விளக்கொளி இராக்காலத்தில் கண்ணொளியைக் கொஞ்சம் விளக்கிக் கொண்டிருந்து சூரியோதயமாதலும் அந்த சூரியப் பிரகாசத்தில் லயமாகிக் கலந்துபோய் நிற்க, கண்ணொளியானது சூரியப் பிரகாசத்தில் விளக்கமடைந்திருக்கிறதைப் போல யகாரமாகிய ஜீவாத்துமாவானது மகாரமாகிய ஆணவத்தினால் மறைப்புண்டு பெத்தநிலையில் நிற்குங்கால், நகாரமாகிய விளக்கொளியானது அதைச் சற்று விளங்கச்செய்து போகம் அனுபவித்து, சிகாரமாகிய சிவோதயமாதலும் வகாரமாகிய அருளிற்கலந்து அதுவேயாகியிருக்க யகாரமாகிய ஜீவாத்துமா மகாரமாகிய ஆணவசக்தியைத்தனக்குள்ளே யடக்கிக்கொண்டு, வகாரமாகிய அருள் சந்நிதியை யடைந்து அருளும் சிவமும் ஆத்மாவுமாகிய வகாரம், சிகாரம், யகாரம் என்னும் மூன்று மாத்திரமே பிரகாசிக்கும்.

இனி காரண பஞ்சாக்ஷரமென்றால்.—

“பஞ்சாக்ஷர ஸமாலோக்ய த்ரயாக்ஷர ஸமந்விதம்,
யகாராதி நகாரம்வா வகாரேதி மகாரகௌ.”

என்றுதி வாக்கியங்களின்படி சி, வ, என்னும் எழுத்துக்களை எதிர் நிரைநிரையாக நிறுத்தி, யகாரத்தை நடுவில் நிற்கும்படி தொடுப்பதாம். எப்படியெனில் “விகடகவி” என்னும் பதத்தைப்போல ட நிற்குமிடத்தில் யகாரத்தையும், க நிற்குமிடத்தில் வகாரத்தையும், வி நிற்குமிடத்தில் சிகாரத்தையும் நிற்கும்படி செய்தலாம்.—அதாவது,

## சிவயவசி என்பதாம்.

இதை அதிசூக்ஷ்ம பஞ்சாக்ஷரமென்னலாம.

மஹாகாரண பஞ்சாக்ஷரமென்றால்—காரண பஞ்சாக்ஷரமாகிய சிகார, வகார, யகாரங்களுக்குள்ளே, யகாரமாகிய ஜீவாத்துமாவானது — சிகாரமாகிய சிவத்தினால், வகாரமாகிய அருளில் லயமாகி நிற்க, அருளும், சிவமுமாகிய வகார, சிகாரம் என்னும் இரண்டு மாத்திரமாய் விளங்குவதாம். அதாவது: "வஶீ சர்வஸ்ய லோகஸ்ய" என சுவேதாச்வதரத்திலும், "வஶ: சர்வஸ்யசாந:" என பிருகதாரணியத்திலும், "ஏகோவசி ஸர்வ பூதாந்தராதம்" என கடவல்லியிலும் சொல்லியிருப்பதுபோலவும்,

"வாசியருளியதை வாழ்விக்குமற்றதுவே
யாசிலுருவுமாங்கு"—என திருவருட்பயனிலும்,
"வாசிவாவென்று வாசியைவைத்து
வாசியோடொன்ற வகையறிவாரிலை
வாசியோடொன்ற வகையறிவார்க்கு
வாசியோடீசன் மகிழ்ந்திருந்தானே."

என்றுதி வாக்கியங்களின்படி வடமொழி சுருதியிலே இறுதிநீண்டு = வசீ எனவும், தமிழ் சுருதியிலே முதல் நீண்டு = வாசி எனவும் ஓசை பயப்பித்து விளங்கும்.

இம்மஹாகாரண பஞ்சாக்ஷரமாகிய "வசி" என்னும் துரியமந்திரம் வர்ண விபர்யயமுற்று ஆண், பெண், அலி என்னும் முப்பால் பொருளும் பெறும்படி அதீதமாகநின்ற பரபிரம்மத்திற்கு யோக விசேஷ நாமமாக அமைந்து "சிவ" என விளங்கி நிற்பதாம்.

முக்தி பஞ்சாக்ஷரமென்றால்—முன்சொன்ன மஹாகாரண பஞ்சாட்சரமாகிய சிகார வகாரங்கள் இரண்டினுள் வகாரமாகிய அருளையும் தன்னிடம் வயப்படுமாறு

அடக்கிக்கொண்டு சிகாரமாகிய பதி எழுத்து மாத்திர மாய் தனிப்பட நின்று பிரகாசிப்பதாம்.

"நாயோட்டுமந்திர நான்மறைவேத
நாயோட்டுமந்திர நாதனிருப்பிட
நாயோட்டுமந்திர நாதாந்தசோதி
நாயோட்டுமந்திர நாமறியோமே."

என்ற திருமூல நாயனார் கவியின்படி இதன் பிரபாவத்தை சிவஞானிகளே அறியக்கூடியதாயும், சாதாரணர் அறிவது கஷ்டமானபடியாலும் இதையே, பெருவெழுத்து, பிரம்மபீஜம், நாயோட்டு மந்திரம் என்ற பல பெயர்களால் பெரியோர் புகழ்வர்.

"பஞ்சாக்ஷரத்ரயம்குர்யாத் த்ரயக்ஷரத்வயம்ததா
த்வயேயகாக்ஷரம்யாந்தி ப்ரஹ்மபீஜந்துஞ்ஞாதர்" என்கிற
"நகரமொடுமகரமது சடந்தருங்காரணமா [படியும்
நாடுமவைநீங்கியிடு வகையைநவிலுதுங்கேள்
வகரமதினகரமுதல் யகரத்திற்றுனே
மகரமுநீங்கிமெரிய சிகரமதுதன்னால்
யகரலயம்வகரமுந்தான் சிகரத்திலொடுக்
மாகுமிறைநீங்கவுயிர் முத்திபெய்துமன்றே"

என்றுதி வாக்கியங்களின்படி சுரோத்ராதி ஞானேந்திரியம் ஐந்தனுள் மற்ற நான்கிந்திரியங்கள் சட்சுரேந்திரியத்தில் அடங்குவதைப்போல நமசிவாய என்னும் ஐந்தனுள் நான்கக்ஷரங்கள் சிகாரமாகிய சிவத்திலொடுங்கி இருத்தலாம்.

இதுவரையில் காட்டிய ஸ்தூல, சூக்ஷ்ம, காரண, மஹாகாரண, முக்தி என்னும் ஐந்தில், ஸ்தூலத்தில் ஸ்தூலம், ஸ்தூலத்தில் சூட்சுமம், ஸ்தூலத்தில் காரணம், ஸ்தூலத்தில் மஹா காரணம், ஸ்தூலத்தில் முக்தி என்று பாகுபாட்டால் தனித்தனியே பதினைந்து வகையாக

கணிக்கப்பட்டு போக யோக சாதன பிரயோகத்தில் ஒவ்வொன்றும் பலவகைப்பட்டு விரிந்து விளங்கும். அவைகளை அனுபவசாலிகளான ஆசாரியர்களால் அறிந்து ஆநந்தமுய்யவேண்டும். இப்பஞ்சாக்ஷரம் இத்துணைச் சிறப்பைப்பெற்றிருத்தலால்,

மும்மறையுணமேறையின் முனிவிலெழுகாண்டத்துட்
செம்மைதருநடுகாண்டஞ் சேர்ந்தவெழுசங்கிதையி
லம்மநடுசங்கிதையி னுதியிரெழுதித்துநடும்
பொம்மலுறவுயர்மனுவின் பொருளாவனெவன்மைந்த.

என்ற்ருதி வாக்கியங்களின்படி யஜுர் வேதத்தைச்சார்ந்த ஏழு காண்டங்களும் சிறந்தவை, அவற்றிலும் சிறந்த நான்காவதாகிய நடுகாண்டத்தில் ஏழு சம்ஹிதைகளும், அவ்வேழு சம்ஹிதைகளில் நான்காவதாகிய நடு சம்ஹிதையின் நடுவில் ஸ்ரீருத்திராத்யாயமென்னும் சதருத்ரிய மந்திரத்தின் மத்தியில் நாயகத்தன்மையுடையதாய், 'நமசிவாய' என்னும் சிவபஞ்சாக்ஷரம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறதன்றியில்,

" வித்யாசுஸ்ருதிருத்க்ருஷ்டா ருத்ரைகாதசிகீஸ்ருதெள
த்ரயபஞ்சாக்ஷரீதஸ்யாம் சிவஇத்யக்ஷரத்வயம்."

என்ற்ருதி வாக்கியங்களினால், வித்தைகளிலெல்லாம் சுருதி சிரேஷ்டமென்றும், அதனுள் ருத்ரைகாதசனியே சிரேஷ்டமென்றும், அதனுள் பஞ்சாக்ஷரமே சிரேஷ்டமென்றும், அதனிலும் சிவ என்ற இரண்டக்ஷரங்களே சிரேஷ்டமென்றும் சொல்லப்பட்டிருக்கிறதன்றியில் ஆத்ம தத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் என்னும் மூன்றுவித பாகுபாடுடைய பிருதிவியாதி முப்பத்தாறு தத்துவங்களுக்குள் கடைசியாக நிற்பது சிவதத்துவமாகையாலும் இந்தச் சிவதத்துவத்திற்கு மேற்பட்ட தத்துவங்களில்லையாகையாலும் " அபிவா யச் சண்டாள

சிவ இதிவா சம்வதேத், தேநஸஹ ஸம்வதேத், தேநஸஹ ஸம்வஸேத், தேனஸஹபும்ஜீத்," முண்டகோபநிஷத்தில் சொல்லுவதாக ஸ்ரீநீலகண்டர் பாஷ்யத்தின்படி கொடிய சண்டாளனாயினும், சிவ நாமத்தை உச்சரித்தால் அவனுடன் பேசுக, அவனுடன் வசிக்க, அவனுடனிருந்துண்ணுக, என்று சொல்லியிருப்பதைப்போலவே,

"சிவ சிவ வென்கிலர் தீவினையாளர்
சிவ சிவ வென்றிடத் தீவினை மாறும்
சிவ சிவ வென்றிடத் தேவருமாவர்
சிவ சிவ வென்னச் சிவகதிதானே."

என்று திருமந்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

மூன்றாவது—ஷடாக்ஷரி மென்றால் முன் சொன்ன பஞ்சாக்ஷரத்திற்கு முன் ஓம் என்னும் ஓங்காரத்தைச் சேர்க்கில் ஷடாக்ஷரமாகும்—அதாவது.

ஓம் நம: சிவாய சிதம்.

அதாவது

"ஓங்காரம் பிந்துசம்யுக்தம் நித்யம்த்யாயந்தியோகிநாம்;
காமதம் மோக்ஷதம்சைவ ஓங்காராய நமோநம: "

என்று சொல்லியிருப்பதால் ஓங்கார அக்ஷரத்தைத் திருவாசியாகக்கொண்டும், அதனுள் சூக்ஷ்மாகாரமாக இருக்கும் ந கார, ம கார, சி கார, வ கார, ய காரமாகிய பஞ்சாக்ஷரத்தை அகத்துறுப்பாகக்கொண்டும், ஞானைக்ய பராசக்தியினால் அதிகப்பட்டு சுத்தமாயாமய சிற்சபையில் பஞ்சகிருத்யங்களை நடத்தி ஆன்மகோடிகளை ஆதரித்து வருகிற பரமேசுவரனை நமஸ்கரிக்கிறேன் என்பதாம். ஆகவே இது பிராணாதார ஞானாதார மந்திரமாக இருக்

கூறுவதனபது பிரத்யக்ஷமாம் இநத சடாக்ஷரம் இப்படி சகலவிதங்களிலும் சிறந்த தாகையால் இந்நாட்டு தேலுங்கு, கன்னடம், மஹாராஷ்டிரம், வங்காளி, குஜராத்தி முதலான பாஷைகளைக் கற்போர் முதலில் ஓம் + நமசிவாயம் + சித்தம் என்று ஆரம்பித்து அக்ஷராப்யாசம் செய்வது பிரத்யக்ஷம்.

---

இனி நான்காவதாகிய நமோ நாராயணாய
என்னும்

## அஷ்டாக்ஷர மஹத்வமாவது

---

அஷ்டாக்ஷரம் என்பது வைணவர்களால் பெரிய திருமந்திரம் என்னும் பெயரால் உபதேச மூலியமாக அநுசந்திக்கும் "ஓம் நமோ நாராயணாய" என்பதாம். இது (ஓமித்யேகாக்ஷரம், நமஇதி த்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இதியஷ்டாக்ஷரம் சந்தஸ்காயத்ரிசேதி."—ஓமித்யக்ரேவ்யாஹரேத், நம இதிபஸ்சாத், நாராயணாயேத் யுபரிஷ்டாத்" என்ருதி வாக்கியங்களின் படியே) எட்டு அக்ஷரங்களாயும், மூன்று பதங்களாயும் பிரகாசிக்கின்றது. இதன் அஷ்டாக்ஷரத்தைச் சொல்லுமிடத்தில் (ஓமித்யேகாக்ஷரம்) ஓங்காரம் (பிரணவம்) ஓரக்ஷரமாகவும், (நமஇதி த்வே அக்ஷரே) நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும், (நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி) நாராயணாய என்னும் பதத்தை பஞ்சாக்ஷரமாகவும் (சுருதிகளில்) சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது,

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம், | ந, | ம:, | நா, | ரா, | ய, | ணா, | ய. |

என்னும் எட்டு (8) அக்ஷரங்களாயும்,

1 2 3
ஓம் + நமோ + நாராயணாய

என்று மூன்று பதங்களாயும், இம்மூன்று பதங்களும்,

ஸேஷத்துவம், பாரதந்த்ரீயம், கைங்கர்யம்

என்னும் மூன்று அர்த்தங்களையும் கொண்டிருக்கின்றன. இப்பதத் திரயத்தில் முதல் பதமாகிய ஓங்காரம் பிரணவமாம். இப்பிரணவத்தின் பெருமையைப்பற்றி வைணவ சித்தாந்திகளின் கருத்தைத் தழுவி இங்கு விவரமாக்குகிறோம்.

## ஓங்காரம் என்னும் பிரணவத்தின் பிரபாவம்.

ஓங்காரமானது சகல சப்தங்களுக்கும், சகல வேதங்களுக்கும், சகல லோகங்களுக்கும், சகல ஸ்தாவர ஜங்கமாதிகளுக்கும் காரணமாயிருத்தலினால்:—

“ஓங்கார ப்ரபவா வேதா:, ஓங்கார ப்ரபவாஸ்வரா:
ஓங்கார ப்ரபவம் ஸர்வம் ஜகத் ஸ்தாவர ஜங்கமம்.
பிரணவாத்யாஸ்ததா வேத: ப்ரணவே பர்யவஸ்திதா:
வாங்மயம் ப்ரணவஸ்ஸர்வம் தஸ்மாத்ர ப்ரணவம்பியஸேத்.
ஸமஸ்த சப்த மூலத்வா தகாரஸ்ய ஸ்வபாவத:
ஸமஸ்த வாச்ய மூலத்வாத் ப்ரஹ்மணோபிஸ்வபாவித.
வாச்ய வாசக சம்பந்தஸ் தயோரார்தாத்ரபதீபதே
நாமரூபம்ச பூதானாம் க்ருத்யானாம்ச ப்ரபாம்சநம்,
வேதஸப்தேப்ய ஏவாதௌ தேவாதீனாம் சகாரச.”

என்ருதிகளினால் இதை சகல வேதசாரமென்றும் சொல்லப்பட்டது.

அதாவது,

மூன்று தாழிகளிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெயைத்திரட்டி எடுத்ததைப்போல, ருக், யஜுர்,

சாமமென்னும் மூன்று வேதங்களிலிருந்து ஓங்காரத்தின் மூன்று எழுத்துக்களை எடுத்து அசம்ஹிதாகாரத்தா (பிரிந்திருக்கையா) லே மூன்று அக்ஷரமாயும், மூன்று பதமாயும், மூன்று அர்த்த பிரகாசமாயும், சம்ஹிதா காரத்தா (சேர்க்கையா)லே ஏகாக்ஷரமாயும், ஏகபதமாயும், ஏகார்த்தமாயும் பிரகாசிக்கின்றது, எப்படியெனில்,

> " பூரிதி ரிச்வேதாதஜாயத புவ இதி யஜுர் வேதாத்
> ஸுவரிதி ஸாமவேதாத் தாநிசுக்ராண்யபியதபத்,
> தேப்யோ பிதப்யஸ்ரயோ வர்ணு அஜாயந்த அகார
> உகார இதி தாநேகதாஸம பரதத்தேத தோமிதி. "

என்னும் வாக்கியங்களினாலும்,

> " அகாரம்சாப் யாகாரம்ச மகாரம்ச ப்ரஜாபதி:
> வேதத்ரயாந்நிரப்ரஹத் பூர் புவஸ் ஸுவரிதீதிச. "

ஶ்ருதி வாக்கியங்களினாலும், வேதத் திரயத்தினின்றும், பூர், புவ: ஸுவ: என்கிற வ்யாஹ்ருதி திரயத்தை தோற்றுவித்தும், அந்த வ்யாஹ்ருதிதிரயத்தையும் பொன் ஓடவைக்குமாபோல தன்னை கல்பத்தாலே ஓடவைத்து, அவற்றில்நின்றும் அகார, உகார, மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களைத் தோன்றப்பண்ணினதாக சுருதி, ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன.

## ஓங்காரத்தின் அர்த்தம்.

ஏகாக்ஷரமாகப் பிரகாசிக்கும் ஓங்காரமானது அகார உகார, மகாரமாகிய மூன்று அக்ஷரங்களாகியது. அதாவது,

அ + உ + ம் ஆகிய இம்மூன்றும் கூடியதாம்.

இதன் முதலக்ஷரமாகிய அகாரத்தின் அருத்தமாவது:—

அகாரத்துக்கு பிரகிருதி சித்தமென்றும், உத்பத்தி சித்தமென்றும் இரண்டு சக்திகளுண்டு. இவ்விரண்டில்

முதலாவது அது வாசகங்களுக்கெல்லாம் காரணமாவத னாலும், வாச்சியங்களுக்கெல்லாம் காரணமாகிய விஷ்ணு வை (வேவேதீஷ்டீதி = விஷ்ணு : என்னும் உத்பத்தியி னல் வியாபக ஸ்வரூபத்தைக் காட்டுவதால்) சர்வேசு வரனை அறிவிப்பதனாலும் பிரகிருதி சித்தமாம்.

இரண்டாவது, அது அவ தாதுவினால் அவரக்ஷ ணே = இரக்ஷிப்பவனென்னும் அர்த்தத்தை அறிவிப்ப தால் உத்பத்தி சித்தமாம். ஆகவே, அகரம் " அகாரோ வை சர்வவாக் சமஸ்த சப்தமூலத்வாதகாரஸ்யபவதா :" " அகர முதல வெழுத்தெல்லாமாதி " என்றுதி வாக்கியங் களினால் சுருதி, ஸ்மிருதி முதலான சகல சப்தங்களுக்கும் காரணமாயும், நாராயண பதத்துக்கு சங்கிரஹமாயும் இருக்கிறபடியால் சகலத்துக்கும் காரணனும், இரக்ஷகனு மாகிய சர்வேசுவரனைச் சொல்லுகின்றது. இரக்ஷிக்கை யென்றால் சேதனர் நிற்கும் அளவுக்கீடாக அவர்களுடைய விரோதியைப்போக்கி, அவர்கள் அபேக்ஷிப்பதைக் கொடுப்பதுவாம். அதாவது,

சேதனர்களில், சம்சாரிகளுக்கு சத்துருக்களால் உண்டாகும் கஷ்டநிஷ்டூர விரோதங்களை நீக்குவதும், அவர்களுக்கு விருப்பமான அன்ன பானாதி சுகபோக்கியங் களைத் தருவதும், சில முமுக்ஷுக்களுக்கு விரோதமாகத் தோன்றும் சம்சார சம்பந்த சங்கடங்களை நீக்குவதும், அவர்கள் விரும்பும் பரமபத பிராப்தியைப் பிரசாதிப்ப தும், முக்தருக்கும் நித்யருக்கும் விரோதமாகத்தோன்றும் கைங்கரிய ஹானியை நீக்குவதும், அவர்கள் விரும்பும் கைங்கர்ய விருத்தியை. பிரசாதிப்பதுமேயாம்; ஆகவே, சர்வேசுவரன் கேவலம் சிருஷ்டிக்குக்காரணமாய் இருப்ப தன்றியில் சேதநரை இரக்ஷிக்கும் கருணையையும் பெற் றிருப்பது ஸ்பஷ்டமாகும். ஆனதுபற்றியே,

"லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யாகாருண்ய ரூபயா, ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தபீசகீயதே" என்ஶ்ருதி வாக்கியங்களினால் சர்வேசுவரன் காருண்யமே ரூபமாக உடையவன் என்றும் ஸ்பஷ்டமாகிறது. அதாவது பிரபாகரனுக்கும் அதன் பிரகாசத்துக்கும், புஷ்பத்துக்கும் அதன் பரிமளத்துக்கும் இருக்கும் சம்பந்தத்தைப்போன்றதெனச் சொல்லலாம். காருண்யமிருக்குமிடத்தை மார்பு அல்லது ஹிருதயமென்று சஹஜ ஞானம் சொல்வதால், வைணவர்கள் அந்த காருண்யத்தையே இலக்ஷ்மி அல்லது பிராட்டி என்று உவமை அலங்காரமாகக்கொண்டு, அகாரவாச்யனை மஹாவிஷ்ணு சிருஷ்டித்த சேதநருடைய குறைவு குற்றங்களை க்ஷமித்து இரக்ஷிக்க அவ்விஷ்ணுவின் காருண்யமாகிய இலக்ஷ்மி அல்லது பிராட்டி வேண்டுமென்பர்.

**உகாரத்தின் அர்த்தம்:—**

ஆனதுபற்றியே இந்த அகாரத்துக்கு அடுத்த எழுத்தாகிய உகாரம் காருண்யத்துக்கு அறிகுறியான ஸ்ரீ லக்ஷ்மியைக் காட்டுவதாக வைணவர்கள் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள்.

இந்த உகாரம் அவ்யய பதமாகவும், அவதாரணார்த்தமானதாகவும் இருப்பதால், "தமேவ பூதம் ததுபவ்யமா இதம்" "ததேவாக்நி ஸ்தத்வாயுஸ்தத ஸூர்யஸ்தத சந்த்ரமா" என்ஶ்ருதி வாக்யங்களில் ஏவகார ஸ்தானத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. இதன் தத்துவார்த்தமென்னவெனில், இந்த உகாரத்துக்கு முன்னிற்கு அகார வாசகனை சர்வேசுவரனுக்கும், அல்லது இந்த உகாரத்திற்குப் பின் நிற்கும் மகார வாசகனை ஜீவாத்மாவுக்கும் இந்த உகார வாசகமாகிய காருண்யம் அல்லது கிருபை மத்தியில் ஒரு மாதாவைப்போலிருந்து இரண்டையும் சம்பந்தப்படுத்துகிறது அல்லது சேர்க்கின்றது என்பதே

யாம். ஆகவே இனி இந்த உகாரத்தின் அடுத்த எழுத்தாகிய மகாரத்தைப்பற்றி பரிசோதிப்போம்.

மகாரத்தின் அருத்தம் :—

மகாரம் 25-ம் அக்ஷரமாயும் அதாவது "பூதானிச கவர்க்கேண சவர்க்கேணேந்திரியாணிச, டவர்க்கேண தவர்க்கேண க்ஞாநகந்தாதயஸ் ததாமந: பகாரேணே வோக்தாம் பகாரேணத் வஹங்க்ருதி: பகாரேண பகாரேண மஹாந்ப்ரக்ருதி ருச்யதே." என்ற சுருதி வாக்கியங்களின்படி பிருதிவியாதி பிரகிருதியந்தமான இருபத்து நான்கு தத்துவங்களுக்கும் வாசகமாயிருக்கும் ககாராதி பகாரந்தமான இருபத்து நான்கு அக்ஷரம்போலல்லாமல் இந்த மகாரம் இருபத்தைந்தாம் எழுத்தாம். மநக்ஞாநே என்னும் தாதுவினாலும், "மனு அவபோதநே" என்னும் தாதுவிலே நிஷ்பன்னமாகையாலே ஞானவாச்யமாகியும் (பஞ்சவிம்சோயபுருஷ:) பர்சவம்ச ஆத்மாபவதி, என்கிறபடி பஞ்சவிம்சகனாகி ("விக்ஞாநாத் மாபுருஷ விக்ஞாதாரமரேகேந விஜாநீயாத்") என்ற சுருதி வாக்கியங்களின்படி ஞான ஸ்வரூபனுமாய், ஞாநாநுகுணனுமாய் இருக்கும் ஜீவாத்மாவைச் சொல்லுகிறது. ஆகவே, அகாரம் சித் ஸ்வரூபனை சர்வேசுவரனுக்கு வாசகமாகவும், உகாரம் சித் ஸ்வரூபையான கிருபை, காருண்யத்திற்கு வாசகமாகவும், மகாரம் தாசனை ஜீவாத்மாவுக்கும் சொல்லப்பட்டபடியால் "அகாரஸ் சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர் வாசக இஷ்யதே, மகாரஸ்து தயோர்த்தாபி இதி பிரணவ லக்ஷணம்" என்று ஓங்காரமென்னும் பிரணவத்தின் லக்ஷணத்தைப்பற்றி சொல்லியிருப்பதையொட்டியே, "அகாரேணேச்யதேவிஷ்ணுஸ் ஸர்வலோகேஸ்வரோஹரி:, உத்தர்தாவிஷ்ணுநாலக்ஷ்மி ருகாரேணோச்யதேசதா; மகாரஸ்துதயோர் விப்ர ஸ்ரீ நாராயணயோஸ்ஸதா, ஆத்மநஸ்சேஷ பூதஸ்ய வாசா

கஸ்ப்ருதிசோதித:" என்று வைணவர்கள் கொண்டா கிறார்கள்.

ந மோ ா = ந ம:

இனி திருமந்திரத்தின் மத்திய பதமாகிய நம: என்பதன் பொருளைச்சற்று விசாரிப்பாம். முன் சொன்ன பிரணவமாகிய ஓங்காரத்தின் கடைசி எழுத்தாகிய 'ம்' என்பது ஜீவாத்மாவைக்குறிப்பதாகத் தெரிவித்தோம். அந்த மகார வாச்யனை ஜீவாத்மா எப்படிப்பட்ட ஸ்திதியிலிருந்தால் சர்வேசுவரனுடைய கிருபைக்குப் பாத்திரமாய் இருக்குமென்பதை இந்த நம: சப்தம் காட்டுகிறது. எப்படியெனில் 'நமஸ்ஸு' 'ந' என்றும் 'ம:' என்றும் இரண்டு பதங்களாய் இருக்கிறது. இவைகளில், சஷ்டியந்தகமான,

ம: என்றால் தனக்குரியன் என்பதாம்.

ந என்றால் அல்லன் என்பதாம்.

ஆகவே நம: என்றால் தனக்குரியவன் அல்லன் என்பதாம்.

அதாவது,

மகாரவாச்யனை ஜீவாத்துமா அஹங்கார மமகாராதிகளால் சுவதந்திரனைப்போல நடிக்கில் சர்வேசுவரனை அனுபவிக்கக்கூடாது; ஆகவே, அந்த ஜீவாத்துமா தனது அஹங்கார மமகாரங்களைக் கழித்தும், தனக்குரியவனல்லேன் என்னும் சுதந்திர சுவரூபத்தைவிட்டும், பரதந்திரியாகியும், சர்வேஸ்வரனுக்கே தாசானுதாசனகி சரணாகதியை யடைந்தால் மாத்திரம் அவனுடைய அருளைப்பெறலாமாகையால், "சேதநஸ்யயதாமம்யம் சவம் பிரஸ்வியேசவஸ்துநீ, மம இத்யக்ஷரத்வந்த்வா ததால் யஸ்யவாசகம்" என்றுதி வாக்கியங்களினால் ஸ்பஷ்டம்

மாகும். மேலும் எப்போது ம: = ஸ்வரூப நாசத்தை யுடைய ஜீவாத்துமா, நம: என்னும் நிஷேதத்தினால் ஸ்வரூப போக ஜீவனத்தைப் பெறுகிறதோ அப்போது தான் அது ஓம் என்னும் பிரணவத்துக்கும், நாராயணாய என்பதற்கும் இடையிலிருக்கும்படியான யோக்கியதை யைப் பெறும் என்பதாம்.

இந்த நம: பதத்துக்கு பதக்கிரமத்தில் பொருள் சொல்லாமல் வியதிரேக கிரமமாகச் சொன்னது நிஷேத் "பத்தைச் சொல்லி நிஷேதித்தல் சிறப்பாம்.

## இனி நாராயண என்னும் பதத்தின் பொருளைப் பரிசோதிப்போம்.

நாராயண பதம் " நாராணாம் அயநம் ய: ஸ: நாரா யண:" என்றும், " நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:" என்றும், தத்புருஷ பஹுவ்ரீஹி ரூப சமாஸத்வய ஸித்த மானபடியினால் நாரங்களுக்கு அயனம் என்பதாம். நாரங்கள் எனில் நசியாத வஸ்துக்கள் அல்லது நித்திய வஸ்துக்களுடைய திரளாம். எப்படியெனில் நாரபதம், நர என்றும், நரா என்றும், நார: என்றுமாய், ரிங்க்ஷயே என்கிற தாதுவினால் ர என்னும் பதமாய், க்ஷயிக்கும் வஸ்துவைச் சொல்லி, நகாரம் அதை நிஷேதித்து நர என்னும் க்ஷயமில்லாத நித்திய வஸ்துவைக்காட்டியும், சமூஹார்த்தத்தில் அண் பிரத்யயமும், ஆதிவ்ருதியுமாய் நார: என்று நித்திய வஸ்து சமூஹத்தைச்சொல்லி நாரா: என்னும் பஹுவசனமாகையால், சமூஹ பாஹுள்யத் தையும் சொல்லுகிறபடியால் நித்திய வஸ்துக்களின் திரள் என்பதாம். இதில் நித்திய என்கையால் நர சப்தார்த்த மும், வஸ்துக்கள் என்கையால் நார சப்தார்த்தமும், அவற்றின் திரள் என்கையாலே பஹுவசன அர்த்தமும் சொல்லப்பட்டிருக்கிறது. இனி நித்திய வஸ்துக்கள்

ளவை எனில், மஹத்தாதி மூலப்பிரக்ருதி யந்தமான 23-தத்துவங்களோடு கூடிய அண்டபிண்டங்களும் ஸ்வரூபமற்றிருக்கும் தேவ மனுஷ்யாதி ஜீவாத்மாக்களையாம்.

## இனி அயநம் என்பதின் பொருளை விசாரிப்போம்.

அயநம் என்றால் (முன் சொன்ன நித்திய வஸ்துக்களுக்கு) ஆச்ரயம் என்றும், அல்லது (நித்திய வஸ்துக்கள் தன்னை சர்வேசுவரனை) ஆச்ரயமாக உடையனவென்றும் பொருள்பட நிற்கிறது.

எப்படியெ.—....ல்,

அயநசபதம் 'ஈயத இத்யயநம்' என்னும் வினையடியாலும், வேயத்வமும் 'ஈயதே நேநேத்யயநம்' என்னும் அநுகரண உத்பத்தியாலு முபேயத்தைக்காட்டுகிறபடியால், அயநசப்தம் ஆச்ரயவாசியாகையாலே இவற்றுக்கு அயநம் என்றது, அல்லது இவை தன்னை (சர்வேசுவரனை) ஆச்ரயமாக உடையன என்பதாம். அதாவது, (1) நாரங்களுக்கு அயநம், (2) நாரங்களை அயநமாக உடையன என்னும் இரண்டுவித பொருள்பட நிற்கிறது. இந்த அயநத்தினால் (1) தன்னை (சர்வேசுவரனை) யொழிந்த சமஸ்த வஸ்துக்களுக்கும் தான் ஆதாரமாக இருக்கிற பரத்வமும், இப்படி விபுவானதால் சகல சேதனாசேதனங்களுக்கும் தன்னைச் சரீரியாக யமைத்துக்கொண்டு அந்தர்யாமியாய் இருப்பவன் என்று கருத்தாம். இந்த அந்தர்யாமித்துவமும் (இண்கதௌ என்ற தாதுவினாலும், அயகதௌ என்ற தாதுவினாலும் ஆகிய) அயநபதத்தில் கரணேவ்யுத்பத்தியினாலும், கர்மணி வ்யுத்பத்தியினாலும் பிரசித்தமான உபாயத்துவமும், உபேயத்வமு

மாகும்; பஹுவ்ரீஹி யோஜனை சொல்லுகிறவிடத்தில் யோக்யதாநுகுணமாக நரா சப்தத்தை குணங்களை யொழிந்த வஸ்துக்களுக்கு வாசகமாகக் கொண்டதைப் போல, தத்புருஷயோஜனையிலும் அயந சப்தத்தை உபா யோபேய வாசியாகக் கொள்ளும்போது யோக்யதாநு குணமாக நரா சப்தத்தை அசேதனங்களை யொழிந்த சேதன வஸ்துக்களுக்கு வாசகமாகக் கொள்ளவேண்டு மாகையால்; "நாரஸ்த்விதிசர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகீர்த் யதே, கதிராலம்பநம்தஸ்ய தேநநாராயண: ஸ்ம்ருத:" என்ற வாக்கியங்களினாலும், "நராஸப்தேந ஜீவாநாம் ஸமூஹப்ரோச்யதே புதை:, தேஷாமய நபூதத்வாந் நாரா யண இஹோச்யதே" என்றுதி வாக்கியங்களால் சொல் லப்பட்டது.

அதாவது

நாரஸ்து என்பதில் துகாரம் அசித்வியா விருத்தி யைச் சொல்லுகிறது. ஆகவே, நாரா: என்னும் ஜீவாத் துமா ஸமூஹம் இந்த நராத்துக்கு சர்வேசுவரன் உபேய மாயும், உபாயமாயும் இருப்பதால் நாராயணன் என்று சொல்லப்பட்டன. என்றால் நாரசப்த வாச்யரான நரர் களுக்கு அயநமானவன் என்று சப்த சக்தியாலே சொல் லப்பட்டிருக்கிறது.

இனி ஆய என்கிற சதுர்த்தி ஆவிஸ்யு என்கிற அத் யார்ஹதமான வினையினால் எல்லாவித அடிமைகளும் அல்லது கைங்கர்யங்களும் செய்ய விரும்புகிறதென்று பொருள்.

## திருமந்திரத்தின் கருத்து.

ஆக இத்திருமந்திரத்தினால் எம்பெருமானுக்கே உரி யேனான நரன், அல்லது எம்பெருமானுக்கே சேஷமான

ஞானை, சாவ்சேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனுகவேண்டும் என்பது கருத்து. அதாவது,

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார கர்த்தனுகவும், சர்வலோகசரண்யனுகவும், சகல ஹிருதயாந்தர்யாமியாகவும், இரக்ஷகனுகவும் பிரகாசிக்கும் மஹா புருஷனுடைய கைங்கர்யத்தையே கருதி நமஸ்கரிக்கின்றேன் என்பதாம்.

ஆனதுபற்றியே ஆரியர் வேதங்களில் (தைத்ரீயம் நாராயண வல்லியில்) 'விஶ்வம் நாராயணம் தேவமக்ஷரம் பரமம் ப்ரபும், விஶ்வத: பரமம் நித்யம் விஶ்வம் நாராயணம் ஹரிம்—விஶ்வமேவேதம் புருஷஸ் தத்விஶ்வமுபஜீவதி, பதிம் விஶ்வஸ்யாத்மேஸ்வர்க சாஶ்வதம் சிவமச்யுதம்—நாராயணம் மஹாக்ஞேயம் விஶ்வாத்மாநம் பராயணம், நாராயண பரப்ரம்ஹ தத்வம் நாராயண: பர:—நாராயண பரோ ஜ்யோதி ராத்மா நாராயண: பர:, யச்ச கிஞ்சித் ஜகத்யஸ்மிந் த்ருஶ்யதே ஶ்ரூயதேபிவா—அந்தர்ப்பஹிச்ச தத்சர்வம் வியாப்ய நாராயணஸ்தித:' என்றும், மஹோபநிஷத்தில், "ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரம்மேஶானோநேமாத்யா வாப்ருதிவீ"—என்றும்; ஜாபாலோபநிஷத்தில், "சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யாம்ச நாராயண:, ஶ்ரோத்ரம்ச ஶ்ரோத்வயம்ச நாராயண:" என்றும், "திசஸ்ச ப்ரதிசஸ்ச நாராயண:" என்றும், "ஏஷ ஸர்வபூதாந்தராத்மா பஹதபாப்மா திவ்யோதேவ ஏகோ நாராயண:" என்றும், "யதா சர்வேஷு நாஸ்தி நாராயணத்பர: ததாஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:" என்றும், 'கிம்தத்ரபஹுபிர்மந்த்ரை: கிம்தத்ரபஹுபிர்வ்ரதை: நமோ நாராயணயேதி மந்த்ர சர்வார்த்த சாதக:' என்றும், வியாச, பராசர, வால்மீக, சுக சவுனக, நாரதாதி மஹரிஷிகளும் ஆதரித்து வந்ததன்றி

யில்; 'வண்புகழ் நாரணன், செல்வநாரணன், வாழ்புகழ் நாரணன்' என்று நம்மாழ்வாரும், 'நாடுநகரமும் நன்கறிய நமோநாராயணாய' என்றும் 'ஓவாதே நமோ நாரணா வென்பன்' எனப்பெரியாழ்வாரும், 'நாத்தழும்பெழ நாரணா, நலந்திகழ் நாரணன்' எனப்பெருமாளும், 'நான்முகனை நாராயணன் படைத்தான்' எனத் திருமழிசையாழ்வாரும், 'நாமம் பல சொல்லி நாராயணா' என்று முதலாழ்வாரும், 'நன்மாலை கொண்டு நமோ நாராயணா' வென்றும், 'சொன்மாலை கற்றேன்', என்றும், 'நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும் நாமம்' என்றும்,

குலந்தருஞ் செல்வந் தந்திடுமடியார் படுந்துய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளு மருளொடு பெருநில மளிக்
வலந்தரு மற்றுந்தந்திடும் பெற்ற தாயினு மாயின செய்யும் [கும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன் நாராய ணாவெ
[ னும் நாமம்

என்றும் திருமங்கையாழ்வார் முதலான மஹான்கள், இந்த திருமந்திரத்தைப்பற்றி புகழ்ந்திருப்பதினால் நாமும் இத்திருமந்திரத்தின் தத்வார்த்தத்தை அறிந்து அநுஷ்டித்தால் இகபர சுகமடையலாம்.

வினா—வைணவர்கள் அதிக இரகஸ்யமானதாகக் கொண்டாடும் த்வயம் என்பதென்னை?

விடை—அது இருபத்தைந்து அக்ஷரமாகவும், அதன் பூர்வவாக்யம் 15-பதினைந்து அக்ஷரமாகவும், உத்திரவாக்யம் 10-அக்ஷரமாகவுமுடையது.

அதாவது,

ஸ்ரீமந் + நாராயண + சரணௌ + சரணம் + ப்ரபத்யே + ஸ்ரீமதே நாராயண ஆய + நம: என்பதாம். இதில்—

(1) ஸ்ரீ = சர்வேசுவரனுடைய அவள் சக்தியின் நித்ய யோகத்தையும்,

(2) மந் = அப்புருஷகார நித்யயோகத்தையும்,

(3) நாராயண = வாத்சல்யாதி கல்யாண குணயோகத்தையும்,

(4) சரணௌ = அக்குணங்களுக்கும் சக்திக்கும் ஆசிரயமான விலக்ஷண யோகத்தையும்,

(5) சரணம் = உபாயமென்னும் விடஞ்சொல்லியும்,

(6) ப்ரபத்யே = உபாயஸ்வீகாரம் பண்ணின அதிகாரியினுடைய அத்யாவசாயம்சொல்லியும்,

(7) ஸ்ரீமதே = மிதுனமே பிராப்ய மென்னுமிடஞ் சொல்லியும்,

(8) நாராயணாய = சர்வேசுவரனுடைய சர்வ ஸ்வாமித்துவத்தை சொல்லியும்,

(9) ஆய = அவன் திருவடிகளில் பண்ணும் விருத்தி சேஷத்தைச் சொல்லியும்,

(10) நம: = அவ்வவ் விருத்தி விரோதியான அகங்கார மமகார நிவிர்த்தியையும் சொல்லுகின்றது.

(இதன் கருத்து.) ஸ்ரீ நாராயணனாகிய பரமாத்மாவின் அடிபணிந்து அவனுடைய சரணாகதிக்கே ஆளானேன் என்பதாம்.

வினா—வைணவர்களின் சர்மசுலோக இரகஸ்யமென்பதென்னை?

விடை—அது முப்பத்திரண்டு அக்ஷரமாய, பதினொரு பதமாய், இரண்டு வாக்கியமாக இருப்பதாம்.

அதாவது பகவத்கீதை 18-வது அத்யாயம 66-வது ச்லோகம்—

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம்வ்ரஜ
அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமாசுச :"
என்பதாம். இதில்

1-வது ஸர்வதர்மாந் = இதரோபாயங்களைச் சொல்லியும்,

2-வது பரித்யஜ்ய = இதரோபாய நிவிர்த்தியைச் சொல்லியும்,

3-வது மாம் = சம்ஸயஞான உபாயத்தைச் சொல்லியும்,

4-வது ஏகம் = உபாய நைரபேக்ஷயைச் சொல்லியும்,

5-வது ஶரணம் = உபாயத்துவத்தைச் சொல்லியும்,

6-வது வ்ரஜ = உபாய ஸ்வீகாரத்தைச்சொல்லியும்,

7-வது அஹம் = தனது சர்வ சக்தியைச் சொல்லியும்,

8-வது த்வம் = உபாய ஸ்வீகாரம் பண்ணின அதிகாரியின் ஸ்வரூபத்தைச் சொல்லியும்,

9-வது ஸர்வபாபேப்ய : = பிராப்ய பிரதிபந்தங்களைச் சொல்லியும்,

10-வது மோக்ஷயிஷ்யாமி = பிராப்ய பிரதிபந்தக நிவிர்த்தியைச் சொல்லியும்,

11-வது மாஶுச : = நிர்பரத்வாநுசந்தானத்தையும் சொல்லுகின்றது.

ஆக இதன் கருத்தென்னவெனில்,

" எல்லா கர்மபலன்களையும் எனக்கு (பரமாத்துமா வுக்கு) அர்ப்பணஞ்செய்து, அந்நிய தேவதைகளைப் பூஜிக்காமல், என்னொருவனையே சரணமடைந்தால் உன்னை எல்லாவித பாவங்களிலிருந்து விமுக்தனுக்குகிறேன், நீ துக்கிக்கவேண்டாம்." என்பதாம்.

வினு—மாத்துவ மதஸ்தர்களுடைய திருமந்திரம் யாது?

விடை—மாத்துவ மதஸ்தர்களுடைய திருமந்திரம்

"பிரசனனஞசநேயம பயபாதிவ்யகாயம்" என்பதாம்.

வினு—சாக்தேயர்களுடைய திருமந்திரம் யாது?

விடை—"பகவதி பாக்யவதி" என்பதேயாம்.

வினு—காணுபத்தியர் திருமந்திரம் யாது?

விடை—"கஜமுகாய அஜமுகாய நம:" என்பதேயாம்.

வினு—கவுமாரர்களுடைய திருமந்திரம் யாது?

விடை—"சரவணபவ ஷண்முகதேவ" என்பதாம்.

இப்படியே இந்நாட்டு பல மதஸ்தர்கள் பரமாத்மாவுக்கு தத்துவ ஞானத்தினுல் தம் மனோரஞ்சிதமான பெயர்களை வைத்து உச்சரித்து வணங்கி வந்தார்கள். இவற்றின் பொருள்களையும் ஏகாக்ஷரம், பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷர இரகசியங்களைப்போல விவரமாக எழுதினுல் கிரந்தம் விரியுமென்றஞ்சி விடுத்தாம்.

வினு—பரமேசுவரனுடைய பல குணகர்மங்களைக் கருதி பல பெயர்களால் புகழ்ந்திருப்பதைக்கேட்க சந்தோஷமே. ஆனுல், வேதங்களில் முப்பத்துமூன்று தேவர்களைப்பற்றி சொல்லி இருப்பதாகவும், அம் முப்பத்து மூன்றிலிருந்தே முப்பத்து முக்கோடி

தேவர்கள் உண்டானதாகவும் சிலர் சொல்லுகிறார்களே, அது நிஜமா ?

விடை—அது நிஜமல்ல, உலகில் சுபகுணமுள்ளவர்களைப் பொன்னுச்சாமி தேவர், பாண்டித்துரை தேவர் என்று பெயரிட்டழைப்பதைப்போலவே, உலக சுகத்திற்காக படைக்கப்பட்டு இருக்கும் சுபகரமானவைகளை தேவர் முதலான பெயர்களால் புகழ்வது சஹஜம். நம் நாட்டு நான்கு வேதங்களை நன்காராய்வோருக்கு அவற்றில் ஒப்பும் உயர்வும் அற்ற தனி ஏக பிரஹ்மத்தையே வணங்கவேண்டுமென்று சொல்லப்பெற்றிருப்பது ஸ்பஷ்டமாகும்.

வினா—அப்படியானால் வேதங்களில் தேவர்கள் என்று பன்மைப்பாலாகச் சொல்லி இருப்பதின் கருத்தென்னை ?

விடை—" த்ரயஸ்திரம் சத்சரிதா " என்னும் பிரமாணம் வேதத்திலிருக்கிறது. அதற்கு வியாக்யானமாகிய சதபதம் பதினான்காவது காண்டத்தில் " பிருதுவி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், சந்திரன், சூரியன், நக்ஷத்திரங்கள் சகல சிருஷ்டிகளுக்கும் நிவாசஸ்தானங்களானபடியால், அவைகளை அஷ்டவசுக்களாகவும், பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் முதலான பத்து பிராணன்களும், பதினோராவதாகிய ஜீவாத்துமாவும் ருத்திரர்களாகவும், எல்லாருடைய ஆயுளை கிரமேண குறைத்துக்கொண்டுபோகும் பன்னிரண்டு மாதங்களை ஆதித்யர்களாகவும், ஐஸ்வர்யத்திற்கு ஹேதுவாக மழையைப் பொழிவிக்கும் மின்னலை இந்திரனாகவும், காற்று, ஜலம், அவிழ்தங்களை சுத்தியாக்கி யாக யக்

ஞங்களுக்கு உதவியாகி பிரஜைகளுடைய படிப்பு முதலானவைகளுக்கு உதவியாகிறதை பிரஜாபதியாகவும் இருக்கும் இந்த முப்பத்துமூன்றும் மானவஜாதியாருக்கு இன்றியமையாத சுபகரங்களாக இருப்பதால், அவைகளை முப்பத்துமூன்று தேவர்கள் என்று வர்ணித்தும், இம்முப்பத்து மூன்றுக்கு மேலானதும் பூரணமும் சுதந்திரமுமானதான பரமேசுவரனை முப்பத்து நான்காவதாக வர்ணிக்கப் பெற்றிருக்கின்றது. வேதங்களில் இப்படி அலங்காரமாக வர்ணிக்கப்பட்டிருக்கும் விஷயத்தை அறிந்துகொள்ள சக்தியற்ற சாதாரண ஜனங்கள் வேதங்களில் சொல்லப்பட்ட மேற்படி முப்பத்து மூன்றையும் தேவர்களாகக்கொண்டும், பிறகு அவர்களை முப்பத்துமுக்கோடி தேவர்களாகவர்ணித்தும்; வணங்கத் தலைப்பட்டதன்றியில் "கலியாண சந்தடியில் தாலிகட்ட மறந்துவிட்டதைப்போல" மேற்கண்ட முப்பத்து மூன்றுக்கும் சிருஷ்டிகனும், கர்த்தனும், பூரணனும், சுதந்திரனும், பல்லண்டங்களை பரமாணுக்களிலும் கேவலமாகக்கொண்டு அந்தரத்தில் ஆடச்செய்பவனும், அடியாருடைய வணக்கத்துக்கு ஏற்றவனும், அவ்வணக்கத்திற்கேற்ற பரமசுகத்தைக் கொடுப்பவனுமாகிய பரமபுருஷனை மறந்துவிட்டார்கள். ஆனதுபற்றியே வேதங்களிற் சிறந்த

*ரிக்வேதம், மம் 1-ஸூ 164-மம் 33-ல்.*

"ருசோ அக்ஷரே பரமேவ்யோமந் யஸ்மிந்
தேவா அதிவிச்வே நிஷேது :"
"யஸ்தந்நவேதகி மிருசாகரிஷ்யதீய
இத்தத்விதுஸ்த இமேஸமாஸதே"

" எவன் திவ்ய குணகர்ம ஸ்வபாவ வித்யாயுக்தனோ, எவனிடம் பிருதுவி, சூரியாதி லோகங்கள் தாங்கப் பெற்றிருக்கின்றனவோ, எவன் ஆகாயத்தைப்போல வியாபகனாகியும், சகல தேவர்களுக்கும் தேவனாகி இருக்கிறானோ, அவனை எவன் அறியானோ, நம்பமாட்டானோ, தியானிக்கானோ, அப்படிப்பட்ட நாஸ்திகனும் மந்தமதியும் சதா துக்க சாகரத்தில் மூழ்கி இருப்பான்; ஆகவே, மானவஜாதியார் சதா அவனை அறிந்து சுகங்களை அநுபவிப்பார்களாக" என்று சொல்லப் பெற்றிருப்பதால், எவன் தேவர்களுக்கெல்லாம் தேவனாகி, ஒப்பும் உயர்வு மற்ற தனி ஏக பரமாத்துமாவாகி இருக்கிறானோ அவன் ஒருவனையே வணங்கவேண்டும் என்பது ஸ்பஷ்டமாகிறது. மேலும் சாஸ்திரங்களில் மக்கள் தேவர், நரகர் முதலானவர்கள் யோனித்துவாரா பிறந்தவர்கள் என்று சொல்லி இருப்பதால், இப்படி ஒருவரால் பிறப்பிக்கப் பட்டவர்கள் உண்மையான தேவர்களல்லவே; ஆகவே, வேதங்களில் தேவர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் கேவலம் சுபகரமான பொருள்களேயாம்.

வினா—ஆரியர் வேதங்களில் பிரஹ்ம இலக்ஷணத்தைப் பற்றி இவ்வளவு சிறப்பாகச்சொல்லப்பெற்றிருக்க, கிறிஸ்து முதலான சில மதஸ்தர்கள் இந்நாட்டாரை அக்ஞானிகளென்றும், விக்ரகாராதனை விண்பக்திவிசுவாசிகளென்றும் சொல்லி ஏளனம் செய்யவேண்டியதென்ன ?

விடை—ஆரியர் வேதங்களில் பிரஹ்ம இலக்ஷணத்தைப் பற்றிச் சொல்லியிருக்கும் கருத்தை யறியாதவர்களும், கல்வி ஞானமில்லாதவர்களும், வேதங்களிற் பிரதி பாதிக்கும் ஏக பரமாத்துமாவை சிருஷ்டி விஷயத்தில் பிரம்மனாகவும், இரக்ஷிக்கும் விஷயத்

தில் விஷ்ணுவாகவும், சம்ஹார விஷயத்தில் ருத்ர ளுகவும் வர்ணித்திருப்பதை யறியாமல், அப்பரனை மும்மூர்த்திகளாக்கி, அவர்களுக்கு மநுஷர்களுக் கிருக்கிறபடி மனைவி மக்களையும் சுகதுக்கங்களையும் கற்பித்தும் கோயில் கோபுரங்களைக்கட்டி பூஜை, வணக்கம், உற்சவாதிகளை நியமித்தும், வேடிக்கை களைச் செய்வித்தும் வருவதுடன்; சிலர் என் தெய் வம் பெரிது, உன் தெய்வம் சிறிது என்று சண்டை சச்சரவுகளைச்செய்து மண்டைகளை உடைத்துக் கொண்டு கோர்ட்டு கச்சேரிகளுக்கேகி விவகாரம் செய்வதாலும்; சிலர் வடகலை தென்கலை என்று சண் டை சச்சரவுகளைச்செய்து விக்ரகங்களின் மூக்கு முதலான அவயவங்களை அரத்தால் தேய்த்து உருவைமாற்றிக் கச்சேரிகளில் விவஹாரமாடுவதா லும்; சிலர் விசேஷ கல்விஞானம் சக்தியுடைய சில மநுஷர்களை தேவ அவதாரங்களாக எண்ணி பூஜிப் பதாலும்; மற்றும் சிலர் கற்களையும், மண்ணையும், தண்ணீரையும், நெருப்பையும், காற்றையும், ஆகாய நக்ஷத்திரங்களையும், நாய், குரங்கு, மாடு முதலான மிருகங்களையும்; கருடன், மயில், முதலான பக்ஷி களையும், நாகமுதலான பாம்புகளையும்; கல், மர பொம்மைகளையும்; மாட்டுச்சாணி, மஞ்சள் முதலா னவைகளையும் தேவர்களாகவைத்து வணங்குவதா லும்; இன்னும் சிலர் முனீஸ்வரன், மொட்டை யாண்டி, காட்டேரி, குட்டிச்சாத்தான், பிடாரி, அண்ணன்மார், கன்னிமார், பெரியாண்டவன், மது ரைவீரன், கருப்பன், கடம்பன், இடும்பன், இரு ளன் முதலானவைகளுக்கு ஆடுமாடு கோழிகளை பலியிட்டு குடித்து கூத்தாடி வருவதாலும்; இந் நாட்டுப்பெண்களில் சிலர் தம் இறந்துபோன

பாட்டன், பாட்டி, பிதா, மாதா, கணவன், இறந்து போன பூவாடைக்காரி, பாவாடைக்காரி, ஏழு கிணற்று பாதாள பொன்னியம்மாள், மன்னாருசாமி முதலானவர்களுக்குப் பொங்கலிட்டு பூசித்து வேத விரோதமான விக்ரஹாராதனை வீண் பக்திகளைச் செய்து வருவதைக்காணும் கிறிஸ்து முதலான மதஸ்தர்கள் இந்நாட்டாரை அக்ஞானிகள் என்றும், விக்ரஹ வீண்பக்தி செய்யும் வீணர்கள் என்றும் எண்ணி ஏளனம் செய்து வருகிறார்கள்.

## Idolatry.

### விக்ரஹாராதனை கண்டனம்.

---

வினா—பரப்ரஹ்மத்துக்குப் பிரதிநிதியாக விக்ரஹங்களைச் செய்வித்து வணங்கக்கூடாதா?

விடை—கூடாது. ஆரியர் வேதங்களில் பரப்ரஹ்மத்தின் லக்ஷணத்தைப்பற்றி "நிராகார, நிஷ்கரண, நிர்விகல்ப, நிரீஹ, நிர்வாணத, நிர்விசேஷ, நிராமய, நிர்குண, நிர்விசேஷ, நிரந்தராநந்த, விஸ்சிதாத்மா" என்றுதி குணச்சிறப்புகளைப்பற்றி பிரபலமாகச் சொல்லி இருப்பதால், அவற்றிற்கு விரோதமாக விக்ரஹங்களைச்செய்து வணங்குவது வேத விரோதமாகும்.

வினா—புராண இதிகாசங்களில் விக்ரஹாராதனையைச் செய்யும்படி போதிக்கப்பட்டிருக்கிறதல்லவா?

விடை—வேதவாக்கியங்களுக்கு விரோதமாகவிருக்கும் புராண இதிகாச வாக்கியங்களை அங்கீகரிக்கக் கூடாது. மேலும் புராண இதிகாசங்களிலும் விக்ர

ஹாராதனையைக்கண்டிக்கப்பட்டிருப்பதோடு, புத்தியில்லாத மூடருக்கு மாத்திரம் கூடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

வினா—அப்படியானல் நமது நாட்டு வேத, உபநிஷத்து, புராணுதிகளில் விக்ரஹாராதனத்தைக் கண்டிக்கும் சில பிரமாணங்களைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—உண்டு, சொல்லுகிறோம் கேளும்.

## பிரச்னோபநிஷத்து 4-வது பிரச்னம் 10-ல்.

" ஸயோஹவை ததச்சாய மசரீர மலோஹிதம், சுப்ரமக்ஷரம், வேதயதே யஸ்துஸவும்யஸ ஸர்வக்ஞ ஸர்வோபவதி "

(இ-ள்.) ஓ! அனபுள்ளவனே! யாராவது அதை (பிரஹ்மத்தை) நிழலற்றது, அசரீரி, வருணமற்றது, ஒளியுள்ளது, அழிவற்றது என்று அறிகிறானோ அவன் சர்வக்ஞனாகவும் சகலமாகவுமாகிறான், என்றும்,

## கடோபநிஷத்து 6-வது அதி. 9-வது வாக்கியத்தில்.

" ஸம்த்ருசேதிஷ்டதி ருபமஸ்ய நசக்ஷுஷாபச்யதி, கஸ்சனைநம் ஹ்ருதாமநீஷா, மநசாபி க்ளிப்தோ ஏதத்விது "

(இ-ள்.) இவனுக்கு (பிரஹ்மத்திற்கு) ரூபம் நமது பார்வையில் இல்லை. இவனை யொருவரும் கண்ணால் பார்க்கிறதில்லை. ஹிருதயத்தினுலும், மனதினுலும் அறியப்படுகிறான். இதை யறிந்தவர்கள் அமிர்தத்துவத்தை அடைகிறார்கள், என்றும்,

## *சுவேதாசுவதரம் 1-அத். 19-வது வாக்கியத்தில்.*

"அபாணி பாதோ ஜவனோ க்ருஹீதா
பச்யத்யசக்ஷுஸ் ஸஶ்ரோத்யகர்ண:
ஸவேத்தி வேத்யம் நசதஸ்யாஸ்திவேத்தா
தமாஹுரக்யாம் புருஷம் மஹாந்தம்"

*அவன் (பிரஹ்மம்) கையின்றி கிரஹிக்கிறான், காலின்றி நடக்கிறான், கண்ணின்றி காண்கிறான், காதின்றி கேட்கிறான், அறியத்தக்கனவெல்லாம் அறிவான், அவனை அறிந்தவரில்லை, அவனுக்கு வேறு லக்ஷணம் சொல்லக்கூடாமையால் அவனை ஆதி மகாபுருஷன் என்கிறார்கள், என்றும்,*

## *கேநோபநிஷத்து முதல்கண்டம் 3-முதல் 8-வது வாக்கியங்களில்.*

"நதத்ரசக்ஷுர்கச்சதி நவாக்கச்சதி நோமநோ
நவித்மோ நவிஜாநீமோ யத்தைததநுசிஷ்யாத்
அந்யதேவதத் விதிதா ததோ அவிதித ததி
இதிசுஶ்ரும பூர்வேஷா யேநஸ்தத்வ்யசசக்ஷிரே"
"யத்வாசா நப்யுதிதம் யேந வாகப்யுத்யதே
ததேவபிரஹ்மம் த்வம்வித்தி நேதம் யதிதமுபாஸதே",
"யந்மநஸா நமநுதே யேநாஹுர் மநோமதம்
ததேவ பிரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே",
"ய சக்ஷுஷா நபஶ்யதி யேந சக்ஷும்ஷி பஶ்யதி
ததேவ பிரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே"
"யச்சோத்ரேணநஶ்ருணோதி யேநச்ரோத்ரமிதகம்ஶ்ருத
ததேவபிரஹ்ம த்வம்வித்தி நேதம்யதிதமுபாஸதே"[ம்.
"யத்ப்ராணேந நப்ராணிதி யேந ப்ராண ப்ரணீயதே
ததேவபிரஹ்மம் த்வம்வித்தி நேதம்யதிதமுபாஸதே",

(இ-ள்.) அதை (பிரஹ்மத்தை) கண்ணாவது, வாக்காவது, மனதாவது எட்டுகிறதில்லை. அதை நாமறியோம், அதைத் தெரிவிக்கும் வழியும் நமக்குத் தெரியாது. அது தெரிவதற்கு வேறாயும், தெரியாததற்குப் புறம்பாயுமிருக்கிறதென்று முன்னோருரைக்கக் கேட்டோம். எது வாக்கினால்விளங்கவில்லையோ? எதனால்வாக்கு விளங்குகிறதோ அதுவே பிரஹ்மமென்று நீயறி. எதை இதுவென்று உபாஸிக்கிறார்களோ அதுவல்ல. எது மனதினால் நினைக்கிறதில்லையோ? எதனால் மனது நினைக்கிறதென்றார்களோ அதுவே பிரஹ்மமென்று நீயறி. எதை இதுவென்று உபாஸிக்கிறார்களோ அதுவல்ல. எதை நமது கண் காண்கிறதில்லையோ? எதனால் நமது கண்கள் காண்கின்றனவோ அதுவே பிரஹ்மமென்று நீயறி. எதைஇதுவென்று உபாஸிக்கிறார்களோ அதுவல்ல. எது காதினால் கேட்கிறதில்லையோ? எதினால் இந்தக் காதுகள் கேட்கின்றனவோ அதுவே பிரஹ்மமென்று நீயறி. எதை இதுவென்று உபாஸிக்கிறார்களோ அதுவல்ல. எது சுவாசத்தினால் ஜீவிக்கிறதில்லையோ? எதினால் மூச்சு சுவாஸிக்கிறதோ அதுவே பிரஹ்மமென்று நீயறி. எதை இதுவென்று உபாஸிக்கிறார்களோ அதுவல்ல. என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதில் கண், வாய், செவி, மூக்கு, முதலியவற்றிற்கு அது (பிரஹ்மம்) புலப்படாதென்றும் கண்டோக்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றமையால்; இதில் கேவலம் பிரஹ்ம லக்ஷணத்தை மாத்திரம் சொல்லாமல், இதில் குறித்த லக்ஷணமுடைய ஒரு தனிப்பொருள் தவிர மற்றொன்றும் பிரஹ்மமல்லவென்று நிஷேதிக்கும்பொருட்டு அதுவே பிரஹ்மமென்று உரைத்ததாம். இவ்வளவுடன் நிறுத்திவிட்டால் ஒருவேளை அந்த ஏவகாரத்துக்கு விபரீதார்த்தம் செய்யப்படும் என்கிற சங்கையினாலே "எதை

ஜூஜுமவமைய உபாஸிக்கிறார்களோ அதுவல்ல" என்று அந்த ஏவகாரத்தின் பொருளை விருத்தியுரைக்கப்பட்டன.

வினா—இது விஷயத்தைப்பற்றி புராண பிரமாணங்களுண்டானால் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—சொல்லுகிறோம் கேளும்.

## ஸ்காந்தபுராணம், ஞானயோககாண்டம், நாடி சக்கிராத்யாயத்தில்.

தீர்த்தே தாநே தபோயக்ஞே காஷ்டே பாஷாணகேஸதா
சிவம்பஶ்யதி மூடாத்மா சிவோ தேஹேப்ரதிஷ்டித:
ஸர்வத்ர வாதிதம் சாந்தம் நபச்யதி சஶங்கரம்
க்ஞாநசக்ஷுர் விஹீநத்வாத் அஹோமாயா பலம் முநே
ஆத்மஸம்ஸ்தம் சிவாத்யக்தா பஹிஸ்தம் யதஜேசிவம்
ஹஸ்தஸ்தம் பிண்டமுத்ஸ்ருத்ய லிஹேத்கூர்ப் பரமாத்
சிவமாத்மாநி பஶ்யந்தி ப்ரதிமாஸுயோகிந: [மந:
அக்ஞாநாம் பாவநார்த்தாய ப்ரதிமா பரிகல்பிதா.
அபூர்வம் நாபரம் ப்ரஹ்ம ஸ்வாத்மநம் ஸத்யமத்வயம்
ப்ரக்ஞானகநமாநந்தம் ய:பஶ்யதி ஸபஶ்யதி.
ஸர்வபூதஸ்தமாத்மாநம் விசுத்த க்ஞாநதேஹிதம்
ஸவாத்மந்யபஶ்யத் பாஹ்யேஷு பஶ்யமநந்தநபஶ்யதி.

(இ-ள்.) மூடாத்மாக்கள், தீர்த்தத்திலும், தானத்திலும், தபஸிலும், யக்ஞத்திலும், கட்டையிலும், கல்லிலும், சிவன் இருப்பதாக நினைக்கிறார்கள். ஓ! முனியே! ஞானக்கண் இல்லாமையாலும், மாயையின் பலத்தாலுமல்லவா எங்கும்வஸிக்கும்சாந்தமூர்த்தியாகிய சங்கரனைக் காண்கிறதில்லை. தமக்குள்ளே இருக்கும் சிவனை விட்டுவிட்டு, சிவன் வெளியிலிருப்பதாகப் பூசிப்பவன் உள்ளங்கையிலுள்ள சோற்றை எறிந்துவிட்டுப் புறங்கையை நக்

தம்பான்போலாம். யோகிகள் சிவனைத்தமக்குள்ளே காண் பார்களேயன்றி பிரதிமைகளில் காணார். அக்ஞானிக ளுக்கு பாவனார்த்தம் பிரதிமைகள் செய்யப்பட்டிருக் கின்றன. பிரஹ்மம் பூர்வமும் பரமுமற்றது, ஞானஸ்வ ரூபி, அளவற்ற ஆநந்தஸ்வரூபி என்று காண்பவனே கண்ணுடையவன். ஸர்வபூதங்களுக்கும் ஆத்மாகவும், பரி சுத்தஞானமே சரீரமாகவும், சுவந்த ஆத்மாவிலே விளங் குகிறது. அதை வெளியில் காண்கிறேன் என்பவன் ------ஞானமில்லையென்றும்,

## உத்தரகீதையில்.

" அக்நிர்தேவோ த்விஜாதீநாம் முநிநாம் ஹிருத்தெய்வ
ப்ரதிமா ஸ்வரபுத்தாநாம் ஸர்வத்ரஸமதர்ஶிந:" [தாம்

(இ-ள்.) துவிஜர்களுக்கு தெய்வம் அக்கினியில், முனிவர்களுக்கு தெய்வம் ஹிருதயத்தில், புத்தி குன்றிய வர்களுக்கு தெய்வம் விக்ரஹத்தில், ஸமதிருஷ்டியுடைய வர்களுக்கு தெய்வம் எங்கும் என்றும்,

## விஷ்ணு புராணம்.

" ரூபநாமாதி நிர்த்தேச விசேஷணவிவர்ஜித:
அபக்ஷய விநாஸாப்யாம் பரிணாமார்த்தி ஜந்மபி:
வர்ஜித: சரேர்பதவக்தும் ய: ஸதாஸ்திதிகேவலம்"

(இ-ள்.) பிரஹ்மம் நாமரூபமற்றவன்; அவனுக்கு ஜநநம், மரணம், மாற்றம், முடிவும் கிடையா. அவன் இருக்கிறான் என்று மாத்திரம் சொல்லக்கூடும்.

## பாகவதம் 3-வது ஸ்கந்தம், 29-வது அதி.

" யோமாம் ஸர்வேஷு பூதேஷு
ஸந்தமாத்மாந மீஶ்வரம்
ஹித்வார்ச்சாம்ப ஜதே மவுட்யாத்
பஸ்மந்யேவ ஜுஹோதிஸ:"

(இ-ள்.) சகல பூதங்களிலும் அந்தர்யாமியாகவும் ஆதி கர்த்தனுகவும் இருக்கும் என்னைவிட்டு விக்ரஹங்களைப் பூஜிக்கிறவன் நெருப்பின்மேல் யக்ஞம் செய்யும் நெய்யை சாம்பலிற்கொட்டுவோனுக் கொப்பாவானென்றும்.

பாகவதம்.

"மிருச்சிலா தாது தார்வாதி மூர்த்தாவீஸ்வரபுத்தய:
க்ளிஸ்யந்தி தபஸாமூடா: பராம்சாந்திம் நயோந்திதே"

(இ-ள்.) மூடர்கள் களிமண்ணையும், கற்களையும், உலோகங்களையும், மரக்கட்டைகளையும் கடவுளாகக் கொண்டு கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு மூ... ...ன சுகம் கிடையாதென்றும்.

சதபத பிரமாணத்தில்.

"அப்ஸுதேவ மநுஷ்யாணும் திவிதேவாமநீஷிணும்
காஷ்டாலோஷ்டேஷு மூர்க்காணும் யுக்தஸ்யாத்மநி
[தேவதா"

(இ-ள்.) சாதாரண ஜனங்கள் கடவுளை ஜலத்திலும், புத்தியுள்ளவர்கள் கடவுளை கிரகாண்டங்களிலும், சுத்த மூடர்கள் கடவுளை கற்களாலும் மரக்கட்டைகளாலும் செய்த விக்ரஹங்களிலும் இருப்பதாகவும், உண்மையான பக்தர்கள் முடிவற்ற பெரும் பொருளைக் கடவுளென்று நம்புகிறார்கள் என்றும்,

ஜமதக்னி கிரந்தத்தில்.

"சிந்மயஸ்யாத்விதீயஸ்ய நிஷ்கலஸ்யா சரீரிண:
உபாஸகாநாம் கார்யார்த்தம் பிரஹ்மணோரூபகல்பநா
ரூபஸ்தாநாம் தேவதாநாம் பும்ஸ்த்யம் சாதிககல்பநா"

(இ-ள்.) இரண்டற்று ஒன்றானதும் சர்வகுண சம்பன்னமுமான பிரஹ்மத்துக்கு மனோராஜ்யமான ரூபங்க

ளைக் கற்பிக்கிறார்கள். அக்கடவுளுக்கு எவ்வித தேகமு மில்லை; பூஜிப்பவருக்கேற்ற பெயருமில்லை; தேவதைக மனோராஜ்யம் செய்பவைகளெல்லாம் ஆண் பெண் ரூபங் களாகப் பாவித்து வணங்கி வருகிறார்கள் என்றும்.

## அஷ்டாவக்ர சம்ஹிதாவில்.

" சாகாரமந்ருதம்வித்தி நிராகாரந்து நிஸ்சலம் "

(இ-ள்.) ரூபமுள்ளவைகளெல்லாம் பொய்யான தேவர்கள், ரூபமற்றவையே உண்மையான பரம்பொருள் என்றும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

வினா—சிலர் ஆகமதாந்திர கிரந்தங்களில் விக்ரஹாரா தனைக்கு ஆதாரமிருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். அது உண்மையா?

விடை—சிறந்த ஆகமதாந்திரங்களிலும் விக்ரஹாராதனை யைக் கண்டித்திருக்கிறது. உதாரணமாக—

## குலார்ணவ தாந்திரத்தில்.

" பரேபிரஹ்மணி விக்ஞாதே நமஸ்தை நியமைரலம்
தாலவிருந்தே நகிம்கார்யம் லப்தேமலயமாருதே "

(இ-ள்.) பிரஹ்மத்தை யறிந்தவன் யாதொரு சடங் குகளைச்செய்து விக்ரஹங்களை வணங்கவேண்டியதில்லை. புசல்காற்று வீசும்போது விசிறியைத் தேடுவோருண் டோ என்றும்,

## மஹாநிர்வாண தந்திரத்தில்.

" ஏவங்குணுநுசாரேண ரூபாணிவிவிதாநிச
கல்பிதாநி ஹிதார்த்தாய பக்தாநாமல்பமேதஸாம் "

(இ-ள்.) ஞானமில்லாதவர்கள் தமது மூட புத்தி யினால் பிரஹ்மத்துக்கு மனோகற்பிதமான ரூபங்களையெல் லாம் சொல்லுகிறார்கள் என்றும்,

அதே கிரந்தத்தில்.

"மாநஸாகல்பிதா மூர்த்திம் ந்ருணாம்சேத் மோக்ஷசாதநீ
ஸ்வப்நலப்தேந ராஜ்யேந ராஜாநோ மாநவாஸ்ததா"

(இ-ள்.) மனோ கற்பிதமான விக்ரகங்கள் மோக்ஷத் தைத்தரும் பிரஹ்மமாகும் பக்ஷத்தில், கனவில்தான் ராஜ னைக்கொண்ட பிரமையும் அவனுக்கு இராஜ்யாதிகாரத் துவத்தைக் கொடுக்கக்கூடுமல்லவா என்றும்,

அதே கிரந்தத்தில்.

"பாலக்ரீடநவத்ஸர்வம் ரூபநாமாதி கல்பிதம்
விஹாய பிரஹ்மநிஷ்டோய: ஸமுக்தோ நாத்ரஸம்சய:"

(இ-ள்.) பிரஹ்மத்தை விக்ரஹ ரூபமாக்கி வணங்குப வன் விளையாடும் சிறு குழந்தைக்கொப்பாவான். ஆத்ம ஞானத்தால் வணங்குவோனே இரக்ஷிக்கப்படுவான், என்றும்,

அதே கிரந்தத்தில்.

"நகர்மணா விமுக்த: ஸ்யாந் மந்த்ரார்த்தேநநவ
ஆத்மநாத்மநமாக்ஞாய முக்தோபவதிமாநவ:"

(இ-ள்.) மானிடர் சடங்குகளைச் செய்வதனாலும், வேதபடனங்களைச் செய்வதனாலும், விக்ரஹங்களை வணங் குவதனாலும் மோக்ஷமடையமாட்டார்கள். தமது ஆத்ம ஞானத்தினால் அறியப்பட்டவர்களுக்கே மோக்ஷ சுகம் கிடைக்கும் என்றும்,

## குலார்ணவ தந்திரத்தில்.

"தோயம்விநா யதாநாஸ்தி பிபாஸாநாநிகாரணம்
தத்வக்ஞானம் விநாதேவ ததா முக்திரநாஜ்யதே"

(இ-ள்.) ஓ! தேவி! தண்ணீரில்லாமல் தாகவிடாய் எப்படி தீராதோ அதுபோலவே, ஈசுவரனுடைய ஞானமில்லாமல் மோக்ஷ சுகம் கிடையாது என்றும், பின்னும் பலவிதமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

வினா—ரூபமற்றவைகள் உலகிலிருப்பதாக நம்பக்கூடுமோ?

விடை—கூடும், நான் சொல்லுகிறேன், நீ கேட்கிறாய் என்று சொல்லும்போது நான் என்பதும், நீ என்பதும் எவ்வித ரூபங்களற்றிருந்தும் அவற்றின் தொழில்களினால் அவற்றின் இருப்பை நம்புகிறோம். மேலும், நம்முடைய மனம், புத்தி, சித்தம் என்பவைகள் எவ்வித ரூபமற்றவைகளாகவிருந்தும் அவற்றின் தொழில்களால் அவற்றின் இருப்பை நம்பி வியவஹரிக்கிறோம். அன்றியும் ஆதித்யனாகிய சூரியனும் அதைச்சுற்றி அந்தரத்திலாடும் பூமி, சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சநி முதலான கிரஹாண்டங்கள், மத்தியை நாடுகிற (Centripetal force) கவர்ச்சி சக்தியினாலும், மத்யாதீத (Centrifugal force) கவர்ச்சி சக்தியினாலும் பந்தப்பட்டிருப்பது பிரத்தியக்ஷம். அந்தகவர்ச்சி சக்திகள் நமது கண்களுக்குத் தோன்றாவிடினும் தத்துவ ஞானத்தால் அவற்றின் இருப்பை நம்புகிறோம். அதே மாதிரியாக பரமேஸ்வரனை நமது சாதாரண கண்களால் பார்க்காமலிருக்கினும் அவனுடைய அற்புதத் தொழில்களால் அவனது இருப்பை நம்புகிறோம்.

வினா—பிரஹ்மம் ரூபமுள்ளதாக இருக்கக்கூடாதா?

விடை—ரூபமுள்ளவைகளெல்லாம் பரிமிதமாயும், அற்ப வியாபியாயுமிருக்கின்றன, பிரஹ்மம் அபரிமிதமாயும், சர்வ வியாபியாயும் இருக்கின்றது. ஆகையால் அது ரூபமற்றது. ரூபமுள்ள எல்லாப் பொருள்களையும் அது சிருஷ்டிக்கிறது. ஆகையால் அது ரூபமுள்ளவைகளுக்கெல்லாம் சிரேஷ்டமாயும், ரூபமற்றதாயும் அகாய ஸ்வரூபியாயுமிருக்கின்றது. பிரஹ்மம் சர்வ வியாபியாயில்லாத பட்சத்தில் எல்லாவற்றுக்கும் நியாமகமாயும், பரிபாலிப்பதாயும் இருக்கக்கூடாதே?

வினா—பிரஹ்மம் சர்வவியாபி (எங்கும் நிறைந்தது) என்பதற்குப் பிரமாணமென்ன?

விடை—அது சர்வ வியாபியாயில்லாத பட்சத்தில் எல்லாவற்றுக்கும் நியாமகமாயும், பரிபாலிப்பதாகவும் எப்படியாகக்கூடும்?

வினா—வஸ்துக்களில் எந்தெந்த நியமங்களிருக்கின்றனவோ அவைகள் அந்த வஸ்துக்களுக்கு ஸ்வத சித்த ஸ்வபாவமாய் (இயல்பாய்க்கிடைத்த குணங்களாய்) இருக்கின்றன. அவைகள் வேறொருவரால் அவைகளுக்குக் கொடுக்கப்படவில்லையென்று சிலர் சொல்லுகிறார்களே, நிஜமா?

விடை—இது நன்றாய் மனக்கண்ணால் ஆராய்ந்து சொல்லப்பட்ட வார்த்தையல்ல; வஸ்துக்களின் நியமம் ஸ்வத சித்தமாகி அவைகளுக்கு ஒன்று கர்த்தாவாயும், நியாமகமாயும், இல்லாவிட்டால், அவைகள் விச்சின்னமாயும் (சிதைவுள்ளவைகளாயும்) சம்பந்தமற்றவைகளாயும் ஆய்விடும். அவைகளொன்றோ

டொன்று சேர்ந்து அவைகளுடைய நியந்தாவின் பிரதான உத்தேசமாகிய ஜகத்தின் மங்கள சாதனத்தை (நன்மையை)ப் பூர்த்தி செய்யமாட்டா.

வினா—பிரஹ்மம் சர்வக்ஞன் என்பதற்குப் பிரமாணமென்ன?

விடை—அவன் சர்வக்ஞனல்லாத பட்சத்தில் எல்லாவற்றிற்கும் நியந்தா (நடத்துபவன்) ஆகமாட்டான்.

வினா—எல்லா வஸ்துக்களிலும் உள்ள நியமங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து ஜகத்தின் மங்கள சாதனத்தைச் செய்கின்றன வென்பதற்குப் பிரமாணமென்ன?

விடை—பதார்த்த வித்தை, ஜோதிர்வித்தை, சரீர வித்தை முதலிய நூல்களைப் படிப்பதனால் இதன் தன்மை நன்றாக அறியப்படுகின்றது.

வினா—ஜகத்தின் நியமங்களினால் நன்மையே உண்டாகிறதென்பது இல்லாமல், அநேக இடங்களில் அப்போதப்போது தீமையும் காணப்படுகிறதே, இதற்குக் காரணமென்ன?

விடை—நமது அற்ப அல்லது பரிமித புத்தியில் தீமையாகத் தோன்றுகிறவை காலக்கிரமத்தில் நன்மையாகவே யாகின்றன வென்பது உண்மை.

வினா—பிரஹ்மம் சர்வ சக்திமானென்பதற்குப் பிரமாணமென்ன?

விடை—அவர் செய்த நியமங்களெல்லாம் ஜீவர்களின் நன்மை தீமைகளுக்கு ஏற்றவைகளாயிருக்கின்றன. இதனால் பிரஹ்மம் ஜீவர்களின் நன்மையைக்

கோருகின்றனென்பது விளங்குகின்றது; ஆகை யால் அவன் மங்களமயன்.

சி.—ஜகத்து உற்பத்தியுள்ளதானால், பிரஹ்மத்திற்கு எவ்விதமாய் உற்பத்தியில்லை?

வி.—ஜகத்து பராதீனமாயிருக்கின்றது. மேலும் ஒரு யந்திரத்தைப்போல ஒரு சிருஷ்டிப் பொருளாக விருக்கின்றது. இதனால் அதன் உற்பத்தி அநுமான சித்தமாயிருக்கின்றது. பிரஹ்மம் ஸ்வதந்திரமாக விருக்கின்றான், அவன் ஒரு காரியப்பொருளல்ல. அவன் உற்பத்தியற்றவன், பிறப்பற்றவன், ஆதி யற்றவன் என்பது இதனால் நிச்சயமாகின்றது.

சி.—பிரஹ்மம் நிர்விகாரமென்பதற்குப் பிரமாண மென்ன?

வி.—குறைதல், வளர்தல், மாறுதல் இவைகள் விகார மெனப்படுகின்றன. பிரஹ்மம் முதலிலேயே பூரண மானவனானதால் அவன் இன்னும் வளரக்கூடாது. யார் பூரணமானவனோ அவன் அபூரணமாவதற்கு அல்லது குறைவதற்கு விரும்பமாட்டான். இச்சை யில்லாவிடத்து காரியமாகிறதில்லை; ஆகையால், பிரஹ்மம் குறைகிறதில்லை. அவனது ஸ்வரூபம் எல் லாவற்றிலும் சிறந்தது. இவ்வளவு சிறந்தது வேறு வஸ்துவாக ஆகமாட்டாது. ஆகையால், அவன் தன் ஸ்வரூபத்தை மாற்றிக்கொள்வதில்லை. ஆனதுபற் றியே,

சாந்தோக்யம் 8-1-5-ல்.

"ஏஷஆத்மா பஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விசோகு விதிகத்ஸோபிபாஸ: ஸத்யகாம ஸத்யஸங்கல்ப:'

(இ-ள்.) அந்த பரமாத்மாவுக்கு அபஹதபாப்மா = பாவமிழலும், விஜர: = மூப்பும், விம்ருத்யு: = மரணமும், விசோக: = துக்கமும், விஜிகத்ஸ: = பசியும், அபிபாஸ: = தாகமும், அற்றவனென்றும், ஸத்யகாம: = இறுதியற்ற இச்சையும், ஸத்ய சங்கல்ப: = இறுதியற்ற எண்ணமுமுடையவன் என்றும் சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா—பிரஹ்மம் ஜீவர்களின் உபகாரத்தின் பொருட்டு ஏதாவது ஒரு ரூபத்தைத் தரித்தால் அதில் குற்றமென்ன?

விடை—பிரஹ்மம் தன் இச்சாமாத்திரத்தால் விரும்பியதைச்செய்ய வல்லவன். அவன் விரும்பின மாத்திரத்தில் ஜீவர்களுக்கு உபகாரத்தைச் செய்கின்றான். ஆகையால், அவன் தன் ஸ்வரூபத்தை மாற்றிக்கொள்ள என்ன அவசியமிருக்கின்றது?

வினா—பிரஹ்மம் தன் இச்சாமாத்திரத்தால் எல்லாக் காரியங்களையும் செய்கிறான் என்பதற்குப் பிரமாணமென்ன?

விடை—இது பிரத்தியட்சமாக விருக்கின்றது. எப்படியெனில் ஜீவன் தன் கை, கால் ஆகிய இயந்திரங்களின் உதவியன்றியில் இச்சாமாத்திரத்தால் எந்த காரியத்தையும் முடிக்கமாட்டான்; ஆனால், ஈஸ்வரனுடைய காரியங்களில் தனது கை, கால் முதலிய எந்த இயந்திரங்களின் உதவியும் காணப்படவில்லை; உண்மையில் அவனுக்கு இயந்திரங்களுமில்லை. ஆகையால், அவன் தன் இச்சாமாத்திரத்தால் எல்லா காரியங்களையும் செய்கின்றான்.

வினா—பரமேஸ்வரனுக்குப் பல அவதாரங்களுண்டோ, இல்லையோ?

விடை—யஜுஷர் வேதத்தில் "அஜயேசபாத்" "ஸபர்ய காச்சுக்ரமகாயம்" என்றுதி வாக்கியங்களிருப்ப தால் பரமேஸ்வரனுக்கு எவ்வித அவதாரமுமில்லை.

வினா - பகவத்கீதை அத்தியாயம் 4, சுலோகம் 7-ல்—

"யதாயதாஹி தர்மஸ்ய க்ளாநிர்பவதி பாரத
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்",

என்றால்—

'எப்போதெப்போது தர்மத்திற்கு நாசமுண்டாகிற தோ, அப்போதைக்கப்போது நான் அவதரிக்கிறேன்' என்று சொல்லி இருக்கிறதே! இதற்கென்ன சமாதானம் சொல்லுகிறீர்கள்?

விடை— இந்த வாக்கியம் வேத விருத்தமானபடியால் பிரமாணமாகமாட்டாது. ஸ்ரீகிருஷ்ணன் தர்மாத்மன், தர்மத்தை ரக்ஷிக்கக் கோரப்பட்டவன்; ஆகவே, யுகயுகமத்தியில் யான் ஜநித்து சிஷ்டரை ரக்ஷித்து துஷ்டரை நசிக்கச் செய்கிறேன் என்று சொல்வதனால் குற்றமில்லை. ஏனெனில் "பரோபகாராய ஸதாம் விபூதய:" சத்புருஷர்களுடைய ஸர்வஸ்வம் பரோபகாரத்தைக் கருதியதேயல்லவா? மேலும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஜனனமரணங்களுண்டானமையால் எப்போதும் பிறப்பிறப்பற்ற பரமேஸ்வரனாவதெப்படி?

வினா—அப்படியானால் பரமேஸ்வரன் பத்தவதாரமெடுத்ததாகச்சிலரும், இருபத்துநான்கு அவதாரமெடுத்ததாகச் சிலரும் சொல்லுகிறார்களே, அது பொய்யா?

விடை—ஆம், அது பொய்யே. வேதார்த்தத்தைத் தெரிந்துகொள்ளாமையாலும், போதுமான கல்வி ஞான

யில்லாமையாலும், சமயாசாரிகள் செய்யும் சடங்கு முதலான பிரமைகளில் சிக்கி மயங்குவதனாலும் அப்ரமேயனுக்கு அவதாரங்களுண்டென்று நம்புகிறார்கள்.

வினா—பரமேஸ்வரன் அவதாரமெடுக்காவிட்டால் கம்ச ஹிரண்ய ராவணாதி துஷ்டர்கள் நாசமடைவதெப்படி?

விடை—ஜன்மமெடுத்த ஒவ்வொருவரும் மரணமடைந்தே தீரவேண்டும். எப்போதும் எவ்வித சரீரமற்று உலக சிருஷ்டி ஸ்திதி பிரளயங்களைச் செய்யும் பரமேஸ்வரனுக்கு முன் கம்ச ஹிரண்ய ராவணாதிகள் அணுரூபமான புழுக்களுக்கும் சமானராகார்கள். ஆகவே, அவர்களை நசிப்பிக்க அவதாரங்கள் எடுக்க வேண்டுமா? மேலும் பரமேஸ்வரன் சர்வ வியாபியாகையால், கம்சஹிரண்ய ராவணாதிகளின் சரீரங்களிலும் இருக்கிறான். இருக்கவே, அவர்களை நினைத்த மாத்திரத்தில் நசுப்பித்து விடலாமல்லவா? ஆகவே, அநந்த குணகர்ம ஸ்வபாவ சத்தியையுடைய சர்வேஸ்வரன் ஒரு கேவலமான ஜீவனைக் கொல்வதற்கு தனது இயற்கைக்கு விரோதமாக ஜநநமரணங்களுக்குட்பட்டு அவதார மெடுப்பதாக எண்ணுவது பிரமையேயாம். மேலும், பக்தர்களைப் பாதுகாக்க அவதார மெடுப்பதாகச் சிலர் எண்ணுகிறார்கள் அதுவும் சரியான எண்ணமல்ல. ஏனெனில், பரமேஸ்வரனுடைய ஆக்ஞைக்குட்பட்டு நடக்கும் பக்தர்களைப் பாதுகாக்கும் பூரண சாமர்த்தியம் பரமாத்மாவினிடம் குடிகொண்டிருக்கிறது. பரமேஸ்வரனுடைய சிருஷ்டி விஷயத்தைப்பற்றி பூரணமாக விசாரிப்போமாகில் "நபூதோ நபவிஷ்யதி" என்றிவாக்கியங்களினால்பரமேஸ்வரனுடையசக்தி

யாருக்கும் கிடையாதென்று திட்டமாகத் தோன்றும். ஆகவே, கம்ச ஹிரண்ய ராவணாதிகளைக் கொல்வதற்கும், கோவர்த்தன பருவதத்தைத் தூக்குவதற்கும் மற்றும் இவ்வாறான காரியங்களைச் செய்வதற்கும் அவதாரங்கள் வேண்டுவதில்லையாகையால் பரமேஸ்வரனுக்கு எவ்வித அவதாரமும் அனாவசியம்.

விஞா—பிரஹ்ம லக்ஷணத்தைத் தமிழ் நாட்டுக் கவிகளும் ஞானிகளும் எவ்விதமாகச் சொல்லியிருக்கிறார்கள்? சற்று சொல்லுங் கேட்போம்.

விடை—பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி தமிழ்நாட்டு சைவ வைணவ ஸ்மார்த்தர்கள் பின் வருகிறபடி சொல்லி இருக்கிறார்கள். எப்படியெனில்—

தேவாரம்.

ஆதி யானை யமரர் தொழப்படு
நீதி யானை நியம நெறிகளை
யோதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே.

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்.

திருவாசகம்.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் [று
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்
னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோனோக்க மாடாமோ.

சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவராசை யறுப்பான்

முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானை சேவக னைவரக் கூவாய்.

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே

நினைப்பறநினைந்தேன் நீயலாற்பிறிதுமற்றின்மை.

ஒன்றுநீயல்லை அன்றிஒன்றில்லை.—என்றும்,

திருமந்திரம்.

ஆறு சமயமுங் கண்டிலர் கண்டில
ராறு சமயப் பொருளு மவனலன்
றேறுமின் றேறித் தெளிமின் றெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே.

ஆனசமயம் அதுஇது நன்றெனும்
மான மனிதர் மயக்கம் அதுஒழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த உருவது ஆமே.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தியாவரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தியாவரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

அன்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியினை எய்தவொண் ணாதே.

படமாடக்கோயில் பகவற்கொன்றீயின்
நடமாடக்கோயி னம்பர்க்கங்காகா

நடமாடக்கோயி னம்பர்க்கொன்றீயின்
படமாடக்கோயிற் பகவற்கதாமே.

ஆதிபிரானும் மணிமணி அண்ணனும்
ஆதிக்கமலத் தலர்மிசை யாயனும்
சோதிக்கில்மூன்றும் தொடர்ச்சியில் ஒன்றெனர்
பேதித்து உலகம் பிணங்குகின் றார்களே.

உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே.

காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்கும் கலந்துநின் றானே.

தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு
தத்துவமெங்கில்லை தத்துவனங்கில்லை
தத்துவஞானத்தின் தன்மைஅறிந்தபின்
தத்துவனங்கே தலைப்படுந்தானே.
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது.—என்றும்,

**சிவஞான தீபம்.**

அவ்வுயிர்போல் எவ்வுயிர்க்கும் அறிவாகி நிறைந்தே
ஆனந்த சுகாதிதத் தப்புறத்தப் புறமாய்
இவ்வுருவம் இதுநிலையம் இதுஎனும்சுட் டிலதாய்
ஏகமாய் ஆதிநடு ஈறகன்ற முதலாய்
எவ்வெவர்எப் படிநினைந்தார் அவ்வவர்க்கப் பொருளாய்
எண்ணுமன பாவகத்தால் நண்ணரிய ஒளியாய்
ஒவ்வியசித் துடன்அசித்தும் அல்லதுவாய் உற்ற
உருஅருஉ பயம்அகன்று உளதாகும் பதியே.

### சிவானந்த மாலை.

எங்கும் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
யங்கந் திரள்கருதி ஆணவமாம் - பொங்குமிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
போய்போய்போய் போய்போய்போய் போய்.

### திருவம்மானை.

பார்த்தவிடமெல்லாம் பரமன்காணம்மானை
பாராமலிக்காளும் பாழ்பட்டேனம்மானை.

### கந்தபுராணம்.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர்போற்றி
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றியெய்தி
யருவந் தனையு முருவத்தையு மன்றிநின்று
ஒருவன் றனது பதந்தனை யுளத்துள்வைப்பாம்.

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தகைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்க ளேத்துவாம்.

### விநாயகபுராணம்.

உலகமுழுது நீக்கமற ஒன்ருய் நிற்கும் பொருளெவனவ்
உலகிற்பிறங்கும் விகாரங்கள் உறாதமேலா மொளியாவன்
உலகம்புரியும் வினைப்பயனை ஊட்டுவிப்பா னெவனந்த
உலகமுதலைப் பரம்பொருளை உவந்துசரண மடைகின்
[றாம்.

### காசிகாண்டம்.

நோக்கின்றி கண்டெனி கையின்றி கொடுத்துமறை
நுவல்வ தாய
நாக்கின்றி யறுசுவையு மினிதுணர்ந்துங் காலின்றி
நடத்தல் செய்து

மூக்கின்றி மணங்கவர்ந்து செவியின்றி கேட்டுமறை
முதல்வர் யார்க்கும்
லாக்கின்றி மனத்தினுக்கு மெட்டாநின் றுரைத்தாள்
வணங்கல் செய்வாம்.

பிறப்பதும் இறப்பதும் பெயரும் செய்கையும்
மறப்பதும் நினைப்பதும் வடிவம் யாவையும்
துறப்பதும் இன்மையும் பிறவும் சூழ்கலாய்ச்
சிறப்புடை அரன் அடி சென்னி சேர்த்துவாம்.

அவ்வை குறள்.

நல்லன நூற்பல கற்பினுங் காண்பரிதே
எல்லையில் லாத சிவம்.
வாயுவாய் மன்னுயிராய் மற்றவற்றி னுட்பொருளாய்
ஆயுமிடந் தானே சிவம்.—என்றும், [ய்

தாயுமானவர்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற்கிசைந்ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்.

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரிய
சுடரா யெல்லாம் [நிறை
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெரு
சிந்தை செய்வாம். [வெளியைச்

பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவும் அன்பரைக்கோத் தறவிழுங்
கொண்டப் பாலுந் [கிக்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளி
சிந்தை செய்வாம்.—என்றும், [னையாம்

திருவருட்பா.

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர் யோக
ரறிஞர்மல ரயன்முதலோ ரனந்த வேதங்
களவிறந்துங் கரணாதி யிறந்துஞ் செய்யுங்
கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவு ளாகி
யுளவிறந்த வெம்போல்வா ருள்ளத் துள்ளே
யூறுகின்ற தெள்ளமுத வூற லாகி
பிளவிறந்து பிண்டாண்ட முழுதுந் தானாய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே

சகமாகிச் சீவனா யீசனாகிச்
சதுமுகனாய்த் திருமாலா யரன்றா னாகி
மகமாயை முதலாய்க் கூடத்த னாகி
வான்பிரம மாகியெல்லா வழக்கு மாகி

இகமாகிப் பரமாகிச் சமய கோடி
யெத்தனையு மாகியவை யெட்டா வான்கற்
பகமாகிப் பரமாகிப் பரம மாகிப்
பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே.

## திருவாய்மொழி.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - என்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனனே. [ளெம்

திருமா லென்முகன் செஞ்சடை யானென் றிவர்க
பெருமான் றன்மை யாரறி கிற்பார் பேசியென்
னொருமாமுதல்வர் ஊழிப்பிரானென்னை யாளுடைக்
கருமா மேனிய னென்பனென் காதல் கலக்கவே.

உளன் எனில் உளன் அவன் உருவம்இவ் வுருவுகள்
உளன் அலன் எனில்அவன் உருவுஇவ் வுருவுகள்
உளன் என இலன் என இவைகுணம் உடைமையின்
உளன் இரு தகைமையொ டொழிவிலன் பரந்தே.

திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசைப்
படர்பொருள் முழுதுமாய் அவைஅவை தொறும்
உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் எவர்க்கும் முன்னோ
தானும் சிவனும் பிரமனுமாகப் பணைத்த தனிமுதலை [னைத்
தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்தென்
ஊனின் உயிரின் உணர்வின் நின்றஒன்றை உணர்ந்தேனே.

வானத்தும் வானத்துள்ளும்பரும்
மண்ணுள்ளும் மண்ணின்கீழ்த்
தானத்து மெண்டிசையுந்
தவிராது நின்றான்.

மாயனென்னெஞ்சி னுள்ளான் மற்றுமெவர்க்கு மதுவே
காயமுஞ் சீவனுந் தானே காலு மெரியு மவனே
சேய னணிய னெவர்க்குஞ் சிந்தைக்குங் கோசர மல்லன்
தூயன் றுயக்கன் மயக்க னென்னுடைத் தோளிணையா
[னே.

மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்ப்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப்பிலாதாய்ப்
பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்ணாதெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவா யனலுருவிற் றிகழுஞ்சோதி
தன்னுருவாய் யென்னுருவில் நின்றவெந்தை [ன்.
தளிர்புரையும் திருவடியென் றலைமேற்கொண்டே
உணர்வினுள்ளே யிருத்தினேன்.
அதுவும்அவனது இன்னருளே.

நிரந்தஆ காய நீர்நிலந் தீகால்
ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோ ருருவே களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே.—என்றும்,

எவ்வுயிரும் பராபரன்சந் நிதியதாகும்
இலங்கும்உயிர் உடல்அனைத்தும் ஈசன்கோயில்.

**திருக்குறள்.**

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

**கம்பராமாயணம்.**

ஆதி யந்த மரிஇயென யாவையும்
ஓதி ஞால கில்லன உள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையின்
பாத மல்லது பற்றிலோம் பற்றிலேம்.

**ஜீவகசிந்தாமணி.**

மூவா முதலா யுலகமொரு மூன்றுமேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி
யோவாது நின்றகுணத் தொண்ணிதி செல்வனென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்துமன்றே.

**வசனம்.**

கடவுள் ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல; அவருக்கு ஊருமில்லை, பேருமில்லை, நேருமில்லை; அவருக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை, தாரமுமில்லை, தநயரு மில்லை; அவருக்கு ஒப்புமில்லை, தப்புமில்லை; அவர்புதமு மில்லை, நாதமுமல்ல, சரமுமல்ல, அசரமுமல்ல, காணப் பட்ட ஒரு பொருளுமல்ல; பஞ்சேந்திரியங்களுக்கு அவி ஷயமானவர், ஞானேந்திரியங்களுக்கு எட்டாத துரியா தீதர்; அவர் மகாப்பிரபு, மண்டலாதிபதி, ஏகச்சக்கிரவர்த் தி, தேவாதி தேவர், இராஜாதிராஜர்; அவர் சர்வக்ஞர், சர்வசக்தர், சர்வேஸ்வரர், சர்வகாரணர், சர்வ கற்பிதர், சர்வநியந்தா, சர்வாந்தர்யாமி; அவர்பிதா, நாம் பிள்ளை

கள்; அவருக்கு நாம் சிஷர்கள்; அவர் இராஜா, நாம் குடிகள்; அவர் ஆண்டவர், நாம் அடிமை; அவர் அன்ன தாதா, நாம் யாசகர்; அவர் செல்வர், நாம் தரித்திரர்; அவர் தர்மாத்மா, நாம் கர்மாத்மா; அவர் நித்தியர், நாம் அநித்தியர்; அவர் அரூபி, நாம் குரூபி; அவர் தினகிருபாகரர், சீலமனோகரர், ஞான திவாகரர், நற்குணசாகரர், பரமபவித்திரர், பக்தர்கள் மித்திரர், தர்மசமுத்திரர், சகல விசித்திரர், அகில நிர்வாகர், ஆனந்தபோகர், இகபரத்தியாகர், இன்பப்பிரவாகர், மோட்சதாதா, மூலவேதா, சாக்ஷாத்மாதா, சர்வஞாதா, ஆதிமத்யாந்தரஹிதர், சோதி நித்தியர், சந்தசகிதர், வேதசித்தாந்த விகிதர், போதவித்தாந்த விகிதர், கபடநாடக சூத்திரர், தபனகோடி காத்திரர், உபயஞான நேத்திரர், பயமோட்ச க்ஷேத்திரர், பாவநாசர், சிவநேசர், தேவராசர், மாவிலாசர்; இப்படிப்பட்ட அதி அகோசர அசரீர அகண்டாகார அபார உதார நிர்விகார மனோகர குணாகர சராசர தாரதர பராபரவஸ்து.

வினா—இந்த விக்ரஹாராதனையைப்பற்றி தமிழ் நாட்டு ஞானிகளும் கண்டித்திருக்கிறார்களா?

விடை—ஆம் கண்டித்திருக்கிறார்கள். உதாரணமாக—

உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூற்றையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகி லேனுயர் பொன்னெனவே
ஒளியிட்ட தாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மையென்று
வெளியிட் டடைத்துவைத் தேனினி மேலொன்றும் வேண்டிலனே—என்றும்,

சொல்லினுஞ் சொல்லின் முடிவினும் வேதச்சுருதியினும்
அல்லினு மாசற்ற வாகாயந் தன்னினு மாய்ந்துவிட்டோ

நில்லினு மன்ப ரிடத்தினு மீச னிருக்குமிடங்
கல்லினும் செம்பினு மோவிருப்பானெங்கள் கண்ணுநலே
[என்றும் பட்டணத்தாரும்,

உளியிட்ட கல்லும் உருப்பிடித்த செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்
என்று பத்திரகிரியாரும்,

வட்டமதி யிரவிதனைப் பூசிப்போரும்
மண்ணைலிங்க மாகவைத்துப் பூசிப்போருஞ்
சுட்டவுரு மரச்சிலைகள் பூசிப்போரும்
துப்பசெம்பு கல்லுருவைப் பூசிப்போரும்
என்று சங்கராசாரியார் உடலறிவிளக்கத்திலும்,

கல்லுகளை தெய்வமென்றே சொன்னபேரும்
காசியென்றே சேதுவென்று முழுகினோருந்
தொல்லையாம் பூசைகளைச் செய்தபேரும்
சூதுகொலை பொய்களவு செய்தபேரும்
எல்லையில்லா எழுநரகம் தன்னில்வீழ்ந்து
எழுபிறப்புங் கல்லுகளா யிருப்பர்தானே—என்றும்,

பண்ணிவைத்த கல்லுகளைப் பிராணரென்று
பணிந்துவரும் பித்தர்களே பாவி காணீர்
எண்ணிவைத்த படியாலே வருவ துண்டோ—என்னும்,

கல்லுகளைச்செம்புகளைத் திராக்க டம்மைக்
கனமான மரங்களையும் தெய்வ மென்று
சொல்லுகின்ற குருக்களுக்குஞ் சீடர் மார்க்குஞ்
சொர்க்கமில்லை எழுநரகந்தானு நிற்பர்—என்றும்,

எத்தனைநான் கல்லுகளைப் பூசித் தாலும்
ஈனர்களே உங்களுக்கு மோக்ஷ முண்டோ
சுத்தமுடன் தலைமுழுகி தவஞ்செய் தாலும்
சொல்லரிய பேரின்பந் தோன்று மோதான்

பித்தர்களே கல்லுகளை விலைக்கு வாங்கிப்
பிராணென்று சிலையிலே முடிந்து கொண்டு
செத்தபின்பு கைலாசம் சேர்வ மென்றால்
சேர்வதில்லை அருநரகம் சேர்வீர் தானே—என்றும்,

சற்குருவை அறியாம லுலகிலேதான்
சண்டாளர் கல்லுகளைத் தெய்வ மென்று
பொய்க்குருக்கள் சொன்னபுத்தி தன்னைக் கேட்டுப்
பூசைசெய்து கல்லுகளைப் போற்றி செய்வார்—என்றும்,

அண்டரண்டம் கடந்துநின்ற சோதி தானே
அவனிதனி லுடைந்தகல்லில் அமரு மோதான்
எண்டிசையும் எவ்வுயிரு மான சோதி
ஈனமரம் கல்லுகளி லிருக்கு மோதான்
தொண்டர்களே உங்களுக்கேன் இந்தவார்த்தை [றும்,
சொன்னவர்க்கும் கேட்டவர்க்கும் சொர்க்கமில்லை—என்

மண்ணிலே பிறந்த கல்லை வகைவகை தெரிந்தெடுத்தே
எண்ணிலா லிங்க மாக இயலுடன் கோயில்கட்டி
பண்ணியே வைத்துப்பின்னும் பலபல பூசைசெய்தால்
விண்ணிலே சேர்வ தில்லை வீணிலே நரகில்வீழ்வார்
என்றும் ஷை நாதாந்த விளக்கத்திலும்,

சாவதான தத்துவச் சடங்குசெய்யு மூமைகாள்
தேவர்கல்லு மாவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்
மூவராலு மறியொணாத முத்தொழிற் பரம்பொருள்
காவலாக வும்முளே கலந்திருப்ப துண்மையே,

நட்டுவைத்த தேவரும் நடாமல்வைத்த தேவரும்
சுட்டுவைத்த தேவரும் சுடாமல்வைத்த தேவரும்
கட்டிவைத்த புத்தகக் கதைக்குளர் புரட்டெலாம்
பெட்டதாய் முடிந்ததே பிராணையா னறிந்தபின்,

நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்துமீர்
சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை யறியுமோ.

ஓசைபெற்ற கல்லைநீ குடைந்துருக்கள் செய்கிறீர்
வாசலிற் பதித்தகல் மழுங்கவும் மிதிக்கிறீர்
பூசைபெற்ற கல்லிலே பூவும்நீரும் சாத்துறீர்
ஈசனுக் குகந்தகல் லிரண்டுகல்லு மல்லவோ—என்றும்,

பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்க ளெத்தனை
மிண்டனாய்த் திரிந்தபோ திறைத்தநீர்க ளெத்தனை
மீளவும் சிவாலயங்கள் சுற்றிவந்த தெத்தனை
அண்டர்கோ னிருப்பிடம் அறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.

வேடமிட்டு மணிகுலுக்கி மிக்கதூப மிட்டுமே
தேடிவைத்த செம்பெலாம் திரள்படப் பரப்பியே
என்றும் சிவவாக்கியரும் பற்பலவிதமாய்ச்
சொல்லியிருக்கின்றனர்.

வினா—பிரஹ்மத்தின் குணகர்மங்களைக்கருதி தமிழ் நாட்டார் பல பெயர்களைவைத்து வர்ணித்திருக்கிறார்களா? அப்பெயர்களில் சில வற்றைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—சொல்லுகிறோம் கேளும்—

கடவுள்—அகண்டாகண்டன், அகநிலை, அகாரி, அசலன், அச்சயன், அச்சுதன், அடிகள், அதிகுணன், அதுலன், அத்தன், அந்தாதி, அபயன், அமலன், அருட்குடையோன், அருளாழிவேந்தன், அரூபி, அறக்கொடியோன், அறவாழிமன்னன், அறுகுணன், அன

கன், அனந்தஞானி, அனந்த லோசனன், அனந்தன், அனாதி, ஆதி, ஆதிபுங்கவன், இறையோன், ஈசன், ஈச்சுரன், ஈறிலி, உள்வழிநடந்தோன், உள்ளத்துறைவோன், எண்குணன், ஏகதேவன், ஏகன், ஐ, ஐம்புலத்தடங்கான், கருணாலயன், கருத்தா, குணநிதி, குணபத்திரன், சகாதன், சகலவியாபி, சச்சிதானந்தன், சதானந்தன், சயம்பு, சருவேச்சுரன், சாமி, சிபதி, சோதி, தற்பரன், தனிக்கோலான், தாபரன், தேவன், தேவாதி, நாயகன், நிதானன், நித்தன், நிமலன், நிரஞ்சனன், நிரந்தரன், நிரம்பரன், நிராமயன், நிருநாமன், நிருமலன், நிரூபன், நீதிபரன், பகவன், பகாப்பொருள், பரஞ்சோதி, பரதுக்கதுக்கன், பரப்பிரமன், பரமம், பரமேச்சுரன், பரம்பராபாம், பிதா, பிரமம், பிரான், பிறப்பிறப்பில்லான், புங்கவன், பூரணன், மகேச்சுரன், மாசேனன், முக்குற்றங்கடிந்தோன், முதலோன், முத்தொழிற்பகவன், முழுதொருங்குணர்ந்தோன், மூன்னூற்கேள்வன், மூன்னோன், மூவுலகாதாரன், மூவுலகாளி, மூவுலகேந்தி, விதித்தோன், விமலன், வினை, விநாசன், வேதன், வேதா, வேதாந்தன், வேதார்த்தன்.

## பிரஹ்ம லக்ஷணம்

(விசேஷ உரை.)

ஆரியர் வேதத்தைச் சார்ந்த (சாந்தோக்யம், 398-ல் "ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம")=தனக்குஒப்பும்உயர்வான இரண்டாவதற்ற பரமாத்மா ஒருவன் என்றும், (தைத்ரியம் 11-1-ல் "ஸத்யக்ஞாநமநந்தம் பிரஹ்ம")=பிரஹ்மம் ஸத்யஸ்வரூபியும், ஞாநஸ்வரூபியும், இவ்வளவும் நீளம், இவ்வளவு உயரம், இவ்வளவு அகலம் என்று சொல்லி முடியாத அநந்த ஸ்வரூபி என்றும், (முண்டகம் 11-2-9 ல் " தச்சுப்ரம்ஹஜ்யோதிஷாம் ஜ்யோதி: தத்ய

தாத்ம விதோவிது :"=சர்வ சக்தியுள்ள பிரஹ்மம் பரி சுத்தமானவனென்றும், எல்லாவித ஜ்யோதி பிரகாசங்க ளுக்கும் பிரகாசமானதென்றும், உண்மையான ஞான முடையவர்களால் மாத்திரம் அறியப்படத்தக்கது என் றும், (சாந்தோக்யம் 3-13-7 ல் " அதயதத: பரோதிவ்ய ஜோதிரிதப்யதே")=(அந்த பிரஹ்மம்) அகண்டாகார பிர காசமாகி இம்மண்ணுலகிலும் வேறு உலகங்களிலும் பிரகாஸிப்பது என்றும், (ஷை 4-15-1 ல் " ஏதததமிர்தமே தத்பிரஹ்மேதி")=எது அழிவற்றதோ, எது சுகசேது வைப் போன்றதோ அதுவே பிரஹ்மம் என்றும், (முண் டகம் ப. 267, கடம் ப. 152-ல் " அத்ரேசியம்")=கண்டு பிடிக்கக்கூடாதது என்றும், (முண்டகம் ப. 268-ல் " நித் யம் விபும் ஸர்வகதம்") = நிரந்தரம் எங்கும் பரந்து நிறைந்திருக்கிறது என்றும், (முண்டகம் 27-ல் " தபஸா சீயதே பிரஹ்ம ததோந்நம்பிஜாயதே") = அதன் சர்வ ஞானசக்தியினால் பிரபஞ்சத்தையும் பிரகிருதியையும் சிருஷ்டிப்பது என்றும், (கேநம் ப. 39-ல் " நதத்ரசக்ஷுர் கச்சதி")=நமது பார்வையினால் எட்டிமுடியாதது என்று ம், (ஷை ப. 36-ல் " நவாக்கச்சதி")=வாக்கினால் வர்ணிக்க முடியாதது என்றும், (ஷை 39-ல் " நோமநோ")=பாஷை யினால் பேசி முடியாதது என்றும், (ஷை ப. 39-ல் " நவித் மோ") = அது அறியக்கூடிய எல்லாவற்றிற்கும் அதீத மானது என்றும், (ஷை ப. 39-ல் "நவிஜாநீமோ")=அறிவ தற்கரிதான இயற்கைக்கும் அப்புறமானது என்றும், (ஷை ப. 43-ல் "யத்வாசா நப்யுதிதம்")=எந்த பாஷையி னாலும் எப்போதும் வர்ணிக்கமுடியாதது என்றும், (ஷை 43-ல் " யேநவாகப்யுத்யதே") = பாஷையை வர்த்திக்கச் செய்வது என்றும், (ஷை 44-ல் " யந்மநஸா நமநுதே")= அறிவினாலும் அறியக்கூடாதது என்றும், (ஷை 44-ல் " யேநாஹுர்மநோமதம்")=அறிவை விளங்கச்செய்வது

என்றும், (பிருஹதாரண்யகம் 3-9-28-ல் "விக்ஞானமா நந்தம் பிரஹ்ம")=இறுதியற்ற ஞானமும், அருளுமுடையது என்றும், (கடம் 6-வது அத்தியாயம், 9-வது வாக்கியத்தில் "ஸஸம்திரிசே திஷ்டதி, ரூபமஸ்ய, நசக்ஷுஷா பாபச்யதி, கஸ்சநைநம், ஹ்ருதாமநீஷாம் நஸாவிகிள்ப தோ ஏதத்வித்து") = பிரஹ்மம் (நமது பார்வையில்) ரூபமற்றதென்றும், ஒருவராலும் கண்களால் காணமுடியாததென்றும், ஹிருதயத்தினலும் மனதினலுமாத்திரம் அறியத்தக்கது என்றும் சொல்லி இருப்பதால்; இப்படி எவ்வித குறிப்பான பெயரும், ரூபமுமில்லாத பிரஹ்மத்தைப் பாமரர் அறிந்துய்வது கஷ்டசாத்தியமென்று கண்டு அக்குறைவை நீக்கக்கருதியே சில சுருதிகளில் அந்த பிரஹ்மத்தைப் புருஷாகாரமாக வர்ணித்திருக்கின்றது. எப்படியெனில்—

(ப்ருஹதாரண்யகம் 1-4-1 ல் "ஆத்மைவேதமக்ர ஆஸீத், புருஷவித:")=ஆதியில் ஒரேபரப்ரஹ்மம் மநுஷரூபமாக இருந்தது என்றும், (தைத்ரீயம் 2-2-5 ல் = "ஸவாஏஷபுருஷவிதஏவ")=அந்த பிரஹ்மம் புருஷவடிவானவன் என்றும், (சாந்தோக்யம் 1-6-6ல் "ய ஏஷோந்த ராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஸ்யதே")=சூரியனில் பொன்மேனியாக காணப்படுபவன் என்றும், ("ய ஏஷோந்தரக்ஷிணி புருஷோத்ருஸ்யதே")=ஞானக்கண்ணல் பார்க்கக்கூடிய பிரஹ்மம் புருஷரூப முடையவனென்றும், (பிரஹ்ம சூத்திரம் 1-1-21ல் 'அந்தஸ்தத்தர் மோபதேசாத்') என்னும் சூத்திரத்தின் பாஷ்யம் செய்த ஸ்ரீராமாநுஜர் ("ததிதம் ஸ்வாபாவிகமேவ ரூப முபாஸகாநுக்ரஹேண தத்தத் ப்ரதிபத்வநுகுணகாரம் தேவ மநுஷ்யாதி ஸம்ஸ்தாநம்கரோதி ஸ்வேச்சையைவபரம காருணிகோபகவாந்")=கருணாநிதியாகிய கடவுள் தனது உண்மையான அடியாருடையபிரார்த்தனைகளுக்கு உவந்து

அவர்களுடைய கோரிக்கைகளுக்கும் காலதேச வர்த்த மானங்களுக்குமேற்ற தேவமநுஷ்யாதி ரூபங்களாகப் பிரகாசிக்கிறவன் என்றும், ("அகிலஹேய ப்ரத்யநீகாநந்த ஞாநாநந்தாதி கல்யாண குணகணநிதி:") = இறுதியற்ற ஞாநமும், அருளும் நிறைந்த நிதியும் குற்றங் குறைவும் அற்றவன் என்றும், (சாந்தோக்யம் 8-1-5 ல் "ஏஷ ஆத்மா பஹத பாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸோபிபாஸ:ஸத்யகாமஸ் ஸத்யசங்கல்ப:")= அந்த பரமாத்மா "அபஹதபாப்மா" = கிஞ்சித்பாவமும் அற்றவன் என்றும், "விஜர:" = முதுமையற்றவன் என்றும், "விம்ருத்யு:" = மரணமற்றவன் என்றும், "விசோக:"=விசனமற்றவன் என்றும், "விஜிகத்ஸ:"=பசியற்றவன் என்றும், "அபிபாஸ:" = தாகமற்றவன் என்றும், "ஸத்யகாம: அல்லது அவிதத்தகாம:"=ஸத்யமான விருப்பமுடையவன் என்றும், "ஸத்பஸங்கல்ப:"=ஸத்யமான எண்ணமுடையவன் என்றும்,

(தைத்ரேயம் 11-1-1ல் "ஸத்யம் ஞாநமநந்தம்பிரஹ்மம்")=ஸத்யஸ்வரூபியும் ஞாநஸ்வரூபி அநந்தஸ்வரூபி என்றும் (சுவேதாஸ்வதரம் 4-8-ல் "பாரஸ்ய சக்திர்விவிதைவஸ்ரூயதே ஸ்வாபாவக ஞாநபலகிரியாச")=அவன் பூர்ண பலத்தையும், அபார சக்தியையும் உடையவன் என்றும், (முண்டகம் 3-1-7 ல், ப்ருஹச்ச தத் திவ்யமசிந்த்ய ரூபம், சூக்ஷ்மாச்ச தத் சூக்ஷ்மதரம் வியாதி, தூரஸ்து தூரே ததி ஹாந்தகேச பச்யஸ்த்வ ஹைவ நிஹிதம் குஹாயாம்")=அந்த பிரஹ்மம் அறியக்கூடாத சிறியதிலும் சிறியவனாகவும், பெரியதிலும் பெரியவனாகவும் பிரகாஸிக்கிறவன் என்றும், அவனை அறியத்தக்க மஹான்களுடைய ஹிருதய குஹையில் ஜகஜ்ஜோதியாக பிரகாசிக்கும் ஐஸ்வரியவான் என்றும், (நிருசிம்ஹதாபநீயம் 2-4-ல் "நாவீர்யதம சிரேஷ்டதமஸ்ச")=மஹா வீரியவான் என்

-றும், (சுவேதாசுவதரம் 6-8-ல் "பாரஸ்ய சக்திர் விவிதைத வஸ்ரூயதே")=சக்திகளிலெல்லாம் சிறந்த சக்தியையுடையவன் என்றும், (ஈசாவாஸ்யம் 1-16ல் "ஸமூஹதேஜ:")=சகல தேஜசுகளிலும் சிறந்த தேஜஸையுடையவன் என்றும், "ஷாட்குண்யநிதி:" ஞானபலைஸ்வர்ய வீர்ய சக்தி தேஜாம்ஸி என்னும் ஆறுவித சிறந்த குணங்களையுடையவன் என்றும், பிரஹ்மத்தின் இப்படிப்பட்ட விசேஷ குணங்களையும் சாதாரண ஜனங்கள் அறிந்துய்ய சக்தியற்றுப்போகவே; அந்த ஏக பிரஹ்மத்தையே (விஷ்ணு புராணம் அதி. 1-10-56 ல்) "பிரஹ்மத்வே ஸ்ருஜதே விச்வம், ஸ்திதௌ பாலயதேபுந:, ருத்ர ரூபாய கல்பாந்தே நமஸ்துப்யம் த்ரிமூர்த்தயே" = (அந்த பிரஹ்மம்) பிரஹ்மாவாக இருந்து சிருஷ்டிப்பவன் என்றும், சிருஷ்டித்ததை விஷ்ணுவாக இருந்து ரக்ஷிப்பவன் என்றும், முடிவில் ருத்ரனாயிருந்து அழிப்பவன் என்றும், திரிமூர்த்தி ஸ்வரூபமாக்கிக் காட்டியதன்றியில், அதைப் பின்னும் விவரமாக அறிந்துய்ய வேதங்களில் "தமி: ந: பிதாவஸோத்வ மிவஜோமாதா" = பிரஹ்மம் தகப்பனாக இருப்பவன் என்றும், தாயாக இருப்பவன் என்றும், "ஸகாபிதா பித்ருத்ரம: பித்ரூணாம்"=பிதாவைப்போல புத்திரனைப் பாதுகாப்பவன் என்றும், சிரேஷ்டமான சிநேகிதன் என்றும், சொல்லப்பெற்றிருக்கின்றது.

இப்படி பிரஹ்மத்தை ஜகத்பிதா என்றும், மாதா என்றும், சிநேகிதன் என்றும், பொதுப்படச் சொன்னதில்; சகலரும் அதைச் சுலபமாக அறிந்துய்ய சக்தியற்றிருப்பதைக்கண்டு கேவலமான சாதாரண ஜனங்களும் அறிந்துய்யும்படி "பிதாச ரக்ஷகஸ்ஸேஷி பர்த்தாஜ்ஞேயோ ரமாபதி: ஸ்வாம்யாதா ராமமாத்மாச போக்தாசாத்ய முதாஹ்ருத:" என்னும் சிறந்த வாக்யத்தை யநுசரித்தும், அஷ்டாக்ஷர மந்திரத்தை யநுசரித்தும் ஒவ்வொரு

குடும்ப பரிவார பந்துத்துவ உதாரணத்தால் பிரபலப் படுத்தப்பட்டிருக்கிறது. எப்படியெனில் அந்த பிரஹ்மத்தை—

ஓம் நமோ நாராயணாய : என்னும் அஷ்டாக்ஷரத்தில்,

அகாரத்தாலே = பிதாபுத்ர சம்பந்தமும் [பந்தமும்
அவரக்ஷணே = என்னும் தாதுவினாலே ரக்ஷ்ய ரக்ஷக சம்
லுப்த சதுர்த்தியாலே = சேஷசேஷி சம்பந்தமும்
உகாரத்தாலே = பாத்ருபார்யை சம்பந்தமும்
மகாரத்தாலே = க்ஞாத்ரு க்ஞேய சம்பந்தமும்
நம: பதத்தாலே = சொம்முஸ்வாமி சம்பந்தமும்
நாரபதத்தாலே = சரீரசரீரி சம்பந்தமும்
அயனபதத்தாலே = ஆதார ஆதேய சம்பந்தமும்
ஆயபதத்தாலே = போக்தா போக்ய சம்பந்தமும்.

ஆக இந்த நவவித (ஒன்பதுவித) சம்பந்தத்தை ஒவ்வொரு குடும்பத்திலிருக்கும் பிதா புத்திராதி உதாரணங்களைக்கொண்டும், அதிக சாதாரணமான ஜநங்களும் தெள்ளத்தெளிய அறியும்படி பிரகாசப்படுத்தப் பெற்றிருக்கின்றது. எப்படியெனில்,

1-வது பிதாபுத்ர சம்பந்தம் (The Relationship of Father and Son) = இந்த பிதாபுத்ர சம்பந்தத்தை விசேஷண விசேஷ்ய சம்பந்தம் என்றும் சொல்லலாம். அதாவது ரிக்வேதம் 10-82-3 ல் "யோந: பிதாஜநிதா யோவிதாதா"=பிரஹ்மம் நம்மைப் பெற்றவனென்றும், பிறப்பித்தவனென்றும், ஆளுபவனென்றும் சொல்லி இருப்பதாலும்; ஸ்வேதாச்வதரத்தில் "ஸநோபந்துர் ஜநிதா ஸவிதாத" = பிரஹ்மம், நமது பந்துவென்றும், பிறப்பித்தவன் என்றும், ஆளுபவனென்றும் சொல்லியிருப்பதாலும், கீதை 9-17-ல் பிதாஹமஸ்ய ஜகதோ

மாதா தாதா பிதாமஹ: = உலகத்திற்கு பிதாவென்றும், மாதாவென்றும், போஷகனென்றும் பாட்டனென்றும் சொல்லி இருப்பதாலும், ஷை 14-4 ல் "ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தயஸ் ஸம்பவந்தியா: தாஸாம் பிரஹ்ம மஹத்யோநி ரஹம்பீஜப்ரத: பிதா" = சிருஷ்டியின் பற்பல கர்ப்பத்தில் என்னென்னவிதமான ரூபங்களுண்டாக்கப்படுகின்றனவோ அவற்றிற்குப் பிரகிருதியே தாய் என்றும், அவைக்குப் பிரஹ்மமாகிய நான் பீஜமும் பிதாவும் என்றும் சொல்லி இருப்பதனுல், ஜீவாத்மாவாகிய மநுஷனுக்குப் பரமாத்மாவாகிய பிரஹ்மமே தந்தையாக இருக்கிறுன் என்பது ஸ்பஷ்டமாகிறது. இவ்வுலகத்தில் ஒரு பிதாவுக்கும், அவனது பிள்ளைகளுக்கும் இருக்கும் சம்பந்தம் ஆச்சரியகரமானதாக அமைக்கப்பெற்றிருக்கிறதன்றே. பிதாமாதாக்கள் தம் மக்களுடைய க்ஷேமத்துக்காகப் பாடுபடுவதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கும் விஷயம். மக்கள் தமக்கு வேண்டுவனவற்றைத்தெரிந்து கேளாதிருக்கையிலும் பெற்றோர் அவர்களுடைய தத்கால க்ஷேமத்துக்கு வேண்டியனவற்றையும், அவர்களுக்குப் பிற்கால க்ஷேமத்திற்கு வேண்டியனவற்றையும் எவ்வளவோ அன்புடன்செய்து சேகரித்து வருகிறுர்கள். தம்மக்கள் நல்லவழிகளைவிட்டுத் தீயவழிகளில் பிரவேசிக்கிறதைக்காணில் உடனேக்குடனே அவர்களை அன்பின் மிகுதியால் தக்கபடி கண்டித்துத் திருத்தி வருகிறுர்கள். பிள்ளைகளுடைய கல்வி, ஞானம், கைத்தொழில், கலியாணமுதலான விஷயங்களுக்காகப் பெற்றோர்படும் கஷ்டம் கொஞ்சமாமோ? சில மக்கள் பெற்றோர் வார்த்தைகளுக்கும் பெரியோர் நீதிகளுக்கும் கட்டுப்படாமல் கொள்ளை கொலை முதலான கொடிய காரியங்களைச் செய்யினும், அவைகளையும் பொருட் செய்யாமல், அவர்களை அன்போடு நேசித்து

வருவது உலகப்பிரசித்தம். தம்மக்கள் கடுநோய் முதலானவைகளால் பீடிக்கப்பட்டபோது பெற்றோர்படும் துயரமும் கஷ்டமும் கொஞ்சமோ? மக்களைக்காக்கப்பிராணனையும் தமது அருமையான பணத்தையும் தத்தம் செய்யப் பெற்றோர் துணிந்திருக்கின்றனரல்லவா? இந்த பிதாபுத்ரபாசம் அறிவுள்ள மானவஜாதியாருக்கு மாத்திரமல்ல, கேவலமான பக்ஷிகள் தம் குஞ்சுகளுக்கு அபாயமுண்டாகும்போது பரிதபிப்பது விந்தையல்லவே. பசு முதலான மிருகங்கள் தம் கன்றுகளுக்கு ஆபத்து வரும்போது துடிப்பது திண்ணமல்லவோ? இது இயற்கையாக பிதாமாதா பாசம். அதுபோலவே பரமாத்மாவாகிய பிதா, ஜீவாத்மாவாகிய மநுஷர்கள் பாவவழிகளில் பிரவேசித்து இகலோக பரலோக சுகங்களை இழந்து உருங்காலத்தில் அவர்களை ஸ்வதசித்த ஞானத்தால் திருந்தும்படி செய்விக்கிறான். இப்படிச் செய்விப்பதற்கே அவினாபூத சம்பந்தம் என்று சொல்லலாம். அதாவது பரமாத்மா ஜீவாத்மாவைவிட்டுப் பிரியாமல் அதற்கு வேண்டிய உதவிகளை வலிய பிரசாதிக்கிறான் என்பதேயாம். இதை விசேஷண விசேஷ்ய சம்பந்தம் என்றும் சொல்லலாம். அதாவது ஒரு பொருளுக்கும் அதன் சத்துக்குமுள்ள சம்பந்தம். அதாவது ஒரு துணிக்கும் அதிலிருக்கும் வருணத்திற்கும், ஒரு புஷ்பத்திற்கும் அதிலிருக்கும் சுவாசனைக்கும் எவ்வளவு சம்பந்தமிருக்கிறதோ அப்படிப்பட்ட சம்பந்தமே பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் இருக்கிறதென்பதாம். இச்சம்பந்தத்தை "பிரகார பிரகாரி சம்பந்தம்" என்றும் சொல்லலாம். அதாவது ஒரு வஸ்துவுக்கும் அதன் பலவித மாற்றத்துக்குமுள்ள சம்பந்தமாம். உதாரணமாக காற்று ஒன்றாக இருக்க, அதிலிருந்து காந்தாரம், மத்யமம், தைவதமுதலான பேதங்களுண்டாகிறதைப்போலவாம். இப்படி பரமாத்மா ஜீவாத்மாவை

இணைபிரியாமல் சேர்ந்து பாதுகாத்தலால் அந்த பரமாத்மா ஜீவாத்மாவுக்கு பிதாபுத்திர சம்பந்த முடையவன் என்று சொல்லப்பெற்றது.

2-வது இரக்ஷ்ய ரக்ஷக சம்பந்தம் (The relationship of the Protector and the Protected)=அதாவது (ஸ்வேதாஸ்வதரம் 6-17-ல் "கஞஸர்வகோ புவநஸ்ய கோப்த") = அவன் அறிபவன், எப்போதும் இருப்பவன், உலகரக்ஷகன் என்று சொல்லி இருப்பதாலும், (கிருஷ்ணோபநிஷத்து 21-ல் "ஸம்ஹாரார்த்தம்ச ஸத்ரூணும், ரக்ஷணாயச ஸம்ஸ்திக:") = அவன் துஷ்டர்களைக்கண்டித்து சாதுக்களை ரக்ஷிக்க இருக்கிறான் என்று சொல்லி இருப்பதாலும், (இராமாயணம் 1-1-13ல் "ரக்ஷித ஜீவலோகஸ்ய தர்மஸ்ய பரிரக்ஷிதா")=அவன் பிராணி கோடிகளை ரக்ஷிப்பவன் என்றும், தர்மங்களைக் காப்பவன் என்றும், (பகவத்கீதை 9-29 ல் "ஸமோஹம் ஸர்வபூதேஷு நமேத்வேஷ்யோஸ்தி ந: ப்ரிய:")=விரோதமும் அன்புமற்று எல்லாப் பிராணி கோடிகளிடத்தும் சமமாக இருப்பவன் என்றும் சொல்லி இருப்பதாலும், பரப்ரஹ்மமாகிய இரக்ஷகன் ஜீவாத்மாக்களாகிய மானவஜாதியாரை இரக்ஷித்து வருகிறான் என்று சொல்லப்பெற்றது. இந்த ரக்ஷ்யரக்ஷக சம்பந்தத்தை இரண்டு வகையாகப்பிரித்துச் சொல்லலாம். முதலாவது, ஜகதீஸ்வரனுடைய ஆக்ஞைகளாகிய சத்தருமங்களை யநுஷ்டித்து சதா பகவத் பாராயணர்களாக இருப்பவர்களைப் பாதுகாப்பதாம். அவர்களைப் பிரம்மஸூத்திரம் 4-4-17-21 ல் செப்பி இருக்கிறபடி அந்த சாதுக்களைத் தருமவழியினின்று பிசகாதபடி பாதுகாத்து கடைசியில் அவனது கருணை ஞானம் ஆநந்தத்தைக்கொடுத்து இரக்ஷிப்பதாம். இரண்டாவது, சத்தருமவழிகளை யநுஷ்டிக்காமல் துஷ்ட சாவகாசத்தால் துர்க்கிருத்தியங்களைச்செய்து

உலகத்தாருக்கும் நடக்கும் தீங்குகளை விளைவிக்கும் துஷ்டர்களையும் காலத்துக்குக்காலம் தக்க சிக்ஷைகளால் சீர்திருத்தி சத் சம்பிரதாயங்களை யநுஷ்டிக்கச் செய்வித்து அவர்களுக்கு இகபர சுகங்களைக்கொடுத்து இரக்ஷித்தலாம். ஆக, இவ்வுலகில் நல்லவர்களை ரக்ஷிப்பதைப் போலவே தீயோர்களையும் தக்கபடி சிக்ஷித்துக்கடைசியில் இரக்ஷிப்பவனுகையால் பரப்ரஹ்மத்தை இரக்ஷ்ய ரக்ஷக சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

3-வது சேஷசேஷி சம்பந்தம் (The relationship of the Appropriator and the Appropriable)=அதாவது (கடோபநிஷத்து 1-3-13 ல் "ஞானமாத்மநி மஹதி நியச்சேத் தத்யச்சேச்சாந்த ஆத்மநி") = புத்திமான் தன் ஞானத்தைத் தனக்குள் அடக்கமாகக்கொண்டு பரமாத்மாவின் கட்டளைகளுக்கடங்கி நடக்கவேண்டுமென்று சொல்லி இருப்பதாலும், (கடம் 2-3-17 ல் "அங்குஷ்டமாத்ர: புருஷோந்தராத்ம ஸதாஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட: தம்ஸ்வாசரீராத் ப்ரவ்ருஹேந் முஞ்ஜாதிவேஷீகாம்தை ரேண்ய") = சகலருடைய ஹிருதயங்களில் அந்தராத்மாவாக இருக்கும் பிரஹ்மம் பக்தர்களுக்காகச் சிற்றுருவாகத்தோன்றும் மஹாபுருஷன் என்றும், ஞானிகள் தமது ஆத்மாவேருகவும், பரமாத்மா வேருகவும் இருப்பதாக அறியவேண்டியதென்றும், (கடம் 11-6-17 ல் "பரப்ரஹ்மம் தாரகத்வம்=பிரபஞ்சத்தைப் பாதுகாப்பவன் என்றும், நியந்த்ருத்வம் = பிரபஞ்சத்தை யாளுபவன் என்றும், சேஷத்வம்=அநுபவிப்பவன்) என்றும் சொல்லி இருப்பதாலும், (பகவத்கீதை 7-5 ல் "அபரேய மிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்திமேபராம் ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதேஜகத்") = காணப்படும் பிரபஞ்சமெல்லாம் தனது தாழ்ந்த பிரகிருதி என்றும், இதற்கு வேருனதும் இவை யாவற்றையும்

காக்கப்பட்டது மேலான பிரகிருதி என்றும், ஜீவாத்மாக்கள் தனது சரீரமென்றும் சொல்லி இருப்பதனுலும் சேஷசேஷி சம்பந்தம் ஸ்பஷ்டமாகிறது. அதாவது, பரப்ரஹ்மம் சர்வவல்லமையும், சர்வசக்தியும் உள்ளதலைவனும், பிரபஞ்ச ஏக சக்ரவர்த்தியும் (சேஷீ) சகல பொருளையும் தனதாகக் கொண்டவனுமாகையால்; ஜீவத்மா (சேஷி) அவனையே ஆதாரமாகக்கொண்டு அவனுடைய ஆக்ஞைக்குள் அடங்கி இருக்கின்றது. ஜீவாத்மா அந்த பரமாத்மாவின் ஆக்ஞைக்குள் அடங்கி இருத்தல் என்றால் அவனுடைய திருவுளப் பாங்கின்படி. சத்தருமங்களை யநுஷ்டித்து சதா பிரஹ்ம தியானத்திலிருப்பதாகையால், பரமாத்ம ஜீவாத்மாக்கள் இரண்டும் 'தானும் தனக்குரியவன்' என்னும் சம்பந்தத்தில் கட்டப்பட்டிருக்கிறார்கள். அதாவது ஜீவாத்மாவாகிய (தேஹியின்) ஆக்ஞையின்படி (சரீரத்தைச்சார்ந்த) மநம் புத்தி முதலான பொறிபுலன்கள் நடக்கின்ற விதமாக, பரமாத்மாவின் ஆக்ஞைக்குட்பட்டு ஜீவாத்மா நடந்து இரண்டும் தானும் தனக்கு உரியவனுமாக இருக்கிறதாகையால் சேஷசேஷி சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

4-வது பர்த்ருபார்யா சம்பந்தம் (The relationship of Husband and Wife)=அதாவது (ஸ்வேதாஸ்வதரம் 1-8 ல் "ஸம்யுக்தமேதத் க்ஷரமக்ஷரஞ் சவ்யக்தாவ்யக்தம் பரதேவீ சர்வமீச:")=அழிவதும் அழிவற்றதும் தோன்றியதும் தோன்றாததுமாகிய சகல பொருள்களையும் பரமேஸ்வரன் போஷித்து வருகிறான் என்று சொல்லி இருப்பதாலும், (ப்ருஹதாரண்யகம் 1-4-3 ல் "ஸஇமமேவாத்மாநம் த்வேதா பாதயாத் தத: பதிஸ்ச பத்நீசாபவ்தாம்") = ஏகனான பரமாத்மாவே இரண்டு பாகங்களாகமாற்றம்பெற்று நாயகனும் நாயகியுமானார்கள் என்று

சொல்லி இருப்பதனுலும், (கீதை 7-17 ல் "ப்ரியோஹி ஞாநிநோத்யர்த்த மஹம்ஸச மமப்ரிய:") = என்னை யாராதிக்கும் ஞாநிக்கு நான் அதிக ஆப்தனுகவும், அவன் எனக்கு அரிய அன்பனுகவும் இருக்கிறுன் என்றும், (ஷை கீதை 9-29 ல் "யேபஜந்திது மாம் பக்த்யா மயிதே தேஷு-சாப்யஹம்")=என்னை யார் உண்மையான பக்தி சிரத்தையோடு ஆராதிக்கின்றனரோ அவர்கள் எப்போதும் என்னிடமே இருப்பார்கள், அப்படிப்பட்டவர்களுக்கு நான் அந்தராத்மாவாக எப்போதும் குடிபுகுந்திருப்பேன் என்று சொல்லி இருப்பதனுலும், (இராமாயணம், 2-யுத்தகாண்டம் 118-18 ல் "அநந்யாஹிமயா ஸீதா பாஸ்கரேண ப்ரபாயதா") = பிரபைகள் பிரபாகரனைவிட்டுப் பிரிந்திராததுபோல என்னைவிட்டு சீதை தனியாக இருக்கமாட்டாள்என்றும், (ஷை இராமாயணம் சுந்தரகாண்டம் 21-15 ல் "அநந்யராகவேணுஹம் பாஸ்கரேண ப்ரபாயதா")=சூரியனைவிட்டு சூரிய பிரபைகள் எப்படி பிரிந்திருக்கமாட்டாவோ அப்படியே நானும் எனது கணவனுகிய வீரனைவிட்டுப் பிரிக்கப்படாதவள் என்று சொல்லி இருப்பதனுலும் பரமாத்ம ஜீவாத்மாக்கள் பர்த்ருபார்யா சம்பந்தமுடையவர்கள் என்பது ஸ்பஷ்டமாகும். இதில் பரமாத்மா நாயகனுகவும், ஜீவாத்மா நாயகியாகவும் காட்டப்பெற்றிருக்கிறது. என்றுல் கணவனும் காப்பவனுமாகையால் பர்த்ரு=நாயகன் என்றும், பாதுகாக்கப் படுபவளாகையால் பார்யா என்றும் சொல்லப்பெற்றது. பிரபஞ்சங்களும் அவற்றிலுள்ள ஸ்தாவர ஜங்கமமாகிய பொருள்களும் பிரஹ்மத்தினுடைய ஆளுகைக்கும் ஆதரவுக்கும் உட்பட்டிருப்பதால் பரமாத்மாவைப் புருஷன் என்றும், பிரபஞ்சங்களும் அவற்றிலுள்ள ஸ்தாவர ஜங்கமங்களும் அப்புருஷனுடைய பாதுகாப்பைப் பெற்றிருப்பதால் அவைகள் நாயகிகளாகவும் இருக்கின்றன. இப்படி நாயகன் நாயகி

யாகிய இவைகள் இணைபிரியாத சம்பந்தமுடையது ஆச்சரியமான அமைப்பல்லவா? இதைப்பற்றியே சிலர் பரமேஸ்வரனை அர்த்தநாரீஸ்வரன் என்று பெயரிட்டு வணங்கி வருகிறார்கள். மேலும் உத்தமியான பதிவிரதையானவள் சதா தன் நாயகனுடைய கருத்தையறிந்து அவனது இஷ்டப்படி பணிவிடைசெய்து மகிழ்விப்பதில் தனது அருமையான காலம் போக்குவதிலும், நாயகனுடைய சுகதுக்கம் தனதாகப் பாவித்து உழைத்து வருவதும் பிரத்தியக்ஷம். உணவு முதலான பொருள்களிற் சிரேஷ்டமானவைகளைத் தன் நாயகனுக்குக் கொடுத்துவிட்டு, கஞ்சியோ கூழோ குடித்து உயிரைக்காத்து தன் நாயகன் படுத்தபோதும் கால்வருடி பின்தூங்கி முன்னெழுந்து நாயகன் மகிழ்நிற்கும் மங்கையரின் மேன்மை மண்ணுலகில் சொல்லப்போமோ? இப்படிப்பட்ட நாயகியை அந்நாயகன் தனது கண்ணுக்குக் கண்ணைப் பாவித்து அவளைப் பாதுகாத்து வருவதும் பிரத்தியக்ஷம். மேலும் பூலோகத்தில் சில பொருள்கள் கண்களுக்கு மாத்திரம் அழகானவைகளாகவும், சில மூக்குக்கு மாத்திரம் வாசனையுள்ளவைகளாகவும், சில காதுகளுக்கு மாத்திரம் இனிய கீதமுடையவைகளாகவும், சில வாய்க்கு மாத்திரம் ருசியுடையவைகளாகவும் இருக்கும். ஆனால் உத்தம பதிவிரதையானவள் கண்களுக்கு அழகும், காதுக்குகந்த இனியகுரலும், மூக்குக்கேற்ற வாசனையும், அவள் இதழ்இனிய ருசியும், அவள்தேகம் புஷ்பத்தைப்போன்ற மெதுவும் வாசனையுமாகி அவளுடைய சகல உறுப்புகளும் புருஷனுக்கு ஆநந்தம் விளைவிக்கக்கூடியவைகளாக இருப்பதால் பொய்யாமொழிப்புலவர் "கண்கண்டுட்டயர் ஐம்புலனும் ஒன்றோடி" எனச்சொல்லியிருக்கின்றனர். சத்தருமங்களை யநுஷ்டித்து சதா தன் நாயகனை திய பாபாக்களைப்பணிந்து அவனது திருவளப்பாங்

கின்படி நடக்கும் ஜீவாத்மாக்களை அப்பரமாத்மா பாது காத்துப்போஷித்து வருவது பிரத்தியக்ஷமாகையால் அந்த பரமாத்மாவைப் பர்த்ருபார்யா சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

5-வது "ஞாத்ருஞேய சம்பந்தம்" (The relationship of the Knower and the Knowable)=அதாவது அறிபவனும் அறியப்பட்டவனுமுடைய சம்பந்தம். பரமாத்மாவை அறிவது மஹா கஷ்டமானதென்று வேதங்களில் பொதுவாகச்சொல்லப்பெற்றிருக்கினும் (சுவேதாஸ்வதரம் 1-12 ல் "ஏதத்ஞேயம் நித்யமேவாத்ம ஸம்ஸ்தம் நாத: பரம் வேதிதவ்யம்ஹி கிஞ்சித்") = எது ஜீவாத்மாவுக்குள் அந்தராத்மாவாக இருக்கிறதோ அதுவே அறியத்தக்கது, அதன் பிறகு அறியத்தக்கதொன்றுமில்லை என்று சொல்லி இருப்பதாலும், (தைத்ரீய நாராயணத்தில் "நாராயணம் மஹாக்ஞேயம், விஸ்வாத்மாநம் பராயணம்") = பிரபஞ்சங்களின் அந்தராத்மாவாக இருக்கும் பரமாத்மாவே தக்க அடைக்கலமானது அதுவே அறியக்கூடியவைகளிலெல்லாம் சிறந்தது என்று சொல்லி இருப்பதாலும், (ப்ருஹதாரண்யகம் 4-3-30 ல் "நஹிவிக்ஞாது விக்ஞாதேவிர் பரிலோபோ வித்யதே அவிநாசித்வா") = அவனை அறிவதென்றால் ஜீவாத்மா அவனைவிட்டுப் பிரியாதிருக்கை என்று சொல்லி இருப்பதாலும் சாதாரண ஜநங்களன்றியில் பிரஹ்மஞாநம் பெற்றிருக்கும் சிலர் மாத்திரம் அந்த பிரஹ்மத்தை அறியக்கூடும் என்பது கருத்து. பரமாத்மா தன்னை அறியக்கூடியவர்களுக்குச் சுலபனாகவும், ஜீவாத்மா அப்பரமாத்மாவைத் திவ்ய ஞாநபலத்தால் அறியக்கூடியதாகவும் இருப்பதால் அந்த பிரஹ்மத்தை ஞாத்ருஞேய சம்பந்த முடையவன் என்று சொல்லப்பெற்றது.

6-வது ஸ்வஸ்வாமி சம்பந்தம் அல்லது ஸோம்மு ஸ்வாமி சம்பந்தம் (The relationship of the Proprietor and the Property)=அதாவது (ஸ்வேதாஸ்வதரம் 6-16 ல் "ப்ரதாந க்ஷேத்ரக்ஞ பதிர்குணேச:") = பரமாத்மா சர்வ சிரேஷ்டங்களுக்கும் ஊற்றைப்போன்றவன், உயிரற்ற ப்ரகிருதிக்கும் உயிருள்ள ஜீவாத்மாக்களுக்கும் தலைவன் என்றும் சொல்லி இருப்பதாலும், (தைத்ரீய நாராயணம் "பதிம் விச்வஸ்யாத் மேச்வரம், சாச்வதம் சிவமசத்தும்") = பெரும்புகழுடையவனும், என்றும் நிரந்தரமாக இருப்பவனுமாகிய பரமாத்மா பிரபஞ்சத்துக்கு பிரபுவும், ஜீவாத்மாக்களுக்குத் தலைவனுமாக இருக்கிறான் என்றும் சொல்லி இருப்பதாலும், (ஸ்வேதாஸ்வதரம் 6-9 ல் "ஸகாரணம் கரணாதி பாதிபோ நசாஸ்ய கஸ்சிஜ் ஜநிதா நசாதிப:")=அவன் ஜீவாத்துமாக்களுக்கெல்லாம் ஆதிகாரணனும், தலைவனுமாக இருப்பவன், அவனைப் பெற்றவனுமில்லை, அவனுக்குத் தலைவனுமில்லை என்று சொல்லி இருப்பதாலும், (யஜுர் வேத ஆரண்யகம் 3-2-4 ல் "அந்த: ப்ரவிஷ்டஸ்ஸாஸ்வதாஜநாநாம், ஸர்வாத்மா")=பிரஹ்மம் சகல பொருள்களின் அந்தராத்மாவாகவும், ஜீவகோடிகளின் ஹிருதயத்தில் வதிந்து வருபவனாகவும், சிருஷ்டிகளுக்கெல்லாம் அதிகாரியாகவும் இருக்கிறான் என்று சொல்லி இருப்பதாலும், (பகவத்கீதை 9-18 ல் "கதிர்பர்த்தா ப்ரபுஸ்ஸாக்ஷீ நிவாஸஸ்ஸரணம் ஸுஹ்ருத்") = பிராணிகோடிகளுக்கு ஊற்றுக்கண்களைப் போன்றவனும், பிராணனும், போஷகனும், ஆளுபவனும், சாக்ஷியும், அடைக்கலஸ்தாநமானவனும், அன்பனுமாக இருக்கிறான் என்று சொல்லி இருப்பதாலும், ஜீவாத்மாக்களெல்லாம் பரமாத்மாவின் அதிகாரத்திற்கும் ஆளுகைக்கும் உட்பட்டவைகளாக இருக்கின்றன. இவ்வுலகில் சொத்துக்கு

உடையவன் தன் சொத்தைத் தனக்கிஷ்டமானபடி எப்படி அநுபவிக்கக்கூடுமோ அப்படியே பரமாத்துமா தன்னுடைய சொத்தாகிய ஜீவாத்மாவை தனது இஷ்டப்படி பக்தி ஞான வைராக்கியத்தைக்கொடுத்து தன் பக்கலில் சேர்த்துக்கொள்ள சுதந்திரமுடையவன் ஆகையால் பிரஹ்மத்தை ஸோம்முஸ்வாமி சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

7-வது "ஆதாராதேய ஸம்பந்தம்" (The relationship of the Container and the Contained)=அதாவது அடக்கிக்கொள்பவன் அல்லது ஆதரிப்பவன், ஆதரிக்கப்படுவது என்னும் சம்பந்தமேயாம். (கடம் 2-5-15 ல் "தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி") = அவன் (பிரஹ்மம்) பிரகாசிக்கும்போது யாவும் அவனைப்பார்த்துப் பிரகாஸிக்கின்றன, அவனுடைய பிரகாஸத்தினால் இவை யாவும் ஜ்வலிக்கின்றன என்று சொல்லி இருப்பதாலும், (ப்ருஹதாரண்யகம் 14-4-42 ல் "ஏஷ ஸேதுர்விதரண: ஏஷாம்லோகாநாமஸம்பதேய") = பிரஹ்மம் உலகங்களுக்குக் கரையைப்போலவும், சேதுவைப்போலவும் அவைகள் தாறுமாறாகப் போகாமலிருக்கும்படி பரிபாலிப்பவன் என்று சொல்லி இருப்பதாலும், (மஹா நாராயணம் 1-6-ல் "விச்வம் பிபாதி புவநஸ்யநாபி:") = சிருஷ்டி கர்த்தாவாகிய அந்த பிரஹ்மம் தான் சிருஷ்டித்த சகல பொருள்களையும் ஆதரிப்பவன் என்று சொல்லி இருப்பதாலும், (கீதை 9 5 ல் "பூதப்ருந்ந ச பூதஸ்தோ") = நான் எல்லாப் பிராணிகளையும் ஆதரிப்பவன் அப்படி ஆதரிப்பதற்காக அவர்களிடமிருந்து யாதும் விரும்பாதவன் என்று சொல்லி இருப்பதாலும், ஜீவாத்மா பரமாத்மாவின் ஆதரவில்லாமல் யாதுஞ்செய்ய வல்லமையற்றிருப்பதாலும், ஜீவாத்மாவின் இகபர சுகங்களுக்குப் பரமாத்மாவை நம்பி அவ

னுடைய ஆதரவைப் பெற்றுய்யவேண்டி இருப்பதாகை யால் அவனே ஆதாராதேய சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

8-வது சரீர சரீரி சம்பந்தம் (The relationship of Soul and Body) = அதாவது சரீரத்திற்கும் ஆத்மா வுக்குமுள்ள சம்பந்தமாம். (ப்ருஹதாரண்யகம் 3-7-22ல் "ஆத்மநிதிஷ்டந் ஆத்மநோநந்தரோயமாத்மா நவேத மஸ்ய ஆத்மாசரீரம்") = யார் ஆத்மாவுக்குள் வசிப்பவனோ? அப்படிக்கிருந்தும் அந்த ஆத்மாவுக்கு வேறுபட்டவனோ? எவனை ஆத்மா அறியமாட்டாதோ? எவனுக்கு ஆத்மா சரீரமோ? என்று சொல்லி இருப்பதாலும் (ஸுபால் 7-வது கண்டம் "யோக்ஷரமந்தரே ஸஞ்சரந் யஸ்யாக்ஷ சரீரம் ஏஷ ஸர்வபூதாந்தராத்மா பஹதபாப்மா திவ்யோதேவ ஏகோ நாராயண:") = 'எவன் ஜீவாத்மாவுக்குள் வசிக்கிறனோ' எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ அவனே பரமாத்மா, அவன்சிறந்த ஆத்மா, எல்லா ஜீவர்களுடைய அந்தராத்மா, எல்லாவித குற்றங்களை யற்றவன் என்று சொல்லி இருப்பதாலும், (பகவத்கீதை 7-7 ல் "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்சய மயிஸர்வ மிதம்ப்ரோதம் ஸூத்ரே மணிகணாஇவ") = எனக்கு மேற்பட்டவர் யாவரும் இல்லை. இந்த பிரபஞ்சங்க ளெல்லாம் நூலில் மணிகள் கோர்க்கப்பட்டிருப்பதைப் போல என்னிடம் பின்னல் பெற்றிருக்கின்றன என்று சொல்லி இருப்பதாலும், (பாகவதம் 6-16-46 ல் "யம் வைச்வஸந்த மநுவிச்வஸ்ருஜஸ்வஸந்தி யபசேகிதாநமநு சித்தய உச்சகந்தி பூமண்டலம் ஸரஷபாயதி யஸ்ய மூர்த்தி ந் தநமே நமோ பகவதேஸ்து ஸஹஸ்ர மூர்த்தேந") = பரமாத்மா சுவாசிக்கும்போது அதன் பிரதிநிதிகளாகிய உலகபிரகிருதிகள் சுவாஸிக்கின்றனர். அவன் தன் ஞானேந்திரியங்களால் வேலை செய்யும்போது ஜீவாத்

யாக்கள் தமது தேகேந்திரியங்களினால் வேலை செய்கின்றன. இந்த உலகமானது அந்த சித்புருஷனுடைய சிறகிற்குக்கேவலமாகிய சருகைப்போன்றது. அப்படிப்பட்ட அநேக ஆயிரம் சிரசுகளோடு பிரகாசிக்கும் பரமாத்மாவை வணங்குகிறேன் என்று சொல்லியிருப்பதற்கொக்க பிரஹ்ம சூத்திரம் 1-4-22 ல் "அவஸ்திதேரிதிகாசக்ருத்ஸ்ந:" என்று சொல்லி இருப்பதாலும் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள சம்பந்தம் ஜீவாத்மாவுக்கும் அதன் தேகத்திற்குமுள்ள சம்பந்தத்தைப்போன்றதாகிறது. அதாவது ஜீவாத்மாவானது பிரகிருதி தேகத்திற்கு முற்றும் வேறுபட்டதாக இருந்தும், அந்த ஜீவாத்மாவானது இவ்வுலகில் பெரும்பான்மையான காரியங்களைப் பிரகிருதி தேகத்தைக்கொண்டே செய்யவேண்டி இருப்பதால், தேகத்தைப் பாதிக்கும் உபாதிகள் ஜீவாத்மாவையே உபாதிக்கிறதாகச் சொல்லுகிறோம். மநுஷனுடைய ஒரு கைவிரலில் ஒரு அற்பகாயம் அல்லது சிலந்தி கண்டால் அதனால் அந்த தேகமுழுதும் அதற்குள்ளிருக்கும் ஜீவாத்மாவும் வருந்துவது பிரத்தியக்ஷம். ஆனதுபற்றியே "தேக விநா த்ருணமபிசலதி" = அவன் ஆக்ஞை இல்லாமல் அணுவும் அசைவுபெறாது என்று பெரியோர்கள் சொல்லி இருப்பதால் ஜீவாத்மாவுக்கு பிரகிருதி தேகம் எவ்விதமாகச் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதேமாதிரியாக ஜீவாத்மா பரமாத்மாவின் ஆக்ஞைக்குட்பட்டிருக்கும் சம்பந்தமுடையதாகையால் பிரஹ்மத்தை சரீர சரீரி சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

9-வது போக்த்ரு போக்ய சம்பந்தம் (The relationship of the Enjoyer and the Enjoyed) = அதாவது சுகத்தை அநுபவிப்பவனும், சுகத்தைத் தருபவனுமான சம்பந்தமாம். (கடோபநிஷத்து 1-2-25 ல் "யஸ்ய

ப்ரஹ்மச க்ஷத்ரஞ்ச உபேபவத ஓதநம் ம்ருத்யுர்யஸ்யோ பஸேசநம் இத்தாவேத யத்ரஸ:") = அவன் இருக்கும் இடத்தை யார் அறிவார்? பிரஹ்ம க்ஷத்ரியர்கள் உண வாகவும், மரணம் தொடுகைவையாகவும் இருக்கிறதென்று சொல்லி இருப்பதாலும், (கீதை 9-22 ல் " அஹம்ஹி ஸர்வயக்ஞாநாம் போக்தாச ப்ரபுரேவச") = நான் எப் படி ஆஜ்ஞபவஞே அப்படியே யாகங்களையும் அநுபவிப்ப வன் என்று சொல்லி இருப்பதாலும் இந்த சம்பந்தம் சொல்லப்பட்டது. அதாவது சொத்துக்குடையவன் தன் சொத்துகளை தன் சுக சந்தோஷத்துக்கேற்றபடி உபயோகித்து அநுபவித்தாநந்தமடைவானே அம்மாதிரி யாக பரமாத்மா தன் சொத்தாகிய ஜீவாத்மாவைக்கொ ண்டு அநுபவிக்கிறான். ஜீவாத்மாவானது அவனது (பரமாத்மாவின்) ஆக்ஞைக்கு உட்பட்டு அவன் அரு ளுக்கும் பாத்திரனாக சதா அவனைப்பாடிப் பிரார்த்தித்து பிரஹ்ம பாராயணஞ்செய்து பேரின்பத்தை யடையுமா கையால் அவனை போக்தாபோக்ய சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது. இப்படி பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் நவவித சம்பந்தங்களை ஸ்தாபித்து சிலர் ஆநந்தமடைந்து வருவதன்றியில் சிலர் அந்த பர மாத்ம ஜீவாத்மாவை மாதாபுத்ர சம்பந்தமாகக் கொண்டும் ஆநந்தமடைந்து வருகிறார்கள்.

10-வது மாதாபுத்ர சம்பந்தம் (The relationship of Mother and the Son) = அதாவது (ப்ருஹதாரண்யம் 11-4-5 ல்

" நவா அரேபத்யு: காமாயபதி: ப்ரியோபவதி
ஆத்மநஸ்து காமாயபதி: ப்ரியோபவதி
நவா அரேஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம்பவதி
ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம்பவதி

ஆத்மாவா:அரே த்ரஷ்டவ்யோ ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய :"

என்று சொல்லி இருப்பதால் ஒரு மனைவியானவள் தான் கணவனைத் தன்னிஷ்டப்படி விரும்பினாலும் (ஆத்மகாமய) பரமேஸ்வரனுடைய ஆக்ஞையை யநுசரித்துத் தன் கணவனுக்குத் தன் கடமையைச் செலுத்துகிறாள். அதுபோலவே, ஒரு மாதாவானவள் தன் குழந்தை தனக்கு யாதாவது உதவிசெய்யும் என்னும் பிரதிபலனை எதிர் பார்க்காமல் ஈஸ்வரனுடைய ஆக்ஞையாகிய இயற்கையான பாசத்தினால் அதைப் பாதுகாக்கிறாள். புத்திரர்களுக்குப் பிணி மூப்பு முதலான அபாயங்கள் சம்பவிக்கும்போது மாதாவுக்குண்டாகும் கஷ்ட நிஷ்டூரங்கள் கொஞ்சமோ? மக்களின் சுகத்தைக்கருதி தமது அருமையான பிராணனையே தத்தம் செய்தவர்கள் கொஞ்சமோ? புத்திரபாசம் இத்தன்மையதாகையால், பரமாத்மாவை அப்படிப்பட்ட பாசத்தோடு விரும்பி வணங்க வேண்டியதாகையால் அவனை மாதாபுத்ர சம்பந்தம் உடையவன் என்று சொல்லப்பெற்றது.

இத்யாதி கருத்துகளுக்கு ஏற்றபடியே தமிழ்நாட்டு ஞானிகளும் கவிகளும் பிரஹ்ம லக்ஷணத்தைப்பற்றி பாடி இருக்கிறார்கள். எப்படியெனில் 'தனக்குவமை இல்லாதவன்' என்றும், 'இறைவன்' என்றும் 'எவ்வுயிருங்காப்பவன்' என்றும் (பொய்யா மொழிப்புலவரும்) 'வாயுவாய் மன்னுயிராய் மற்றவற்றினுட் பொருளாய்' இருப்பவன் என்றும் 'எல்லையில்லாத சிவம்' என்றும், (ஔவையாரும்) "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்" என்றும் 'முந்து நடுவு முடிவுமாகிய மூவரறியாதவன்' 'வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி யூனாகியுயிராகி யுண்மையுமாயின்மையுமாய்க் கோனாகி

இருப்பவன்' என்றும், (மாணிக்கவாசகரும்) 'விறகிற்றீயினன் பாலிற்படுநெய்போல்மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்' என்றும் 'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனாய்வெளியுங் காற்றுமாகி, யருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாசமாயட்ட மூர்த்தியாகி, பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி, நெருநலையாயின்றாகி நாளையாகி இருப்பவன்' என்றும் (திருநாவுக்கரசுசுவாமிகளும்) 'பருதியானைப்பல்வேறு சமயங்கள் கருதியானை' என்றும் 'ஆதியானை யமரர் தொழப்படும் நீதியானை' என்றும் (தேவாரத்திலும்) 'அவ்வுயிர்போல் எவ்வுயிர்க்கும் அறிவாகி நிறைந்தே ஆநந்த சுகாதீதன்' என்றும், 'ஏகமாய் ஆதிநடு ஈறு அகன்ற முதல்வன்' என்றும் (சிவஞான தீபத்திலும்) 'காரணம் கடந்த கடவுள்' என்றும், 'சிவனுக்குள்ளே சிவமணம் பூத்தவன்' என்றும் 'எவ்வுயிரும் பராபரன்சந்நிதியதாகும இலங்கும் உயிர் உடல் அனைத்தும் கோயிலாக உடைய ஈசன்' என்றும், 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவான்' என்றும், (திருமந்திரத்திலும்) 'மூவா முதலா வுலகமொரு மூன்றுமேத்த தேவாதிதேவன்' என்று (சீவகசிந்தாமணியிலும்) 'நோக்கின்றி கண்டு நனி கையின்றி கொடுத்துமறைநுவல்வதாய, நாக்கின்றி யறுசுவையுமினிதுணர்ந்துங் காலின்றி நடத்தல்செய்து, மூக்கின்றி மணங்கவர்ந்து செவியின்றி கேட்டு மறை முதல்வர்யார்க்கும், வாக்கின்றி மனத்தினுக்கு மெட்டாது நின்றவன்' என்று (காசிகாண்டத்திலும்) 'எப்பொருள்களுந்தானாகி யிலங்கிடப்படுவனீசன்' என்று (ஆநந்தத்திரட்டிலும்) 'பார்த்தவிடமெல்லாம்பரமன் காணம்பானை' என்று (திருவம்மானையிலும்) 'எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னை' என்று (சிவாநந்தமாலையிலும்) 'அன்பரிடத்தில் ஈசன் இருப்பவன்' என்று (பட்டணத்

வடிகளும்) 'அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமாய் ஆநந்த பூர்த்தியாகி, யருளொடுநிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே யகிலாண்டகோடியெல்லாந், தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க்குயிராய்த் தழைத்தவன்' என்றும், அத்துவித வத்துவைச் சொப்ரகாசத்தனியை அருமறைகள் முரசறையவே, அறிவினுக்கறிவாகி யாநந்த மயன்' என்றும், 'பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணாநந்தன்' என்றும் 'பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத பெரிய மோனம், வருமிடமாய் மநமாதிக் கெட்டாத பேரின்பமயன்' என்றும் 'நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச்சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த்துரியநிறை சுடராய் இருப்பவன்' என்றும் 'பேதமற நின்றுயிர்க்குயிராகி யன்பருக்குப் பேராநந்தந்தருபவன்' என்றும், 'கண்ணே கருத்தேயெனெண்ணே யெழுத்தே கதிக்கான மோனவடிவே' என்றும், 'தெள்ளிமறை வடியிட்ட வமுதப்பிழம்பே தெளிந்ததேனே சீனியே திவ்யரசம் யாவும் திரண்டொழுகுபாகே தெவிட்டாத ஆநந்தமே' என்றும், 'துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான துணைவனே யிணையொன்றிலாய்' என்றும், 'அண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி யானந்தமானபரன்' என்றும், 'ஆராவமுதேயரசே யாநந்த வெள்ளப் பெருக்கே' என்றும், 'என்னிதயத்தே யூறித்தித்திக்கு மாநந்தத்தேனைப்போன்றவன்' என்றும், 'முத்தே பவளமே மொய்த்த பசும்பொற்சுடரே' என்றும், 'பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த் தோன்றுகிறவன்' என்றும், 'வேதாந்த வீட்டில் விளக்கே' என்றும் (தாயுமானவரும்) சொல்லி இருக்கின்றனர். இராமலிங்க சுவாமிகளும் 'பொற்குன்றே யகம்புறமும் பொலிந்து நின்றபூரணம்' என்றும், அண்டங்கள் பலவாகி யவற்றின் மேலுமளவாகி யளவாத வதீதமானவன் என்றும், உலக

நிலை முழுதாகி யாங்காங்குள்ள உயிராகியுயிர்க்குயிரா மொளிதானாகி சச்சிதானந்தமாகியமர்ந்ததேவே' என்றும் 'பொன்னாகி மணியாகிப் போகமாகிப் புறமாகி யகமாகி புனிதனாகி, இயல்கருணை பொழிமுகிலாய் விளங்குந்தேவே' என்றும், ஐயா, அம்மா, அண்ணா, அரசே, அன்பே என்றும் பாடியுள்ளார். இக்கருத்தைக்கொண்டே வைணவ ஆழ்வார்களும்,

'உயர்வற வுயர்நலமுடையவன் எவனவன்,
மயர்வற மதிநல மருளினன் எவனவன்
அயர்வறுமமரர்களதிபதி எவனவன்
துயரறு சுடரடி உடையவன்—என்றும்,

"மனனகமலமற மலர்மிசை யெழுதரும்
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்
இனனுணர் முழுநல மெதிர்நிகழ்கழிவினும்
இனனிலனெனனுயிர் மிகுநரையிலன்" என்றும்

"இலனது உடையனிதென நினைவரியவன்
நிலனிடை விசும்பிடை யுருவின னருவினன்
நலனுடை யொருவன்" என்றும்

'திருமால் நான்முகன்செஞ்சடையானென்றிவர்களெம்
பெருமான்றன்மையை யாரறிகிற்பார் பேசியென்
ஒருமாமுதல்வ னூழிப்பிரானென்னையாளுடைக்
கருமாமேனியன்" என்றும்

'உளன்எனில் உளன் அவன் உருவு மிவ்வுருவுகள்
உளன்அலன் எனில் அவன்உருவுமிவ்வுருவுகள்
உளன்என இலன்என இவைகுணம் உடைமையின்
உளன்இருதகைமையோடொழிவிலன்பரந்தே" என்றும்,

திடவிசும்பெரிவளி நீர் நிலம்இவை மிசைப்
படர்பொருள் முழுதுமாய் அவையவைதோறும்
உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்றும்,

“மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தானாய்,
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப்பிலாதாய்ப்
பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்ணாதெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவாயனலுருவிற் றிகழுஞ்சோதி
தன்னுருவாயென்னுருவில் நின்றவேந்தன்
தளிர்புரையும் திருவடியான்” என்றும்,

“யானுந்தானாயொழிந்தானையாதுமெவர்க்குமுன்னோனைத்
தானுஞ்சிவனும் பிரமனுமாகப் பணைத்த தனிமுதலைத்
தேனும்பாலுங் கன்னலும் அமுதுமாகித்தித்தித்தென்
ஊனின் உயிரின் உணர்வின்நின்றஒன்றானவன்’ என்றும்

“முனியேநான்முகனே முக்கண்ணப்பா வென்பொல்லா
கனிவாய்த்தாமரைக்கட் கருமாணிக்கமேயென்கள்வா
தனியேனாருயிரே” என்றும்,

‘ஆவியேயமுதே’ என்றும், ‘எம்பிரானெந்தை யென்னுடைய சுற்றமே’ என்றும், ‘பெற்றதாயுமானவனே’ என்றும், ‘அப்பாவந்தடைந்தேன்’ என்றும், ‘அண்டகுலத்துக்கதிபன்’ என்றும் ‘வேர்முதலாய வித்தானவன்’ என்றும், ‘ஈடுமொப்புமிலாதஈசன்’ என்றும், ‘ஆணல்லன் பெண்ணல்லனல்லா வலியுமல்லன்’ என்றும், ‘முந்நீர்ஞாலம்படைத்த வெம்முகில் வண்ணன்’ என்றும், ‘பாமருமூவுலகம் படைத்த பற்பநாபன்’ என்றும், ‘ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகி நின்றவொருவன்’ என்றும், ‘ஆர்ந்த புகழச்சுதன்’ என்றும், ‘வேதமுதல்வன்’ என்றும், ‘தந்தைதாயற்ற தனிப்பெருஞ்சோதி’ என்றும், ‘மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்’ என்றும், ‘நளிர்மதிச்சடையனென்கோ நான்முகக்கடவுளென்கோ’ என்

றும், 'யாவுநீதானாய்' என்றும், 'ஒன்றாகி மூலத்துரு வம் பலவானவன்' என்றும், 'மூன்றுக்கடவாய் மூனைத்தெழுந்த மூலன்' என்றும், 'என்னுட்கலந் தான்' என்றும், 'எங்கும் நிறைந்த வெந்தாய்' என்றும், 'நீரவிரும்புண்ட நீரதுபோல வென்னாருயிரை, யாரப் பருகவெனக்காராவமுத மானவனே' என்றும், பின்னும் பலவிதமாக வர்ணித்திருக்கிறார்கள்.

இப்பூவுலகில் பெரிய மதங்கள் என்று சொல் லுவதில் எல்லாம் அந்தந்த மதங்களில் பிரதிபா திக்கும் பிரஹ்மம் அல்லது கடவுளின் இலக்ஷணத் தை எவ்வளவுக்கு எவ்வளவு விவரமாகச் சொல்லப் பெற்றிருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அம்ம தங்களின் பெருமையும் உயர்ந்ததென்பது புத்திமான் களுடைய பிரமாணம். இப்பிரமாணத்தை யொட்டி இதுவரையில் காட்டியிருக்கும் இந்நாட்டாருடைய பிரஹ் மத்தின் இலக்ஷணங்களை ஆரஅமர ஆராய்வோருக்கு இம்மதஸ்தர்களுடையவழிபடுங்கடவுள் பண்டிதர்பாமரர் சமர்சமாக அறிந்துய்யக்கூடியதாயும், இப்பூலோகத் தில் இதுவரையில் எவ்வளவு மதங்களிருக்கின்றனவோ, இனி எவ்வளவு மதங்கள் ஜனிக்குமோ அவற்றிற்கெல் லாம்சிரேஷ்டமான இலக்கணங்களையுடையதாயும், அவற் றிற்கு சிரோபூஷணமாகவும் இருக்கிறதென்பது பிரத்தி யக்ஷமாகும். இப்படி சகல தேசத்தாராலும், சகல காலத் தாராலும் கொண்டாடத்தக்க இம்மதத்தை சிலர் குறை வானதாகக் கருதும் காரணம் ஏதென்று விசாரிப்போ ருக்கு, இம்மதத்திற் பிரதிபாதிக்கும் அதிஷ்டான ஆதி தெய்வமாகிய பிரஹ்மத்தைக் காலதேச வர்த்தமானங்க ளினால் அதைச் சிவன் என்று சிலரும், விஷ்ணு என்று சிலரும், சக்தி என்று சிலரும், சூரியன் என்று சிலரும் பற்பல பெயர்களால் வணங்கிவர, அவற்றின் உண்மை யை யறியாதவர்கள் என்தெய்வம் பெரிது, உன்தெய்வம்

சிபிது என்று யானையைக்கண்ட குருடர்களைப்போலவே போராடியும் ஆதி சதாசாரங்களை விட்டொழித்து துராசாரங்களைத் தழுவியும் பின்னமதஸ்தர்களாகி பிரஜைகள் பிரமிக்கும்படி செய்வித்ததினாலேயாம். சமரசஞானமுடைய சாதுக்கள் இம்மதத்தின் உண்மையான சித்தாந்தம் என்னவென்று சூழ்ந்து ஆராயப்புகின் ஆதிவேதங்களால் பிரதிபாதிக்கப்பெற்ற பிரஹ்மம் ஒன்றே பரமபிதா என்றும், அவனை வணங்குவோரெல்லாரும் பிரஹ்மோபாஸிகளாவார்கள் என்றும் வெள்ளிடைமலைபோலநிந்துய்வார்கள். ஆகவே, இம்மதஸ்தர்களைப் பிரஹ்மோபாசிகள் என்று சொல்லுவதே பொருந்தும். ஆனதுபற்றியே, இக்கிரந்தத்தில் இம்மதஸ்தர்களைப் பிரஹ்மோபாசிகள் என்னும் பொதுப்பெயரால் வியவஹரிப்போம். இப்படி பொதுப்பெயரால் விவஹரிக்கப்பெறும் இந்நாட்டார், தமது பெயருக்குத்தக்கபடி நம் பேரானந்த கடவுளை உண்மையாக வணங்கி வழிபட்டெய்யில், ஜனசமூஹத்துக்குள் சமரச ஞானமும், சகல ஐஸ்வர்யமும் பெருகி பண்டைநாடாகிய பரதவருஷம் பிரபஞ்சத்தில் பின்னும் பிரபலமாகப்பிரகாசிக்கும் என்பது திண்ணம், திண்ணம்.

---

"There is one Almighty who has no second. It is not comprehensible."

"It is everlasting, all pervading and omnipresent. I do not more than assert that, if correct reasoning and the dictates of common sense induce the belief of a wise uncreated Being, Who is the supporter and ruler of the boundless Universe, we should also consider Him, the most powerful and supreme in existence. Far surpassing our powers of comprehension, or description."

"The Supreme Being is not comprehensible by vision or by any other of the organs of sense. He sees everything though never seen, hears everything though never directly heard of. He is inaccessible to the reasoning faculty; not to be compassed by description; beyond the limits of the explanation of the Veda or human conception."

*Raja Rama Mohan Ray.*

---

"There is only one God, who is the Creator, Preserver, and Saviour of this world. He is spirit, infinite,in power, wisdom, love, justice and holiness, omnipresent, eternal and blissful." —*Maha Rishi Devendra Nathar and Pandit Sivanatha Sastri.*

---

"I believe that God is one that He is infinite and perfect, almighty, all-wise, all-merciful, all-holy, all-blessful, eternal and omnipresent, our Creator, Father, Mother, Friend, Guide, Judge and Saviour.

If we are to worship Him in all His manifestations, we shall name one attribute Lakshmi, another Sarshwati, etc., and worship God each day under a new name, that is to say in a new aspect". P. 377, *the Life and Teachings of Kesava Chandra Sen.*

---

165

"In nature and human society we know Him as a Power, ordering everything as an underlying Intelligent Principle, making unfailingly for righteousness. But to the pure soul, He reveals Himself more closely, intimately as the Father, the Friend, the Dear one holding immediate, individual, personal relationship with His children—the deepest and grandest, mystery of creation, nevertheless as true, and resting on as sure, a foundation of facts as the law that in nature every atom attracts every other atom"—*Hem Chandra Sirkar.*

# இரண்டாவது அத்தியாயம்.

## பிரபஞ்ச லக்ஷணம் அல்லது உலக சிருஷ்டி.

## THE CREATION.

வினா— இந்த உலகம் பிரஹ்மத்தினால் சிருஷ்டிக்கப்பட்டதா? அதற்கு வேதாதி பிரமாணங்கள் இருக்கில் சொல்லுங்கள் கேட்போம்?

விடை—ஆம்,

### ருக்வேதம் மந்திரம் 10-129-ல்.

"ஈயம் விருஷ்டிர்யத ஆபபூவயதிவாததேயதிவாந"
"யோஅஸ்யா தத்யக்ஷ: பரமேவ்யோமந்ஸ்தோ
அங்வேதயதிவாநவேத"

ஓ! மனிதனே! எவனால் இங்கிருக்கும் பொருள்கள் யாவும் பிரகாசிக்கின்றனவோ? எவன் ஜகத்தைத் தரித்து பிரளயமாக்குபவனோ? எவன் உலகத்திற்கு ஸ்வாமியோ? எந்த வியாபகனால் இந்த ஜகங்களெல்லாம் உற்பத்தி ஸ்திதி பிரளயங்களை யடைகின்றனவோ? அவனே பரமாத்மா, அவனை அறிய விரும்பு, அவனை விட சிருஷ்டி கர்த்தா யாருமில்லை யென்றறி. (என்றும்)

"He who has created this multifarious universe and is the *cause* of its sustenance as well as dissolution, the Lord of the universe in Whom the whole world exists, is sustained and then resolved into elementary condition, is the Supreme Spirit—Know him, O! man, to be your God and believe in no other as the creator of the universe".

### இருக்வேதம் மந்திரம் 7-3-ல்.

" தம ஆஸீத்தமஸாகூட மக்ரேப்ரகேதம்
ஸ்லிலம் ஸர்வமா இதம்,
துச்சேய்நாம் பவ்பிஹிதம் யதாஸீத் தபஸஸ்
தந்மஹிநா ஜாயதைகம் "

ஆதியில் இந்த உலகமெல்லாம் பயங்கரமான இருளால் மூடப்பட்டிருந்தது. இன்னதென்று அறியக் கூடாததாய் இருந்தது. அது ஒரு பயங்கரமான இருட்டாக இருந்தது. பிரகிருதி ஜவிகாரம்பகமாக இருந்தது. அது ஆகாயத்தைப் போலிருந்தது. இப்படி இருளால் மூடப்பட்டிருந்த உலகமுழுதும் கடவுளுக்குமுன் அதிக கேவலமும் சிறியதுமாக இருந்தது. அப்படி இருந்த உலகத்தை அந்த பிரஹ்மம் தனது அபார சக்தியினால் காரண ரூபத்திலிருந்து காரிய ரூபமாக்கி இப்போதிருக்குமபடியான உலகமாக சிருஷ்டித்தான். (என்றும்)

In the beginning the whole world was enveloped in utter darkness. Nothing was discernible. It was like a dark night. Matter was in its very elementary form. It was like ether. The whole universe, completely overspread by darkness, was insignificantly small compared with the Infinite God Who thereafter by His omnipotence evolved this cosmic world—the effect—out of the elementary matter—the cause.

### ரிக்வேதம் மந்திரம் 10-சூ. 121-மந்திரம் 1-ல்.

" ஹிரண்ய கர்ப : ஸ்மவர்த்தாக்ரே
பூதஸ்யஜாத : பதிரேக ஆஸீத்
ஸதாதாரப்ருதிவீம் த்யாமுதேமாம்
கஸ்மைதேவாய ஹவிஷாவிதேம "

ஓ! மானிடர்களே! எவன் சகல சூர்யாதி தேஜோமய மான பதார்த்தங்களுக்கு ஆதாரமானவனோ? எவன் இதற்குமுன் இருந்த உலகங்களுக்கும், இப்போதிருக் கும் உலகங்களுக்கும், இனி உற்பத்தியாகும் உலகங் களுக்கும் அத்விதிய பதியாகி இந்த உலக உற்பத்திக்கு முன் ஞானஸ்வரூபனாக இருந்தானோ? எவன் பிருதிவி முதல் சூரியாதி உலகங்களைச் சிருஷ்டிப்பவனோ? அத்தே வனாகிய பரமாத்மாவை வணங்குவாம். (என்றும்)

Love and worship Supreme Spirit, O! men, Who is the support of all the luminous bodies (such as the sun), the one Incomparable Lord of the present as well as of the future worlds, Who existed even before the world came into being, and has created all things that exist in space between the earth and the heaven.

**யஜுர்வேதம் அதி, 31-மந்திரம் 2-ல்.**

" புருஷ ஏவேதகம்ஸர்வம் யத்பூதம்யச்சபாவ்யம்
உதாம்ருதத்வஸ்யேசானோ யதந்நேநாதிரோஹதி "

ஓ மனிதர்களே! எவன் எல்லாவற்றிலும் நிறைந்தி ருக்கும் பூரணபுருஷனோ? எவன் நாசரஹித காரணனோ? எவன் ஜீவர்களுக்கு சுவாமியோ! எவன் பிருதிவியாதி ஜடத்துக்கும் ஜீவனுக்கும் வேறுபட்டவனோ? அந்த புரு ஷனே இந்த சகல பூதபவிஷ்ய வர்த்தமான உலகத் தைச் சிருஷ்டித்தான்" (என்றும்)

O! men, that all-pervading Being alone is the Lord of the imperishable Prakriti—the material cause of the world—and the soul and yet distinct from both, is the Creator of the universe—the past, the present and the future.

வினா—உலக சிருஷ்டியைப்பற்றி உபநிஷத்துக்களில் எவ்விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—உலக சிருஷ்டியைப்பற்றி நாம் முன்னமே (இந்து பைபிலில் முதல் புத்தகம் 1-ம் பக்கமுதல் 81-பக்கங்களில் விசேஷ உரையுடன்)—

“இதம்வா அக்ரே நைநங்கிஞ்சிதாஸீத்
ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீய
ஸதபோதஸ்ய தஸ்தபஸ்தவா இதம்ஸர்வம் [ம்
ஸ்ருஜத யதிதகிம்ச”

“ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மநஸ்ஸர்வேந்த்ரியாணி
கம்வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீ விச்வஸ்யதாரிணீ
ஏஷதேவோ விச்வகர்மா”

என்றுசி உபநிஷத்துக்களைப்பற்றிச் சொல்லி இருக்கிறோம். அவைகளில் ஒன்றுகிய—

**தைத்ரீயம் பிருகுவல்லி**

**1-வது அநுசாசனத்தில்.**

“யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே
யேநஜாதாநி ஜீவந்தி
யத்ப்ரயம்த்யபிஸம்விசந்தி
தத்விஜிக்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம.”

(இ-ள்.) எந்த பரமாத்மாவினுடைய ஆதரவினுல் இந்த ஸமஸ்த பிருதிவியாதிபூதங்கள் உற்பத்தியாகின்றனவோ? எவனுல் ஜீவனையும், பிரளயத்தையும் அடைகின்றனவோ? அவனே பிரஹ்மம், அவனை அறியவிரும்பு. (என்றும்)

That Supreme Spirit from Whom all things proceed and in Whom they live and perish, is the All-pervading God. Aspire, O! men, to know Him.

## தைத்ரீய உபநிஷத்து பிரஹ்மாநந்தவல்லி அநு. 1-ல்.

" தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாச: ஸம்பூத:
ஆகாசாத் வாயு: வாயோரக்நி: அக்நேராப:
அத்புச்ச: ப்ருதிவீ ப்ருதிவ்யா ஓஷதய:
ஓஷதிப்யோந்நம் அந்நாத்ரேத: ரேதஸ: புருஷ:—
ஸவாஏஷ புருஷோந்நரசமய:"

(இ ள்.) பரமேஸ்வரன் பிரகிருதியிலிருந்து முதலில் ஆகாசத்தையும், அதிலிருந்து வாயுவையும், அந்த வாயுவிலிருந்து அக்நியையும், அந்த அக்நியிலிருந்து ஜலத்தையும், அந்த ஜலத்திலிருந்து பிருதிவியையும், அந்த பிருதிவியிலிருந்து உணவுக்கான கந்தமூலங்களையும், அந்த உணவாகிய அந்நத்திலிருந்து வீரியத்தையும், வீரியத்திலிருந்து புருஷனையும் உண்டாக்கினன் என்று வியக்தமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது.

Out of *Prakriti*—the elementary *material cause* of the world—God first created *Akash*. Then was evolved *Vayu*—gaseous or vaporus condition of matter; out of *Vayu* proceeded *Agni*—matter which gives out heat, light and electricity; out of *Agni* proceeded *liquids*; and out of liquids came *solids* (such as the earth); out of solids issued forth vegetables which yielded *food*. Food produced the *reproductive element* which is the cause of physical body and bodily organs.

வினு—உலக சிருஷ்டியைப்பற்றி பிரஹ்மஸூத்திரத்தில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை— பிரஹ்ம ஸூத்ரம் 1-1-2 ல்—

"ஜந்மாத் யஸ்ய யத:"

(இ-ள்.) எவனால் இந்த உலகத்தினுடைய ஜநநம், ஸ்திதி, பிரளயங்கள் உண்டாகின்றனவோ அந்த பிரஹ்மமே அறிவதற்கு யோக்யமானவன். (என்றும்)

"That Great God should be sought after; Who is the cause of the creation, the sustenance and the dissolution of the universe.

ஷை 1-4-14 ல்

"காரணத்வே சாகாசாதிஷு யதா வ்யபதிஷ்டோக்தே:

(இ-ள்.) 'ஆத்மந: ஆகாச: ஸம்பூத: வாயு:' இத்யாதி ச்ருதிகளில் ஜகத்காரணத்வம் ஆகாசம் வாயு முதலானவைகட்கிருக்கினும் அவற்றிற்கெல்லாம் முக்யகாரணம் பிரஹ்மமேயாம். (என்றும்)

Brahman stands (also) as the cause (and as effect) in Akasa and other things; on account of (the Lord) being mentioned in the manner described.

ஷை 1-4-16 ல்

"ஜகத் வாசித்வாத்"

(இ-ள்.) ஜகத் சிருஷ்டி ஜீவனுக்குக் கூடாமையால் அந்த பிரஹ்மமே வேதிதவ்ய காரணமென்று அறிய வேண்டியதென்றும்.

Because (the terms which are names of Barhmn) are drawn up (to denote the things of the world).

ஷை 1-4-23 ல்

"ப்ரக்ருதிஸ்ச ப்ரதிக்ஞா திருஷ்டாந்தாநுபரோதாத்"

(இ-ள்.) ஜகத் சிருஷ்டிக்கு நிமித்தோபாதான கார ணம் பிரஹ்மமேயாம்.

The Lord is also called Prakriti, agreeably to the argument and illustrative instances.

ஷை 1-4-27 ல்

"யோநிஸ்ச ஹி கீயதே"

(இ-ள்.) 'ஹி' எந்தக் காரணத்தினால் (பிரஹ்மம்) "யத்பூதயோநிம்" என்கிற சுருதியின்படி 'யோநி' தனது சரீரத்திலிருந்தே ஜகத்தை உற்பத்தி செய்கிறபடியால் உபாதான காரணமும் பிரஹ்மமேயாம். (என்றும்)

And because Brahman is called the Source.

ஷை 2-1-19 ல்

"படவச்ச"

(இ-ள்.) 'ச' துணி அல்லது வஸ்திரத்தின் சிருஷ்டியைப்போல அதாவது 'படவச்ச' நூல் வஸ்திரமாகிறது போல பிரஹ்மம் ஜகத்தாக பரிணமிக்கிறது. அதாவது நூல்கள் ஒன்றுக்கொன்று சேர்ந்தால் வஸ்திரமென்கிற பெயரையும், வேறுவிதமான ஆகாரத்தையும், அடைந்து உடுத்திக்கொள்ளும் காரியங்களுக்கு உபயோகமாகிறதைப்போல, பிரஹ்மமும் ஜகத் ரூபமாகப் பரிணமித்து நாமரூபங்களை அடைகின்றதெனச் சொல்லப்பெற்றிருக்கிறது.

And like a piece of cloth.

வி௫—உலக சிருஷ்டியைப்பற்றி பகவத்கீதையில் என்னமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது?

விடை—பகவத்கீதை—

9-வது அத்தியாயம் 17-வதில்.

"பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ:"

(இ-ள்.) ஸமஸ்த ஜகத்திற்குத் தாயும் தந்தையும், கருமபலத்தை விதிப்பவனும், தாதாவும்நானே (என்றும்)

I am the father of Universe, the mother, the supporter, the grandsire, etc.

ஷை 10-வது அத்தியாயம் 8-வது சுலோகத்தில்:

"அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ
மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே"

(இ-ள்.) சர்வ சிருஷ்டிகளுக்கும் நானே உற்பத்தி காரணமானவன். என் மகிமையால் ஸமஸ்த பிரபஞ்சங்களும் நடக்கின்றன என்றுஞ்சொல்லப்பட்டிருக்கிறது.

I am the Creator of all things, and all things proceed from me and etc.

வி௫—உலக சிருஷ்டியைப்பற்றி ஸ்மிருதிகளில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—

மநு தர்மசாஸ்திரம் முதலத்தியாயம் 8-வதில்:

"ஸோபித்ய சரீராத் ஸ்வாத்ஸிஸ்ருக்ஷுர்விதா: ப்ரஜா:
அபஏவ ஸஸார்ஜாதவ் தாஸுபிஜமவாஸ்ருஜத்"

(இ-ள்.) அந்த பரமாத்மாவானவன் சகல உயிர்களுக்கும் இருப்பிடமான தன் சரீரத்தினின்றும் நானுவிதமான பிரஜைகளைச்சிருஷ்டிக்க நினைத்து பிரம்மாண்ட சிருஷ்டிக்கு முன்னம் ஜலத்தை யுண்டுபண்ணி அதில் தன் சக்தி ரூபமான ஒரு விதையை விதைத்தார். (என்றும்)

**மநு அத்தியாயம் 1-9-வது சுலோகத்தில்.**

"தவண்டபவத் தைவமம் ஸஹஸ்ராம்சு ஸமப்ரபம்"

(இ-ள்.) அந்த வித்தானது சர்வேஸ்வரனுடைய இச்சையினல் தங்கநிறமான ஒரு அண்டமாயிற்று என்றும் பின்னும் பிரபலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

வினு—உலக சிருஷ்டியைப்பற்றி சைவ வைணவ புராண இதிகாசங்களில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—உலக சிருஷ்டியைப்பற்றி சிவாத்துவிதிகள் கருத்தென்னவென்றல்—

பிரம்மத்திலிருந்து சிவதத்துவம் 36, சத்திதத்துவம் 35, சதாசிவ தத்துவம் 34, ஈஸ்வர தத்துவம் 33, சுத்த வித்யாதத்துவம் 32, மாயாதத்துவம் 31 ஆகி அதிலிருந்து காலதத்துவம் 30, நியதிதத்துவம் 29, கலாதத்துவம் 28 ம் அதிலிருந்து வித்யாதத்துவம் 27-ம், அதிலிருந்து ராகதத்துவம் 26, புருஷதத்துவம் அதாவது சித்தமும், மேற்சொன்ன கலாதத்துவத்திலிருந்து பிரகிருதி தத்துவம் 25 ம், அதிலிருந்து குணதத்துவம் 24-ம், அதிலிருந்து புத்திதத்துவம் 23-ம், அதிலிருந்து அகங்கார தத்துவம் 22-ம், அந்த அகங்கார தத்துவத்திலிருந்து சாத்துவிக அகங்காரம், இராஜசாகங்காரம், தாமசாகங்

காரமும் அவைகளிலிருந்து முறையே மனமும் ஞானேந்திரியம் 5-ம், கன்மேந்திரியம் 5-ம், தன் மாத்திரை 5-ம், இந்தத் தன்மாத்திரையிலிருந்து பூதம் 5-ம் உண்டாகி இவைகளால் உலக தோற்ற முண்டாக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த 36-தத்துவங்களின் விவர சங்கிரகமாவது:— பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மனம் அகங்காரம் புத்தி குணம் பிரகிருதி என்னும் ஐந்து, ஆக தத்துவம் இருபத்தைந்தும் அசுத்தத்துவமாம். இருபத்தாறுந்தத்துவம் அராகம், அதற்குமேலே வித்தியாதத்துவம், அதற்குமேலே கலாதத்துவம், அதற்குமேலே நியதிதத்துவம், அதற்குமேலே காலதத்துவம்; அராகம் முதற் காலதத்துவமீறுகியவைந்தும் மிசிரதத்துவமாம். இவை முப்பதும் ஆன்மாக்களுக்கு தனித்தனி சூக்குமதேகங்களாம். அதற்கு மேல் மாயாதத்துவம், அதற்குமேலே சுத்தவித்தியா தத்துவம், அதற்குமேல் ஈஸ்வரதத்துவம், அதற்குமேலே சதாசிவதத்துவம், அதற்குமேலே சத்திதத்துவம், அதற்குமேலே சிவதத்துவம், இவையே முப்பத்தாறுமாம். சிவதத்துவம் நாதம் என்றும் சத்திதத்துவம் விந்து என்றும் சொல்லப்படும். சொல்லொற்றுமை நோக்கி சிவதத்துவமும் பரமசிவமு மொன்றெனக் கொள்ளா தொழிதலாம்.

உலக சிருஷ்டியைப்பற்றி வைணவமத சித்தாந்திகள் பின் வருகிறபடி சொல்லியிருக்கிறார்கள். எப்படி யெனில்—

பிரபஞ்சத்தை அசித்து என்று சொல்லப்படும். அதாவது அசித்து என்றால் பிரகிருதியாம். இப்பிரகிருதியானது க்ஞான சூன்யமாய், விகாராஸ்பதமாய், சுத்த

சத்துவமென்றும், மிஸ்ரசத்துவமென்றும், சத்வ சூன்ய மென்றும் மூன்றுவிதமாக விருக்கும்.

இவை தம்மில் முதலாவது சுத்தசத்வமென்பது ராஜசதாமசங்கள் லேசமுங்கலவாதே, கேவலசத்வமாத்ர மாய் நித்யமாய் க்ஞானனந்த ஜனகமாய் கர்மத்தாலன்றிக்கே கேவல பகவேச்சாநுகுணமான நிரவதிக தேஜோமயரூபானந்தாப்தியான அப்ராக்ருத போகோபகரணாதிகளாய்ப் பரிணமிக்கக் கடவதாயிருக்குமது.

இரண்டாவது மிஸ்ர சத்வமென்பது க்ஞான சூன்யமாய் விகாராஸ்பதமாய் சத்வரஜஸ்தமசுக்கள் மூன்றுங்கூடி பந்தசேதனருடைய க்ஞானானந்தங்களுக்குத் திரோதகமாய் விபரீத க்ஞான ஜனகமாய் நித்தியமாய் சர்வேஸ்வரனுக்குக் க்ரீடா பரிகாரமாய் காலபேதாதிகளால் விகாரங்களை யுண்டாக்கக் கடவதாய், விகாரங்களைப் பிறப்பிக்கையால் ப்ரக்ருதியென்றும், க்ஞான விரோதியாகையால் அவித்தையென்றும், விசித்ர சிருஷ்டி பண்ணுகையால் மாயையென்றும், இவை முதலான பரியாய நாமங்களை யுடையதாயிருக்கும். இதுதான்—

"பொங்கைம்புலனும் பொறியைந்துங் கருமேந்திரியமைம்பூதம், இங்கிவ்வுயிரே பிரகிருதிமானங்கார மனங்களே" என்றும், "பூதவிந்திய நன்ஞான விந்திய மைம்புலமுயிர் மாயைமான் மனமே, நீதமுற்றெளிர்வோன் சிவன்" என்றும் சொல்லுகிறபடியே இருபத்து நான்கு தத்வங்களாய் விரிந்திருக்கும். இவற்றில் முதலாவது தத்வம் பிரகிருதி. இந்த அவஸ்தாபேதத்தினால் அவிபக்த தமமென்றும் விபக்த தமமென்றும் அக்ஷரமென்றும் மூன்றுபடி பட்டிருக்கும். இப்பிரகிருதியிலிருந்துதான் குணவைஷம்மியத்தால் மகதாதி விகாரம் பிறக்கும்.

அப்படி பிறக்கா நின்றுள்ள விகார குணங்கள் யாவையெனின், சத்வரஜோதமசுக்களாம். இவை பிரகிரு திக்கு நிர்விகார தசையில் அநுத்பூதங்களாய், விகார தசையில் உத்பூதங்களாயிருக்கும். அவற்றுள் சத்வமான து க்ஞானத்தையும், சுகத்தையும் பிறப்பிக்கும். இவை சமங்களானபோது விகாரங்கள் சமங்களாய் அஸ்பஷ்டங்களாயிருக்கும். இவை விஷமங்களானபோது விகாரங்கள் விஷமங்களாய் ஸ்பஷ்டங்களுமாயிருக்கும். விஷம விகாரங்களில் பிரதம விகாரமானது, மஹாந். இந்த மஹானானது சாத்விகம் ராஜசம் தாமசமென்று திரிவிதமாயிருக்கும். இவை மூன்றும் அவசாய ஜனக மாயுமிருக்கும். இதிலிருந்து வைகாரிகமென்றும், தைசத மென்றும், பூதாதியென்றுஞ் சொல்லாநின்ற மூன்றுவித அஹங்காரம் பிறக்கும். இவற்றில் வைகாரிகத்திலிருந்து சுரோத்திரியாதி ஞானேந்திரியங்கள் 5-ம், வாக்காதி கருமேந்திரியங்கள் 5-ம், மனசு 1-ம், ஆக 11-இந்திரி யங்களும் பிறக்கும். பூதாதி அகங்காரத்தில் நின்றும் சப்த தன்மாத்திரை பிறக்கும், இதிலாகாசம் பிறக்கும், இதில் ஸ்பரிச தன்மாத்திரை பிறக்கும், இதில் வாயு பிறக்கும், இதில் ரூப தன்மாத்திரை பிறக்கும், இதில் அக்கினி பிறக்கும், இதில் ரஸ தன்மாத்திரை பிறக்கும், இதில் அப்பு பிறக்கும், இதில் கந்த தன்மாத்திரை பிறக்கும், இதில் பிருதிவி பிறக்கும். இந்த தன்மாத் திரைகளாகின்ற பூதங்களின் சூட்சுமாவஸ்தைகளுக்கு மற்ற இரண்டகங்காரங்களும் சககாரிகளாகவிருக்கும்.

இவை கூடினாலல்லது காரியகர மாகாமையாலே, மண்ணையும் மணலையும் நீரையும் சேர்த்து ஒரு திரவிய மாக்கிச் சுவரிடுவாரைப்போல சர்வேஸ்வரன் இவற்றை யெல்லாம் தனியே சேர்த்து ஓரண்ட புண்டரிக முண் டாக்கி அதற்குள்ளே சதுர்முகனை யுண்டாக்கி அவனைக்

கொண்டு சமஸ்த வஸ்து சமூகத்தோடு தேவமானுஷ்ய திரியக் ஸ்தாவராதிகளை முறையே அந்தர்யாமியாய் எழுந்தருளியுண்டாக்கி யருளுவான் என்பதாம்.

வினா—இந்த உலக சிருஷ்டியைப்பற்றி சைவ வைணவ சித்தாந்திகள் சொல்வது வித்தியாசமாகத் தோன்றுவதால் கலவரத்திற்கிடமாகிறது. ஆகையால், சிருஷ்டி விஷயத்தில் இந்து சமயத்தார் அனைவரும் அங்கிகரித்துக்கொண்டிருக்கிற விஷயத்தைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—அப்படியே சொல்லுகிறோம் கேளும்.

வினா—உலக சிருஷ்டிக்கு முக்கிய சாதனம் யாது?

விடை—பிரகிருதியாம்.

வினா—பிரகிருதியின் இலக்ஷணத்தைப்பற்றி சங்கிரஹமாகச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—பிரகிருதி என்றால் "டுக்ருஞ்தாது கரணே செய்தல் ப்ரகுர்யதே + அாய = காரியம்" = இதனால் உலக காரியம் செய்யப்படுகிறது என்பது கருத்து.

## ஸாங்கிய சூத்திரம் அத்தியாயம் 12 சூத்திரம் 61-ல்.

"ஸத்வ ரஜஸ்தமஸாம் ஸமாவஸ்தா ப்ரக்ருதி:"

(இ-ள்.) 'ப்ரக்ருதேர்மஹாந் மஹதோ அஹம்காரோ அஹங்காராத் பஞ்சதந்மாத்ராண் யுபயமிந்த்ரியம் பஞ்சதந்மாத்ரேப்ய: ஸ்தூல பூதாநிபுருஷ இதி பஞ்சவிம்சதிர்கண:,' என்றுசொல்லி இருப்பதைப்போல சத்வ(சுத்தம்) ரஜஸ் (மத்யம்) தமஸ் (ஜாட்யம்) ஆகிய இந்த மூன்று குணங்கள் கூடியதற்கு ப்ரகிருதி என்று பெயர். அதி

யிருந்து மஹத்தத்துவம் என்றால் புத்தி, அதிலிருந்து அஹங்காரம், அதிலிருந்து பஞ்ச தன்மாத்திரைகள், சூக்ஷ்ம பூதங்கள், பத்து இந்திரியங்கள், பதினோராவது மனது, அந்த பஞ்சதன்மாத்திரைகளிலிருந்து ப்ருதிவியாதி பஞ்ச பூதங்களாகிய இருபத்து நான்குடன் இருபத்தைந்தாவதான புருஷனான ஜீவனும் பரமேஸ்வரனாகி இருக்கிறான் என்பதாம். இவனிடம் பிரகிருதி, அவிகாரணி, மஹத்தத்துவம், அஹங்காரம், பஞ்ச சூக்ஷ்மபூதங்கள் பிரகிருதியின் காரியங்களாகி இந்திரியங்களுக்கும் மனசுக்கும் ஸ்தூல பூதங்களுக்கும் காரணங்களாக இருக்கின்றன.

வினா—சிருஷ்டி விபரிசைக்காதாரமான ப்ருதிவியைப் பற்றி ரிக்காதி வேதங்களில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—விபாகிக்கக்கூடாமல் சகலத்திற்கும் சூக்ஷ்மமானது பரமாணு, அப்படிப்பட்ட பரமாணு அறுபது கொண்டது ஒரு அணு, இரண்டு அணுவுக்கு த்வயணு, அதுவே ஸ்தூலவாயு; மூன்று த்வயணுக்கள் அக்நி, நான்கு த்வய அணுக்கள் ஜலம், ஐந்து அணுக்கள் பிருதிவி என்றால் மூன்று அணுக்கள் த்ரஸரேணு அதின் அதன் இரண்டத்தனை பாகம்கொண்டது பிருதிவி முதலான திரவ்ய பதார்த்தங்களாம். பரப்ரஹ்மத்தினின்று மூல பிரகிருதி உண்டாகியது. அந்த மூலபிரகிருதியினின்று உலகங்களெல்லாம் தோன்றுதல் சிருஷ்டியெனப்படும். அத்வைதிகள் பிரபஞ்சமெல்லாம் பிரஹ்மத்தினின்று தோன்றும் என்று கூறுவார்கள். துவைதிகள் சித்தும் அசித்துமென இரண்டு பொருளுண்டென்றும், சித்தினது அதிகாரத்தால் சித்

னும் அசித்துமாகிய பிரபஞ்சந் தோன்றுமென்றும்,
விசிஷ்டாத்துவைதிகளும் சுத்தாத்துவைதிகளும்
பிரமம், ஆன்மா, மாயை என முப்பொருளுண்டென்
றும், பிரமம் ஆன்மாவின் பொருட்டு மாயையி
னின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்குமென்றும்
சிருஷ்டியைப் பல திறப்படக் கூறுவர். இரண்டோர
பிசமன்றி மற்றெல்லாம் இந்நாட்டு எல்லா வைதிக
சமயிகளுக்கும் பொதுவேயாம். அதன் விவரமா
வது—மாயையென்று கூறப்படுவதாகிய மூலப் பிர
கிருதியிலே பிரகிருதி தோன்றும், அதனிடத்தே
குணதத்துவந் தோன்றும். அக்குணம் சாத்துவிகம்
இராஜதம் தாமதமென மூன்றாம். அக்குண தத்து
வத்திலே புத்திதத்துவந் தோன்றும், புத்தியெனி
னும் மஹத்தத்துவமெனினும் பொருளொன்றே. அப்
புத்தி தத்துவம் குணத்திரயத்தை யுடையதாய்த்
தோலினாலே மூடிக்கொள்ளப்பட்ட வித்துபோலப்
பிரகிருதியினாலே மூடப்பட்டிருக்கும். அதினின்
றும் வைகாரிகம், தைஜசம், பூதாதியென்னும் அகங்
காரங்கள் மூன்றும் தோன்றும், அவ்வகங்காரம்
புத்தி தத்துவத்தினாலே மூடப்பட்டிருக்கும். அம்
மூன்றனுள்ளே பூதாதியாகிய தாமசாகங்காரத்தினி
ன்றும் சத்த தன்மாத்திரை தோன்றும், அத்தன்
மாத்திரையினின்றும் ஆகாசந்தோன்றும், அவ்வா
காசம் தாமசாகங்காரத்தினாலே மூடப்பட்டிருக்
கும்; அவ்வாகாசம் விகாரப்பட்டு பரிச தன்மாத்
திரையை யுண்டாக்கும், அதினின்று வாயுதோன்
றும், அக்காரணத்தால் வாயுவின் குணம் பரிசமா
யிற்று. வாயுவும் ஆகாய கவசமுடையது. வாயு
விகாரப்பட்டு ரூப தன்மாத்திரையை யுண்டாக்கும்.
அத்தன்மாத்திரையினின்றும் தேயுதோன்றும்.

அது பற்றி தேயுவுக்கு ரூபம் சிறப்பியல்பாயிற்று. தேயு பரிசதன்மாத்திரையினாலே மூடப்பட்டிருக்கும். தேயு விகாரப்பட்டு ரசதன்மாத்திரையையுண்டாக்கும், அதினின்றும் அப்பு தோன்றும், அப்புவும் ரூப தன்மாத்திரையினாலே பொதியப்பட்டிருக்கும். அப்பு விகாரப்பட்டு கந்ததன்மாத்திரையையுண்டாக்கும். அதினின்றும் பிருதிவி தோன்றும். மூலப்பிரகிருதியும் மகத்தும் அரூபம். அகங்காரமும் தன்மாத்திரையும் மஹாபூதங்களும் ரூபம். சத்தத்தினின்றும் ரூபம் தோன்றும். சத்தம் சோதியிற்றோன்றும், சோதி மனதிற்றோன்றும், மனம் புருஷனிற்றோன்றும், சத்தம் சோதியிற்றோன்றுமென்பது யோக சூத்திரத்தில் "அநாஹதஸ்ய சப்தஸ்ய" என்னுஞ் சூத்திரத்தினாலறிக. மேலே கூறப்பட்ட பஞ்ச பூதங்களும் தம்மிற்கூடிய சிருஷ்டியை விருத்திபண்ணும் ஆற்றலில்லாதனவாக ஈசுவரசக்தி அவற்றுட் கலந்து நின்றாக்கும். ஊக்கவே, அவை பஞ்சீகரணப்பட்டு பிரமாண்டத்தைத்தோற்றுவிக்கும். பிரபஞ்சமனைத்தும் சித்தும் சடமும் ஆகிய இருகூற்றில் அடங்கும். சித்தின்றி சடம் இயங்காது. ஆகவே தோற்றந்திதி நாசமென அவ்வியக்தமும் மூன்றாய்த்தோன்றும். தோற்றுவிக்குஞ் சக்தி பிரமாவெனப்படும்; திதிசெய்யும் சக்தியாகிய காலவடிவம் விஷ்ணுவெனப்படும்; நாசஞ்செய்யுஞ் சக்தி உருத்திரன் எனப்படும். ஒவ்வோரணுவையும் இம்மூன்று சக்திகளும் பற்றிநின்று தத்தம் முறையிலே தமது தொழிலைச்செய்யும். இவற்றை ஐரோப்பிய பண்டிதர்கள் ஆற்றலென்பர். ஆரியர் தனித்தனி கடவுள் என்பர். மேலே தாமசாகங்காரத்தின் றோற்றங்கூறினோம். இனி சாத்துவிக அகங்கார

மாகிய வைகாரிகத்தினின்றும் மனமும் சுரோத்திர முதலிய பஞ்ச ஞானேந்திரியமும் தோன்றும். ராச தாகங்காரமாகிய தைஜசத்தினின்றும் வாக்கு முத லிய கன்மேந்திரியம் ஐந்துந்தோன்றும். ஒவ்வொரு பூதமும் இருகூறாகி ஒரு கூற்றை நிறுத்தி மற்றைக் கூற்றை நான்கு கூறாக்கி ஏனைய நான்கு பூதங்கட்கு மொவ்வொன்றாகக் கொடுத்தும், வாங்கியும் தம்மிற் கலப்பதே பஞ்சீகரணமாம். அஃதாவது பிருதிவி யிலே பிருதிவி தன்மாத்திரை அரை; அப்புதன் மாத்திரை அரைக்கால்; தேயுதன் மாத்திரை அ ரைக்கால்; வாயுதன் மாத்திரை அரைக்கால்; ஆகா ய தன் மாத்திரை அரைக்கால்; இப்படியே மற்ற வையுமாமெனக்கொள்ளுக. தூலபூதங்களைப் பேதி த்தால் இக்கூறுகள் புலனாகும். இதனால் இந்நாட்டு வைதிகர்கள் சொல்லும் உலக உற்பத்தியின் விஷ யத்தில் கிஞ்சித்பேதமிருக்கினும் பொதுவில் எல் லாருடைய கருத்துகளும் சமமாகவே இருக்கும்.

வினா—சிலர் இந்த உலகம் சூரியனுடைய ஆகருஷண சக்தியினால் சுழலாமல் ஸ்திரமாக நிற்கிறது என் று சொல்லுகிறார்களே அது உண்மையா?

விடை—அப்படி என்றுவது பொய்யேயன்றி மெய் யல்ல.

**யஜுர்வேதம் அத்தியாயம் 3, மந்திரம் 6-ல்.**

"ஆயங்கவ்ய: ப்ருச்நிரக்ரமீ தஸதந் மாதரம்புர: பிதரஞ்சப்ரயந்ஸ்வ:"

(இ-ள்.) 'இந்த பூகோளம் ஜலத்தோடு சூரியனை சுற்றுதுதரம் திரும்பிப்போய்க்கொண்டிருக்கிறது' என்ற சொல்லி இருப்பதாலும்.

யஜுர்வேதம அ. 33, மந்திரம் 43-ல்.

“ஆகர்ஷேண ரஜஸா வர்த்தமாநோநிவேசயந்
நம்ருதம்ம்ருத்யுஞ்ச
ஹிரண்மயேந ஸவிதா ரதேநாதேவோயாதி
புவநாநிபச்யந்”

(இ-ள்.) ‘மழைகளைப் பெய்யச் செய்பவனும், பிரகாச ரூபனும், தேஜோமய இரண்மயமானவனும், சவிதா என்னும் பெயரால் ஜ்வலிக்கும் சூரியன் சகல பிராணிகளுக்கும் அபிராணிகளுக்கும பிராணனையும் சக்தியையும் கொடுத்து, தனது கிரணங்களால் பிரகாசித்து மற்றப் பிரமாண்டங்களை ஆகருஷண கவர்ச்சியினால் தாங்கி தந்நிலையில் நடிக்கிறான்’, என்று சொல்லி இருப்பதால் நமது உலகமும் ககனத்திலாடும் அநந்தகோடி பிரம்மாண்டங்களும் ஆகருஷண சக்தியினால் பிடிக்கப்பட்டு ஆடிக்கொண்டிருக்கின்றன.

வினா—இந்த உலகம் இப்படி சூரியனைச்சுற்றி சுழல்வதனால் வேறு பிரயோஜனங்களுண்டோ?

விடை—உண்டு, இச்சுழல்களினால் நடக்கு பகல், இரவு, வாரம், பக்ஷம், மாதம், வருஷ முதலானவை உண்டாகின்றன.

அதர்வணவேதம் 14-அநு. 1, மந்திரம் 1-ல்.

“திவஸோமோ ஆதிசிரித்த:”

(இ-ள்.) சந்திரலோகம் சூரியனால் பிரகாசிப்பதைப் போலவே நமது உலகமும் மற்றநேக அண்டகோளங்களும் சூரியனைச்சுற்றி வருவதால் பிரகாசத்தையும், அதனால் இரவு பகல்களையும் பெறுகின்றன’ என்று சொல்லப்பட்டிருக்கிறது.

வினா—இந்த உலகமானது அந்தரத்தில் ஆடிக்கொண்டிருக்கிறதென்று சிலரும், சேஷன் என்னும் பாம்பின்மேல் ஆதாரப்பட்டிருக்கின்றது என்று சிலரும், மாட்டின் கொம்புகளின்மேல் நிற்கிறதென்று சிலரும், பின்னும் பலர் பற்பலவிதமாகச் சொல்லுகிறார்கள். இக்கருத்துகளில் எது உண்மையானது?

விடை—அதர்வணவேதம் 14-வது காண்டம் 81-மந்திரம் 1-ல்—

"ஸத்யே நோத்த பிதா பூமி :"

(இ-ள்.) என்றைக்கும் நாசமற்று திரிகால ஞானியாகிய பரமேசுவரன் பூமியையும், சூரியனையும் மற்ற அண்டகோளங்களையும் அந்தரத்தில் சுகோள ஒட்டக் கவர்ச்சி, இழுப்புக் கவர்ச்சியாதி சக்திகளால் தாங்கிக் கொண்டிருக்கிறான் என்பதாம். சிலர் சேஷனால் தாங்கப்பட்டிருக்கிறதென்றால் "சேஷாதாரப்ருதுவி" சேஷனால் தாங்கப்பட்டிருக்கிறதென்றால் பரமேஸ்வரனாலே தாங்கப்பட்டிருக்கிறதென்பதே பொருள். எப்படியெனில் சேஷம்=என்றால் மிச்சம் அல்லது மீந்தது என்றுபொருள். அதாவது எவன் உத்பத்தி ப்ரளயங்களுக்குட்படாமல் மிச்சமாகிஅல்லது மீந்து இருப்பானோ அவனுக்கு சேஷன் என்றுபெயர். இக்கருத்தையறியாதவர்கள் பூமி ஆதிசேஷன்மீது தாங்கப்பட்டு நிற்கிறதென்று எண்ணுகிறார்கள். சிலர் மாட்டின் கொம்பின் மேல் தாங்கப்பட்டிருக்கிறது என்று சொல்லுவது ருக்வேதத்தில் "உக்ஷாதாதாரப்ருதிவீமுதத்யாம்" என்னும் வாக்கியத்திலுள்ள உக்ஷா என்னும் சப்தத்திற்கு மாடு என்னும் பொருளுமிருப்பதால் அதன் உண்மையான பொருளையறியாமல் இப்படி குத்ஸிதமாக எண்ணுகிறார்கள். உக்ஷா என்றால் சூரியன் என்றுபொருள். அந்த சூரியனுடைய ஆகருஷணகவர்ச்சியினால் இழுக்கப்பெற்

றம், அச்சூரியன் பரமேசுவரனால் தாங்கப்பெற்றும் இரு ப்பதால் உகூதாவினால் தாங்கப்பெற்றதென்று சொல்லப் பெற்றது.

வினு—அப்படியா! இந்த உலகத்தைப் பரமேசுவரன் எங்கிருந்து கொண்டும், எதிலிருந்தும், சிருஷ்டித் தாரய்யா?

விடை—முண்டகோபநிஷத்து ம. 1, க. 1, மந்திரம் 7-ல்—

"யதோர்ண நாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச"

(இ-ள்.) எப்படிஒரு சிலந்திப்பூச்சியானது தனக்கு வெளியிலிருக்கும் எந்தப் பதார்த்தத்தையும் எடுத்துக் கொள்ளாமல் தனக்குள்ளிருந்தே (ஒருவித) நூலையிழுத்துக் கூண்டைக் கட்டிக்கொண்டு, அந்தக்கூட்டில் நடித்து விளையாடுவதைப்போல, பரமேசுவரன் இப்பிரபஞ்ச சிருஷ்டிக்கு வேண்டிய பதார்த்தங்களை தமக்குள் வைத்துக்கொண்டிருந்து அவற்றால் பிரபஞ்சங்களை சிருஷ்டிக்கிறான். மேலும் பரமேசுவரன் எங்கேயோ ஓரிடத்தில் இருந்துகொண்டு உலகங்களைச் சிருஷ்டித்ததாகவும், சிருஷ்டிக்கிறதாகவும் சிலர் எண்ணுகிறார்கள். அது பிசகான எண்ணம். வேதங்களில் பரமேசுவரனை "யஃ பிருதிவிசரீரம்" பிருதிவியை சரீரமாகவும், அந்த பிருதிவிக்கு வேறு பட்டவனாகவும் சொல்லியிருப்பதால், அப்பரமேசுவரன் இந்த உலகத்துக்கு வெளியிலிருப்பதைப் போலவே உலகத்துக்கு உள்ளும் இருந்து சிருஷ்டியாதிகிருத்தியங்களைச்செய்து விளையாடுகிறான். இப்படிச்செய்வதற்கே அவனது லீலாவிபூதி என்று பெயர்.

வினு—சிலர் சூரியாதிகளும் நமது உலகத்தைப்போலவே கிரஹங்களாகையினால், அவைகளிலும் ஜீவராசிகளும், மநுஷரும் வசித்து வருவதாகச் சொல்லுகிறார்களே அது உண்மையா?

விடை—உண்மைதான்.

சதபதகாண்டம் 14-ப-6-பி-7-க-4-ல்.

"ஏதேஷு-ஹீதகம் ஸர்வம் வஸுஹித
மேதேஹீதகம் ஸர்வம் வாஸயந்தேதத்தியதிதகம்,
ஸர்வவாஸயம்தே தஸ்மாத் வஸவ இதி"

(இ-ள்.) பிருதுவி, ஜலம், அக்நி, வாயு, ஆகாசம், சந்திரன், சூரியன் முதலானவைகளுக்கு வஸு என்று பெயர், இவற்றினிடம் சகல பதார்த்தங்களும் பிரஜைகளும் வசிப்பார்கள். இவை யாவையும் வசிக்கச்செய்யும் இடத்திற்கு கிருஹம் என்று பெயரிருப்பதால் வஸு என்னும் பெயருண்டாகியது. பிருதிவியைப் போலவே சூரியாதி கோளங்கள் வஸு வாகும்போது அவற்றிலும் ஜனங்கள் வதிந்துவருவது உண்மையேயாம்.

வி௫—சூரியன் மஹா பயங்கரமான உஷ்ணத்தையுடையதாகையால், அதில் பிராணிகள் வசிக்கக்கூடுமா?

விடை—சூரியனுகிய அண்டத்திலிருந்து நமது உலகத்திற்குவரும் பயங்கரமான உஷ்ணம் அந்த சூரிய அண்டத்திற்கு அநேக மயில்கள் தூரத்திலிருந்து நமது உலகிற்கு வருவதனுலும், "சவிதாவாச:" என்று வேதங்கள் கோஷிப்பதாலும், சவிதாகிய சூரியனுலகத்திலும் அநேக பிராணிகள் வசிப்பது திண்ணம்.

வி௫—இந்த உலகம் சிருஷ்டியாகி எத்தனை வருஷங்களாகிறது ஐயா?

விடை—பிரஹ்மண கல்பாதிகதாப்தம் 19,72,94,99,099 கோடி வருஷங்களாகிற தென்றும், சிருஷ்டியாதி சகாப்தம் 19,55,88,59,009 வருஷங்களாகிறதென்

றும், இவற்றில் முதல் சுவயம்பு மநுவின் சகாப்தம் 19,71,82,19,009 வருஷங்களாகிறதென்றும், வர்த்தமான வைவஸ்வதமநு சகாப்தம் 0,89,39,009 வருஷங்களாகிறதென்றும், கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகங்களில் அநேக சக்கிரவர்த்திகள் ஜனித்து அநேக வருஷங்கள் ஆண்டார்களென்றும் இப்போது (கி. பி. 1910-ஞூக்கு) கலியுகம் பிறந்து 5000 த்துக்கு மேலாகிறதென்றும் ஆரியர் ஜோதிஷ சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

வினா—கிறிஸ்தவர் முதலான சில மதஸ்தர்கள் இந்த உலகம் சிருஷ்டிக்கப்பட்டு 6000-வருஷங்களாகிறதாகச்சொல்லுகிறார்களே அது நிஜமா?

விடை—அது சரியான கணக்காகத் தோன்றவில்லை. ஏனெனில், பாபிலோன்தேசத்தில் 4,30,000-வருஷங்களுக்கு முன்பே பஞ்சாங்கம் கணித்து வந்ததாகவும், அத்தேசத்து முதலரசன் 4,67,581-வருஷங்களுக்குமுன் அரசுசெய்ததாகவும், சீனு தேசத்து பஞ்சாங்கம் 15,000-வருஷங்களுக்குமுன் கணித்ததாகவும், எகிப்து தேசத்தில் பஞ்சாங்கம் 1,10,000 வருஷங்களுக்குமுன் கணித்ததாகவும் அவிடத்திய உன்னத கோபுரம் 10,000-வருஷங்களுக்குமுன்பே கட்டப்பட்டதாகவும், கடைசியாக ஆங்கிலநாட்டிற் சிறந்த தத்துவ சாஸ்திரியாகிய ஸர். வில்லியம் தாம்சன் (லார்டுகெல்வின்) என்பவர் இந்தஉலகம் பிராணிகள் வசிக்கும்படியான ஸ்திதியையடைய 2,20,000-வருஷங்களுக்குமேலாகிறதாகச் சொல்லியிருக்கிறார். ஆகவே இது விஷயத்தில் இந்நாட்டாருடைய கணக்கே சரியானதாக எண்ணலாம்.

வினா—இதுவரையில் பிரபஞ்ச உற்பத்தியைப் பற்றிச் சொன்னதைக்கேட்டு மகிழ்ந்தேன். இனி இந்த

ஜகத்தில் சராசரஜீவ ஜந்துக்கள் உண்டான விவரத்தைச் சற்று சொல்லுங்கள் கேட்போம்?

விடை—இது விஷயத்தைப்பற்றி ஆரியர் வேதத்தின் முதல்பாகத்தில் சவிஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறோம். பெருநெருப்பிலிருந்து பொறிகள் பிறப்பதைப்போல பரமேசுவரனாகிய பெரிய பிராணனிடத்திலிருந்து பிரபஞ்சப் பிராணப்பொறிகள் அவனுடைய இச்சாமாத்திரத்தில் பிரபஞ்சத்தில் வந்து "புல்லாகி பூண்டாகி பல் மிருகமாகி" என்றுதி வாக்கியங்களின்படி இந்த அண்டத்தில் அண்டசம், சுவேதசம், உத்பிசம், சராயுசம் என்னும் நான்குவித தோற்றத்தில் சுரர் 11-லக்ஷம், நரர் 9-லக்ஷம், மிருகம் 10-லக்ஷம், தாவரம் 19-லக்ஷம், பக்ஷிகள் 10-லக்ஷம், நீர்வாழ்வன 10-லக்ஷம், ஊர்வன 15-லக்ஷம் ஆக இந்த எழுவகை பிறப்பில் 84-லக்ஷங்கள் தோன்றியதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

வினா—இந்த கணக்கை மேல்நாட்டு ஜீவதத்துவ சாஸ்திரிகள் சரியானதாக அங்கீகரிப்பார்களா?

விடை—மேல்நாட்டு சாஸ்திரிகளில் சிலர் மிருகங்களில் 1200-விதங்களும், பக்ஷிகள் 6800-ம், ஊர்வன 1500-ம், மீன்கள் 8000-ம், பூச்சிகள் 5,50,000-ம், புழுக்களில் 2500-விதங்களும், ராடியாடா பிராணிகள் 1000-ம், பொலிபஸ் பிராணிகள் 1530-ம், டெஸ்டேஸிய பிராணிகள் 4500-ம் கரசரணங்களற்ற பிராணிகள் 600-ம் ஆக 5,77,000-பிராணிகள் வரையில் எண்ணி கணக்கிட்டிருக்கிறார்கள் (*vide* page 32, The Astrological Magazine, Vol. XII, Nos. 1 and 2, October and November, 1909 Madras) சில சாஸ்திரிகள் பின்னும் அதிக பிராணிகளிருப்

பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். இவைகளோடு செடிகள், விருக்ஷங்கள் முதலானவைகளைச் சேர்க்கில் கிட்டதிட்ட 84-லக்ஷமாகும்.

வினா—பிரபஞ்சப் பிராணிகளை சில தத்துவ சாஸ்திரிகள் பரிசோதித்ததில், அவைகள் பிராணவாயு (oxygen), கரிவாயு (carbon), ஜலவாயு (hydrogen), உப்புவாயு (nitrogen), பெரும்பாகமாகவும், கந்தகசத்து (sulpher), பாஷ்பரசத்து (phosphorus) ஆகிய மூலகாரணப் பொருள்கள் சிறுபான்மையாக சேர்க்கையினுலுற்பத்தியாவதாகச் சொல்லுகிறார்களே அது நிஜமா?

விடை—பிராணிகளுடைய ஜடதேகங்களை சோதிப்பதனுல் மேற்சொன்ன பதார்த்தங்கள் சேர்ந்திருத்தலைக்காணலாம். ஆனுல் அப்பொருள்கள் எவ்வெவ்வளவு பாகம் கலப்பதனுல், அவ்வவ்வித பிராணிகளாகலாமென்று தெரிந்து அப்பொருள்களை கணக்கின்படி சேர்க்க ஒருபொருள் வேண்டுமல்லவா? அப்பொருளே பரமேசுவரனுகும்.

வினா—மேல்நாடுகளில் பிரகாசமான சில சிறந்த தத்துவ சாஸ்திரிகளாகிய ஹக்ஸ்லி, ஸ்பென்சர், பக்கினீர், வபக், டார்வின், கெல்வின் முதலானவர்கள் தாதுகந்தமூல பிராண சவ சத்துக்களாலாகிய புரோட்டப்ளாசம் (protoplasm) என்னும் குழம்பான ஓர் வித பாசைகுகைகளிலிருந்து பிராணிகள் உற்பத்தியாகிறதாக சொல்லுகிறார்களாமே, அது நிஜமா?

விடை—பரமேசுவரனிடமிருந்து நெருப்புப் பொறிகளைப்போலவரும் பிராணசத்துக்கள் பிரபஞ்சத்தில் எப்படியெப்படி மாற்றப்பெற்று ஜனிக்கலாமென்பதைப்பற்றி அவர்கள் சொன்னுர்களேயொழிய பி

ரானன் இன்னதெனபதைபபற்றியும, அது எப்படி ஜனிக்கிறதென்பதைப் பற்றியும் இதுவரையில் எந்த சாஸ்திரியாராலும் கண்டுபிடிக்கப்படாமையால் இது விஷயத்தில் ஆரியர் கருத்தே சிறந்ததென்று சொல்லலாம்.

வினா—இப்பிரபஞ்சத்தில் சிறந்த பிராணி எது ?

விடை—மனுஷனுகிய ஜீவாத்துமாவேயாம்.

வினா—உலக சிருஷ்டியைப்பற்றி தமிழ்நாட்டு ஞானிகளும், கவிகளும் என்னமாகச் சொல்லுகிறார்கள் ?

விடை—

" அகரமுதலவெழுத்தெல்லாமாதி
பகவன்முதற்றேயுலகு " என்றும்.

" உலகம்யாவையும்தாமுளவாக்கலு
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
வலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணுங்களே " என்றும்.

" அண்டமடுக்கித்திண்புவனத்தைத்
தாழாதாழாதே
யம்புலிவைத்துச்செங்கதிர்வைத்துப்
போமாறேயாதே
பண்டசலப்போற்றண்டநிறுத்திச்
சாயாதோயாதே
பம்புமலைக்கைத்தெண்டிரையிட்டுச்
சீறுதேறுதே " என்றும்

பின்னும் பலவிதமாகப் பலர் பாடி இருக்கிறார்கள்.

பிரபஞ்ச உற்பத்தியைப்பற்றி இதுவரையில் எடுத்துக்காட்டிய பிரமாணங்களை இவ்வுலகத்தின் மற்ற மதஸ்தர்கள் சொல்லும் கதைகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பவருக்கு இம்மதஸ்தர்களுடைய சித்தாந்தம், தத்துவ ஞானத்திற்குப் பொருந்தியதாயும், தத்கால பூகோளபவுதிக சாஸ்திரிகள் கருத்துக் கேற்றதாகவுமிருத்தல் பிரத்தியக்ஷமாம்.

We believe, that this Universe has sprung from and is sustained and governed by the Will of a Supreme and self-existent Being, infinite in power, wisdom, love, justice and holiness. His Providence is ever-active, special as well as universal. By reason of His infinitude and uniqueness, He is beyond our conception, but certainly not beyond our *knowledge* and faith. We cannot conceive or comprehend Him except but partially through His manifestations in nature and in man, but by means of our reason, and instinct, faith and intuition, we can sufficiently *know Him* to *believe in Him* and to worship Him, in faith and spirit.—*Pundit Siva Nath Sastri.*

# மூன்றாவது அத்தியாயம்.

## ஆத்ம லக்ஷணம் அல்லது ஜீவாத்மா.
## SOUL OR MAN.

வினா—ஜீவாத்மா என்றால் என்ன ?

விடை—ஜீவன் அல்லது பிராணனாகிய ஆத்மாவாம்.

வினா—ஆத்மா என்றால் என்ன ?

விடை—அமரம் பிரதமகாண்டம், காலவர்க்கம் 137-வது சுலோகத்தில் க்ஷேத்ரக்ஞாதி சப்தங்கள் மூன்றென்றும், சாங்கியத்தில் ஜீவனுடைய பெயர்கள் என்றும், க்ஷேத்திரமெனில் = சரீரம், அதையறிந்தவன் என்றும், சம்சாரத்தில் ஜ—வலிப்பவன் என்றும், சுவகர்மபலத்தை பக்ஷிப்பவன் என்றும் சொல்லப்பட்டிருப்பதன்றியில், பூரம் என்றால் சரீரம், அதிலிருப்பவனாகையால் புருஷன் என்றும், அதாவது சரீரத்தில் புருஷனாக இருப்பவன் என்றும், ஷை அமரம், திருதீயகாண்டம், நானார்த்த நாந்தவர்க்கம், 226-வது சுலோகத்தில் ஆத்மன் என்னும் சப்தம் யத்தனத்திற்கும், தைரியத்திற்கும், புத்திக்கும், சுபாவத்திற்கும், பரமாத்மாவுக்கும், தேகத்திற்கும், "ச". காரத்தினால் ஜீவனுக்கும், இடைவிடாமல் சஞ்சரிப்பவன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆத்ம பதார்த்தத்தைப்பற்றி ஸ்ரீஜீவாநந்த வித்யாசாகரர், ஸ்ரீதாராநந்த தர்க்கவாசஸ்பதியவர்களுடைய "ஸமஸ்கிருதாபிதானம்" என்னும் அகராதியில் ஆத்மா என்னும் பதத்திற்கு அத + மனி

ன் = ஆத்மன் என்றும், ஸ்வரூபம், யத்நம், தேக ம், மநது, வியாபாரம், விருத்தி, சூரியன், அக்கினி, வாயுவு, பிரஹ்மன், ஜீவன் முதலானவைகளுக்குச் சொல்லலாம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் முக்கியார்த்தம் ஜீவனும்.

வினா—இந்த ஜீவாத்மாவின் இருப்பைப்பற்றி வேதங் களில் எவ்விதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது ?

விடை—

ருக்வேதம் மண்டலம் 1, சூக் 164, மந்திரம் 20-ல்

"த்வாஸுபர்ணாஸயுஜாஸகாய
ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாயதே
தயோரந்ய: பிப்பலம்ஸ்வாத்வாத்ய
நச்நந்நந்யோ அபிசாகசீதி"

(இ-ள்.) பிரஹ்மமும், ஜீவனும் ஆகிய இவர்கள் இரண்டு பெயரும் (ஸுபர்ண) சேதநங்கள், பாலந முத லான குணங்களில் ஸமானமானவர்கள், (ஸயுஜா) வ்யாப்ய வியாபகபாவங்களினால் ஸம்யுக்தமானவர்கள், (ஸகாய) பரஸ்பரமாக சிநேகமுடையவர்களாயும் ஸநாதனமான வர்களாயும் இருக்கிறார்கள். (விருக்ஷம்) அநாதிமூலரூப காரணமாகவும், சாகாரூபகாரியமாகும் விருக்ஷமாகும். என்றால் எது ஸ்தூலமாக பிரளயத்தில் சின்னபின்னமா குமோ அந்த பிருதிவி மூன்றாவது அநாதிபாகமாம். இம் மூன்று பதார்த்தங்களின் குணகர்ம சுபாவங்கள் அநாதி யாம். இந்த பிரஹ்ம ஜீவர்களில் ஒருவனாகிய ஜீவன் இந்த விருக்ஷரூப சம்சாரத்தில் பாபபுண்ய பலத்தை (ஸ்வாதத்தி) நன்றாக புசிக்கிறான். இரண்டாவதாகிய பர மாத்மா (அநச்நந்) புசிக்காமல் (அபிசாகசீதி) நாலா புறத்திலும், என்றால் உள்ளும் வெளியும் பிரகாசித்துக்

கொண்டு இருக்கிறான். ஜீவனைவிட ஈசுவரன் வேறானவனும், ஈசுவரனைவிட ஜீவன் வேறானவனும், இவ்விருவரைக்காட்டிலும் பிரகிருதி வேறானதாகவும் இருக்கிறது, என்றும்.

## யஜுர்வேதம் அத்தியாயம்-40, மந்திரம் 8-ல்

" சாச்வதீப்ய : ஸமாப்ய : "

(இ-ள்.) (சாச்வதீப்ய :) அநாதியாகும் ஜீவாத்மாக்களாகிய மநிதர்களுக்கு வேதமுதலான சகல சாஸ்திரங்களையும் கற்பித்தான் என்றும், பின்னும் பலவிதமாக சொல்லப்பட்டிருக்கிறது.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி உபநிஷத்துக்களில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது ?

விடை—

## முண்டகோபநிஷத்தில்

த்வாஸுபர்ணா ஸயுஜாஸகாய
ஸமாநம்விருக்ஷம் பரிஷஸ்வஜாயதே,
தயோரந்ய : பிப்பலம்ஸ்வாதத்ய
நச்நந்யோபிசாகசீதி
ஸமாநவ்ருக்ஷேபுருஷோநிமக்நோ
நீசயாசவுசதிமுஹ்யமாந :
ஜுஷ்டம்யதாபச்யத்யநியமீ
சமஸ்ய மஹிமாநமதிவீதசோக :

(இ-ள்.) தேகமாகிய விருக்ஷத்தில் இரண்டு அழகிய பக்ஷிகள் வசிக்கின்றன. அவைகள் இரண்டும் ஒன்றுக்கொன்று தோழர்களாக இருக்கின்றன. அவைகளில் ஒன்றாகிய ஜீவாத்மா தனது கர்மபலனை அனுபவிக்கின்றது. மற்றொன்று (பரமாத்மா) யாதொரு பலனையும் அனுபவிக்காமல் ஜீவாத்மாவைப் பார்த்துக்கொண்டிருக்

கிறது. ஜீவாத்மா தேக சம்பந்தத்தினல் பிடிக்கப்பட்டு தவிக்கின்றது. ஆனல் அது பரமாத்மாவின் மகிமையைப் பார்ப்பதனல் சோகத்தைவிட்டு சுகத்தைதப்பெறுகிறது என்றும்,

### சுவேதாசுவதரம் 1-8-ல்

"ஞாக்ஞௌதுவாவஜாவிசநேசௌ"

(இ ள்.) அறிகிறதும் (பிரஹ்மமும்) அறியக்கூடாதது (ஜீவாத்மாவும்) ஆகிய இரண்டிருக்கிறது. அதில் ஒன்று கர்த்தா, ஒன்று அடிமையாம் என்றும்,

### சுவேதாசுவதரம் 1-9-ல்

"க்ஷராத்மாநாவீசதே தேவஏக :"

(இ-ள்.) ஒரே பரமாத்மா பிரகிருதியையும், பிராணனை ஜீவாத்துமாவையும் ஆண்டுவருகிருர் என்றும்,

### கடோபநிஷத்தில்

"சாயாதபாபிரஹ்மவிதவ்வதந்தி"

(இ-ள்.) நிழலுக்கும் பிரகாசத்திற்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறதோ அப்படியே ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் வித்தியாசமிருக்கிறதென்றும்,

### பிரச்நோபநிஷத்தில்

"ஸபரே அக்ஷரே ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டந்த"

(இ-ள்.) ஜீவாத்மா என்றும் அழியாத பரமாத்மாவில் வதிந்து வருகிறதென்றும்,

### மஹாநாராயணம 1-ல

"பஞ்சவிம்சோயம் புருஷ :"

(இ-ள்.) இந்த புருஷனகிய ஜீவாத்துமா இருபத்தைந்தாவது தத்துவமாம் அதாவது—மூலபிரகிருதி, (1)

மஹத் (1), அஹங்காரம் (1), தன்மாத்திரைகள் (5), இந்திரியங்கள் (10), மனது (1), பூதங்கள் (5), ஆக இருபத்து நான்குதத்துவங்களுக்கு மேலானதும் வேறானதும் எதுவோ அதுவே ஜீவாத்துமா என்றும்,

### பிருஹதாரண்யம் 6-3-9-ல்

"அத்ராயம்புருஷஸ்ஸ்வயம்ஜ்யோதிர்பவதி"

(இ-ள்.) ஆதி ஸ்திதியில் ஜீவாத்துமா சுயம்பிரகாசமானது என்றும்,

### தைத்ரீயம் 2-7-1-ல்

"ஏஷஹ்யோவாநந்தயாதி"

(இ-ள்.) 'ஆநந்தமயனாக இருக்கிறான்' என்றும் பின்னும் பலவிதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா—ஜீவாத்துமா வேறு, பரமாத்மாவேறு என்று காட்ட பிரஹ்மசூத்திரத்தில் பிரமாணங்களுண்டோ?

விடை—உண்டு.

### பிரஹ்மசூத்திரம் 2-வது அத்யாயம், 1-வது பாதம், 23-ம் சூத்திரத்தில்

"அதிகந்துபேதநிர்த்தேஸாத்"

(இ-ள்.) பேதநிர்த்தேஸாத் =ஜீவபிரஹ்மங்களுக்கு வேதங்களில் பேதத்தைச்சொல்லி இருப்பதால், அதிகந்து=ஜீவனைக்காட்டிலும் பிரஹ்மன் வேறுபட்டவன். அதாவது "சுரோதாமந்த" என்கிற சுருதியில் சுரோத்ருத்வாதி ரூப விசேஷம் சொல்லி இருப்பதால், ஜீவாத்மாவைக்காட்டிலும் பிரஹ்மம் வேறுபட்டது. மேலும் "கரணாதிவாதிப:" இந்திரியங்களுக்கு எஜமானனை

ஜீவனுக்கும் எஜமானனென்றும் " பிரதான க்ஷேத்ரக்ஞ யோர்பதி :" = மூலப்பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் சுவாமி என்றும் சொல்லி இருப்பதால் பிரஹ்மத்தைவிட ஜீவாத்மா வேறானது என்றும்,

But Brahman on the other hand is (of) exalted (powers) from the declaration of the distinctive character.

ஷை அத்தியாயம் 1-ம் பாதம் 23-ம் சூத்திரத்தில்

" அஸ்மாதிவச்சததனுபபத்தி : "

(இ-ள்.) அஸ்மாதி + வது + ச்ச + தத்தனுப + பத்தி: அஸ்மாதிவத் = கற்கள் முதலானவைகள் எப்படியோ அது போல ஜீவாத்துமாவுக்கு சுதந்திரமில்லை என்றும்,

Besides (that the soul should be by analogy of the Creator) is impossible, to the case of stone, etc.

ஷை அத்தியாயம் 1-பாதம், 29-வது சூத்திரத்தில்

" ஆத்மநிசைவம்விசித்ராஸ்சஹி "

(இ-ள்.) "ஆத்மநி + ச-ஏவம் + விசித்ரா : + ச-ஹி" = 'ஆத்மநிச' பிரஹ்மத்தினிடத்தில் ' விசித்ரசக்தி :' என்னும் சுருதி பிரமாணத்தின்படி விசித்திரமான சக்திகள் உண்டு. ' நஜீவே ' ஜீவாத்துமாவுக்குக்கிடையாது. ஆகையால் ஜீவபக்ஷத்தில் யுக்தி விரோதமுண்டே யொழிய பிரஹ்மத்திற்கில்லை " என்றும்

And in the Lord only are such (inconceivably) great and various (powers).

பின்னும் பலவிதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி பகவத் கீதையில் என்ன மாகச் சொல்லப்பெற்றிருக்கிறது ?

**பகவத்கீதை 15-வது அத்தியாயம், 17-18-ல்.**

"துவாவிமவ் புருஷோலோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவச
க்ஷரஸ்ஸர்வாநிபூதாநி கூடஸ்தோக்ஷர உச்யதே"
"உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:
யோலோகத்ரயமாவிச்ய பிபர்த்தவ்யயஈஸ்வர:"

(இ-ள்.) க்ஷராக்ஷரமாகிய அதாவது அழியக்கூடியதும், அழியாததுமாகிய இரண்டு புருஷர்கள் உலகிலிருக்கிறார்கள். அழியக்கூடியவை ஜந்துக்களாம், கூடஸ்தனாகிய ஜீவாத்மா அழியாதது. மற்றொன்று பரமாத்மா அது மூவுலகங்களிலும் பரந்து நிரந்தரமாக இருந்து பாதுகாக்கின்றது என்றும்,

**பகவத்கீதை 2-வது அத்தியாயம் 25-ல்.**

"அவ்யக்தோய மசிந்த்யோய மவிகார்யோயமுச்யதே"

(இ-ள்.) அது (ஜீவாத்மா) காணக்கூடாததும், கருதக்கூடாததும், மாறுதலவஸ்து என்றும் பின்னும் பலவிதமாக வர்ணித்து எழுதப்பட்டிருக்கிறது.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி புராண இதிகாசங்களில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது ?

விடை—விஷ்ணு புராணம் 11-13-85-ல்.

பிண்டம் ப்ருதக் யத: பும்ஸ சிர: பாணியாதிலக்ஷண:
ததோஹமிதிகுத்ரைதாம் ஸமங்காம் ராஜங்கரோம்யஹம்

(இ-ள்.) ஓ இராஜனே! மநிததேகத்தில் சிரசு, கை, கால் முதலான உறுப்புகளிருக்கின்றன. இவைகளில் எது நான் என்னும் பெயருக்குரியதோ அதை அறிவிக்கவும் என்றும்,

## பாகவதம் 7-வது அத்தியாயம் 7-22-ல்.

" அஷ்டாப்ரக்ருதய: ப்ரோக்தாஸ் த்ரய ஏவஹி தத்குண :
விகாரா ஷோடசாசார்யை : புமாநேகஸ் ஸமந்வயாத் "

(இ-ள்.) ஞானவான்கள் பிரகிருதியை மூலப்பிரகிருதி, மஹத், அஹங்காரம், ஐந்து தன்மாத்திரைகள் கூட எட்டு தத்துவங்களாகவும், அவற்றைப் பொறிபுலன்களுடன் பெருக்கி இருபத்துநான்கு தத்துவங்களாகவும் அவற்றிற்கு வித்தியாசமானதாகிய ஜீவாத்மா ஒன்றென்றும் சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி மநுசம்ஹிதையில் என்னமாக சொல்லப்பட்டிருக்கிறது?

விடை—" உபாஸ்யம் பரமம் பிரஹ்ம ஆத்மாயத்ர ப்ரதிஷ்டித : "=ஜீவாத்மாவானது பரமாத்மாவில் வசிக்கிறபடியால் அந்த பரமாத்மாவே வணங்கத்தக்கவரென்றும் சொல்லப்பெற்றிருக்கிறது. இப்படியே அநேக வாக்கியங்கள் இருக்கின்றன.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி சைவசித்தாந்திகள் எவ்விதமாகச் சொல்லுகிறார்கள்?

விடை—ஜீவாத்மாவை 'பசு' என்றும் அதாவது 'பச்'= பந்தித்தல், 'உ' செயப்படுபொருள் விகுதியாகவே பாசசம்பந்தம் பெற்றிருத்தலால் பசு என்றும், அந்த ஆன்மாக்கள் இலக்கத்தினுல் அளவுபடுதற்கரியராய் ஒரு காலத்தினும் அழியாதவராய் அஞ்ஞானமாகிய வாணவமலத்தின் மறைப்புண்டுகிடந்து, தத்தமக்குண்டான புண்ணிய பாவங்களுக்கிடானதோருடல்களைக் கடவுளின் காருண்யத்தினுலே பொருந்தி அவ னவ னதுவாகிய உடம்பென்னத்தானென்னத் தோன்றுமற் பிரிவற்று நின்று, அவ்வுடம்போடு

கூடுகையிலெண்ணிறந்த போகங்களை முயற்சியாற் புசித்து அந்தந்த புசிப்பாலுண்டாகிய இதாகிதங்க ளினாலே மீளவும் புண்ணிய பாவங்களை யார்ஜித்துக்கொண்டு, அவற்றாலிறந்து பிறந்து வருவர். இத்தகையோர் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரென மூவகைப்பட்டிருப்பர்.

### விஞ்ஞானகலா.

அட்டவித்தியேசுரர், அணுசதாசிவர், சத்தகோடி மகாமந்திரரென மூவகையர். இவர்கள் முறையே மயேசுரதத்துவத்தினும் சாதாக்கிய தத்துவத்தினும் சுத்தவித்தியா தத்துவத்தினுமிருப்பர். இவர்கள் ஆணவமல மொன்றினை யுடையவர்கள். இவர்கட்குத் தனுகரண புவனபோகஞ் சுத்தமாயையாம். இவர்களில் பக்குவர்க்கு பதி அறிவிலே தன்மைமாத்திரையாய் நின்று திருவருளை யுதிப்பித்து, மலத்தைப் போக்கி யிரட்சிப்பன்.

### பிரளயாகலர்.

நூற்றுப் பதினெட்டு ருத்திரர்களாம். இவர்கள் ஆணவம் கன்மமென்னுமிரண்டு மலத்தையுடையவர்கள். இவர்கட்குத் தனுகரண புவனபோகம் அசுத்தமாயையாம். இவர்களில் பக்குவர்க்குப் பதி மான்மழு சதுர்ப்புய காளகண்ட திரிநேத்திரதாரியாகச் சுபாவ வருட்டிருமேனி கொண்டெழுந்தருளி முன்னிலை மாத்திரையாய் நின்று மலத்தைப்போக்கி ரட்சிப்பனாம்.

### சகலர்.

பிர்மா விஷ்ணுமுதல் பிபீலிகை யீறாகவிருப்பவர்கள். இவர்கள் ஆணவம் கன்மம் மாயையென்னு மும் மலமுமுடையவர்கள். இவர்கட்குப் பரசரீர மூன்று, சூக்கும சரீரமொன்று, தூலசரீரமொன்று, அவை வருமாறு :—அசுத்தமாயையில் அநந்த தேவராற் கலக்குண்

டபாகமாகிய காரண சரீரமென்னும் பரசரீரமொன்று, இது ஆநந்தமய கோசமென்னப்படும். வித்தியா தத்துவங்களாகிய பஞ்ச கஞ்சுகமென்னுஞ் சரீரமொன்று, இது விஞ்ஞானமய கோசமென்னப்படும். பஞ்சகஞ்சுகத்தியொன்றுகிய கலையிற்றோன்றிய அவ்வியத்தவியத்த ரூபமாகிய குணசரீரமென்னும் பரசரீரமொன்று, இது மனோமய கோசமென்னப்படும். மனம் புத்தியகங்காரந் தன்மாத்திரையைந்துமாகிய சமூகஞ் சூக்கும சரீரம். இது புரியட்டகமெனவும் பிராணமயகோசமெனவும் படும். ஏனையது தூலசரீரம், இது அன்னமய கோசமெனப்படும். இவ்வாறு புருடனொருவனே ஐந்து சரீரங்களோடுங்கூடி வினைக்கீடாகப் பிறப்பு இறப்படைவன். இவருள் பக்குவருக்கு இருவினையொப்பு மலபரிபாகமுண்டாக சத்திநிபாதம் விளைந்தவழி மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல கடவுள் மானிடச்சட்டை சாத்திக்கொண்டு குருமூர்த்தமா யெழுந்தருளி, மந்ததரம் மந்தம் தீவரம் தீவரதரமறிந்து சமய தீட்சை பண்ணி சரியை யனுட்டிப்பித்து, விசேட தீட்சைசெய்து கிரியா யோகங்களை யனுட்டிப்பித்து, நிருவாண தீட்சைபுரிந்து ஞானமனுக்கிரகித்து, மும்மலங்களை நீக்க ஆன்மாக்கள் அழிந்தார்களுமில்லையாய், அந்த சிவமுதலானார்களுமில்லையாய், சிவமுதலின்றி காரியப்பட்டார்களுமில்லையாய், அம்முதலுக்கு வேருயிருந்தார்களுமில்லையாய், கேவல விசிட்ட மாறுதலை யத்துவிதங்களைக்கடந்து, அப்பதியோடு சுத்தாத்துவித நிலையினையடைவர் என்று சொல்லுகிறுர்கள்.

வினு—ஜீவாத்மாவைப்பற்றி வைணவ சித்தாந்திகள் எவ்விதமாகச் சொல்லுகிறுர்கள்?

விடை—ஸ்வரூபமான சித்தென்று சொல்லாநின்ற ஆத்மாவானது எப்படியிருக்குமெனின், தேகத்துக்கும் இந்திரியங்களுக்கும் பிராணனுக்கும்விலக்ஷணப்பட்

டதாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்தியமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்தியமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாஸ்ரயமாய், சர்வேஸ்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், சேஷமாய், சுயம்ப்ரகாசமாய் இருப்பதாம். அது.

தேகேந்திரியாதிகளைவிட வேறேயாயிருப்பதெவ்வாறென்னின், என்னுடைய கிரககிராம தனதான்ய க்ஷேத்ரபாத்ர பசுபுத்ர களத்ர மித்ராதிகளென்று எவ்வாறு தன்னினின்றும் வெவ்வேருகப் பிரித்தெண்ணிச் சொல்லப்பட்டிருக்கின்றவோ, அவ்வாறே "பூதமல்லை இந்திரியமல்லை யைம்புலனுமல்லை நற்புந்தியல்லைகாண்' என்றபடி என்னுடையவாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தமென்றும், என்னுடைய ஸ்ரோத்ர த்வக்கு சட்சுஸ் சிங்ஙுவை கிராணமென்றும் என்னுடைய சப்தஸ்பரிசரூப ரஸகந்தமென்றும், என்னுடைய மனம் புத்தி சித்தம் அகங்காரமென்றும், என்னுடைய பிராணன் அபானன் வியானன் உதானன் சமானனென்றும், என்னுடைய சரீராதிகள் பருத்தன, இளைத்தன, நொந்தன, சிறியன, பெரியன, நல்லன, கெட்டனவென்றும் பலவாக விவகரிக்கின்றமையாலும், இவைகளெல்லாம் ஒருக்கால் தோன்றியும் தோன்ருமலுமிருக்கையாலும், வேருகக் காண்கையாலும், ஆத்மா எப்போதும் காண்கையாலும், இவைகளெல்லாம் ஒருக்கால் தோன்றினும் விகாரமாக தோற்றுகையாலும், இஃது வேதாநுபவ யுக்திக்கொப்ப விருக்கையாலும், பிரபந்நோத்தம ஜனகூடஸ்தர்கள் யாவருமிவ்வாறே யருளிச்செயலாலும், ஆத்மஸ்வரூபமானது தேகேந்திரியமன:பிராணுதி விலக்ஷணமென்றே கொள்ளத்தட்டில்லை என்றும்,

ஆத்மாவை அஜடமென்ற தெவ்வாறெனின், மனசினலும், இந்திரியத்தினலும் ஜனிக்கின்ற ஜ்ஞான மொழி

யாநந்தானே காணப்படுகையால் அங்ஙனம் சொல்லப்படு
தில்லை என்றும்,

இப்படி கருகரணாதிகளை நியதிசெய்து நோக்கு
மிடத்து காணப்படுகின்ற ஆத்மாவை ஆநந்தரூபமென்ப
தெவ்வாறெனின் தேகேந்திரிய கரணாதிகள் அற்பமே
னும் தோன்றாமலிருக்கின்ற சுழுப்தியவஸ்தையில் கீழ்ச்
சொன்னவைகளெல்லாமற்றிருந்து தானொருவனாகவே
காணப்பட்டு நானொரு துக்கமுமின்றிக்கே வெகு சுகா
நந்தமாக உறங்கினேனென்று ஸ்வாநுபவ சித்தமாகச்
சொல்லுகையால் ஆநந்தரூபமென்றும்,

ஆத்மாவை நித்தியமென்பதெவ்வாறென்னின், எப்
போதும் ஜனித்தல் நசித்தல் வளர்தல் தேய்தல் குறைதல்
பருத்தல் சிறுத்தல் முதலிய சரீர விகாரங்கள் போலன்
றிக்கே, எப்போதுமொருப்படி பட்டிருக்கையால் நித்ய
மென்றும்,

ஆத்மாவை நித்யமென்று கொள்ளுவோமாயின் கர்ப்
பஜென்ம பால்ய யௌவன வார்த்தக மரண நரகாதிகளில்
அடையப்படுவதென்ன காரணமெனின், அநாதி யசித்ஸ
ம்பந்த நிபந்தனமான அகங்கார மமகாரத்தால் விளைந்த
புண்ணியா புண்ணிய கர்மத்தால் எடுக்கிற சரீர பரிக்
கிரக நிக்ரகமடியாக விளைக்கின்றவைக ளன்றி ஆத்மா
நித்தியம் என்றே கொள்ளவேண்டும் என்றும்,

இன்ன விகாரங்களெல்லாம் மாயாகாரிய விகாராஸ்
பதமேயன்றி சித்தென்று சொல்லப்படுகிற ஆத்ம ஸ்வ
ரூபத்துக்கு வந்தனவன்றென்பதை கீதாசாரிய ரருளிச்
செய்த திவ்விய சாஸ்திரத்தில் சுருக்கமின்றி பெருக்கக்
காணலாம் என்றும்,

ஆத்மாவை யணுவென்று சொல்லுவதெவ்வாறெனின், ஹிருதய பிரதேசத்திலிருந்து கொண்டு லலாடமுகேண இந்திரிய துவாரா பிரசரித்து, சப்தஸ்பரிசரூபரசகந்தவிஷய சங்கமங்களில் மனசோடு கூடிக்கொண்டு அவன் அவள் அதுவென்ற விபாக விஷயங்களின் முன்னிலையில் அகங்கார மமகாரங்களைச் செய்துகொண்டு திரிகின்றபடியால் அணுவென்றே ஆத்மாவைக் கொள்ளவேண்டுமென்பதாம்.

அப்படி. யாத்மாவை யணுரூபமென்று சொல்லுமிடத்து பாதாதிகேசமும் வியாபித்திருந்து சகல விஷயமும் தட்டின்றி யெவ்வாறறியக் கூடுமென்னின், சூர்ய சந்திரமணி தீபாதி ஜோதிகள் ஓரிடத்திலேயேயிருக்க அவற்றின் பிரபை யெங்குமொக்க வ்யாபிக்கிறாப்போல, அணுஸ்வரூபமாகவிருக்கின்ற ஆத்மாவானது ஹ்ருதயப் பிரதேசத்திலிருந்து கொண்டு ஜ்ஞான பிரகாசத்தாலெங்குமொக்க வியாபித்து சமஸ்த விஷயங்களையுமறிந்து கர்மாநுகுணமாகப் புஜிக்கத்தட்டில்லையென்றும்,

சிலசமயிகள் ஜீவேஸ்வரரிருவருக்கும் மகத்தென்று சொல்லுமிடத்து வஸ்து துவய அநவஸ்தா தோஷாதிகள் சித்திக்குமென்றறியவேண்டியதாம்.

ஆத்மாவை அவ்வியக்தமென்பதெவ்வாறென்னின், கடபடாதி திரவியங்களை பிரத்யக்ஷமாகச் சட்சுராதிகளால் 'அறிவதுபோல உயிர்நிலை உணர்வரிதுயிர்காள்' என்றபடியே ஆத்மா இவ்வண்ணமுடையதென்றுணரப் போகாமையால் அவ்வியக்தமென்றும்,

ஆத்மா அசிந்தியமென்று சொல்வானேனென்னில், பிரக்ருதியென்றும், பகவன்மாயையென்றும் பலவாகச் சொல்லாநின்ற அசித்தோடு சஜாதீயமாகச் சித்தென்றும்

ஆத்மாவை சொல்லப்போகாமையால் அசிந்தியமென்றும்,

ஆத்மாவை நிரவயவமென்ப தெவ்வாறெனின், ஸ்வ ஸ்வரூபத்தில் மாயாகாரியமான அவயவ சமுதாய சின்னங்கள் இல்லாமலே ஸ்வயமேவ பிரகாசித்துக்கொண்டிருப்பதால் நிரவயவமென்றும்,

ஆத்மாவை நிர்விகாரமென்ற தெவ்வாறென்னின், அசித்தைப்போலே பலபல ஏதுக்களாலும் சங்கோச விகாஸாஸ்பதமான விருத்திபேதங்களை யடையாமல், எப்போதுமேகரீதியாய் அஸ்திர சஸ்திராக்நி ஜலவாயுவாதிகளாலும் நசிப்பிக்கவொண்ணாத ஸ்வாபாவிக நித்யத்வ நிர்விகாரமுடையதென்றும்,

ஆத்மாவை ஜ்ஞாநாஸ்ரயமென்ற தெவ்வாறென்னின், கடபடாதி விஷயங்களை எதிரிட்டறிகிற உணர்வென்னும் ஜ்ஞானமானது இருப்பதற்காஸ்பதமான ஸ்தானபூதமாயிருக்கையால் ஆத்மாவை ஜ்ஞாநாஸ்ரயமென்றும்,

ஆத்மாவை ஜ்ஞாதாவென்று சொல்லுவதேனென்னின், ஜ்ஞானத்தை யொழியவும் தன்னை யறிகின்றமையாலும், ஜ்ஞானமோவென்னின் சாரபூத குணமாகையாலும், அஃது நிரூபக தர்மமாக விருக்கையாலும் ஆத்மாவை ஞாநத்துக்கு இருப்பிடமென்றும்,

ஆத்மாவை நியாம்யமென்றதெவ்வாறென்னின், நிரங்குஸ ஸ்வதந்த்ரனான சர்வேஸ்வரன் திருவாணையின்படி கடவாது அவனது இச்சாநுகுணசீலார்ஹமாக எல்லா வியாபாரங்களுக்குங் கடவதாய் அவன் நியமனத்தின்படியே நடப்பதாதலால் நியாம்யமென்றும்,

ஆத்மாவை தார்யமென்றதெவ்வாறென்னின், சர்வ காரணபூதனுஞ் சர்வதாரகனுமுள்ள எம்பெருமான் தன்

னுடைய ஜ்ஞான பலைஸ்வர்ய வீர்ய சக்தி தேஜஸ்ஸானந் தாதிகளை இவ்வாத்மாவினின்று ஒழிக்கவாறே தன் சத்தை எவ்வளவுமில்லையாம்படி கிடக்க பிராப்தியுண்டாயிருக்கையால் தார்யமென்றும்,

ஆத்மாவை சேஷமென்ற தெவ்வாறென்னின், நிருபாதிகசேஷியான சர்வ ஜகந்நிவாசனுக்கு "ஒழிக்க வொண்ணாதவுறவு" என்றபடி அவ்வெம்பெருமானுடைய முகோல்லாச வண்ணமாகச் சந்தன குசும தாம்பூல வஸ்த்ர வாகன பர்ணசன பாதபீட பரியங்க பரிவார பரிசார லீலோபகரண த்ரவ்யங்களாயிருக்க பிராப்தி யுண்டாயிருப்பதால் சேஷமென்றும்,

ஆத்மாவை சுயம்பிரகாசமென்றதெவ்வாறென்னின், ஆத்மாவின் ஸ்வஸ்வரூபத்தைத் தரிசிக்குமிடத்து தான் தர்மியாயும், சங்கோச விகாசரகிதமாயும், நாமரூபலிங்க சகிதமான பிரபஞ்சாதீதமாயும், பஞ்சகோசவ்யதிரிக்தமானதாயும், தன்னை யொழிந்தவற்றைப் பிரகாசிப்பியாமல் தனக்குத்தானே பிரகாசிக்கக்கடவதாயும், அழிவற்றவனுரூபமாயும் இருப்பதால் ஸ்வயம் பிரகாசமென்றும் சொல்லுவதன்றியில், இந்த சேதன ஸ்வரூபமானது நித்தரென்றும், முக்தரென்றும், கேவலரென்றும், முமுட்சுக்களென்றும், சம்சாரிகளென்றும் ஐந்துபேத சமூகமாக்கிருக்கும்.

நித்தியராவார் யாரெனின்— "அந்தமில் பேரின்பத்தடியார்" என்றபடி இயல்பாகவே பாசநாசர்களாய், சம்சார சக்ரபிரவேசகந்தரகிதர்களாய், நிர்மலஜ்ஞானோஜ்வலாநந்தமய கம்பீர சர்வலக்ஷண சம்பன்ன மஹா மூர்த்திகளாய், அப்ராகிருத பஞ்சோபநிஷண்மயமான பரமாகாசம் பரமபதமெனப்படும் பேரின்ப வீட்டில் ஸ்ரீய:

பதியாகிய சர்வேஶ்வரனென்றும் பரவாஸுதேவனோடு
ஆதியந்தமற்றவர்களாய், அசங்குசிதஜ்ஞான அசங்கேய
மஹாமதிகளாய், அவன் மார்பைவிட்டுப் பிரியில் இவளில்
வஸ்தரம் விட்டுப் பிரியுமென்றபடி அபின்னமாக எந்நா
ளும் எழுந்தருளியிரா நின்ற பரமேஶ்வரனுடைய சக்திக
ளாகிய ஸ்ரீ, பூ, நீளாதேவிகளோபாதி சர்வகால சர்வதேச
சர்வாவஸ்தைகளிலும் “ஒழிவில் காலமெல்லா முடனாய்
மன்னிவழுவில்லா வடிமைசெய்யவேண்டுநாம்” என்ற
படி பகவாநுகூலியைகபோகராய் பகவத்கடாக்ஷ விசே
ஷ பிரசாத முகோல்லாச கைங்கர்ய சேமனத்வாரா நா
ய்ந்தேன் நாய்ந்தேனென்று ஆர்த்தியபிநிவேசராய் நின்று
முத்தொழிலும் விநோதமாகவே செய்ய வல்ல மூப்பர்க
ளான மந்திரிகளாய், அச்சர்வேஶ்வரனுடைய வியூகவிப
வ அந்தர்யாமித்வ அர்ச்சாவதாரங்களில் தைலதாராவிச்
சின்னம்போல விடாதே தொடர்ந்தடிமைசெய்யக் கடவ
ராயிருக்கின்ற கோயில்கொள் தெய்வங்களான அநந்த,
கருட, விஷ்வக்ஸேந, சுதர்சன, பாஞ்சஜந்யாழ்வான்
தொடக்கமான அமரர்களாம்.

முக்தராவார் யாரெனின்—அநாதியான அசித் சம்
பந்தத்தால் வருகின்ற விஷயப்ரணவராய் சம்சார தாவா
நலத்தால் சுடப்பட்டு அகஸ்மீகத்ஜார்யமான கடாக்ஷ வி
சேஷ பிரசாத சுகிர்த பலத்தையடைந்து அதனாலுண்
டான பகவத் ஸ்வரூபரூபகுணவிலாற்புதரசங்களை யனுப
வித்து ஆநந்திப்பவர்களாம்.

முமுக்ஷுக்களாவார் யாரெனில்— எம்பெருமானு
டைய திவ்ய சரண கமலப் பிராப்தியில் அதிதீவிரத்தை
யடைந்து இதர விஷய வைராக்ய பூர்வகமாக பகவதனுப
வைக பரத்வஸ்வரூப ஸ்வோஜ்ஜீவனமாத்ர ஹேதுவாய்
இருக்கும்படியான ஏக்கத்தை யுடையவர்களாம்.

கேவலராவார் யாரெனில் — ஆழ்வாராசாரியர்களுடைய விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்குப் புறம்பாகிய மாயாவாதிகளாம்.

சம்சாரிகளாவார் யாரெனில் — பஞ்சபவுதிகமாய், அநித்யமாய், துக்கானுபவ பரிகரமாய், அசுத்தாஸ்பதமாய், அஜ்ஞானம் அந்யதாஜ்ஞானம் விபரீத ஜ்ஞான ஜனகமாய், ஷட்பாவ விகாரமாயுள்ள தேகமே ஆத்மாவென்றும், சப்தாதி விஷய அநுபவயோக்யமான தமது தேகபோஷணமே புருஷார்த்தமென்றும், சப்தாதி விஷய லாபத்துக்குடலான வியாபாரமெதுவோ அதுவே சகலவித புண்ணியமென்றும், சர்வகர்மங்களையும்விட்டு பிராப்தா பிராப்த விவேகாஜ்ஞானானுபவராய், பாவமேது, புண்ணியமேது, தெய்வமேது, தெய்வநாயகமேது, நரகமேது, சுவர்க்கமேது, மோக்ஷமேது, நல்லதேது, தீமையேது இவைகள் யாவும் பொய்யென்று சகல பாவங்களையும் விருத்திசெய்துகொண்டு புத்ர மித்ர களத்ர பிதா மாதா சகோதர கிருக கிராம தனதானிய க்ஷேத்ர பாத்ர வஸ்திராபரண வாகன சந்தன குசும தாம்பூலாதிகளைத் தாரக போஷக போக்யங்களாகக் கொண்டிருப்பவர்களேயாம் என்று சொல்லுகிறார்கள்.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி அத்வைதிகளுடைய சித்தாந்தம் யாது?

## அத்வைதம்.

விடை— அத்வைதமத சித்தாந்தமானது இருவகையாகப் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்று ஸத்தியோமுக்திக்கு ஹேதுவான "பாரமார்த்திக தசை" அல்லது சுத்தாத்வைதமென்றும், மற்றொன்று கிரமமுக்திக்கு ஹேதுவான "வியாவஹாரிக தசை" அல்லது அஜ்ஞானதசையென்றுஞ் சொல்லப்படுகிறது. இவ்விரண்டில்,

பாரமார்த்திகதசைபாவது :—

சகல உலகத்திற்கும் கர்த்தர்வான பிரஹ்மம் ஒன்றேயாம். இரண்டாவதாக யாதொன்றுமில்லையாம். அது நிர்க்குணமானதாம், உருவமற்றதாம், சரீரமில்லாததாம், விகாரமற்றதாம், ஒன்றிலுமொட்டாததும், அசைவற்றதும் எப்போதுமுள்ளதாம், பரிசுத்தமானதாம், ஞானமேஸ்வரூபமாயுடையதாம், வாக்குக்கெட்டாததாம், சகலத்தையும் பிரகாசிப்பிக்கிற ஸ்வப்ரகாசமானதாம், அகண்டாகாரமாய் எங்கும் வியாபித்திருக்கிறதாம், அதனிடத்தில் செய்கையுமில்லையாம் என்றும்,

ஜீவன், ஈசுவரன், பலவிதமாய்த் தோற்றுகிற இந்த் ஜகத்து இவைகளெல்லாம் இரண்டாவதற்ற ஒன்றான அந்த பிரஹ்மத்தினிடத்திற் கற்பிக்கப்படுகின்றனவாம். ஜீவன், ஈசுவரன், ஜகத்து என்கிற இந்த பேதமானது அஜ்ஞானத்தினாலுண்டாயிருக்கிறதாம். ஜீவனானவன் தான் ஜீவனல்ல பிரஹ்மமேயென்கிற நிச்சய ஞானத்தினாலும், தோற்றுகிற சகலவேற்றுமையும் மித்தை(பொய்) என்கிற நிச்சய ஞானத்தினாலும், இந்த பிராரப்த தேகமுள்ளவரையில் ஜீவன் முக்தனாகவிருந்து இந்த தேகம் போனவுடன் மோக்ஷமடைகிறான். தான் பிரஹ்மமென்றறியாதவனுக்கு ஜீவன் முக்தனாகவிருந்து ஜீவத்தன்மை நீங்குகிறதுமில்லை, மோக்ஷமுமில்லை. பிரகிருதியென்பது பிரஹ்மத்தின் சக்தியே. அந்த சக்தி பிரஹ்மத்தை விட்டுப்பிரிந்து வேறாயிருக்கிறதல்ல; எப்படிப்போலெனில், அக்நியிலுஷ்ணமும், சூரியனிற் பிரகாசமும், புஷ்பத்தில் வாசனையும்போலவிருக்கிறதாம். சக்தி ஒன்றானாலும் அதன் காரியபேதத்தினாற் பலவாகச் சொல்லப்படுகிறதாம். எப்படியெனில், சித்சக்தி, சேதனசக்தி, கிரியாசக்தி, அஜ்ஞானசக்தி, ஜடசக்தி, காடிந்யசக்தி முதலியனவேயாம். அச்சக்தியானது அவ்வியக்தம், மூலப்பிரகிருதி, மாயை,

அவித்தை, அஜ்ஞானம் முதலிய பல பெயர்களாலுஞ்
சொல்லப்படுகிறதாம். அச்சக்தி சித்துமல்ல, அசித்து
மல்ல, சிதசித்துமல்ல. ஏனெனில், ஞானத்தினால் நசித்
துப்போகிறபடியால் சித்தென்று சொல்லக்கூடாதாம்.
உலகத்தில் சித்சக்தியாய்ப் பிரவேசித்து அநேகவிதமான
காரியங்களைக் காண்பிக்கிறபடியால் அசித்துமல்லவாம்.
பிரகாசமும் இருட்டும் சேர்ந்திராததுபோல் ஒன்றாயிரா
ததனாகையால் சிதசித்துமல்ல. ஆனதனால் அது இன்ன
விதமானதென்று வாக்கினால் சொல்லக்கூடியதல்ல வெ
ன்று சுருதி சொல்லுகிறது என்றும், இந்த சக்தியே
சகல ஜகத்திற்கும் காரணமாயும், வேற்றுமைக்குக் கார
ணமாயுமிருக்கிறது என்றும், அஜ்ஞானமென்கிற பெய
ரையுடைய சக்தியானது கருமம், சங்கற்பம், வாசனை
இந்த சுகரூபமான மனதாகவாகி, ஆத்மாவில் அநேகவித
பேதங்களைத்தோற்றுவிக்கிறதாம். இந்த மனதுரூபமான
சக்தியினாலே சூழப்பட்ட பிரஹ்மமானது மனதின் தரு
மங்களாகிய காமம், குரோதம், சுகம், துக்கம் முதலிய
வைகள் தன்னுடையதுபோற் பிரமையடைவதனால் ஜீவ
த்தன்மையை யடைந்ததாக வாகிறதாம். அதனால் ஆத்
மாவானவன் தான் சுகிதுக்கி என்பது முதலிய பிரமை
யை யடைகிறான் என்றும், ஆத்மா யாதொரு விகாரமற்
றதாயும், செய்கையற்றதாயும், ஞானஸ்வரூபமாயுமிருக்
கையில் அதற்கு எப்படி பிரமையுண்டாகக் கூடுமென்றால்
அந்த பிரமையை ஆத்ம சக்தியேயுண்டு செய்கிறதானா
லும், ஆத்மா வாஸ்தவத்தில் யாதொரு விகாரத்தையு
மடைகிறதில்லையாம். எப்படிப்போலெனில், அக்நியிலி
ருந்து அக்நிக் கந்யமல்லாத பொறிகளுண்டாகிறதைப்
போலாம். அக்நி விகாரப்பட்டு பொறிகளாகவாக்வில்லை;
ஆனால் பொறிகள் தானாகவுண்டாகவுமில்லை. அப்படியி
ருந்தும், யாதொரு விகாரமும் செய்கையும் அற்றதாகிய
நிஷ்டானமான அந்த அக்நியிலிருந்து அதற்கு வேறல்

லாத பொருள்களை யுண்டாக்கினதற்கு ஒரு சக்தியிருக்கவேண்டுமென்பது நிச்சயம். அப்படியே தூங்கிக்கொண்டிருக்கிற புருஷனிடத்திலிருந்து ஸ்வப்நமுண்டாகிறது. அந்த ஸ்வப்நத்தில் தனக்கந்நியமாக அநேக வஸ்துக்களைக் காணுகிறான். தூங்குகிற புருஷன் விகாரமடையவுமில்லை, யாதொன்றுஞ் செய்யவுமில்லை. அப்படியிருந்தும், தனக்கந்நியமாய் அநேக வஸ்துக்களுண்டானதற்கு ஒரு சக்தியிருக்கவேண்டுமென்பது நிச்சயம். இப்படி கிளிஞ்சலில் வெள்ளியும், கயிற்றிற்பாம்பும், கட்டையிற் புருஷனும், கானலில் சலமும் இவை அதிஷ்டான வஸ்து விகாரப்படாமலே தோற்றுவிப்பதற்கு ஒரு சக்தி இருக்கவேண்டுமென்பது நிச்சயமாம். இப்படிப்போலவே, ஆத்மாவினிடத்தில் விகாரமாவது, செய்கையாவது. இல்லாமலே ஜீவேஸ்வராதிப் பிரபஞ்ச பேதங்களை ஆத்ம சக்தி ஸ்வப்நம்போல்ஆத்மாவிடத்தில் தோற்றுவிக்கிறது என்றும், இந்த அஜ்ஞான சக்தியினாலுண்டானதாகிய மனதை நாசஞ்செய்வதுதான் மோக்ஷமென்றும் சொல்லப்படுகிறது. இவைகள் தான் பாரமார்த்திக தசையின் முக்கியாம்சங்களாம்.

வியவஹாரதசையாவது :—

பாரமார்த்திக தசையில் பிரஹ்ம விஷயமாயும், பிரகிருதி விஷயமாயுஞ்சொல்லப்பட்டிருக்கிறது போலவே, இந்த தசையிலும் பிரஹ்ம லக்ஷணமும், பிரகிருதி லக்ஷணமுஞ் சொல்லப்படுகிறது; ஆனால் பேதமென்னவெனில், பிரஹ்மத்திலிருந்து (நீரிலிருந்து குமிழி உண்டாவதுபோல்) மூலப்பிரகிருதி வெளிப்பட்டது. அதில் பிரதிபலித்த சேதநுவோ அது (அந்தப் பிரதிபிம்பம்) சாக்ஷி சைதந்நியமென்றும், மாயாசபளித பிரஹ்மமென்றுஞ் சொல்லப்படுகிறதாம். அந்த பிரகிருதி விகார

மடைந்து ஸத்துவாதிக்கியமுள்ள அவ்வியக்தமென்கிற பெயருள்ள ஆவரணசக்தியாயிற்றும். அதிற் பிரதிபலி த்ததெதுவோ அந்தப் பிரதிபிம்பம் ஈசுவரசைதந்யமெ ன்று சொல்லப்படுகிறது. இந்த ஈசுவரன் "வெகுவாக நாணுகிறேன் என்று பிரகிருதியைப்பார்த்தார்" என்ற இந்த சுருதியினால் அந்த ஈசுவரன் மாயையினாற் பிரபஞ் சத்தைச் சிருஷ்டித்துத் தான் அதிற்பிரவேசிக்கக் கருதி னாரென்பது சொல்லப்படுகிறது. அப்படியே அந்த ஈசு வரன் தனக்குச் சுவாதீனமான அந்த மாயையைக் கொ ண்டு மஹத்தத்துவம், அகங்கார தத்துவம், ஸத்துவர ஜஸ்தமோ குணங்கள், ஆகாசம் முதலிய பூத தன்மாத்தி ரைகள் முதலியவைகளைச் சிருஷ்டித்தாராம். அந்த பஞ்சபூதங்களைப் பஞ்சீகரணஞ்செய்து ஸ்தூலபூதங்களை ச்சிருஷ்டித்தாராம். அப்பூதங்களில் அந்த ஈசுவரன் தா னே அநுப்பிரவேசித்தாராம். அந்த ஈசுவரனிடத்திலி ருந்து ஹிரண்யகர்ப்பம் அல்லது அண்டவிராட்டு என்று சொல்லப்படுகிற பிரஹ்மாவும், விஷ்ணுவும், உருத்திர னும், தேவதைகளும், மற்ற மிருகம் முதலிய ஜங்கமங்க ளும் ஸ்தாவரங்களுமுண்டாயினவாம். பிராணிகளுடைய அந்தக்கரணமானது கண்ணாடிபோற் பிரகாசமுள்ளதா கையாலும், ஒவ்வொரு பிராணிகளுடைய ஹிருதயத்தி லேயும் ஈசுவரன் வாசஞ்செய்கிறாராகையாலும், அந்த அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த ஈசுவரசைதந்யத்தி னுடைய பிரதி பிம்பம் ஜீவனென்று சொல்லப்படுகிறது.

அவ்வியக்த பிரதி பிம்பனான ஈசுவரனும், அந்தக் கரணபிரதிபிம்பனான ஜீவனும் பிரஹ்ம சைதந்யத்தை க்காட்டிலும் வேறானவர்களல்லவென்றும், ஜீவனானவன் தானும் தான் எதனுடைய பிரதிபிம்பமோ அந்த ஈசு வரனும் உபாதிகளால் வேறானவர்கள்போல் தோற்றினா லும், வாஸ்தவத்தில் பிரஹ்மமே என்றுண்டாகிற நிச்சய

ஞானத்தினால் மோக்ஷமடைகிறான். பிரஹ்மா, விஷ்ணு, உருத்திரர்கள் அந்த ஈசுவரனுடைய சிரேஷ்டமான பிரதி பிம்பங்களாகையால் அவர்கள் மூலமாய் உலக சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார காரியங்களைச் செய்கிறார். அப்படியிருந்தாலும் சகலத்திற்கும் நியந்தா அந்த ஈசுவரனே தானும். அந்த ஈசுவரனே தான் ஜீவர்களுடைய புண்ணியபாப கருமங்களுக்குத் தக்கபடி கரும ஸ்வரூபமாயிருந்து பலனைக் கொடுக்கிறாராம். ஜீவர்கள், பிரஹ்மா விஷ்ணு உருத்திரர்களாகிய மூர்த்திகளை உபாஸிப்பார்களானால் அந்தந்த மூர்த்திகளுடைய அநுக்கிரஹத்தினால் அவரவர்களுடைய ஸாலோக, ஸாமீப, ஸாரூபமுக்திகளை யடைகிறார்களாம். அந்த ஸாரூப முக்தியையடைந்தவர்கள் அந்த மூர்த்திகளுடன் மஹாபிரளயத்தில் பிரஹ்மத்துடன் கலந்துபோகிறதாகிய ஸாயுஜ்ஜியமுக்தியை யடைகிறார்கள். இந்த வியவஹாரதசையின் ஸ்வரூபமானது பைங்களோபநிஷத்தில் சொல்லியிருப்பதைச் சங்கிரகித்துச் சொல்லப்பட்டது. இச்சித்தாந்தத்தை விவரமாக அறியவிரும்பில் எமது இந்நூலில் முதல் புத்தக அநுபந்தத்தைப் பார்க்கவும்.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி விசிஷ்டாத்வைதிகளின் கருத்தென்ன?

## விசிஷ்டாத்வைதம்.

விடை— விசிஷ்டமென்றால், பிரிவன்றி கூடியிருக்கிறதென்றர்த்தமாம். அத்வைதமென்றால் இரண்டல்ல, அதாவது ஒன்றே என்றர்த்தமாம். எதோடேது கூடியிருக்கிறதென்றால், இப்போது காணப்பட்டுக் கொண்டிருக்கிற ஸ்தூலமான ஜடசேதநங்களுடன் பரமாத்மா கூடியிருக்கிறாராம். இப்படியே ஸ்தூலமாயிருந்த இந்த ஜடசேதநவஸ்துக்கள் பிரளய

காலத்தில் ஸூக்ஷ்மமாயிருக்கிற ஜடசேதந வஸ்துக்களுடன் பரமாத்மா கூடியிருக்கிறாராம். அதாவது, அந்த ஜடசேதநவஸ்துக்களுக்குப் பரமாத்மா ஆத்மாவாகவிருக்கிறாரென்பது கருத்து. ஜடசேதநப் பிரபஞ்சங்கள் ஸ்தூலமாயிருக்கும்போது அவைகளுடன் சேர்ந்திருக்கிற பரமாத்மா யாரோ அவர் தான் ஸூக்ஷ்ம சிதசித்து வஸ்துக்களுடன் கூடியிருக்கிறவராகையால், அவரிரண்டு ஸ்வரூபமில்லாத ஒரே ஸ்வரூபமுடையவராம். இதனாற் பரமாத்மா ஸ்தூல ஸூக்ஷ்ம சிதசித் வஸ்துக்களுடன் கூடியிருக்கிறவரும், இரண்டாவதற்றவருமாகையால், விசிஷ்டம்+ அத்வைதம் என்று சொல்லப்பட்டது. ஸ்தூல ஸூக்ஷ்ம சிதசித் வஸ்துக்களுடன் பரமாத்மா எப்படி கூடியிருக்கிறாரென்றால், சரீரியும் சரீரமும் போலவாம். பரமாத்மா சிதசித்வஸ்துக்களுக்குச்சரீரியாம். சிதசித்வஸ்துக்கள் பரமாத்மாவுக்குச் சரீரமாம். அக்நியுமுஷ்ணமும் போலவுமாம். ஸூரியனுமதனொளியும் போலவும் பரமாத்மாவும் சிதசித்வஸ்துக்களும் பிரிவற்ற சுவபாவமுள்ளவைகளானாலும் அக்நியைவிட அதனுஷ்ணமும், ஸூரியனைவிட அதனொளியும் எப்படி வேறானதோ அப்படி பரமாத்மாவைவிட சிதசித்வஸ்துக்கள் வேறானவைகளென்றும்; சரீரி சரீரபாவம் இந்த சித்தாந்தத்திற்கு முக்கியமான விஷயம். சிதசித்வஸ்துக்களுடைய ஸ்தூலம் நசிக்குமேயன்றி ஸூக்ஷ்மமொருபோதும் நசிக்கிறதில்லையாம். அது அழிவற்றதா யெப்போதுமுள்ளதாம். சித்து அசித்துக்கள் பரமாத்மாவினுடைய ஏவுதலுக்கு பாத்திரமானவையாம். அதனாற் பரமாத்மா சேஷியாயிருக்கிறாராம். அதாவது, சித்து அசித்துக்கள் பரமாத்மாவுக்கு அநுபவயோக்கியமாயிருக்கிறதாம். அவைகளுக்கு சுவதந்திரமில்லை

யாம். ஸர்வசுவதந்திரன் பரமாத்மா ஒருவனேயாம். அந்த பரமாத்மா ரூபமற்றவராம். அவருக்கிச்சை யுண்டானால், நாராயணன், வாசுதேவன் முதலிய வியூகரூபங்களை யடைவாராம். அந்த அவதார ரூபங்கள் மனிதனுக்குப்போல ஸத்துவரஜஸ்தமோ குணங்களோடு கூடியிருக்கிறதல்லவாம். ஆனால், அப்பிராகிருத திவ்யமங்கள விக்கிரஹமாகியரூபமே. அந்த பரமாத்மாவினுடைய வியாபக ஸ்வரூபமானது ரூபமில்லாததே. அந்த வியூகரூபங்கள் கரசரணாதி அவயவங்களோடு கூடியவைகளேயாம். அந்த பரமாத்மாவை நாராயணன், விஷ்ணு, ஹரி, கேசவன் முதலிய அநேக பெயர்களாலழைக்கிறார்கள். இந்த விஷ்ணுவானவர் தான் பரமாத்மா. அவருக்குச் சமமாயாவது மேலாயாவது ஒருவருமில்லை. சங்கரர், மகாதேவர், உருத்திரர், பரமேசுவரர் முதலிய பெயர்களாலழைக்கப்படுகிற சிவன் அந்த விஷ்ணுவினுடைய முக்கிய பக்தரும், முக்கிய சிஷ்யருமாயிருக்கிறாராம்.

ஆத்ம ஸ்வரூபமெப்படியெனில்:—ஜீவாத்மாக்கள் அநேகர்களாம். ஆனாலவர்களுடைய ஸ்வரூபமெல்லாமொன்று போற்றான். அந்த ஸ்வரூபம் அணுக்கள் போல் மிகவும் சிறிதாயிருக்கிறதாம். ஜீவாத்மாக்கள் பரமாத்மாவைப் போலவே ஞானாநந்த ஸ்வரூபமாயும், ஸர்வவியாபகமாயு மிருக்கின்றனராம். இப்படியிருக்கிறது கைவல்லிய தசையிற்றானும். இந்த ஜீவாத்மாக்கள் அநாதி அவித்தையினால் தங்களுடைய சுவபாவகுணமாகிய ஞானங்குறைந்து பூர்வகருமாநுசாரமாயுலகத்திற் பிறப்பையடைந்து ஸம்சாரிகளாயிருக்கிறார்களாம். இந்த ஜீவாத்மாக்களில் நித்தியர், முக்தர், பத்தர் என மூன்று பிரிவுண்டாம்.

நித்தியரென்றால்:—எப்போதும் பிரஹ்மாநந்தத்தையனு பவிக்கிறவர்களாயும், பரமாத்மாவைப்போல் ரூப மும் சரீரமுமுடையவர்களாயும், துக்கம் முதலிய பிரகிருதி சம்பந்தமற்றவர்களாயும், அந்த பரமாத் மாவாகிய நாராயணனைப் போலவே அப்பிராகிருத சரீரமுடையவர்களாயும், நாராயணனுடைய வைகு ண்ட லோகத்தில் வாசஞ்செய்கிறவர்களாயும், அந்த பரமாத்மாவினுடைய தரிசனத்தினாலும் சேவையி னாலும் அவருக்குத் திருப்தியாகும்படி ஊழியஞ்செ ய்வதாலும் எப்போதும் ஆநந்தத்தை யநுபவிக் கிறவர்களாயு மிருக்கிறார்களாம். அவர்கள் யாரெ னில், அநந்தர் (ஆதிசேஷன்), விஷ்வக்ஸேநர், கரு டர் முதலியவர்களேயாம். இவர்கள் பரமாத்மாவி னுடைய இச்சையினாலுலகத்தி லவதாரஞ்செய்வார் களாம்.

முக்தரென்றால்:—இவ்வுலகத்தில் ஜீவஜந்துக்களாகப் பிற ப்பையடைந்து சம்சார துக்கங்களை யநுபவித்துக் கொண்டு, அந்த சம்சாரத்திலிருந்துகொண்டே பக வானிடத்திற் பக்திசெய்தும், அவருக்குத் தக்கபடி உபாசனைமுதலிய கைங்கரியங்கள் செய்தும் (தன்னு டைய சகல வஸ்துக்களையும் ஈஸ்வரார்ப்பணஞ்செய் வதாகிய) பிரபத்தி முதலிய சாதனங்களினாற் றன் னுடைய சம்சாரபந்தத்தை நிவிருத்தித்துக்கொண்டு ஸ்வஸ்வரூபஞானமடைந்து இந்த தேகம் போனவு டன் தன்னுடைய பழைய ஸ்வரூபமான ஞானாநந்த ஸ்வரூபத்தையடைகிறானும். இது கைவல்லியமெ ன்று சொல்லப்படுகிறது. இந்த கைவல்லிய தசை யையடைந்த ஜீவனானவன் பகவத் கைங்கரியம், பகவதுபாசனை, பக்தி முதலியன செய்து வந்து, பகவதனுக்கிரஹத்தில் வைகுண்டலோகத்தில் அவ

னவனுடைய உபாஸன பலத்திற்குத் தக்கபடி ஸாலோக, ஸாமீப, ஸாரூப அல்லது ஸாயுஜ்ஜிய முக்திகளிலொன்றையடைந்து துக்கமற்றவர்களாயிருப்பார்களாம்.

பத்தரென்றால்:—இவ்வுலகத்தில் ஜனித்து, சம்சாரபந்தத்திற் கட்டுண்டவர்களாய், தங்கள் பந்தத்தை நிவிருத்திக்க முயற்சி செய்யாதவர்களாய், பிறப்பிறப்புக துக்கங்களாகிற சம்சாரத்திலேயே சுழன்றுகொண்டிருக்கிறவர்களாம்.

ஆத்மாவுக்கு முக்தியெப்படியெனில்:—ஆத்மாக்கள் பகவானுடைய சரீரத்திற்குச் சமமான சரீரமடைந்து வைகுண்டலோகத்திற் பகவத் சந்நிதி முதலியவைகளிலுண்டாகும் பரமானந்தமேயாம். இது தான் மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. பரமாத்மா சித்து அசித்துக்களுடைய அநுபவத்திலெப்படி அவைகளுக்கு சேஷியோ அப்படி தேகேந்திரியாதிகளுக்கு நியாமகனாக ஜீவன் அவைகளுக்குச் சேஷியாயிருக்கிறான்.

பிரகிருதி எப்படிப்பட்டதெனில்:—பரமாத்மாவை விட்டுப் பிரிவற்றதாகவிருந்துகொண்டு பரமாத்மாவினுடைய இச்சையினாலல்லது நியமனத்தினாலிந்த ஜகதாகாரமாய்ப் பரிணமித்து இந்த தேகாதி ஆகாரங்களாகவுமாகிறதாம். ஜீவாத்மாக்களுடைய தேகங்கள் பிரகிருதி ஸ்வரூபமேயாம். பிரகிருதியை சிருஷ்டி முதலிய காரியங்களிலேவுகிறவராயிருக்கிறதினாலே ஜகத்திற்கு பரமாத்மா நிமித்த காரணமாயிருக்கிறாராம். குயவனுக்குக் குடம் முதலியன செய்ய மண் உபாதான காரணமாயிருக்கிறதுபோல் பரமாத்மாவுக்கு சிருஷ்டி முதலிய காரியங்கள் செய்யு

பிரகிருதி உபாதான காரணமாயிருக்கிறது. அந்த பிரகிருதிக்கு அவ்வியக்தம், மாயை முதலிய அநேக பெயர்களுண்டாம் என்று விசிஷ்டாத்வைதிகள் சொல்லுகிறார்கள். இச்சித்தாந்தத்தை விவரமாக அறியவிரும்புவோர் எமது இந்நூலையில் முதற்புத்தகத்தின் அநுபந்தத்திற் பார்க்கலாம்.

வினா—ஜீவாத்மாவைப்பற்றி துவைதமதஸ்தருடைய சித்தாந்தம் என்ன ?

## துவைதமதசித்தாந்தம்.

விடை—“ துவைதம் ” என்றால் இருமையென்றர்த்தம். அதாவது, பரமாத்மா, ஜீவாத்மா, இரண்டும் பரமாத்மா ஜகதாகாரமாயிருக்கிற பிரகிருதி இரண்டுமாம். இப்படி பரமாத்மாவுக் கந்நியமாய் ஜீவனும் பிரகிருதியும் வெவ்வேறாயிருக்கிறார்களாம். அவர்களெப்போதுமுள்ளவர்களேயாம். ஜீவாத்மா பிரகிருதி இவர்கள் பரமாத்மாவைவிட வேறாயிருக்குந் தன்மை இயல்பானதேயாம். அவர்கள் பரமாத்மாவினுடைய ஏவற்காரர்களாம். அரசன் ஜனங்களையாளுவதுபோல, பரமாத்மா ஜீவர்களையும் பிரகிருதியையும் ஆளுகின்றாராம். பரமாத்மாவினுடைய விச்சையினாற் பிரகிருதியானது பிரபஞ்சாகாரமாய்ப்பரிணமிக்கிறதாம். ஜீவர்களைப் பரமாத்மா அவரவர்களுடைய கருமாநுசாரமாயுலகத்திற் சிருஷ்டிக்கிறாராம். அவர்கள் பரமாத்மாவினுடைய விச்சையினாற் பிரகிருதி சம்பந்தமான தேகாதிகளை யடைகின்றார்களாம். அந்த நாராயணனே பரமான தைவமாம். அவருக்குச் சமானமாவது மேலாவது யாதொருவருமில்லையாம். ஆகையாலவர் அத்விதியர் அதாவது இரண்டாவதற்றவர் என்று சொல்லப்பட

கிருராம். பரமாத்மாவுக்கு உருவமில்லையென்றல் ஸத்வரஜஸ்தமோகுணங்களோடு கூடியிருக்கிறதும், மனிதர்களைப் போலொத்ததுமாகிய தேகமான ரூபமில்லையென்று, அப்பிராகிருத திவ்யமங்கள ஸ்வரூபமாய், கரசரணாதி அவயவங்களோடும், ஆயுதம் வாகனம் முதலியவைகளோடு கூடிய திவ்யரூபமுண்டாம். ஜடப்பிரகிருதிக் கதிஷ்டாநமாயிருக்கிறது சித்பிரகிருதி. அந்த சித்பிரகிருதியானவள் மஹாலக்ஷ்மியென்று சொல்லப்படுகிறளாம். அவளெப்போதும் நாராயணனைவிட்டுப் பிரியாமல் அவர் ஸதா தங்கியிருக்கிறாளாம். ஆனாலவள் கணவனுக்கு மனைவியடங்கியிருக்கிறது போல விஷ்ணுவுக்கடங்கியிருக்கிறவளாம். அந்த லக்ஷ்மியைப்போலவே சார்ங்கம், சங்கம், சக்கிரம் இவை முதலிய ஆயுதங்கள் நாராயணனுடைய கையிற் பிரிவற்றதா யெப்போதுமிருக்கிறவைகளாம்.

அந்தப் பரமாத்மாவானவர் இலக்ஷ்மீ, சாரங்கமுதலிய ஆயுதங்கள், பீதாம்பரம் முதலியன இவைகளுடன் கூட கரசரணாதி யவயவங்களுள்ளவராய் சகலப் பிரபஞ்சத்திலுமிடைவிடாமல் கண்டாகாரமாய் வியாபித்திருக்கிருராம்.

ஜீவாத்மாக்களோ பரமாத்மாவைக்காட்டிலும் வேறானவர்களாம். ஆனாலவர்கள் பிரகிருதி ஸ்வரூபிகளல்லராம். ஜீவாத்மாக்களெல்லாரும் ஒரே ஸ்வரூபமுடையவர்களல்லவாம். அவர்கள் அநேக வகுப்புகளாய்ப் பிரிவுபட்டிருக்கிறார்களாம். எப்படியெனில், ஸத்துவத்தில் ஸத்வகுணமுடையவர்கள் சிலர், ஸத்வத்தில் இரஜோகுண முடையவர்கள் சிலர், ஸத்துவத்தில் தமோகுணமுடையவர்கள் சிலர்; இப்படியே இரஜோ குணத்தில்

ஸத்வகுணமுள்ளவர்கள் சிலர், இராஜஸில் இரஜோகுண முள்ளவர்கள் சிலர், இராஜஸில் தமோகுணமுள்ளவர்கள் சிலர்; அப்படியே தமஸில் ஸத்துவகுணமுள்ளவர்கள் சிலர், தமஸில் இரஜோகுணமுள்ளவர்கள் சிலர், தமஸில் தமோகுணமுள்ளவர்கள் சிலர், இவ்விதமாய்ப் பிரிக்கப் பட்ட ஒன்பது பாகங்களொவ்வொன்றிலும் பின்னுமிப் படியேபிரிக்கப்படுகிறதாம். இப்படிப்பிரிக்கிறதினாலநேக வகுப்புகளான ஜீவாத்மாக்கள் கணக்கற்ற பிரிவுள்ளவர் களாயிருக்கிறார்களாம். ஜீவாத்மாக்களில் முக்தியோக் கியர், நித்திய ஸம்ஸாரிகள், நித்திய நரகிகள் என மூன்று வகுப்புகளாயிருக்கிறார்களாம். முக்தியோக்கியர்களெல் லாரும் ஸத்துவகுணத்தைப் பிரதானமாயுடையவர்க ளாம். அவர்கள் அநாதி கருமவாஸனையினால் பகவானு டைய ஆக்ஞைப்படி பிரகிருதி ஸம்பந்தத்தை யடைந்து உலகத்திலநேக ஜந்மங்களை யடைகிறார்களாம். அப்ப டிப்பட்டவர்கள் யாரெனில் தேவதைகள், பிதுருக்கள் இருஷிகள், இராஜர்கள், சில மனுஷ்யோத்தமர்களிவர் களேயாம். நித்திய ஸம்ஸாரிகளான ஜீவர்கள் இரஜோ குணப் பிரதானமுடையவர்கள். இவர்கள் மோக்ஷமடைய யோக்கியர்களல்லவாம்; ஆனால் நித்திய நரகத்தை யடை கிறதுமில்லையாம். இப்படிப்பட்டவர்கள் பூமியிற் செய்த பாவபுண்ணிய கருமங்களின் பலத்திற்குத்தக்கபடி நரகம் சுவர்க்கம் முதலிய லோகங்களை யடைந்து அந்தந்த உல கானுபவங்களை யனுபவித்துப் பிறகு இவ்வுலகத்தில் ஜன னமடைகிறதும், பிறகு மரணமடைகிறதும், கருமபலத் திற்குத் தக்கபடி சுவர்க்க நரகாதிகளையடைந்தும் பிறகு ஜநித்துக்கொண்டே சம்ஸாரத்திற் சுற்றிக்கொண்டிருக் கிறவர்களாம். நித்திய நரகயோக்கியர்களான தாமஸ குணப் பிரதானமுடைய ஜீவர்கள் யாரெனில் பகவானி டத்தில் துவேஷமும், சிஷ்டர்களிடத்தில் அசூயையும், வேதசாஸ்திரங்களில் அவநம்பிக்கையு முடையவர்களா

பிருக்கிறவர்களேயாம். அவர்களெப்போதும் பாபகருமங்களையே செய்கிறவர்களாயிருக்கிறார்களாம். இப்படிப்பட்டவர்கள் பகவத்தூஷணை முதலிய பாபகாரியங்களினாலிழிவான ஜன்மங்களையடைந்து, கடைசியாக நித்திய நரகத்தை யடைகிறார்களாம். இவர்களுக்கும் மோக்ஷமென்பதேயில்லையாம். இந்த ஜீவாத்மாக்களில் அதாவது மனிதர்கள், ஸ்திரீ, புருஷர்கள், பசு, பக்ஷி, புழு, பூச்சிவரையிலுள்ள சகல ஜந்துக்களுள், முக்தியோக்கியர்களான ஜீவர்கள் யாரோ, அவர்கள் மோக்ஷமடையும் போது, தாங்காம் எர்செதந்த ஸ்வரூபமுடையவர்களோ அந்தந்த ஸ்வரூபத்துடன் மோக்ஷமடைகிறார்களாம். உதாரணம், மனிதஜீவனாயிருந்தால் மனித ஸ்வரூபத்துடனும், புருஷனானால் புருஷ ஸ்வரூபத்துடனும், ஸ்திரீயானால் ஸ்திரீ ஸ்வரூபத்துடனும், யானையானால் யானை ஸ்வரூபத்துடனும், பின்னுமிப்படியே ஸிம்மம், புலி, குதிரை, கழுதை, நாய் முதலிய மிருகங்கள், புழு, பூச்சி, முதலிய ஜந்துக்கள் அந்தந்த ஸ்வரூபத்துடனும் மோக்ஷமடைகின்றனவாம். மோக்ஷத்திலந்தந்த ஜீவர்களுடைய ஸ்வரூபம், அவரவர்களுடைய உபாஸனா பலயிவைகளுக்குத் தக்கபடி மோக்ஷாநந்தாநுபவத்தில் தாரதம்மியம் (உயர்வு தாழ்வு) உண்டாம். மோக்ஷமடையத்தகுந்த ஆத்மாக்கள் மோக்ஷமடையவேண்டுமானால் ஐந்துவிதபேதஞானம் வேண்டியதவசியமாம். பேதங்களாவன—(1) ஜீவேஸ்வர பேதம், அதாவது ஜீவனுமீசுவரனும் வெவ்வேறென்றறிதலாம், (2) ஜீவ பரஸ்பரபேதம், அதாவது ஒரு ஜீவனைப் போல் மற்றொரு ஜீவனில்லை, ஒவ்வொரு ஜீவனும் வெவ்வேறான ஸ்வரூபமுடையவனென்றறிதல், (3) ஜீவ ஜடபேதம் அதாவது இது ஜங்கமம் இது ஸ்தாவரமென்றறிதல், (4) ஜடபரஸ்பரபேதம், அதாவது இது கல், இது மண், இது தங்கம், இது ரத்தினம், இது கட்டை யென்

கிற ஒவ்வொரு வஸ்துக்களுக்குமுள்ள பேதமறிதல், (5) ஜடேசுவரபேதம், அதாவது ஜடமாகிய பிரகிருதிவேறு பரமாத்மா வேறு என்றறிதலாம். மோக்ஷமடையயோக்கியர்களான ஜீவர்கள் மேற்கண்ட ஐந்துவித பேதமாகிற ஞானத்தினுடைய ஸாதனத்தினால், நாராயணனை இலக்ஷ்மியுடனும், ஆயுதம் முதலிய பரிவாரங்களுடனும் உபாஸித்தாற்றான் மோக்ஷமடையக்கூடுமாம். நிற்க, பிரகிருதி ஸ்வரூபமெப்படிப்பட்டதெனில், பிரகிருதி ஜடஸ்வரூபமானது. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாக்களுக்கு மர்மியமானதாம். பரமாத்மாவினுடைய ஆக்ஞையினாலிந்த பிரகிருதியே தேகம் முதலிய ஜகத்ரூபங்களாய்ப் பரிணமிக்கிறதாம். இந்த ஜடப்பிரகிருதிக்குச் சித்பிரகிருதியான இலக்ஷ்மீ அதிஷ்டானமாயிருக்கிறாளாம். அவள் பரமாத்மாவுக்கு அடங்கினவளாயும், பிரம்மா உருத்திரர் முதலிய தேவதைகளுக்கு மேலானவளாயுமிருக்கிறாளாம், இந்த லக்ஷ்மியை யுபாஸித்து மோக்ஷமடையவுங் கூடுமாம். இவைகள் தான் த்வைதஸித்தாந்தத்தில் முக்கியமான அம்சங்கள் என்று சொல்லுகிறார்கள். இச்சித்தாந்தத்தை விவரமாக அறிய விரும்புவோர் எமது இந்நூலில் முதற்புத்தகம் அநுபந்தத்திற் பார்க்கலாம்.

வினா—ஜீவாத்துமாவும், பரமாத்துமாவும் வேறானவர்கள் என்று சொல்லுவீர்களாகில், வேதங்களிலே காணும் (1) தத்வமஸி, (2) அயமாத்மா பிரஹ்மா என்கிற வாக்கியங்களுக்குத் தாங்கள் எவ்விதமாகப் பொருள் சொல்லுகிறீர்கள்?

விடை—மேற்கண்ட இந்த இரண்டு வாக்கியங்களும் பேதவாக்கியங்களல்லவென்றும், இவை பிரமாணமான ஐக்க வசனங்கள் என்றும் அத்வைத ஞானிகளுடைய கருத்து. இவைகளை மஹாவாக்கியங்கள்

என்று வேதத்தில் எந்த இடத்திலும் எழுதப்பெற்றிருக்கவில்லை. இவைகளில் முதல் வாக்கியத்தின் அருத்தமாவது:—"அஹம்=நான், பிரஹ்ம=பிரஹ்மஸ்தனாக, அஸ்மி=இருக்கிறேன்," என்பதாம். இதை "தத்ஸோபாதி" என்று சொல்லவேண்டும், ஏனெனில் "மஞ்சா: க்ரோசந்தி"=கட்டில் கத்துகின்றது என்றால், கட்டில் ஜட பதார்த்தமாகையால் அது கத்துமா? கத்தாது; ஆகவே, கட்டிலிலிருக்கும் மநுஷன் கத்துகிறான் என்று சொல்லவேண்டியிருப்பதைப்போல, இவ்விடத்திலும் சொல்லவேண்டும். அதாவது எல்லா பதார்த்தங்களும் பிரஹ்மஸ்தத்திலிருக்கிறது என்று சொல்வதனால், ஜீவாத்துமாவையும் பிரஹ்மஸ்தன் என்று சொல்வதனால் பாதகமில்லை. ஜீவாத்துமா பிரஹ்மத்தின் ஞானமும், முக்தியில் அந்த பிரஹ்மத்தின் சாக்ஷாத் சம்பந்தமுமடைவதனால், ஜீவாத்மா பிரஹ்மத்திற்கு தத்சியமம் அல்லது தன்னுடைய சரீரோபாதமிருக்கிறது, என்றால் ஜீவாத்துமா பரமாத்துமாவுக்கு ஸஹசாரி என்று சொல்லப்பட்டது. இதனால் ஜீவாத்துமாவும் பரமாத்துமாவும் ஒன்றேயல்லவென்பது பொருள். ஸ்நேகபந்தத்தினால் ஒருவன் சிநேகிதனும் ஒன்று என்பதனால் இருவரும் ஏகரூபத்தில் ஒருவனேயாக மாட்டானல்லவா! ஆகவே, ஸமாதிஸ்தனாகிய ஜீவாத்மா, பிரேமபத்தனாகி பரமேசுவரனிடம் சமீபிக்கும்போது மற்றெல்லாவற்றையும் மறந்து ஏகசித்தமாகியிருக்கும்போது "நானும் பிரஹ்மமும் ஒன்று" என்றும், சொல்லப்பட்டதேயன்றி, ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றே என்று சொன்னதல்ல.

வினா—அப்படியானால் "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம் பிரஹ்ம:" என்னும் வாக்கி

யங்களைக்கொண்டு "தத்துவமஸி" என்பதற்கு="தத் பிரஹ்மம், த்வம்=ஜீவனுகியநீ, அஸி=இருக்கிருய்" என்று பொருள் சொல்லுகிருர்களே அது சரியா?

## இது சாந்தோக்யம் பி. 6-க. 2-மந்திரம் 1-ல்.

"ஸதேவஸோம்யேதமக்ர ஆஸிதேககமே வாத்விதீயம்"

என்று சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய இதில் பிரஹ்ம சப்தம் சொல்லப்படவே இல்லை.

## சாந்தோக்யம் பி. 6-க. 8-6-7 ல்.

"ஸய ஏஷோணிமா ஐததாத்மியமிதகம் ஸர்வம்
தத்ஸக்யம் ஸ ஆத்மா தத்வமஸி சுவேதகேதோஇதி"

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் கருத்தென்னவெனில், அந்த பரமாத்மா அறிவதற்கு யோக்கியன், அவன் அதிக சூக்ஷமத்திலும் சூக்ஷமமானவன், சகல ஜங்கமத்திற்கும் ஜீவனுக்கும் ஆத்மா, அவனே சத்யஸ்வரூபன், தனது ஆத்மாவே தானாக இருக்கிறான். ஓ! சுவேதகேதோ! ஓ பிரியமான புத்திரனே என்று பொருளாகிறது. "தத்வமஸி" என்றால்=தத்=ஆத்மகஸ்த தந்தர்யாமீ த்வமஸி = அந்தர்யாமியாகிய அந்த பரமாத்மாவினால் நியுக்தனாகிறாய்" என்று உபநிஷத்துகளில் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில், பிருஹதாரண்யத்தில் "ய ஆத்ம நிதிஷ்டந்நாத்ம னோந்தரோயமாத்மா ந வேத யஸ்யாத்மாசரீரம் ஆத்மானோந்தரோ யமயதி ஸத ஆத்மாந்தர்யாம்யம்ருத:" என்றால் மஹரிஷி யாக்ஞவல்கியர் தனது மனைவி மைத்ரேயியைப்பார்த்து ஓ! மைத்ரேயி-"எந்த பரமாத்மா ஆத்மாவாகிய ஜீவனிடத்தில் ஸ்திரமாகி, அவனைக்காட்டிலும் வேறானவனாக இருக்கிறானோ, மூடனாகிய ஜீவாத்மா தன்னிடம் வியாபகனாகி இருக்கி

றான் என்று அந்த பரமாத்மாவை அறியமாட்டானோ, எந்த பரமாத்மாவுக்கு ஜீவாத்மா சரீரமோ, என்றால் சரீரத்தில் ஜீவாத்மா இருப்பதைப்போல், ஜீவாத்மாவில் பரமாத்மா வியாபகனாக இருக்கிறானோ, அந்த பரமாத்மா ஜீவாத்மாவுக்கு வேறானவனாயிருந்து, ஜீவனுடைய பாவ புண்யங்களுக்கு சாக்ஷியாகி அதன் பலனை ஜீவர்களுக்குக் கொடுத்து நியமத்தில் வைக்கிறான். அந்த அவிநாச ஸ்வரூபனே உன்னுடைய அந்தர்யாமியாக இருக்கிறான் என்று தெரிந்துகொள்வாய்" என்று சொல்லி இருக்கிறார். இம்மட்டோ! இந்த 'தத்வமஸி' பதத்திற்கு ஸ்ரீ மாத்வாசாரியர் முதலான மஹான்கள் அதத்+துவம்+அஸி= அது நீயல்ல=அது நீயாக இருக்கவில்லை, என்றால் தத்= பரமாத்மா ஒன்றே பூரணமும் சுவதந்திரமுமுடையதென்றும், த்வம்= நீயாகிய ஜீவாத்மா, அது=பரமாத்மா, அஸி=(ஆகி) இருக்கிறதில்லை என்று பொருள் செய்திருக்கிறார்கள். நிற்க, 'அயமாத்மா பிரஹ்மா' என்றால் சமாதிதசையில் யோகிக்கு பரமேசுவரன் பிரத்தியக்ஷமானபோது என்னிடம் வியாபகனான பிரஹ்மமே எங்கும் வியாபித்திருக்கிறான் என்று சொல்லக்கூடும். ஆகவே ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றே என்று தற்கால வேதாந்திகள் சொல்வது சாஸ்திர விரோதமானதேயாகும்.

வினா—மஹா பரிசுத்தமும் பிரகாசமுமுடைய பரமாத்மாவினிடமிருந்துவரும் ஜீவாத்மா எப்போதும் பரிசுத்தமாகவும் சுகமாகவும் இருக்கவேண்டுமல்லவா? அதற்கு இவ்வுலகில் சுகதுக்கங்களுண்டாக காரணமென்ன?

விடை—ஜீவாத்மா சுத்தமானதும், சுகமுடையதுமாக இருக்கினும்,

### பிருஹதாரணியம் 6-3-8-ல்.

ஸவாஅயம்புருஷோஜாயமாநச்சரீர
மபிஸம்பத்யமாந: பாப்மபிஸ்ஸம்ஸ்ருஜ்யதே.

(இ-ள்.) மேலேசொன்ன அந்த ஜீவாத்மா இந்த பூலோகத்தில் பிரகிருதி தேகத்தில் புகுந்து ஸ்தூலதேகியாகி பிரவர்த்திப்பதனால், அந்த பிரகிருதி சம்பந்தமான கர்மங்களை அனுஷ்டிக்க அதனுடைய நன்மை தீமைகளை அடையச் சம்பவிக்கிறது. எப்படியெனில்,

### பிருஹதாரண்யம் 4-4-5-ல்.

யதாகாரீ யதாசாரீ ததா பவதி
ஸாதுகாரீஸாதுர்பவதி பாபகாரீபாபோபவதி
புண்ய:புண்யேநகர்மணாபவதி-பாப:பாபேந.

(இ-ள்.) யார் எப்படிசெய்கிறார்களோ அவர் அப்படியாகிறார். நற்செய்கைகளையுடையவர்கள் நல்லவர்கள் ஆகிறார்கள். கெட்டசெய்கைகளைச் செய்பவர்கள் கெட்டவர்களாகிறார்கள். பரிசுத்தமான கர்மங்களைச் செய்வோர் பரிசுத்தராகின்றனர். துஷ்டகாரியங்களைச் செய்வோர் துஷ்டர்களாகிறார்கள் என்று வேதங்களில் சொல்லி இருப்பதால், ஜகதீசுவரனிடமிருந்து சைதன்யத்தைப் போல சுத்தமானதாயும், சுதந்திரமுள்ளதாயும், பிரபஞ்சத்தில் வரும் ஜீவாத்மாவானது பிரகிருதியான ஸ்தூல தேகத்தைத் தரித்து, தனது தலைவனாகிய பரமாத்மாவின் ஆக்ஞையின்படி மனசாக்ஷிக்கேற்ற சத்கருமங்களை யனுஷ்டித்து, இகபரசுகத்தை யடையவேண்டிய பிரயோஜனப்பெற்றிருக்க; அந்நியமனத்தின்படி தனது ஸ்தூலதேகத்தைத் தன் வசப்படுத்தி நடத்தாமலும், அஞ்ஞானத்தினால் அந்த ஸ்தூலதேகத்திற்கு அடிமையாகி அதன் ஆஞைக்குட்

பட்டும், அதற்கு இயற்கையான காமக்குரோதலோபமோஹாதிகளிற் சிக்கியும், கர்வியாகியும், தன்னுடைய நிலையையும் தலைவனுடைய நியமனத்தையும் மறந்தும், தான் செய்யவேண்டிய சத்கருமங்களைவிட்டொழித்தும், தான் செய்யத்தகாத துஷ்கிருத்தியங்களை மனசாக்ஷிக்குவிரோதமாகச் செய்தும், இப்பிரபஞ்சவாழ்வே நிரந்தரமானதென்று எண்ணியும், இப்பிரபஞ்சசுகமே பூரணமானதென்றெண்ணியும், அகங்காரியாகி கொலை களவு முதலான கொடியவைகளைச் செய்துட், அவைகளால் இகபரசுகமிழந்தும் பாபாத்மாவாகி பாதவிக்கிறது.

வினு—பாபமென்பதென்ன ?

விடை—அமரம் திருதியகாண்டம் 48-61-வது சுலோகங்களில், "பா=ரக்ஷணே, பா தாது இரக்ஷிக்க, பாதிரயத்து + அப்மாது ஆத்மானம் இதிபாபம்" இதனுல் தன்னை ரக்ஷித்துக்கொள்வது என்றுபொருள். மேலும், பிபதிபாபிஷ்டம் இதிபாபம் = பாபிஷ்டனை பானம் செய்கிறவன். ஆகவே, பாபம் தாது, பா=பானே குடித்தல், பா இரக்ஷனே பம்-பிரத்யயம் என்று பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது பிரபஞ்ச நிர்வாகத்தின்பொருட்டு பரமேசுவரன் ஏற்படுத்தியிருக்கிற தர்ம நியமங்களைத் தெரிந்து நடக்கத் தப்பியவர்களை இரக்ஷிக்கிற விதமாம்.

வினு—பாபம், ஆதியா, அநாதியா ?

விடை—ஆதியாம்.

வினு—பாபம் பரமேசுவரனுல் சிருஷ்டிக்கப்பட்டதல்லவா ?

விடை—பரமேஸ்வரனுல் சிருஷ்டிக்கப்பட்டதல்ல.

வினா—பாபம் இருளைப்போல் அபாவப்பொருளா ?

விடை—அது முற்றும் அபாவமானதல்ல.

வினா—அது பரமேசுவரனால் சிருஷ்டிக்கப்படாததாயும், அபாவமல்லாததாயும் இருந்தால் அது எப்படி வந்தது ?

விடை—மனிதனுடைய சுவாதீனதையால் வந்தது.

வினா—கிரியையினாலா அல்லது எண்ணத்தாலா பாவத்தைத்தீர்மானிக்கவேண்டியது ?

விடை—எண்ணத்தினால் தீர்மானிக்கவேண்டியது.

வினா—பாபத்தின் இருப்பிடம் எது ?

விடை—மனிதனுடைய சித்தமேயாம.

வினா—கிரியையினால் ஏன் பாவத்தைத் தீர்மானிக்கக் கூடாது ?

விடை—கூடாது ; ஏனெனில், சில சமயங்களில் நல்ல எண்ணத்தோடு செய்யப்பட்டகாரியம் கெடுதியான தாக இருக்கலாம்.

வினா—பாபம் முடிவுள்ளதா ? அல்லது முடிவற்றதா ?

விடை—முடிவுள்ளது ; ஏனெனில், மனிதன் பரமேசுவரனுடைய நியமத்தை முற்றும் கடக்க வல்லவன் அல்லன்.

வினா—பரமேசுவர நியமத்தை மனிதன் எப்படியறிகின்றான் ?

விடை—மனசாக்ஷியின் மூலமாய் பரமேசுவரன் தனது தர்மங்களை இடைவிடாமல் கற்பிக்கின்றான்.

வினா—பாவத்துக்குக் காரணமான சுதந்திரத்தை மனிதர்களுக்கு பரமேஸ்வரன் ஏன் கொடுத்தார்?

விடை—ஸ்வதந்திரமில்லாவிட்டால் மனிதன் ஒரு யந்திரத்தைப்போல் ஆகின்றான். அவன் உன்னதிய டையவிடமில்லையல்லவா?

வினா—ஸ்வதந்திரத்தால் அதிக கெடுதியுண்டாகாதபடி என்ன உபாயம் ஈஸ்வரன் செய்திருக்கிறான்?

விடை—மனிதனைத் தாய்தந்தையர்கள் சுற்றத்தார் முதலானவர்களுடைய கூட்டத்தில் சேர்த்து வைத்திருக்கின்றான்.

வினா—பாபத்தின் தன்மை என்ன?

விடை—பாபம் நம்மைப் பரமேஸ்வரனிடமிருந்து பிரிக்கின்றது; மேலும், நமது சித்தம் பேதிக்கவே அது மனது, புத்தி, ஆசாபாசங்கள் முதலிய நமது இயல்பு எல்லாவற்றையும் மாற்றுகின்றது.

வினா—நான் என்னும் ஆத்மபிரக்ஞையை நசிக்கச்செய்ய வேண்டுமென்று வேதாந்திகள் சொல்லுகிறார்களே அதென்ன?

விடை—நான் என்னும் பிரக்ஞை ஆத்மஸ்வரூபத்தை யறியும் அறிவாம்; ஆனால், பரமேஸ்வரனுடைய இருப்புக்கும், சித்தத்திற்கும், உத்தேசியத்திற்கும் மாறாமல் இருப்புள்ளதாய்த் தன்னையறியும் அறிவு பாபத்தின் அறிவாகையால் அவ்வித பிரக்ஞையை நசிப்பிக்கவேண்டுமென்பது அவர்களுடைய கருத்து.

வினா—சித்தம் கெட்டுப்போனபோது மற்ற கரணங்கள் எப்படி மாறுகின்றன?

விடை—சித்தம் பாபத்தைச்செய்யுங்கால், புத்தி அதைச் சரியென்று ஆமோதிக்கின்றது. ஆசாபாசங்களும் சித்தம் புத்திகளின் வசமாய்விடுகின்றன.

வினா—சித்தம் ஸ்வாதீனமுள்ளதாயிருந்தும், அதனிடத்தில் உள்ள விசேஷமென்ன?

விடை—சித்தம் ஸ்வாதீனமாயிருந்தும், அது அப்பியாசத்திற்கு ஸ்வாதீனப்பட்டுபோகின்றது. அப்போது அது தன் ஸ்வாதீனதையை இழந்து, தன் விருப்பப்படி செய்ய சக்தியற்றதாய் அப்பியாசமெதுவோ அதைச் செய்கின்றது.

வினா—தீமையான காரியங்களை விலக்குவதே தர்மமாகுமா?

விடை—ஆகாது; தீமையானவைகளை விலக்கி பரமேஸ்வரனுடைய உத்தேசம் நிறைவேறும்படி நன்மையானவைகளைச் செய்தல் தர்மமாகின்றது.

வினா—பாபத்தை நீக்கும்படியான மனசாக்ஷியின்படி நடப்பதே போதுமா?

விடை—போதாது; பாபம் பலமுற்றதாயிருப்பதால் அதைநீக்க மனசாக்ஷியின்படி நடப்பதே போதாது. பரமேஸ்வர பக்தி சம்பந்தத்தால் அவரது கருணையும் அடைதல் வேண்டும்.

வினா—நமது பாபத்திற்கு நாம் எப்போது ஈடு செலுத்தக்கூடும்?

விடை—நமது இருதயத்தில் ஆழ்ந்த வியாகூலம் உண்டாகி அது மாறினபின்பே நாம் பாவத்திற்கு ஈடு செலுத்தக்கூடும்.

வினா—பாபம் நீங்குவதெப்படி?

விடை—பரமேஸ்வரனிடம் உண்மையான பக்தனாகியும்; தனது பாவகாரியங்களை நினைத்து இடைவிடாத அனுதாபத்தாலும், தான் பரமேஸ்வரனை அடைய வேண்டுமென்கிற அவாவினால் யதார்த்தமும், உருக்கமான பிரார்த்தனையாலும் தனது பாபம் நீங்கும்.

இக்காலத்தில் பாபியின் மனோநிலை மிகவும் கிர்ப்பாக்கியமானதாயிருக்கும்.

வினா—பாபத்தினின்று விடுபட்டவன் லக்ஷணமென்ன?

விடை—பாபத்தினின்று விடுபட்டவன் தான் எல்லா காலத்திலும் பரமேஸ்வரனுடைய பக்தனாகி அவனது கருத்தின்படி தனது சித்தத்தை நியமித்து நடப்பதுமன்றி, பரமேஸ்வரனுடைய உபாஸனையிலும், அவனது கைங்கரியங்களைச்செய்வதிலும் எப்போதும் ஆநந்தமுள்ளவனாயிருப்பான்.

வினா—ஜீவாத்மா இவ்வுலகத்தில் வந்து அடையும் குண கர்மங்களைப்பற்றியும், அவைகளால் அது உலகில் உள்ளவரையில் அனுபவிக்கும் சுகதுக்கங்களைப்பற்றியும் கேட்கவேண்டிய கேள்விகளநேகமுண்டு. அவைகளைப் பிறகு கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறேன்; பாபத்தைப்போக்கி பரமேஸ்வரனையடைய முக்கிய சாதனங்களுண்டோ?

விடை—உண்டு; அவை பக்தி, யோகம், ஞானம் அல்லது சரியை, கிரியை, யோகம், ஞானமென்பவைகளாம்.

வினா—இவைகளில் சகலராலும், எவ்விடத்தும், எப்போதும் அநுஷ்டிக்கக்கூடிய முக்கிய சாதனமெது?

விடை—பக்தியேயாம்.

## போது வசனம்.

ஜீவாத்மாவின் இருப்பையும் அதன் இலக்ஷணத்தையும்பற்றி இது வரையில் எடுத்துக்காட்டிய பிரமாணங்களைப் படிப்பவருக்கு இது விஷயமாக இவ்வளவு தெளிவாக பூலோகத்திலிருக்கும் எந்தப் பெரியமதமும் இம்மதத்தைப்போல வியக்தமாகவும் விவரமாகவும்

சொல்லவில்லை என்பது பிரத்யக்ஷமாகும். சிலர் (அத்துவைதி முதலானவர்கள்) இது விஷயத்தில் கொஞ்சித்து வித்யாசமான அபிப்பிராய பேதப்பட்டாலும், அவர்களும் வேத வாக்கியங்களின் கருத்தை ஊன்றிப் பார்க்கில் விசிஷ்டாத்துவைத சித்தாந்தமே சகல காலத்தார்களாலும், சகல தேசத்தார்களாலும், சகல மதஸ்தர்களாலும், சகல தத்துவ சாஸ்திரிகளாலும் அங்கீகரிக்கக் கூடியதாக பிரகாசிக்கும் என்பது திண்ணம்.

"The human soul is immortal, and capable of infinite progress and is responsible to God for its doings."—*Pandit S. N. Sastri.*

"The Brahma believes in the spirituality of the soul as much as in the existence of God, and from its spirituality its immortality follows almost as a corrolary. The belief in the immortality of the soul is, if not an immediate intuition, an instinct of the human nature. This instinctive certitude is corroborated by an analysis of the contents of our intellectual moral, and emotional experiences. The belief in a life after death is universal and persistently obstrusive. The human heart always naturally believes in it."

*  *  *  *  *

"Born of the essence of God, created by God, and sustained by Him every moment, deriving all his strength and power from Him, yet for the present he holds a distinct individual existence and responsibility, which will be continued to eternity."—*H. C. Sirkar.*

# நான்காவது அத்தியாயம்.

## பக்தி இலக்ஷணம்=FAITH.

வினா—பக்தி என்னும் பதத்தின் பொருளென்னை?

விடை—இது 'பஜ்' பகுதி பதத்துடன் 'தி' என்னும் பிரத்யயத்தைச் சேர்க்க பக்தி என்னும் பதமாகியது. பஜ என்றால் சேவை என்றும் அர்த்தம். அதற்கு நிகண்டுக்காரர்கள் ஸேவாபக்திருபாஸ்தி:=சேவை உபாசனை, பக்தி என்றதி பொருள்கள் பக்தியையே குறிப்பிக்கிறதென்றுஞ் சொல்லி இருக்கிறார்கள்.

வினா—இந்த பக்தியைப்பற்றி வேதங்களில் என்னவிதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது?

விடை.—

ரிக்வேதம் 151-1-ல்.

"சிரத்த யாக்நி: ஸமித்யதே சிரத்தயா ஹூயதேஹவி:"
"சிரத்தாம்பகஸ்ய மூர்த்த நிஸசஸாவேதயாமஸி"

(இ-ள்.) பக்தியினால் தூண்டுதலென்னும் அக்கி கொழுத்தப்படுகிறது. பக்தியினால் கர்மாதி வர்த்தனங்கள் செய்யப்படுகின்றன. நாங்கள் பக்தியைச் சிரசாக வகித்துக் கொண்டாடுகிறோம் என்றும்,

By faith is Agni kindled, through faith is oblation offered up. We celebrate with faith on the forehead of prosperity.

ரிக்வேதம் X-151-2-ல்.

"ப்ரியம் சிரத்தேதத: ப்ரியம் சிரத்தேதிதாஸத:
ப்ரியம் போஜேஷுயஜ்வஸ்விதம் மவுதிதம்கிருதி"

(இ-ள்.) ஓ! பக்தியே! அதைத் தருப்பவருக்கும், திராமலிருப்பவருக்கும் ஆசிர்வதிப்பாய்! ஸமரச பாகவதர்களை ஆசிர்வதிப்பாய்! நான் சொன்ன இந்த வார்த்தையை ஆசிர்வதிப்பாய்! என்றும்,

Bless thou the many that gives. O! Faith, bless the man who fain would give. Bless thou the word that I have said.

ரிக் வேதம் X-151-5-ல்.

" சிரத்தாம் ப்ராதர்ஹவாமஹே
சிரத்தாம்மத்யாந்திநம்பாரி
சிரத்தாம் ஸூர்யஸ்ய நிம்ரசி
சிரத்தே சிரத்தாபயேஹந : "

(இ-ள்.) ஓ! பக்தியே! காலையிலும், மத்தியானத்திலும், உதபோதிப்போமாக. சூர்யாஸ்தமன காலத்திலும் பக்தியைப் பிரசாதிப்பாயாக என்றும்,

Faith in the early morning, Faith at noon will we invocate, Faith at the setting of the sun, O! Faith, endow us with Faith!

ரிக்வேதம் X-VII-59-12-ல்.

" த்ரயம்பகம் யஜாமஹேசுகந்திம் ப்ருஷ்டி வர்த்தநம்,
உர்வாரகமிவ பந்தநாநமிருத்யோர் முக்ஷியாமாம்ருதாத் "

(இ-ள்.) சுகந்த சுகத்தைக்கொடுக்கும் திரியம்பகனை வணங்குகிறோம். வெள்ளரிக்கொடியிலிருந்து அதன்காய் விட்டுவிடுவதைப்போல நான் மரணத்திலிருந்து விடுதலைபெற்று நிரந்தரசுகவாழ்வைப் பெறுவேனாகவும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

We worship Tryambaka, the sweet argumenter of prosperity. May I be released from death as cucumber from its stem and may I attain immortality.

வினா—பக்தியைப்பற்றி உபநிஷத்துக்களில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**சாந்தோக்கியம் 2-23-ல்.**

யார் பரமேசுவரனிடம் பக்தி வைக்கிறார்களோ அவர்களுக்கே நித்ய பதவி கிடைக்கும் என்றும்,

**சுவேதாசுவதரத்தில்.**

அவனை பக்தியினால் அறிந்தவன் மரணத்தை வெல்லுகிறான், பரமபதத்திற்கு வேறுவழியில்லை என்றும்,

**தைத்ரியம் 2-7-ல்.**

பக்திரசத்தை யறிந்தால் பூரண சந்தோஷத்தை யடைவான் என்றும்,

**சுவேதாசுவதரம் 5-18-ல்.**

ஆதியில் பிரம்மாவை சிருஷ்டித்து, வேதங்களைக் கொடுத்து தனது ஆஸ்திகத்தைக் காட்டினானோ அப்படிப்பட்ட மஹா புருஷனை பக்தியினாலடைக்கலமாக வடைந்து ஜனனமரணாவஸ்தைகளை நீக்கிக்கொள்ளுகிறேன் என்றும் பின்னும் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

வசா—பக்தியைப்பற்றி பகவத்கீதையில் எவ்விதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது?

விடை—

## பகவத்கீதை 5-வது அத்தியாயம் 17-வது சுலோகத்தில்.

" தத்புத்தயஸ் ததாத்மாநஸ்த் தந்நிஷ்டாஸ்த்தத்பராயணா:
கச்சந்த்யபுநராவ்ருத்திம்க்ஞாநநிர்தூத கல்மஷா : "

(இ-ள்.) பாவத்தை ஞாநத்தினால் நசிக்கச் செய்தவன் பிரஹ்மத்திலேயே மனத்தைச் செலுத்தி அதையே ஆத்ம ஸ்வரூபமாக அடைந்து அதில் விருப்புடையவனாகி அதே சிறந்த பதவியென்று வேறு மார்க்கங்களை விட்டொழித்து முக்தியை யடைகிறான் என்றும்,

Those whose understandings are in Him, whose souls are in Him, whose confidence is in Him, and whose asylum is in Him, are by wisdom purified from all their offences, and go from whence they shall never return.

## ஷை கீதை 6-வது அத்தியாயம் 47-வது சுலோகத்தில்.

" யோகீநாமபிஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா
ஸ்ரத்தாவாந்பஜதேயோமாம் ஸமேயுக்ததமோமத : "

(இ-ள்.) எவன் விசுவாசமுற்று என்னை யாச்ரயித்து மனதாற் சேவிப்பானோ அவனே எல்லா யோகிகளிலும் சிறந்தவன் என்பது எனது மதம் என்றும்,

Of all Yogee, I respect him as the most devout, who hath faith in me, and who serveth me with a soul possessed of my spirit.

ஸ்ரீ கீதை 7-வது அத்தியாயம் 23-வது சுலோகத்தில்.

" அந்தவத்து பலந்தேஷாம் தத்பவத் யல்பமேதஸாம்
தேவாந்தேவ யஜோயாந்தி மத்பக்தா யாந்திமாமபி "

(இ-ள்.) அற்பபுத்தியுடைய புருஷனது கோரிக்கையின் பலன்கள் நசிக்கத்தக்கவை; தேவதைகளைப் பூஜிக்கிறவர்கள் அத்தேவஸ்தானங்களை யடைகின்றனர்; என் பக்தர்கள் என்னையே யடைகின்றார்கள் என்றும்,

But the reward of such short sighted men is finite, those who worship the devotor go unto them, and those who worship me alone go unto me.

ஸ்ரீ கீதை 9-வது அத்தியாயம் 29-30-31-வது சுலோகங்களில்.

ஸமோஹம் ஸர்வபூதேஷு நமேத்வேஷ்யோஸ் திநப்ரிய:
யேபஜந்திது மாம்பக்த்யாமயிதேதேஷுசாப்யஹம்

(இ-ள்.) நான் சர்வ பூதங்களுக்கும் சமமானவன்; எனக்குப் பிரியனாயினும், துவேஷியாயினும் கிடையான்; எவன் பக்தி சிரத்தையுடன் என்னைத்துதிக்கிறானோ அவன் என்னிடத்திலிருப்பவன், நான் அவனிடத்தில் அநுக்கிரக ரூபனாக இருப்பேன் என்றும்,

" அபிசேத்ஸு துராசாரோ பஜதேமா மநந்யபாக்
ஸாதுரேவஸமந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோபிஸ :"

(இ-ள்.) அதி துராசாரங்களையுடைய எவன் பிறரை வணங்காமல் என்னையே சரணமடைந்து பக்தி செய்தால், அவன் ஆத்மதத்துவமுணர்ந்த என் பக்தனாதலின், அவன் சதாசாரமுடையவனென்றுணர்வாயாக என்றும்,

" க்ஷிப்ரம்பவதி தர்மாத்மா சச்வச்சாந்திம் நிகச்சதி
கௌந்தேய ப்ரதிஜாநீஹி நமேபக்த : ப்ரணஶ்யதி "

*(இ-ள்.) அவன் அதி சீக்கிரத்தில் தர்மவானுப் நித்யமான பரம சாந்தியை யடைகிறான். கௌந்தேயா! அந்த துராசாரமுடைய என் பக்தன் நாசமடையானென் று நீ பிரதிக்ஞை செய்க என்றும்,*

I am the same to all mankind: there is not one who is worthy of my love or hatred. They who serve me with adoration, I am in them, and they are in me. If one, whose ways are ever so evil, serve me alone, he is as respectable as the just man; he is altogether well employed. He soon becometh virtuous spirit, and obtaineth eternal happiness. Recollect O! son of Kunti, that my servant doth not perish.

***ஷை கீதை 10-வது அத்தியாயம் 10-வது 11-வது சுலோகங்களில்.***

" தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம்
ததாமி புத்தியோகந்தம் யேநமா முபயாந்திதே "

*(இ-ள்.) இந்தப் பிரகாரம் எப்போதும் என்னிடத்தில் விருப்பமடைந்து விஸ்வாச பூர்வகமாகச் சேவிக்கும் மஹாத்துமாக்களுக்கு என்னிடத்திலயிக்கியமாதற் கேதுவான ஞானயோகத்தைக் கொடுக்கிறேன் என்றும்,*

" தேஷாமே வாநுகம்பார்த்த மஹமஜ்ஞாந ஜந்தம :
நாசயாம் யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா "

*(இ-ள்.) அந்த மஹா புருஷர்களுக்கு மாத்திரம் நான் தயைசெய்து என் சர்வவியாபகமான ஞானப் பிர*

காசத்தால் அவர்களது பிரகிருதி சம்பந்தமான அவிவேக அந்தகாரத்தை நசிப்பிக்கச் செய்கிறேன் என்றும்,

I gladly inspire those who are constantly employed in my service, with that use of reason, by which they come into me. And in compassion, I stand in my own nature, and dissipate the darkness of their ignorance with the light of the lamp of wisdom.

ஷை 18-ம் அத்தியாயம் 52-53-வது ஸ்லோகங்களில்.

" விவிக்தஸேவீலக்வாசீ யதவாக்காய மாநஸ :
த்யாநயோக பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஸ்ரித ::
அஹங்காரம் பலந்தர்ப்பம் காமங்க்ரோதம் பரிக்ரஹம்
விமுச்ய நிர்மமஸ்ஸாந்தோ ப்ரஹ்மபூதாய கல்பதே "

(இ-ள்.) ஏகாந்த ரஹஸ்ய ஸ்தானத்தில் வசிப்பவனாகி மிதபோஜனம் செய்துகொண்டு, வாக்கையும் மனத்தையும், தேகத்தையும் நியமத்தில் நிறுத்தி, எப்பொழுதும் தியானயோகத்தில் விருப்புடையவனாகி, வைராக்யமடைந்து, அகங்காரத்தையும் சாமர்த்தியத்தையும், துர்நடத்தையையும், காமத்தையும், குரோதத்தையும், மனைமனைவி முதலான பொருள்களின் விருப்பத்தையும், மமகாரத்தையும், துராகிருதத்தையும் விடுத்திருக்கும் ஞானநிஷ்டன் பரப்ரஹ்மத்தையடைவதற்குச் சமர்த்தனாகிறான் என்றும்,

Who worshippeth with discrimnation, eateth with moderation, and is humble of speech, of body, and of mind, who preferreth the devotion of meditation, and who constantly placeth his confidence

in dispassion. Who is freed from ostentation, tyrannic, strength, vain, glory, trust, anger and avarice, who is exempt from selfishness and in all things temperate, is formed for being Brahm.

**ஷை கீதை 13-வது அத்யாயம் 54, 55-சுலோகங்களில்.**

"ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா நஶோசதி நகாங்க்ஷதி
ஸமஸ்ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதேபராம்"

(இ-ள்.) பிரம்ம நிஷ்டனானவன் நிர்மலமான மனமுடையவனாகி நஷ்டமான பொருள்களுக்குத் துக்கிக்காமல், அகப்படாதப் பொருள்களைக் கருதாமல், சகல பிராணிகளிடத்திலும் ஸமதிருஷ்டி வைத்து பரமோத்கிருஷ்டனான என்னிடத்திற் பக்தி செய்துகொண்டிருக்கிறான் என்றும்,

"பக்த்யாமா மபிஜாநாதி யாவங்யஶ்சாஸ்மிதத்வத:
ததோமாம் தத்வதோஜ்ஞாத்வா விசதே ததநந்தரம்"

(இ-ள்.) சர்வவியாபியாகவும், சச்சிதாநந்த ஸ்வரூபனாகவும் இருக்கும் என்னைப் பரமபக்தியால் உணர்ந்துகொண்டவன் அந்தஞான பரிசபாப்தகாலத்தில் என்னையே யடைவான் என்றும்,

"And thus being as Brahmanishta, his mind is at ease, and he neither longeth nor lamenteth. He is the same in all things and obtaineth my supreme assistance. And my divine aid he knoweth, fundamentally, who I am, and what is extent of my existence; and having thus discovered who I am, he at length is obsorbed in my nature.

## ஷை கீதை 18-வது அத்தியாயம்
### 65-66-வது சுலோகங்களில்.

"மந்மநா பவமத்பக்தோ மத்யாஜீ மாம்நமஸ்குரு [மே"
மாமேவைஷ்யஸி ஸத்யந்தே ப்ரதிஜாநே ப்ரியோஸி

*(இ-ள்.) ஆகவே என்னிடத்தில் உன் மனதை நிறுத்துக, என்னிடத்தில் பக்தி செலுத்துக, என்னைப் பூசைசெய்க, எனக்கு நமஸ்காரங்களைச் செய்க; அப்படிச் செய்வாயாகில் நீமோக்ஷத்தை யடையமாட்டுவாய், நீ எனக்குப் பிரியவான், உனக்குச் சத்தியத்தை புணர்த்தினேனென்று பிரதிக்ஞை செய்கின்றேன் என்றும்,*

Be of my mind, be my servant, offer unto me alone and bow down humbly before me and thou shalt verily come unto me; for, I approve thee and thou art dear unto me.

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம்வ்ரஜ
அஹந்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:"

*(இ-ள்.) நீ எல்லாக் கர்மபலனையும் எனக்கு அர்ப்பணஞ்செய்து அந்நிய தேவதைகளைப் பூஜிக்காது என்னொருவனையே சரணமடைவாயாக, உன்னை எல்லா பாபங்களிலுமிருந்து விமுக்தனாக்குகிறேன், நீ துக்கிக்கவேண்டாம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.*

Forsake every other religion, and fly to me alone, grieve not then, for I will deliver thee from all thy transgressions.

*வினா—பக்தியைப்பற்றி பிரஹ்ம சூத்திரத்தில் என்னமாகச் சொல்லப்பட்டிருக்கிறது?*

விடை—

பிரஹ்ம ஸூத்திரம் 2-வது அத்தியாயம்
1-வது பாதம் 7-வதில்.

“பக்திம்வாநாத்ம வித்வாத் ததாஹி தர்சயதி”

(இ-ள்.) ஆத்ம ஞானமுடையவனுக்கே மோக்ஷம் கிடைக்கும் என்றும்,

ஷை ஸூத்திரம் 3-வது அத். 2-பாதம் 49-வது ஸூத்திரம்.

“பலமத உபத்தேஹே”

(இ-ள்.) பரமபுருஷனிடமிருந்து பக்தியினால் புருஷார்த்தம் கிடைக்கிறதென்றும்,

ஷை ஸூத்திரம் 3-வது அத். 3-பாதம் 1-ல்.

“ஸர்வவேதாந்த ப்ரத்யயம் சோதநாதீய விசேஷாத்”

(இ-ள்.) பரமாத்மாவை உபாஸனை செய்யவேண்டுமென்பதே எல்லா வேதங்களின் கருத்தென்றும்,

ஷை ஸூத்திரம் 3-அத். 3-பாதம் 64-வது ஸூத்திரத்தில்.

“தர்சநாச்ச”

(இ-ள்.) ஸத்யஸ்வரூபனும் ஞானஸ்வரூபனும், பரமாநந்த ஸ்வரூபனுமாகிய பரமாத்மாவையே நிரந்தரமாக உபாஸனை செய்யவேண்டுமென்றும், “ஸர்வாமேதாஸாய ஞாதிசுருதே ரச்வத் சமதமாத்யுபேதஸ்யாத்” என்ற ச்ருதி வாக்யங்களினால் பிரபலமாகச்சொல்லப்பெற்றிருக்கிறது.

வினா — பக்தி விஷயமாக ஸ்ரீ சாண்டில்ய மஹாரிஷியவர்களும் ஸ்ரீ நாரதமஹா முநியவர்களும் சொல்லி இருக்கிற பக்தி சூத்திரங்களை விவரமாகச் சொல்லுங்கள் கேட்போம்?

விடை—

## ஸ்ரீ சாண்டில்ய மஹரிஷியவர்களின் பக்தி சூத்திரங்கள்.

1. அதாதோ பக்திஜிக்ஞாஸா.
2. ஸா பராநுரக்தி ரீஸ்வரே.
3. தத் ஸம்ஸ்தஸ்யா அம்ருதத்வோபதேஸாத்.
4. ஞாநமிதி சேன்னதி விஷதோபி ஞானஸ்ய தத்ஸம்ஸ்திதே.
5. தயோ ர பக்ஷபாக்ஷ.
6. த்வேஷ பிரதிபக்ஷ பாவாத் ரஸசப் தாச்ராக.
7. நக்ரியா க்ருதியா நபேக்ஷணாத் ஞானவத்.
8. அதஏவ பலாநந்த்யம்.
9. தத்வத: ப்ரபத்தி ஸப்த்தாச்ச நகிஞன் மித்ர பிரபத்திவத்.
10. சாமுகியேதராபேக்ஷித்வாத்.
11. பிரகரநாச்ச.
12. தர்சநப்பல மிதிசேந்ந வியவதாநாத்.
13. திருஷ்டத்வாச்ச.
14. அதயேவத்த பாவாத் பல்லவீநாம்.
15. பக்த்யா ஜாநாதீதி சேந்நபிஞப்த்யா சாஹாயயாத்.
16. பிராகிருதஞ்ச.
17. ஏதேன விகல்போபி பிரத்யுத:

18. தேவபக்தி ரிதஸ்ரமின் சாஹசர்யாத்.
19. யோகஸ்தூபயார்த்த மபேக்ஷணாத் பிரயாகவத்.
20. கவுணியாது சமாதி சித்தி :
21. ஹேயா ராகத்வாதி திச்சேன்னோத்த மாஸ்பதத்வாத் சங்கவத்.
22. ததேவ கர்மிஞானி யோகிப்ய ஆதிக்ய சப்தாத்.
23. பிரஸங்க நிரூபநாப்ய மாதிக்யசித்தே :
24. நைவஸ்ரத்தாத் சாதாரண்யாத்.
25. தஸ்யாம் தத்வே சானவஸ்தனாத்.
26. பிரஹ்மகாண்டந்து பக்தவ்தஸ்யாநுஞாய சாமாந் யாத்.
27. புத்திஹேது ப்ரவ்ருத்தி ராவிசுத்தே ரவகாதவத்.
28. ததங்கநாஞ்ச.
29. தாமைஸ்வர்யபராம் காஸ்யப : பரத்வாத்.
30. ஆத்மைகபராம் பாதராயண :
31. உபயபராம் ஷாண்டில்ய : சப்தோப பத்திப்யாம்.
32. வைஷம்யாத் சித்தமிதச்சே நாபிஞா நவதவைஸிஷ் டியாத்.
33. நசகிளிஷ்ட : பர : ஸ்யாதநந்தரம் விசேஷாத்.
34. ஐஸ்வர்யம் ததேதிசேந்நஸ்வாபாவியாத்.
35. அப்ரதிஷித்தம் பரைஸ்வர்யம் தத்பாவாச்ச நைவ மிதரேஷாம்.
36. ஸர்வாந்ருதே கிமிதிச்சேந்நைவம் புத்யாநந்தியாத்.
37. பிரகிருதி யந்தராளதவைகாரியம் சித்ஸத்வேநாநு வர்த்தமாநாத்.
38. தத்ப்ரதிஷ்டா கிருஹபீட வத்.
39. மித்தோபேக்ஷணாத் பயம்.

40. சேதியா சித்தோரண திருதியம்.
41. யுக்தவ்ச ஸம்பராயாத்.
42. ஸக்தித்வாந் நாந்ருதம் வேத்யம்.
43. தத்பரியுத்திஸ்சுகம் யாலோக வல்லிங்கேபிய :
44. ஸம்மாந பஹுமாந ப்ரீதி விரஹேதர விசிகித்சா மஹிமகியாதி ததர்த்த பிராணஸ்தான ததீயதர சர்வதத்பாவாப்ராதிகூல்யதிசிச ஸ்மரணே ப்யோ, பாஹுல்யாத்.
45. துவேஷாதய ஸ்துனைவம்.
46. தத்வாகிய சேஷாத் பிராதுர்பாவேஷ் விபிஸாத்
47. ஜந்மகர்ம விதிஸ்சா ஜந்ம சப்தாத்.
48. தச்சதிவ்யம் சுவஸ்தி மாதிரோத்பவாத்.
49. முக்யம் தாஸ்ய ஹி காருண்யம்.
50. பிராணிதாந்த விபூதிஷு.
51. தயுதராஜ சேவயோ : பிரதிஷேதாச்ச.
52. வாசுதேவே பீதிச்சே நாகர மாதிரத்வாத்.
53. பிரத்யபி ஞாநாச்ச.
54. விருஷ்ணிஷு சிரேஷ்ட்யேநதத்.
55. ஏவம் பிரசித்தேஷுச.
56. பக்த்யா பஜநோபசம்ஹாராத் கவுண்யபராயை தத் ஹேதுத்வாத்.
57. ராகார்த்த பிரகீர்த்தி சாஹசர்யாச் சேதரேஷாம்.
58. அந்தராளேது சேஷாஹ சுயுருபரசியாதவ்ஸ் சக் காண்டத்வாத்.
59. தாப்ய : பாவித்திரிய முபக்ரமாத்.
60. தாயு பிரதாநயோகாத் பலாதிதியமேகே.
61. நாம் நேதி ஜைமினி சம்பவாத்.

62. அந்தரங்க பிரயோகணும் யதாகால ஸம்பவ கிரஹாதிவத்.

63. ஈஸ்வர துஷ்டே ரேகோபி பலி.

64. அபங்தோப் பணிஸ்யமுகம்.

65. தியாக நியமஸ்து திருஷ்ட சவுகர்யாத்.

66. தத்யஜி: பூஜாயா மித்ரேஷாம் நைவம்.

67. பாதோதகந்து பாத்யமவ்யாப்தே:

68. ஸ்வயமர்ப்பிதம் கிராஹ்ய மவிசேஷாத்.

69. நிமித்தகுணு வியபக்ஷணுபராதேஷு வியவஸ்தா.

70. பத்ராதேர் தாநமந்யதா ஹிவைசிஷ்ட்யம்.

71. சுக்ருத ஜத்வாத் பரஹேது பரவாச்ச கிரியாசு சிரேயஸ்ய:

72. கவுணம் திரைவதிய மித்ரேண ஸ்துதியர்த்தத்வாத் சாஹசர்யம்.

73. பஹிரந்தஸ்த முபயமவேஷ்டி ஸவவத்.

74. ஸ்ம்ருதி கிர்த்யோ: கதாதேஸ் சார்த்தவ் ப்ராயஸ் சித்தாபாவாத்.

75. பூயஸா மந்றுஷ்டி திரிதி சேதாபிராயாண முபசங்ஹாரந்மஹதஸ்வபி.

76. லக்வபி பக்தாதிகரே மஹத்க்ஷேபகமபர ஸர்வஹாநாத்.

77. தத் ஸ்தாநத்வா தநந்யதர்ம: கலேவாலீவத்.

78. அநிந்த்ய யோநியதி கிரயதே பாரம்பர்யாத் ஸாமாந்யவத்.

79. அதோஹ்ய விபக்வ பாவாநாமபி தல்லோகே.

80. கிரமைகக தியுபபத்தேஸ்து.

81. உத்கிராந்தி ஸ்மிருதிவாக்ய சேஷாச்ச.
82. மஹாபதகிநாம் த்வார்த்தவ்.
83. ஸைகாந்த பாவகிதார்த்த பிரத்யபிஞாநாத்.
84. பராமகிருதவைவ ஸர்வேஷா மத்தாஹியா:
85. பஜநீயேநாத் விதியமிதம் க்ருத்ஸ்நஸ்ய ததஸ்வ ரூபாத்.
86. தத்ச்சக்திர் மாயா ஜடசாமான்யாத்.
87. வ்யாபகத்வாத் வ்யாப்யாநாம்.
88. நப்ராணி புத்திப்யய அசம்பவாத்.
89. நிர்மயோச்சாவசம் ச்ருதிச்ச நிர்மிமீதே பிதுர்வத்.
90. மிஸ்ரோபதேசாந் நேதிச்சேந்ந ஸ்வல்பத்வாத்.
91. பலமஸ்மாத் பாதராயணோ த்ருஷ்டத்வாத்.
92. வியுத்கிரமா தப்யயததாத்ருஷ்டம்.
93. ததைக்யம் நாநதுவைக்தவ முபாதியோக ஹாநா தாதிதியவத்.
94. ம்ருதகிதி ச்சேந்ந பரேந்ந சம்பந்தத்வாத ப்ரகா ஸாநாம்.
95. நவிகாரணஸ்து காரணவிகாராத்.
96. அநந்ய பக்த்ய தத்புத்திர் புத்திலயா தத்யந்தம்.
97. ஆயுஸ்சிர மிதரேஷாம்து ஹானிரனுஸ்ப தத்வாத்.
98. ஸம்ச்ருதிரேஷா பக்தி: ஸ்யாந் நக்ஞாநாத் காரண ஸித்தே.
99. திரிவியேஷாம் நேத்ராணி ஸப்தலிங்காச்ச பேதாத் ருத்ரவாத்.
100. ஆவிஸ்திரோபாவா விகாரா: ஸ்யு: க்ரியாபலச் சம்யோகாத்.

## ஸ்ரீ ஷாண்டில்ய மஹரிஷியின் பக்தி சூத்திரங்களின் கருத்து.

இவ்வுலகில் மனுஷனென்று உடலெடுத்த மாந்தருக்கு இகபரசுகமடைய பக்தி சுலபசாதனமாக இருக்கிறது அதைப்பற்றி விசாரிக்க அநேகருக்குப் பிரியமிருக்கும் ஆகவே.

(1) இப்போது பக்தியைப்பற்றி விசாரிக்க விருப்பமிருப்பதால் அதைப்பற்றி விசாரிப்பாம்.

(2) அதன் (பக்தியின்) உன்னதமானது ஈசுவரனிடம் பூரண அன்பை வைப்பதேயாம்.

(3) அதனால் (பக்தியினால்) பரமாத்மாவின் அடைக்கலம் புகுந்தால் ஜீவாத்மாவுக்கு அழியாத பேரின்பம் கிடைக்கும்.

(4) அது ஞானத்தினாலாகிறதென்பது அல்ல. ஏனெனில் பரமாத்மாவை விரோதிப்பவனுடைய ஞானம் அப்பரமாத்மாவை யடையச்செய்யாது.

(5) ஆகவே மோக்ஷ சாதனமாகிய பக்திக்கு ஞானம் சிறந்த தன்று.

(6) அது விரோதத்திற்கும் உலகாசாபாசங்களுக்கும் வேறான அன்பே யாகும்.

(7) அது ஞானத்தைப்போல ஒரு தொழிலல்ல. அதற்கு ஒரு முயற்சியையும் ஆதாரமாகக் கொண்டதல்ல.

(8) ஆகவே அதன் பலன் முடிவற்றது.

(9) ஞானவான்கள் பரபத்திபூஜை செய்பவர்கள் என்று சொல்லுகிறார்கள். ஆனால் பக்தியானது ஞானமல்ல.

(10) மோக்ஷத்திற்கு ஹேதுவான சகல சாதனங்களுக்கும் இந்த பக்தியே முக்யமானது.

(11) பக்தியானது தனக்குள்ளாகவே அறிந்துகொள்ளத்தக்க சிறந்த சாதனம்.

(12) அதைப்பார்த்துச் சொல்வதென்று சொல்வீர்களானால், அது சரியானகருத்தல்ல; ஏனெனில் அதற்கு தத் என்னும் உரிச்சொல்லியிருப்பதால் அது சுவாநுபவதால் அறியத்தக்கதாம்.

(13) பிரத்யக்ஷ அநுபவத்தினாலும் அறியலாம்.

(14) கோபிகைகளுக்கு ஞானமில்லாதிருந்தும் பக்தியினால் பேரின்பத்தைப் பெற்றார்களன்றோ!

(15) ஞானத்தினால் பக்தியை அறியலாமென்று சொன்னால் அது சரியல்ல. ஏனெனில், பக்தியின் சகாயத்தினால் விசேஷ ஞானத்தை யடையலாம்.

(16) இந்த உண்மையை முன்னமே அறிவிக்கப்பட்டிருக்கிறது.

(17) ஆகவே இதற்கு எவ்வித மாற்றமுமில்லை.

(18) யாதோ ஒரு தேவனிடத்தில் பக்தி என்றால் பரமாத்மாவினிடத்திலிருக்கவேண்டிய பக்தியைவிட வேறானது. ஏனெனில் சில்லரை தேவர்களிடம் வைக்கும் பக்தி சரியான பக்தியல்லவே.

(19) ஆனால் உலகபாசங்களைவிட்டொழித்து மனோநிடத்தைப் பெறவேண்டும்.

(20) மூடபக்தியினால் இரகஸ்ய தியான முண்டாகிறது.

(21) முக்தியை அடையவேண்டும் என்னும் ஆசைபக்தியினாலுண்டாகிறபடியாலும், அந்த ஆசையானது

யோக சூத்திரத்தின்படி பந்தத்திற்கு ஹேதுவாகிறபடியாலும் பக்தியை விடவேண்டுமென்று சொன்னீரானால் அது சரியல்ல. ஏனெனில் அது கேவலம் பரமாத்மாவோடு சேர்க்கும் சிறந்த சாதனமாயிருக்கிறதேயல்லாமல், அந்த ஆசை உலகப்பற்றுள்ளதல்லவே.

(22) இந்த பக்தியானது உண்மையாகவே யாகயக்ஞங்களைச் செய்பவர்களுக்கும், ஞானவான்களுக்கும் தியான நிஷ்டையில் இருப்பவர்களுக்கும் சிறந்த சாதனமாக இருக்கிறது.

(23) பக்தியின் உன்னதியைப்பற்றி கேள்விகளினாலும் விடைகளினாலும் உறுதிப்படுத்தப் பெற்றிருக்கிறது.

(24) ஆனால் அது ஒரு உலக நம்பிக்கையைப் போன்றதல்ல, அதன் பொருள் விரிந்ததாக இருக்கிறது.

(25) நம்பிக்கையும் பக்தியும் ஒன்றேயென்றால் அது குத்சிதக் கொள்கையாகும்.

(26) வேதத்தின் கர்மகாண்டத்தில் சடங்குகளைச் சொல்லி உத்தர காண்டத்தில் ஞானத்தைச் சொன்னாலும், பக்திகாண்டம் அல்லது (ஞான) பிரம்மகாண்டத்தில் பக்தியே சிறந்ததென்றும், அதிலிருந்தே ஞானம் உண்டாகிறதென்றும் சொல்லப் பெற்றிருக்கிறது.

(27) சுத்தமான அரிசியை விரும்புவோர் அதை நன்றாய்க் குத்திப்புடைத்து அதன் உமியை நீக்குவதைப்போல், ஞானவான்கள் மனதைத் தக்கபடி திருத்தி பரிசுத்தமாக்கவேண்டும்.

(28) அதற்காக சத்குருவை யடைந்து சத்கிரந்தங்களை யோதி சாந்த காமிகளாகவேண்டும்.

(29) அறிவை பரமேச்வரனிடம் நிறுத்தவேண்டுமென்று கஸ்யபர் சொன்னார்.

(30) வாதராயணர் (வியாசர்) அவ்வறிவை ஆத்மாவில் நிறுத்தவேண்டுமென்றார்.

(31) ஷாண்டில்யர் (வேதங்களின் கருத்தைக்கொண்டும் தருக்க காரணத்தாலும்) இரண்டும் அதாவது பரமாத்மாவிடத்திலும் ஜீவாத்மாவிடத்திலும் நிறுத்தவேண்டும் என்று சொல்லுகிறார்.

(32) அறிவை இப்படி இருவரிடம் நிறுத்துதல் பொருத்தமற்றதும், பிரயாசையானதுமென்று சொன்னால் அது சரியல்ல. ஏனெனில் ஒன்றுக்கு சிருஷ்டி ஸ்திதி சக்தியும், மற்றொன்றிற்கு அந்த சிருஷ்டி ஸ்திதி இல்லாமலும் இருக்கினும அவைவவைகளுக்குத் தக்கபடி நிறுத்தலாம்.

(33) பரமாத்மாவுக்கு விசனமென்பது கிடையாது. ஏனெனில் பரமாத்மா ஜீவாத்மாக்களின் குண கர்மங்களின்படி பலனைத்தருகிறார்.

(34) பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் சுகதுக்கம் ஒன்றேயென்றால் அது சரியல்ல. ஏனெனில் பரமேச்வரனுடைய குணலக்ஷணம் வேறுபட்டதாம்.

(35) பரமேச்வரனுடைய சக்தியைப்பற்றி ஆக்ஷேபிப்பாரில்லை. ஆனல் ஜீவாத்மா விஷயத்தில் அப்படியல்ல.

(36) ஜீவாத்மாவுக்கு பரமாத்மாவின் சக்திகள் யாவும் உண்டாகிறதென்று எண்ணுவது சரியல்ல. ஏனெ

னில் பரமாத்மா பூரணமும் சுதந்திரமானதும் ஜீவாத்மா பரதந்திரமும் அபூர்ணமுமானது:

(37) பரமாத்மா விகாரமற்றவன்.

(38) ஒருவன் ஒரு வீட்டிலுள்ள முக்காலியின் மேலிருப்பதனால் அந்த வீட்டிலேயே இருக்கிறான் என்று சொல்லுவதைப்போலவே ஜகத் மாற்றத்தினாலும் பரமாத்மா மாற்றமடைவதில்லை.

(39) பிரபஞ்சத்துக்குக் காரணமான மூலப்ரகிருதியும் பிரஹ்மமும் ஒன்றைவிட்டு ஒன்று விலகாமலிருக்கிறது.

(40) அறிபவனும் அறியத்தக்கபொருள்களுமன்றி மூன்றாவது பொருளில்லை.

(41) இவைகளிரண்டும் அதாவது ஜீவனும் பிரகிருதியும் ஆதியற்றவைகள்.

(42) அறியக்கூடிய தெதுவோ அது பொய்யல்ல, அது சர்வ சக்தியுள்ளது.

(43) சாதாரண உலக வாழ்க்கையில் பார்ப்பதைப்போல பக்தியின் பரிசுத்தத் தன்மையை அதன் பல குறிகளால் கண்டு கொள்ளலாம்.

(44) கௌரவம் கனியம் சந்தோஷம் விருப்பம் முதலான குணங்களை ஸ்மிருதிகளினால் அறிகிறோமல்லவா? அதுபோலவே பரமாத்மாவினிடத்தில் சந்தேகமற்று அவனைத் துதித்துக்கொண்டாடி அவனுக்காக வதிந்தும், தனது உடல்பொருள் ஆவியை அவனுக்கு தத்தம் செய்தும், அப்பரமாத்மா எங்கும் நிறைந்திருக்கிறான் என்று எண்ணி அவன் சித்தத்தின்படி நடந்து அவனடைக்கலமாதலாம்.

(45) இத்யாதி சுகுணங்களால் பரமாத்மாவை யடைய லாமேயன்றி அவனுக்கு விரோதியாகி துர்க்குணங் களிலைல்லவே.

(46) அந்த பரமாத்வாவின் அவதாரத்தையும் பக்தியால் கொண்டாடலாம்.

(47) பரமாத்மாவின் அவதாரங்களின் ஆதியந்தத்தை (ஜனன மரணத்தை) யறிந்தவர்களுக்குப் பிறப்பு இறப்பில்லை என்று வேதங்கள் முறையிடுகின்றன.

(48) இந்த அவதாரங்கள் பரமாத்மாவின் சக்தியினு லுண்டாகிறவைகளல்லவா?

(49) பரமாத்மாவின் முக்கிய உத்தேசம், தனது பக்தர் களிடத்தில் பக்ஷபாதத்தைக் காட்டுவதேயாம்.

(50) உண்மையான பக்தியைப் பரமாத்மாவினிடத்தி லேயே வைக்கத்தக்கதாம்.

(51) பிரபஞ்ச இராஜ சேவையும், சூதாடுதலும், சிரேஷ் டமானவைகளல்லவென்று வேதங்களால் தடுக்கப் பட்டிருக்கின்றன.

(52) வாசுதேவனும் இராஜனுனபடியால் அவனை பக்தி செய்யக்கூடாதெனில், அது சரியல்ல; ஏனெனில் வாசுதேவன் பிரஹ்மத்தின் அவதாரம்.

(53) அவனை அப்படி (பிரஹ்ம சக்தியாக)க் கொள்ள வேண்டும்.

(54) அவன் விருஷ்ணிகளைப் பார்க்கிலும் சிரேஷ்டன்.

(55) இம்மாதிரியாகவே மற்ற அவதாரங்களையும் எண் ணிக்கொண்டாடவேண்டும்.

(56) பஜனையிலிருந்து பக்தியுண்டாகிறபடியால், கீழ்ப்படியாகிய பஜனை மேற்படிக்காதாரமாகிறது.

(57) பரமாத்மாவை ஸ்துதிக்கும் பஜனையானது தாழ்ந்தபடியாக இருக்கினும், அதனால் அன்பு அதிகரிக்கிறது.

(58) இதைப்பற்றியே வேதங்களில் (பிரம்மகாண்டத்தில்) பக்தியின் கீழ்ப்படியைப்பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

(59) இந்த கீழ்ப்படி பக்தியினால் மனது பரிசுத்தமடைகிறது.

(60) இந்த பஜனை பக்தியின் சேர்க்கையினால் அதிக பலன் உண்டாகிறதாக எண்ணுகிறார்கள்.

(61) இந்த கீழ்த்தர மேற்றர பக்திகள் கேவலம் பெயரால் மாத்திரம் வித்யாசமில்லை என்று ஜயமுநி எண்ணுகிறார்.

(62) இந்த கீழ்த்தரஜாதி பக்தியை காலதேசத்துக்குத்தக்கபடி செய்யலாம்.

(63) பரமாத்மாவை பூஜைசெய்வதில் ஒன்று சிரேஷ்டமாகும்.

(64) கர்மபலனாலாகும் பந்தத்தை விடுவதே இதற்குச் சுலபசாதனம்.

(65) காணப்படும் பொருளைப்பற்றி தியானிப்பதைத் தடுத்துக்கொண்டு வரவேண்டும்.

(66) யாகம் என்னும் பதத்தின் தாதுவாகிய 'யஜ' என்பது பிரஹ்ம பூஜையைக்குறிக்கிறது.

(67) பரமாத்மாவின் பாதஜலம் பாபத்தைப்போக்கும்.

(68) பரமாத்மாவுக்கு பூஜிக்கப்பட்டவைகளைப் பக்தர்கள் அநுபவிக்கலாம்.

(69) பக்தர்களுடைய காலத்துக்கேற்ற குற்றங்களைக் காலத்துக்குத் தக்கபடி நிர்மாணிக்கவேண்டும்.

(70) பரமாத்மாவுக்குக் கையில் சொல்லியபடி பத்ரம் முதலானவைகளைக்கொண்டு பூஜிப்பதும் பக்தியாகக்கொள்ளலாம்.

(71) இப்படி பற்பலவிதமான பக்தி, பூர்வ சத் கர்மங்களினால் உண்டாகி கடைசியில் பூரண பக்திக்குக் கொண்டுபோம்.

(72) துக்கத்தைப்போக்கவும், ஞானத்தை யடையவும், இஷ்டலாபத்தை யடையவும் செய்யும் பக்தியானது கீழ்த்தரமானவை; ஆனவைகளை மற்ற மேற்றர பக்தியோடு சேர்க்கச் சிறந்த சாதனங்களாகும்.

(73) கீழ்த்தர பக்தியும், மேற்றர பக்தியும் யாகங்களில் அவஸ்டி பிரஹஸ்பதி ஆகுதி செய்வதுபோலாம்.

(74) பரமாத்மாவை நினைத்து பாடி, படித்து, அவன் சரிதையைக்கேட்டு ஆநந்தமுற்றால் பக்தனுடைய வியாகூலம் போம்.

(75) இந்த கீழ்த்தர பக்தியைவிட கடினமான மேற்றர பக்தியை உடனே அநுஷ்டிக்கக்கூடாதா எனில், அதைப் படிப்படியாக அநுஷ்டித்தல் நலம்.

(76) உண்மையான பக்தனுடைய சிறிய நற்கர்மங்களும் அவனுடைய பாவங்களைப் போக்குகின்றன.

(77) பக்தர்களுக்கு எவ்வித வெளிவேஷமும் வேண்டாம்.

(78) பக்தியைக் கேவலமான கீழ் ஜாதியாரும் கற்கலாம்.

(79) பூரண ஞானமற்றவர்களும் இதை யடையலாம்.

(80) பக்தியின் கீழ்ப்படியிலிருந்து படிப்படியாக மேற்படிக்குப்போகலாம்.

(81) இதைப்பற்றியே ஸ்மிருதிகளில் ஜீவாத்மாவின் முக்திப்போக்கைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

(82) பெரும்பாவிகளின் வியாகூலம் பக்தியினுற்போகும்.

(83) பூரண பக்தியே ஜீவாத்மாவைப் பரமாத்மாவினிடம் சேர்ப்பதாகக் கீதையில் சொல்லப்பட்டது.

(84) உண்மையான பக்தியினுலே மோக்ஷம் கிடைக்குமென்று பகவான் சொல்லியிருக்கிறுர்.

(85) இரண்டற்ற பரமாத்மாவை வணங்குவதே முதன்மையான பக்தியாகும்.

(86) அப்பரமாத்மாவின் மாயாசக்தி உலகமெங்கும் பிரசித்தமாக இருக்கிறது.

(87) பிரபஞ்ச சிருஷ்டியே அவரது அபார சக்தியைக் காட்டுகிறது.

(88) சிருஷ்டியானது கேவலம் யுக்தியுக்திகளால் அல்ல. சர்வசக்தியுள்ள பரமாத்மாவினுலாகியது.

(89) அப்பரமாத்மா கீழ் மேலானவர்களைச் சிருஷ்டித்து பிதாவைப்போல வேதங்களையும் சிருஷ்டிக்கிறுர்.

(90) வேதங்களில்பலவிதமாகப் போதிக்கப்படுகிறதென்றால் அது சரியல்ல, பூரணமாகப் படியாததனுலேயே.

(91) நமது சாதாரண வாழ்க்கையில் காண்பதைப்போலவே, பரமாத்மாவினால் பலன்கிடைக்கிறதென பாதராயணர் சொல்லுகிறார்.

(92) பிரளயம் மாற்றத்தாலாகிறது.

(93) சூரியப்பிரகாசத்தினால் வெளிச்சங்கள்மாறுவதைப் போல பரமாத்மாவினுடைய சக்தியினால் பிரபஞ்சம் மாறுகிறது.

(94) ஜீவாத்மாக்கள் வித்தியாசமானவை என்றால் அது சரியல்ல, ஏனெனில் அவைகள் பரமாத்மாவுக்கு வேறானவர்களாம்.

(95) ஜீவாத்மாக்கள் மாற்றமற்றவைகளாகினும், மற்றவைகளை மாற்றக்கூடியவைகளாம்.

(96) பூரண பக்தியினால், தான் என்கிற அகங்காரத்தை நசிக்கச் செய்யலாம்.

(97) ஜீவாத்மா தேகத்திலிருக்கிற வரையில் பக்தியாக இருந்து, பிறகு பரமாத்மாவில் பூரண சுகத்தையடைகின்றது.

(98) ஜீவாத்மாக்களுக்கு பூரண பக்தியில்லாமையால் ஜனனமரணமுண்டாகிறது, அக்ஞானத்தினாலல்ல.

(99) அவர்களுக்கு வேதம், ஞானம், இந்திரியங்கள் என்னும் மூன்று நேத்திரங்களுண்டு.

(100) உற்பத்தி பிரளயங்கள் கேவலம் மாற்றமே; அவைகள் கர்மத்தாலுண்டாகின்றன.

இக்கருத்துகள் ஸ்ரீ ஷாண்டில்ய ரிஷியின் பக்தி சூத்திரங்களுக்கு ஸ்ரீ பண்டித ஸ்வப்பனேஸ்வர ஸ்வாமிகள் செய்திருக்கும் வியாக்யானத்தைத் தழுவி தமிழில் எழுதப்பெற்றிருக்கிறது. விவரமாக அறிய விரும்பில் ஷை பாஷ்யத்தைப் பார்க்கவும்.

---

## ஸ்ரீ நாரத முநிவருடைய பக்தி சூத்திரங்கள்.

(1) அதாதோ பக்திம் வியக்யஸ்யாம:

(2) ஸா த்வஸ்மிந் பரம பிரேம ரூபா.

(3) அம்ருத ஸ்வரூபாச.

(4) யல்லப்த்வா புமாந் ஸித்தோபவத் யம்ருதோ பவதி த்ருப்தோ பவதி.

(5) யத்பிராப்ய நகிஞ்சித் வாஞ்சதி நசோசதி நத்வேஷ்டி நரமதே நோத்ஸாஹீபவதி.

(6) யத்ஞாத்வா மத்தோ பவதிஸ்தப்தோ பவதியாத்மராமோபவதி.

(7) ஸாந காமயமாநாநிரோய ரூபத்வாத்.

(8) நிரோதஸ்து லோகவேத வியாபார நியாஸ:

(9) தஸ்மிந் அநந்யதா தத்விரோதிஷு உதாஸீநதாச.

(10) அந்யாஸ்ரயாணும் த்யாகோ அநந்யத.

(11) லோகவேததேஷு ததநுகூலாசரணம் தத்விரோதிஷு உதாசினதா.

(12) பவது நிச்சயதார்ட்யா தூர்த்வம் சாஸ்த்ர ரக்ஷணம்.

(13) அந்யதா பாதித்யா சங்கயா.

(14) லோகோபி தாவதேவ கிந்துபோக நாதியாபார ஸ்த்வா சரீரதாரணாவதி.

(15) தத்லக்ஷணானி வாச்யந்தே நாநாமத பேதாத்.
(16) பூஜாதிஷு அநுராக இதி பாராஸர்ய :
(17) கதாதிஷ்விதி கர்க்க :
(18) ஆத்மரத்ய விரோதே நேதி ஷாண்டில்ய :
(19) நாரதஸ்து ததர்பிதாகிலா சாரத தத்விஸ்மரணே பரமவ்யாகுலதேதி.

(20) அஸ்த்யேவ மேவம்.
(21) யதா விரக கோபிகாணாம்.
(22) தத்ராபி ந மஹாத்ம்யஞான விஸ்மிருதியப வாத்.
(23) தத்விஹீநம் ஜாராணாமிவ.
(24) நாஸ்த்யேவ தஸ்மிந் தத்சுக சுகித்வம்.
(25) ஸாத்து கர்மஞான யோகேப்யோப்யதிகதரா.
(26) ப்பலரூபத்வாத்.
(27) ஈஸ்வரஸ்யாபி யபிமாநி த்வேஷித்வாத் தைந்ய பிரயத்வாச்ய.

(28) தஸ்ய ஞானமேவ சாதனமித்யேகே.
(29) அந்யோந்ய இரயத்வ மித்யந்யே.
(30) ஸ்வயம் ப்பலரூப தேதி ப்ரம்ஹகுமார :
(31) ராஜக்ருஹ போஜனாதிஷு ததைவ த்ருஷ்டத் வாத்.

(32) நதேந ராஜபரிதோஷ : க்ஷுதா ஸாந்திர்வா.
(33) தஸ்மாத் ஸைவ க்ராஹ்யா முமுக்ஷுபி :
(34) தஸ்யா : ஸாதநாநி கியந்த்யாசார்யா :
(35) தத்து விஷய த்யாகாத் சங்கத்யாகாச்ச.
(36) அவ்யாவ்ருதய பஜநாத்.
(37) லோகேபி பகவத்குண ஸ்ரவண கீர்த்தநாத்.

(38) முக்யதஸ்து மஹத் க்ருபயைவ பகவத் க்ருபா.

(39) மஹத்சங்கஸ்து துர்லபோ அகம்யோ அமோகஸ்ச.

(40) லப்யதேபி தத்க்ருபயைவ.

(41) தஸ்மிந் தஜ்ஜநே பேதாபாவாத்.

(42) ததேவ ஸாத்யதாம் ததேவ ஸாத்யதாம்.

(43) துஸ்ஸங்க: சர்வதைவ த்யாஜ்ய:

(44) காமக்ரோதமோஹ ஸ்ம்ருதி ப்ரமயபுத்திநாஸ சர்வ நாஸ காரணத்வாத்.

(45) தரங்காயிதா அபீமே ஸங்காத் ஸமுத்ராயந்தி.

(46) கஸ்தரதி கஸ்தரதி மாயாம் ய: ஸங்காம்ஸ்த்யஜதி யோமஹாநுபாவம் ஸேவதே நிர்மமோபவதி.

(47) யோ விவித்த ஸ்தாநம் ஸேவதே யோ லோகபந்த முன்மூலயதி நிஸ்த்ரைகுண்யோ பவத் யோ யோக க்ஷேமம் த்யஜதி.

(48) ய: கர்மபலம் த்யக்தி கர்மாணி ஸம்ந்யஸதி ததோ நிர்த்வந்த்வோ பவதி.

(49) வேதாநபி ஸம்ந்யஸதி கேவல மவிச்சின்னாநுராகம் லபதே.

(50) ஸதரதி ஸதரதி ஸலோகாந் தாரயதி.

(51) அநிர்வசநீயம் சரேமஸ்வரூபம்.

(52) மூகாஸ்வதநவத்.

(53) பிரகஸ்யதே க்வாபி பாத்ரே.

(54) குணரஹிதம் காமநாரஹிதம் பிரதிக்ஷண வர்த்தமாந மவிச்சிந்நம் ஸூக்ஷ்மதர மநுபவரூபம்.

(55) தத்ப்ராப்ய ததேவாவலோகயதி ததேவ ஸ்ரோணோதி ததேவ சிந்தயதி.

(56) கவுணி திரூதா குணபேதா தார்த்தாதி பேதாத்வா.

(57) உத்தரஸ்மாத் உத்தரஸ்மாத் பூர்வபூர்வா ஶ்ரேயாய பவதி.

(58) அந்யஸ்மாத் ஸௌலப்யம் பக்தவ்.

(59) ப்ரமாணாந்தரஸ்யா நபேக்ஷயத்வாத் ஸ்வயம் ப்ர மாணத்வாத்.

(60) ஸாந்திரூபாத் பரமாநந்த ரூபாச்ச.

(61) லோகஹாநவ் ச்சிந்தா நகார்ய நிவேதாத்மா லோக விவேதத்வாத்.

(62) ந ததஸித்தவ் லோக வ்யவஹார: ஹேய: கிந்து பலத்யாக; தத்ஸாதநஞ்ச கார்யமேவ.

(63) ஸ்திரிதந நாஸ்திக சாந்த்ரம் நஶ்ரவணீயம்.

(64) அபிமான தம்பாதிகம் தியாதியம்.

(65) ததர்பித கிலாசாரி; ஸங்காம க்ரோதாபிமாநாதி கம் தஸ்மிந்நேவ கரண்யம்.

(66) திரிரூப பங்கபூர்வகம் நித்யதாஸ்ய நித்யகாந்தா பஜநாத்மகம் ப்ரேமகார்யம் ப்ரேமைவ கார்யம்.

(67) பக்தா யேகாந்திநோ முக்யா:

(68) கண்டாவரோத ரோமாஞ்சாஸ்ருபி: பரஸ்பரம் லப மாநா: பாவயந்தி குலாநி ப்ருதிவிஞ்ச.

(69) தீர்த்தீ குர்வந்தி தீர்த்தாநி சுகர்மீ குர்வந்தி கர் மாநி ஸச்சாஸ்த்ரி குர்வந்தி ஸாஸ்த்ராணி.

(70) தந்மயா:

(71) மோதந்தே பிதரோ ந்ருத்யந்தி தேவதாம் ஸநாத ஶ்சேயம்பூர்பவதி.

முன் பலியிடுகின்றது. ஆத்மாவை ஈசுவரனிடத்தில் காணிக்கை யாக ஒப்புவியாமல் நான் உன்னுடைமையென்று சொல்ல சாமர்த்தியமுள்ளதாகிறதில்லை என்பது கருத்தாம்.

4. அது தன்னிடமிருப்பதையெல்லாம் விக்கிரயம் பண்ணுகிறது, பின்பு ஈசுவரனைப் பின்தொடருகிறது. தன்னிமித்தமானதையும் காப்பாற்றுவதில்லை. என்றால் ஈசுவரனுக்கே எல்லாவற்றையும் ஒப்புவிக்கின்றதென்பது கருத்தாம்.

5. ஓ சாதகர்களே! அது தேகத்தையும், மனதையும் சித்தத்தையும் மற்றெல்லாவற்றையும் தன்னையும் பரமேசுவரனிடத்தில் பலியாகச் செய்கின்றது. எனது இச்சையல்ல, உனது இச்சை நிறைவேறுவதாக என்று எப்போதும் சொல்லுகின்றது.

6. அது சந்தோஷத்தையாவது, துக்கத்தையாவது எண்ணாமல் தான்செய்யவேண்டிய கடமையொன்றையே சிந்திக்கும் விஷயமாகும். ஈசுவரனுடைய இச்சையொன்றையே லட்சியமாகவும் செய்கின்றது.

7. இந்தப் பிரேமையானது பக்தியினுடைய பரிபாகம். அந்த பக்தியானது எந்த ஏகபாவத்தை (ஒற்றுமையை) ஆரம்பிக்கின்றதோ அந்த ஏக பாவத்தை பிரேமை நிச்சயமாக பூரணஞ் செய்கின்றது.

ஈசுவர பரலோகங்களின் பக்தி அவைகளிடம் பக்தியை விருத்திசெய்விக்கின்றபடியால், பிரேமை அல்லது பக்தி விசுவாசத்தின் பரிபாகமெனப்பட்டது. பக்தியானது ஜீவனுடைய இச்சையை ஈசுவரனுடைய இச்சைக்கு அதீனப்படுத்துகின்றது. பக்தி பெருகப்பெருக ஜீவனுடைய இச்சை நசித்து ஈசுவரனுடைய இச்சையில் ஏகபாவத்தை யடைகின்றது; ஆகையால் பக்தி ஆரம்பித்த ஏகபாவத்தை பிரேமை பூர்ணஞ்செய்வதாக சொல்லப்பட்டது.

8. அப்போது தனது கர்த்தவ்யமும், தனது விருப்பமும் ஏகபாவத்தை அடைகின்றன.

தனது கர்த்தவ்யம் அதாவது தான் செய்யவேண்டிய கடமை எதுவோ அதையே அது விரும்புகின்றது. தனது கட-

மைக்கும் தனது விருப்பத்துக்கும் விரோதமில்லையென்பது கருத்து.

9. அப்போது ஆத்மா பிதாவும் நானும் ஒன்று என்று சொல்லுகின்றது. பிதாவும் நானும் ஒன்று என்றதனால் இச்சையின் ஐக்கியத்தாலே ஒன்று என்பதே தவிர பதார்த்த ஐக்கியத்தால் அல்லவென்பது தெரிந்துகொள்ளத்தக்கது.

ஜீவாத்மாவின் கர்த்ருத்வமும், இச்சையும் பரமாத்மாவின் கர்த்ருத்வத்திலும் இச்சையிலும் ஐக்கியப்பட்டு ஜீவாத்மா பரமாத்வின் தியானநந்தத்திலே மூழ்கி தன்னை மறந்து தான் என்கிற பாவம் தனக்குத் தோன்றாமலிருக்கிறதென்பது கருத்தாம்.

---

## 9-வது பிரகரணம்.

---

### விநயம்.

1. பக்தியானது தன்பார்வையில தன்னிடம் ஒரு விசேஷகுணமிருப்பதாகக் காண்பதில்லை.

2. பரமேசுவரனிடம் தன் ஆத்மாவை ஒப்புவித்திருக்கிற இந்த பக்தியானது தன்னிச்சையினுடைய பிரவிருத்தியைவிட பணிவாகிய நிவிர்த்தியில் எப்போதும் வசிக்கின்றது.

தன்னிச்சைப்படி நடப்பதே பிரவிருத்தியையும், பிறருடைய ஆக்ஞைக்கு பணிந்துநடப்பதே நிவிர்த்தியையும் உண்டாக்குகின்றன; ஆகையால், தன்னிச்சையின்படி காரியங்களைச் செய்ய விரும்புவதைவிட, ஈசுவரனுடைய ஆக்ஞைக்கு அமைந்து நடப்பது மேலென்று தெரிந்து தனது கர்த்ருத்வத்தை நாளுக்குநாள் குறைக்கின்றதென்பது கருத்தாம்.

3. அது விவேகத்துக்கு அதீனமாய், அந்த விவேகத்தினுடைய பலத்தினால் கிரியைகளைச் செய்கின்றது. ஆனதால், தன் இச்சையின் பலம் குறைகின்றது. அது தரும நியமங்களை ஈசுவர பிரேரிதமான விவேகத்தால் அறிந்து கொள்ளுகின்றது

வைகளைச் செய்யத்தனக்கு விருப்பமிருந்தாலும், இல்லாவிட்டா லும் அவைகளைச் செய்கின்றது.

அப்படி அது விவேகத்துக்கு அதீனமாய்த் தான் செய்யவே ண்டிய கடமைகளைச் செய்வதால் விவேகபலத்தால் கிரியைகள் நடக்கின்றனவேயன்றி இச்சையின் பலத்தால் அல்லவென்று சொல்லப்பட்டது. பராதீனனுக்குக் தன் இச்சையின் ஆதிக்ய மில்லையாதலால், இந்த பக்தியின் இச்சை நாளடைவில் பலவீன ப்படுகிறது.

4. அது நிச்சயமாய் அத்தியந்தம் சந்தோஷத்தையடைவது தனது அபிமானத்திலல்ல, ஆனால் தன்னை ஈசுவரனிடம் எப்போ தும் ஒப்புவிப்பதில்; தனது அதிகமான பலத்திலல்ல, ஆனால் ஈசுவர பிரார்த்தனையில்; தனது பெருமையிலல்ல, ஆனால் ஈசுவ ரனுடைய பெருமையிலாம்.

5. அது நற்காரியங்களைச் செய்வதில் ஈசுவரனுடைய கரு வியாக மாத்திரமிருக்கின்றது; ஆகையால் தன் மனதில் நான் செய்கிறேனென்று நினைக்கத் துணிகிறதில்லை.

நற்காரியங்களைச் செய்வதில் தான் பரமேசுவரனது கருவி யாக மாத்திரமிருப்பதால் தனக்கு கர்த்ருத்வ அபிமானமில்லை யென்பது கருத்தாம்.

6. தனது பாபங்களும் குறைவுகளுமாத்திரமே நிச்சயமா கத் தன்னுடையது. எதாவது பாவமும் குறைவுங் காணப்பட் டால், அவைகள் ஜீவனைச் சேர்ந்தன. அவைகள் ஈசுவர இச்சை க்கு விரோதமாய் நடப்பதால் உண்டாகின்றன.

7. அதன் நற்குணங்களோ பரமேசுவரனது மகிமையைப் பிரசித்தம் பண்ணுகின்றன; ஆனால் அது தன் குற்றங்களை எப் போதும் தன்னுடையதென்று அறிகின்றது.

8. ஆகையால், அது நற்காரியங்களின் பொருட்டு தனக் குண்டாகும் எல்லா கௌரவத்தையும், ஆதிப்பையும் எப்போ தும் பரமேசுவரனிடத்திலே ஒப்புவிக்கின்றது.

9. அது கிலேசத்தையும், நிந்தையையும், விசனத்தையும், மரணத்தையும் தனது பாகமாகக் கிரகிக்கின்றது. கிலேசம், நிந்தை முதலியவைகள் இந்த வுலகத்தில் சம்பவிப்பவைகளென்று அது தெரிந்துகொண்டு, அவைகள் வந்தவிடத்து வருத்தப்படுவதில்லையென்பது கருத்தாம்.

10. அது தான் செய்த நற்காரியங்களைக்குறித்து ஒருக்காலும் கர்வப்படுவதில்லை; ஆனால் நற்காரியங்களைச் செய்யாததைக் குறித்து வருத்தப்படுகின்றது.

11. அது தனது குறைவையும், தான் செய்யாததையும், பிசகாகச் செய்ததையும், தனது சோம்பலையும் வெகுகாலம் மூயற்சியோடும் யோசிக்கின்றது.

12. அது அபரிமிதமான நன்மைகளைச் செய்வதாலும் கணக்கில்லாத ஜாதியார்களையும், வமிசத்தார்களையும் செல்வத்துடன் சேர்ப்பித்தாலும், அந்தப் பிரகாசம் தன்னுடையதாகாமல் புண்ணிய சூரியனை பரமேசுவரனுடையதென்று அறிகின்றது.

13. அது தன் பிரபுவினிடம் அநிர்வசனீயமான ஆசிரயமுடையதாகையால் ஒப்பற்றதாயும், அதிக மனோகரமானதாயும் இருக்கும். விநயமானது அதற்கு பூர்ண அலங்காரமாயும், நிச்சயமாய்க் காண்பிக்கப்பட்ட திருஷ்டாந்தமாயுமிருக்கின்றது.

14. இந்த விநயத்தினாலே சரியான பக்தி அறியப்படுகின்றது. இந்த விநயத்தினாலே தான் அதன் அழகு விளங்குகின்றது.

## 10-வது பிரகரணம்.

### அபிக்ஞதை அல்லது ஞானம்.

1. பக்தியானது யதார்த்தமான ஞானம். அந்த ஞானம் பிரசுத்தமும், சிரேஷ்டமுமானது.

2. அது அற்பமானதாயும், இந்த லோக சம்பந்தமானதாயும் இருக்கிற லௌகிக புத்தியை வெறுக்கின்றது.

3. இந்த லௌகிக புத்தியானது லோகத்தை யனுசரித்து கர்த்தவ்யாகர்த்தவ்ய ஞான சூந்யாளான மூடர்களுக்குக் கணிதசாஸ்திரமாகின்றது. கணக்குச் செய்யாமல் யாரும் கணித சாஸ்திரத்தினுடைய பலனை அடையாததுபோல, இந்த லௌகிக புத்தியும், லாப நஷ்டங்களைக் கணக்குப்பாராமல் ஒன்றையும் செய்வதில்லையென்பது கருத்தாம்.

4. இந்த புத்தியானது லாப உற்பத்தியை நிறுக்கின்றது, லாப நஷ்டங்களை அளவிடுகின்றது. விருத்தி க்ஷயங்களை கணக்கிடுகின்றது, அதற்கு சத்தியத்திலே சிரத்தையில்லை.

5. காற்று சருகுகளை இங்கும் அங்கும் ஆட்டிவைப்பது போல, லஜ்ஜையும் பயமும், லௌகிக புத்தியை யனுசரிப்பவர்களை ஆட்டிவைக்கின்றன.

6. அவர்களுக்குத் தம்முடைய ஞான சாமர்த்தியமில்லை, அந்நியர்களுடைய அபிப்பிராயங்களைக் கைக்கொண்டு அவர்கள் கிரயவிக்கிரயஞ்செய்கிறார்கள். எதை எதை ஜனங்கள் அபேட்சிக்கிறார்களோ, அதையதையே விவகரிக்கிறார்கள். லோகாநீதமான சத்தியத்தை யநுசரிக்கிறதில்லை யென்பது கருத்தாம்.

7. அவர்கள் தங்கள் ஆத்மாக்களுக்கில்லை, ஆனால் பிறருடைய ஆத்மாக்கள்போல் எப்போதும் அநுசரிக்கிறார்கள்.

உடம்புக்கு பால் குடிக்காமல் ஊருக்குப் பால்குடிப்பவர்களைப் போல, பிறருடைய பிரியத்துக்கும், மெச்சுதலுக்கும் பேசுவதும் செய்வதுமே யொழிய, உண்மையையறிந்து உள்ளபடி தனது நன்மையின்பொருட்டு அதையநுசரிப்பதில்லையென்பது கருத்தாம்.

8. அவர்களிடம் கிரியைக்குக் காரணம் காணப்படுகிறதில்லை, அவர்கள் வாயுவசத்தினாலே இங்குமங்கும் ஓடுகிறார்கள். ஜலவேகத்தினுடைய அடியினாலே இங்குமங்கும் மிதக்கிறார்கள்.

கிரியைக்குக் காரணம் அவர்களிடம் காணப்படவில்லை யென்றதனால் அவர்கள் ஒரு நிச்சயமான நிலையில் நின்று காரியங்களைச் செய்யாமல், அந்த பரம்பரையை யநுசரித்து காரியகாரண

விசாரமின்றி போனதெல்லாம் போக்கென்று கிரியைகளைச் செய்து வருகிறார்களென்பது கருத்தாம்.

9. தெரியாதவன் அவர்களினும் அறிவாளி. அவர்களுடைய தரிசன சாஸ்திரத்தினஸ்திவாரத்தை யொருவனும் பிரயாசையின்றி நிச்சயமாய் மாற்றுவதற்குச் சமர்த்தனாகிறான்.

அறியாதவனும், பாலனும், ஸ்வபாவத்தை யநுசரித்து அவர்களை ஜயிக்கமாட்டுவானென்பது கருத்தாம்.

10. ஐயோ! அவர்கள் வஞ்சிக்கப்பட்டவர்களாய்த் தங்கள் அபிமானத்திலேயே தெரிந்தவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் லோக பிரீதிக்கும் சமயோசித வேஷத்துக்கும் எப்போதும் அடிமைகளாயிருக்கிறார்கள்.

11. ஆனால் யதார்த்த பக்தியானது ஒருக்காலும் ஜனங்களுடைய விருப்பத்தையாவது, சமயோசித வேஷத்தையாவது நினைப்பதுமில்லை, அதுபோன்றதைச் செய்வதுமில்லை.

12. அது பின்வாங்காததாயும், சஞ்சலமற்றதாயுமிருக்கின்றது. ஏனெனில் அது கிரியைக்குக் காரணங்களாகிய மிகவும் ஸ்திரமான மதஸம்ஸ்காரங்களில் நிலைபெற்றிருக்கின்றது. அது தான் செய்யும் கிரியைகளுக்குக் காரணங்களைப் பெற்றிருப்பதால், அதற்குச் சஞ்சலமாவது தோற்பாவது இல்லையென்பது கருத்தாம்.

13. அதன் உண்மையான ஞானம் சத்தியத்தை அஸ்திவாரமாக உடையது. ஒருக்கால் அக்கினியானது பனிபோல் குளிர்ந்தாலும், சூரியன் எப்போதும் அந்தகாரத்தைக் கக்கினாலும் அந்த ஞானமானது பிசகாது.

14. அதற்கு நூதன விஷயங்களைக் கிரகிக்கும் சாமர்த்தியமும் ஸ்வாதீனமும் ஆத்மநிர்பரமும் (தன்முயற்சி வலிமையும்) இருக்கின்றன; அன்றியும், அது உலகத்தாரினின்றும் வித்தையைக் கிரகிக்க சம்மதிக்கிறதில்லை.

15. அது விவேகத்தினுடைய ஆலோசனையை உறுதியாக அநுசரிக்கின்றது; ஏனெனில் அந்த ஆலோசனை நிச்சயமாக ஈசுவர அபிப்பிராயத்தின் பிரகாசமேயாம்

## 11-வது பிரகரணம்.

### உந்நதி.

1. பக்தியானது சொர்க்கத்தைக்குறித்து நிச்சயமாய் ஓய்வில்லாத உந்நதியாகின்றது.

அதன் உந்நதிக்கு ஒருக்காலும் ஓய்வில்லை என்பது கருத்தாம்.

2. அது காண்பிக்கப்பட்ட மார்க்கத்தை அலட்சியஞ் செய்கின்றது. ஆ! ஆ! பிறர் மார்பினுல் குழந்தைபோல் பூமியில் தவழுங்கால் அது மேல்நோக்கி உயர்ந்து செல்லுகின்றது.

3. அது எப்போதும் உலகத்தாரின் ஆக்ஞையை அலட்சியஞ் செய்கின்றது. இதைக்கடந்து செல்லாதே என்று சொல்லும் அவர்கள் ஆக்ஞையையும் பரிகசிக்கின்றது.

4. அதன் லட்சியப்பொருள் ஈசுவரனேயாம். இதைக்கடந்து செல்லாதேயென்று எல்லைப்படும் நியமத்தை அது அங்கீகரிப்பதில்லை.

5. உந்நதியே அதன் பிராணன், அந்த உந்நதியைத் தப்பதே அதன் மரணமாம். உந்நதியின்றி அது இருப்பதில்லையென்பது கருத்தாம்.

6. அதியுந்நதமான நற்குணங்களில் உலகத்தின் எல்லா மதங்களும் அடங்குமானுலும் அந்த நற்குணங்கள் இந்த பக்தியைத் திருப்தி செய்வதில்லை. இந்த பக்தியானது லோகாதீதமானதால், உலகத்திலுள்ள எல்லா மதங்களும் அதைத் திருப்தி செய்யமாட்டாவென்பது கருத்தாம்,

7. இந்தவுலகத்தில் அது எப்போதும் உயர்ந்த விஷயங்களிலெல்லாம் உயர்ந்ததையும், அத்தியந்தம் ஆழ்ந்த விஷயங்களிலெல்லாம் ஆழ்ந்ததையுமே தேடுகின்றது.

## 12-வது பிரகரணம்.

### வைசித்திரம்.

1. அந்த பக்தியானது இரண்டற்றது (ஒப்புயர்வற்று விசித்திரமானது.)

அது தன்னால் பாவிக்கப்பட்ட மார்க்கத்தில் தினமும் நடக்கின்றது. அதன் மார்க்கத்தை அந்நியர்கள் (அவ்வித பக்தியற்றவர்கள்) யாரும் நிச்சயப்படுத்த சக்தர்களல்ல.

அது லோகத்துக்கு அதீதமான மார்க்கத்தில் நடப்பதால், சாதாரண ஜனங்கள் அதை நிரூபிக்க சக்தர்களல்லவென்பது கருத்தாம்.

2. பூகோள சாஸ்திரத்தில் நீள அகலங்களை யளந்து நாணயிக்கும் ரேகைகள் (அட்சமத்ய ரேகைகள்) ஒருக்காலும் அதை நிர்ணயிப்பதற்குச் சக்தியுடையவைகளல்ல. அது அளவு கடந்ததென்பது கருத்தாம்.

3. அதன் காலத்தைக் கணக்கிட்டு நிர்ணயிக்கக் கணித சாஸ்திரமும் அதன் ஜீவனசரித்திரத்தை வர்ணிக்க இதிகாசமும் ஒருக்காலும் சக்தியுடையவைகளல்ல.

4. அது எப்படிப்பட்டதென்று (அதன் காரண காரியங்களை) நிர்ணயஞ்செய்ய முயலுகின்ற தரிசன சாஸ்திரமும் தன் விருப்பம் பிரயோஜனமற்றதாய்க் கொண்டு லஜ்ஜையினால் முகத்தை மறைத்துக் கொள்ளுகின்றது.

5. நிச்சயமாக அதன் கிரியை உலகத்தாரின் அறிவுக்கு அதீதமானதாகின்றது; அதன் ஜீவனமும் இரகசியமாயிருக்கிறது.

6. ஆகையால், அது உன்மத்தமென்றும், பாலியத்தன்மை, புத்தியில்லாததென்றும் உலகத்தார் குற்றப்படுத்தி ஏளனஞ் செய்கின்றனர்.

7. உண்மையில் சாதாரணமான ஜனங்களினுடைய பார்வையில் அதன் லோகாதீதமான உற்சாகமானது பைத்தியக்காரத்

தனமாயும், அதன் நடைகளெல்லாம் எல்லாவிதத்திலும் குழந்தைகள் செய்கைபோல் புத்தியில்லாததாயுமிருக்கின்றது.

8. உலகத்தார் அத்தியந்தம் பக்தியோடு தினமும் பூஜிக்கின்ற விக்கிரகத்தை அது பயமின்றி பரிஹசிக்கின்றது. உலக சொர்ணத்தையும் திருணத்தையும் சமமாகத்தானே பார்க்கின்றது; ஆகையால், அது உலகத்தார்களுக்குப் புத்தியில்லாததாகக் காணப்படுகின்றது.

9. அது உன்மத்தமானது; எனெனில் அது எப்போதும் உலகத்தாருடைய மார்க்கங்களையெல்லாம் விடுகின்றது. உன்மத்தமாயும், நியமத்தைக் கடந்ததாயும், ஐசுவரியங்களோடு கூடினதாயுமிருக்கிற உற்சாகத்தோடு பிரசித்தமான தனது அபிப்பிராயங்களையெல்லாம் முடிக்கின்றது; மேலும் உலகத்தாருக்கு எண்ணிறந்த குறைகளை உண்டுபண்ணுகின்றது.

அது உலகத்தாரால் காண்பிக்கப்பட்டிருக்கிற எல்லையைக் கடந்து, மனதில் பிரதிபலித்த விசேஷ அபிப்பிராயங்களையெல்லாம் முடித்து வெகு காலமாய் வழங்கிவரும் திரவிய சம்பாத்தியம் முதலிய உபாயங்களாகிய விவகாரங்களுக்கு ஒரு குறைவை உண்டுபண்ணுவதால் அது உலகத்தாருக்குக் குறைவையுண்டு பண்ணுகிறதென்று சொல்லப்பட்டது.

10. அதற்கு லோகாசாரத்தில் கௌரவமில்லை. அது தன் மனதில் தோன்றியதைத் தாமதமின்றி அந்த க்ஷணமே சொல்லுகின்றது. அன்றியும் சொன்னபடி செய்கின்றது.

11. அது நிந்தையிலே மானத்தையும், கஷ்டத்திலே அத்தியந்தம் ஆநந்தத்தையுமே பார்க்கின்றது. அன்றியும், பயங்கரமான சங்கடத்தால் சூழப்பட்டவிடத்து சுகத்தோடு நர்த்தனம் பண்ணுகின்றது.

12. எங்கே பிறர் அழுகிறார்களோ அங்கே அது சிரிக்கின்றது. எங்கே பிறர் சந்தோஷத்தினால் அறிவு இழந்து மகிழ்கிறார்களோ அங்கே அது துக்கக் குறிப்பான வேஷத்தோடும் செல்லுகின்றது. உலகத்தார் தரித்திரத்தினால் பீடிக்கப்பட்டு அழுகிறவிடத்தில் அது வருத்தமின்றி சஞ்சரிக்கின்றது. அவர்கள் விஷயபோகத்தில் உன்மத்தர்களாயிருப்பதைக்கண்டு அது துக்கிக்கின்றது.

**13.** அதனிடத்தில் அநேக அற்புத வியவகாரங்களிருக்கின்றன. அவைகளை அறியச்சக்தியில்லாதவர்கள் அவைகளை நிச்சயமாய்ப் பரிகாசஞ் செய்கிறார்கள்.

**14.** அந்த அற்புத விவகாரமாகிற வட்டத்திற்கு மத்திய புள்ளியுண்டு. அது உண்மையில் காரணமில்லாததல்ல; ஆனால், அது லோகத்தாருடைய பார்வையினின்றும், அநுபவத்தினின்றும் அத்தியந்தம் உந்நதமானதாயிருக்கின்றது.

**15.** அந்த பக்தியானது தனது பக்திலோகத்தில் உயர்ந்து வசிக்கின்றது. அது சமஸ்த லௌஹிக வாஞ்சையினின்றும், லாப நஷ்டங்களுக்குரிய பற்றுக்களினின்றும் உயர்ந்திருக்கின்றது.

**16.** வெவ்வேறு தேச காலங்களில் உண்டாகி ஏகஜாதிகளான ஆத்மாக்களில் அந்த அதிருசிய லோகத்தில் அதனுடன் வசிப்பவர்களாலேயே அது அறியப்படுகின்றது.

எந்த தேசத்திலிருந்தாலும், எந்த காலத்திலிருந்தாலும் அவ்வித பக்தியினாலுண்டாகும் அநுபவத்தைப்பெற்ற ஆத்மாக்களே அதை அறிவார்களென்பது கருத்தாம்.

## 13-வது பிரகரணம்.

### ஹிம்ஸை.

**1.** அந்த பக்தியின் உந்நதி அது உலகத்தினின்றும் இருக்கும் தூரத்தினால் அறியப்படுகின்றது.

**2.** அது இந்த உலகத்தில் எவ்வளவுக்கு முந்துகின்றதோ அவ்வளவுக்கு அதைச் சேர்ந்த ஜனங்கள் காலக்கிரமத்தில் குறைகின்றார்கள். எவ்வளவுக்கு அதை அபிமானிப்பவர்களின் கூட்டம் குறைகின்றதோ அவ்வளவுக்கு அதற்கு உலகத்தாரின் விரோதம் உண்டாகின்றது.

**3.** பக்தர்களுக்கு ஹிம்ஸை நிச்சயமாய் உண்டாகின்றது. அந்த ஹிம்ஸை முதலில் மிருதுவாயும், கடைசியில் பயங்கரமாயுமிருக்கின்றது.

4. அது உலகத்தாருக்கு மேற்பட்டு நடப்பதற்காக அந்த ஹிம்சை அவர்களுக்குக் கிடைக்கவேண்டிய நியமாயிருக்கின்றது. அந்த பக்தி உலகத்தாரைக் கடந்து நடப்பதால், அவர்கள் ஹிம்சையினால் அந்த பக்தியைப் பரிசோதிக்கிறார்களென்பது கருத்தாம்.

5. ஆகையால் சிலர் அதைப் பரிகாசம் பண்ணுகிறார்கள், பின்னும் சிலர் அதை நிந்திக்கிறார்கள், சிலர் அதினின்றும் வெறுப்படைகிறார்கள், ஐயோ! சிலர் அதை ஹிம்சிக்கிறார்கள்.

6. உயிருடன் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அந்த பக்தியக்கினியை உலகத்தார் சகிக்கிறதில்லை. ஆகையினால், அதை மரணத்தினாலும் சேற்றினாலும் அணைத்து விடுகிறார்கள்.

7. அது தனக்கு ஈசுவரன் நியமித்த காரியத்தை ஆரம்பிக்கும்போது உலகத்தார் அந்த காரியத்தில் தமக்குச் சம்பந்தமில்லையென்பதை பரிகாச அடையாளத்தால் அடையாளம் பண்ணுகிறார்கள்.

8. அது நிச்சயமாக அநுதினமும் முன்செல்ல, இகழ்ச்சிக்குப் பாத்திரர்களான உலகத்தார் மீண்டெழும் கோபமும் அத்தியந்தம் துவேஷமுமுள்ளவர்களாய் கர்வத்தையும் ஸ்வப்பிரயோஜனத்தையும், அதிக கடுமையான ஆசாரத்தையும் அதனிடம் ஆரோபிக்கிறார்கள். பின்னும் அதை ஆபத்தை விருத்திபண்ணும் வஞ்சகமுடையதென்று கண்டிக்கிறார்கள்.

9. பின்னும் அது தனது காரியத்தில் உறுதியாய் நின்று பராக்கிரமத்தைக் காட்டினால், அது உலகத்தாரின் நியாயசபையினின்றும் பயங்கரமான சிட்சாரூபமான ஆக்ஞையை நிச்சயமாய் அடைகின்றது.

10. அதற்கு மரணாந்தமான கொடிய வேதனை செய்யப்படுகின்றது. பாருங்கள், இந்த பக்தி தருமத்தை காப்பாற்றும் பொருட்டு நாசத்தை யடைந்தவர்கள் இருப்பு முனையிலாவது ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அக்கினி மத்தியிலாவது அத்தியந்த மகிமையுடன் விளங்குகிறார்கள்.

11. இந்த துஷ்டத்தனமுள்ள உலகத்தில் நிந்தையும், த்வேஷமும், இகழ்ச்சியும், பரிகாசமும், கோபமும், அதட்டுவதும், பயமுறுத்துவதும், வேதனை செய்வதும், கொல்லுவதும் ஆகிய சிட்சைகள் பக்தியையும், ஸ்வாதீனத்தையும் கைக்கொண்டு நடப்பவர்களுக்கு உலகத்தார் நிச்சயமாய் எப்போதும் செய்யும்படியான அநிவார்யமும் வியக்தமுமான பூஜையாகும்.

---

## 14-வது பிரகரணம்.

---

### அவதாரம் - தேவத்வ ஆரோபணம்.

---

1. அப்படியிருக்க உலகத்தாரில் பின்னும் சிலர் மோகத்தினாலாவது, விசாரணைக் குறைவினாலாவது, அக்ஞானத்தினாலாவது முன் சொல்லப்பட்டதற்கு மாறான எதிர்முனைக்கு ஓடுகிறார்கள். உலகத்தாரில் சிலர் அந்த பக்தியை நிந்தித்து இம்சிக்கிறார்கள். பின்னும் சிலரோவென்றால் அதற்கு தேவத்தன்மையை ஆரோபித்து மேன்மைப்படுத்துகிறார்களென்பது கருத்தாம்.

2. ஓ சாதகர்களே! அந்த பக்தி ஈசுவரனுடையதென்று அவர்கள் நினைத்துப் பூமியில் விழுந்து நமஸ்கரித்து விநயமாகிய காணிக்கைகளைச் செலுத்தி அதைப் பூஜிக்கிறார்கள். அவர்கள் அந்த பக்தியை ஈசுவராம்சமென்று அதை நமஸ்கரித்துப் பூஜிக்கிறார்கள்.

3. அவர்கள் அத்தியந்த மோகத்தினால் அதையொரு விக்கிரகமாகச்செய்து அதனிடத்தில் லோகாதீதமான சாமர்த்தியங்களை ஆரோபித்து அதை ஈசுவர அவதாரமென்று அர்ச்சிக்கிறார்கள்.

4. ஆனால் அது விஷயத்தில் ஹிம்சை செய்வதும் தேவத்தன்மையை ஆரோபிப்பதும் ஆகிய இரண்டும் ஒன்றே; ஏனெனில், அந்த இரண்டும் அறிவில்லாமையைக் காண்பிக்கின்றன. அந்த பக்தியை நிந்தித்து இம்சிப்பதும், அதனிடம் தேவத்தன்மையை ஆரோபிப்பதும் அறிவில்லாமையினாலேயே யுண்டானதால், அவையிரண்டும் ஒன்றே யென்பது கருத்தாம்.

299—கோ.

5. ஜனங்கள் அதனிடம் தேவத்தன்மையை ஆரோபித்தாலும், அல்லது அதை இரும்புமுனையில் அடித்தாலும் அதனிடம் லோகாதீத குணங்களிருக்கின்றனவென்பதை நிச்சயமாய் அங்கீகரிக்கிறார்கள்; அன்றியும், அதை அறியத் தங்களுக்குச் சாமர்த்தியமில்லையென்பதைக் காட்டுகிறார்கள்.

6. அதை தேவதையென்று நிச்சயிப்பது விதிபட்சம்; அதில் எவ்வளவும் சாரமில்லையென்று தள்ளுவது நிஷேதபட்சம். விதி நிஷேதங்களாகிய இரண்டு பட்சங்களும் பிரமாணங்களேயாம்.

7. நிஷேத பட்சத்தார் அதை வெறுப்பினால் இம்சித்து பூமியினின்றும் பல லோகத்தை யடைவித்து அது நிச்சயமாய் பிருதிவி சம்பந்த மல்லாததென்பதை வெளியிடுகிறார்கள். விதி பட்சத்தார் அதை ஆகாயமட்டும் உயர்த்தி நிச்சயமாய் அதன் பரலோகத்தன்மையை விளங்கச் செய்கிறார்கள்.

---

## 15-வது பிரகரணம்.

---

### உஜ்ஜீவனம்.

---

1. அந்த பக்தியானது சமீபத்தில் வசிக்குங்கால் உலகத்தார் அதையறியச் சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள். அது நம் நேத்திரங்களுக்குப் பிரகாசத்தை யுண்டுபண்ணும் பொருட்டு உசிதமான தூரத்தில் இருக்க அபேட்சிக்கிறார்கள்.

கண்வலி வந்த காலத்தில் சமீபத்திலிருக்கிற பதார்த்தம் தெரிகிறதில்லை, தூரத்திலிருப்பது தெரிகின்றது; அதுபோல, உலகத்தார் அந்த விசுவாசத்தைத் தூரத்தில்வைத்துப் பின்பு யதார்த்தமாகக் கிரகிக்கிறார்கள்.

2. ஆகையினாலே லோகாதீதனான புருஷன் தனது கிரகத்தில் இகழ்ச்சியையும், நிந்தையையும், புறத்தில் சன்மானத்தையும் அடைகிறான். அவன் ஸ்வதேசத்தார் அவனை அங்கீகரிப்பதில்லை, அந்நிய தேசத்தார்களோ அவனைத் தங்களில் ஒருவனாக சிரத்தையுடன் அங்கீகரிக்கிறார்கள்.

3. இல்லாவிட்டால், உலகத்தார் தமது பார்வையின் சுத்தியின் பொருட்டு கண்ணாடி யொன்றை அபேட்சிக்கிறார்கள். இங்கே மரணமொன்றே அந்தக் கண்ணாடியை அவர்களுக்கு அடைவிக்கின்றது.

4. எப்படியெனில், மரணத்தின்பின் அதன் மூலமாய் அந்த விசுவாசமானது யதார்த்தமான வர்ணங்களில் காணப்படுகின்றது; மேலும், அதை ஜனங்கள் நன்றாய் அறிகிறார்கள். மரணத்தின்பின் எல்லாரும் அந்த பக்தியை மரியாதை பண்ணுகிறார்கள். இவ்வுலகத்தில அது இருக்குங் காலத்தில் அதை அறிந்து சன்மானிக்கிறதில்லை யென்பது கருத்தாம்.

5. ஓ சாதகர்களே! மரணத்தினால் ஹிம்சை, அக்ஞானம் முதலியவைகளெல்லாம் தானாகவே நீங்கிப்போகின்றனவாகையால், மரணத்தின்பின் ஸம்ஸ்காரத்திலுண்டாகும் திருஷ்டி வைஷம்யம் நீங்குகின்றன மரணமானது ஸ்வபாவ நியமத்தினாலே ஹிம்சை, அக்ஞானம் முதலியவைகளாலுண்டாகும் விரோதத்தை நீக்குகின்றதென்பது கருத்தாம்.

6. ஆகையால், லோகாதீதனான புருஷன் இந்த வுலகத்தில் மனமுறிந்து இகழ்ச்சியை அடைந்தவனைச் சரீரத்தை விட்டபின் நிலையான கௌரவத்தின் பொருட்டு கீர்த்தி சூசகமான மந்திரத்தை நிச்சயமாயடைகிறான். ஜனங்கள் அவனுடைய ஞாபகார்த்தம் கோயில், கோபுரம், பிருந்தாவனம் முதலிய கட்டடங்களைக் கட்டி வணங்கி அவதார புருஷர்களாக எண்ணி வணங்கி வருகிறார்கள்.

7. இவ்விதமாய், உண்மையான பக்தி இகஜீவனத்தைவிட பரஜீவனத்தில் அதிகமாய் விளங்குகின்றதென்பது திண்ணம், திண்ணம்.

---

## பக்தியின் இலக்ஷணம்.

இப்பிரபஞ்ச தத்துவங்களைப் பரிட்சித்துப் பார்ப்பவருக்கு, மானவஜாதியாராகிய நாம் சில மதஸ்தர்கள்

சொல்லுவதைப்போல எடுத்த எடுப்பில் (ஆதாம் ஏவா ள் வயிற்றில்) மனுஷராக ஜனிக்காமல், ஒரு காலத்தில் நாம் தாது (mineral kingdom) வர்க்கங்களாயும், பிற கு பல பல்லாண்டுகள் சென்ற பிறகு கந்த (vegetable kingdom) மூலங்களாயும், பிறகு பல பல்லாண்டுகள் சென்ற பிறகு, ஜீவ (animal kingdom) ராசிகளாயும், பிறகு பல பல்லாண்டுகள் சென்ற பிறகு இப்போதிருக் கும்படியான நரஜீவர்களாயும் (human kingdom or life) மாறினதாகவும்; இனி நமது முயற்சிகளினால், நாம் புருஷோத்தமர்களாக (divine life or kingdom) மா றலாமென்றும் தோன்றும் இந்தக் கொள்கையைக் கேவ லம் தத்துவ சாஸ்திரிகள் சொல்வது மாத்திரமல்ல. பிர பஞ்சத்தில் பெருமை பெற்ற நமது பரதகண்டத்து ஆதி வைதீக சாஸ்திரிகளும், ஏனைய நாட்டு சில மதாசாரி யர்களும் இப்படியே கொண்டிருக்கிறார்கள். இப்படி மனுஷனானவன் புல்லாகி, பூடாகி, புழுவாகி, மரமாகி, பல் மிருகமாகி, பாம்பாகி, பறவையாகி, கல்லாகி, மனித ராகி, பேயாகி, கணங்களாகி, வல்லசுரராகி, முனிவராகி, தேவராய்ச் செல்லாநின்ற இத் தாவர ஜங்கமத்துள் எல் லாப் பிறப்பும் பிறக்கும் காலங்களிலெல்லாம், ஜீவாத் மாக்கள் பரமேசுவரனிடத்தில் யாதோ ஓர்வித பக்தியி னால் பந்தப்பட்டிருக்கிறது ஸ்பஷ்டமாகும். எப்படியெ னில், நமது சரீரம் வெளிப் பார்வைக்கு எவ்வளவோ அழகாய் இருப்பதாகத் தோன்றினும், தத்துவ ரீதியா கச் சோதிக்குங்கால் இது தோல், நரம்பு, தசை, இரத் தம், எலும்பு முதலானவைகளால் கூடி, ஜீவாத்மா வசி க்கும்படியான ஓர் விநோத கட்டடமாயிருக்கின்றது. இந் தக் கட்டடம், இதற்குக் காரணரான பரமேசுவரனென் னும் அஸ்திவாரத்தின் மேலாதாரப் பட்டிருக்கிறதென்று சுருதிகளுரைக்கின்றன. இதனால் மானுஷீக தேகக்கூ

மும், பரமேசுவரரென்னும் அஸ்திவாரமும், மண், கல் முதலான தாதுவர்க்கத்துக்கேற்ற உபமான உபமேயங்களானமையால், இது தாதுவர்க்க ரீதியாகப் பார்த்தபோதிலும், ஜீவாத்மா பரமாத்மாவினிடத்தில் பக்தியென்னும் பந்தத்தினலாதாரப்பட்டிருக்கிறதாக ஸ்பஷ்டமாகும்.

2. ஜீவாத்ம பரமாத்ம சம்பந்தத்தை ஒரு விருக்ஷத்திற்கும், அதன் கிளைகளுக்கும் ஒப்பிட்டு சில சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதாவது :—ஒரு விருக்ஷமானது தனது ரசத்தினல் அதன் கிளைகளைப் போஷித்து வருவதைப்போலவே, பரமாத்மா என்னும் விருக்ஷமும் தனது சக்தியாகிய ரசத்தினல் ஜீவாத்மாக்கள் என்னும் கிளைகளைப் போஷிக்கின்றது. ஜீவாத்மா என்னும் கிளையும், பரமாத்மா என்னும் விருக்ஷமும் இரசத்தினல் போஷிப்பதென்னும் பக்தியும் கந்த, (vegetable kingdom) மூலவர்க்க உபமான உபமேயமாதலால், மூலவர்க்க ரீதியாகப் பார்த்தபோதிலும், ஜீவாத்மா பக்தி என்னும் பந்தத்தினல் பரமாத்மாவில் ஆதாரப்பட்டிருப்பது ஸ்பஷ்டமாகும்.

3. சில சமய நூல்களில் ஜீவாத்ம பரமாத்ம சம்பந்தத்தை (ஓர்) சிரசிற்கும், தேகத்தின் மற்ற அங்கங்களுக்கும் ஒப்பிட்டுச் சிரேஷ்டப்படுத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. இதனல், ஒரு தேகத்திலிருக்கும் சகல அங்கங்களிலும் சிரசு பிரதானமெனவும், சிரசையும் மற்ற அங்கங்களையும் பந்தப்படுத்தும் கழுத்தைப்போன்ற பக்தியானது ஜீவ (animal kingdom) வர்க்க ரீதியாகப் பார்த்தபோதிலும் ஜீவாத்மா பக்தி சம்பந்தத்தினல் பரமாத்மாவைச் சார்ந்து நிற்பது ஸ்பஷ்டமாகும்.

4. சில சுருதிகளில் ஜீவாத்மா நாயகியாகவும், பரமாத்மா நாயகனாகவும், நாயகி நாயக பாவத்தை யநுசு

ரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது:—அதாவது ஜீவாத்மா என்னும் நாயகியின் ஹிருதயமும், பரமாத்மா என்னும் நாயகனுடைய ஹிருதயமும் அன்பினால் ஒன்று சேர்வதெனில், மானுஷீக (human kingdom) வர்க்கத்தைச் சார்ந்த உபமான உபமேயமாகிறது. இதனால் ஜீவாத்மா, பக்தி சம்பந்தத்தினால் பரமாத்மாவைச் சார்ந்திருக்கிறதென்பது ஸ்பஷ்டமாகும். இந்த நான்கு வித உபமான உபமேயங்களால் ஜீவாத்மாக்களாகிய நாம் தாது, கந்த, மூல, ஜீவவர்க்கங்களிலிருந்த காலங்களிலும், மானவ ஜாதியாக இப்போதிருக்கும்படியான ஸ்திதியிலும் பரமாத்மாவிடம் பக்தியினால் பந்தப்பட்டிருப்பது பிரத்தியக்ஷமென்றும், இனி மானவ ஜாதியாகிய நாம் இந்தப் படியில், மற்ற மூன்று ஜன்மங்களிலிருந்த அறிவைப் பார்க்கிலும், விசேஷ அறிவைப் பெற்றிருப்பதால், நமக்கு இயற்கையாகவுள்ள பக்தியை இந்த ஜன்மத்தில் பரிமளிக்கச் செய்து புருஷோத்தமர் (divine life) படியைப் பெறவேண்டுமென்றும் ஸ்பஷ்டமாகிறது.

5. வேறொரு சுருதியானது ஜீவாத்மா என்னும் விருக்ஷமானது பரமாத்மா என்னும் பூமியிலிருந்து சகல சாராம்சங்களைப் பெற்று கொப்பும் கிளைகளும், பூ, பிஞ்சு காய், கனிகளாலும் பல்கிப் பிரகாசிக்கிறதென்று சொல்லியிருக்கிறது. ஒரு விருக்ஷமானது பூமியிலிருக்கும் ரசத்தைக் கிரஹிப்பதற்கு அநேக வேர்களிருக்கின்றன. இவ்வேர்களின் பெரும்பாலும் மயிரினும் சிறியவைகளாகி அந்த விருக்ஷத்தைச் சுற்றியிருக்கும் பூமியில் வெகுதூரம் பரந்து கிடந்தாலும், மேற்படி விருக்ஷத்தை மழை, காற்று முதலான கஷ்டங்களிலிருந்து பாதுகாக்க மூன்று பெரிய ஆணி வேர்களிருப்பதாக (botany) கந்த மூல தத்துவ நூல் முறையிடுகின்றது. இந்த மூன்று

ஆணி வேர்களால் எப்படி பிரமாண்டமான விருக்ஷம் பூமியில் பிடிபட்டிருக்கிறதோ அப்படியே, பரமாத்மா என்னும் பூமியிலிருக்கும் ஜீவாத்மா என்னும் விருக்ஷமும் காமக் குரோதாதிகளென்னும் வெயில், காற்று, மழைகளால் கெட்டுப் பட்டுப்போகாதபடி பக்தி, யோகம், ஞானம் என்னும் மூன்று விசேஷ வேர்களால் பிடிபட்டிருக்கிறது. இதனால் பரமாத்மா என்னும் பூமிக்கும், ஜீவாத்மா என்னும் விருக்ஷத்துக்கும் சம்பந்தப்படுத்த ஆணி வேர்களாகிய பக்தியாதிகளிருப்பன ஸ்பஷ்டமாகிறது. இத்தியாதி திருஷ்டாந்தங்களால் பக்தியானது நாம் தாது, கந்த, மூல ஜீவாதி ஜன்மங்களிலிருந்த போதும் இருக்கிறதென்று ஏற்பட்டாலும், இத்தியாதி உபமான உபமேய உதாரணங்கள் ஜடதத்துவ, ஆத்மதத்துவ சாஸ்திரங்களை ஆராய்ந்தறிந்த சிலருக்கேயன்றி சாதாரண ஜனங்களுக்கு ஸ்பஷ்டமாகாதாகையால், நாம் மனுஷரென்று உடம்பெடுத்த பிறகு நமது சுவானுபவத்துக்குத் தெரியக்கூடிய சில திருஷ்டாந்தங்களைப்பற்றி விசாரிப்போம்.

## பக்தியின் முதற்படியாகிய பீதி அல்லது பயம்.

நானா ஜாதியாராகிய நமக்குப் பால்யம், யௌவனம், முதுமை என்ற மூன்று விசேஷ படிகள் எப்படி இருக்கின்றனவோ; அப்படியே, பக்திக்கும் (1) பீதி அல்லது (first stage or root of Bakthi) பயம்; (2) பிரீதி அல்லது அன்பு, (3) பக்தி அல்லது பஜனை என்னும் மூன்று படிகளிருக்கின்றன. எப்படியெனில்—பிரபஞ்சத்தில் பிறக்கும் ஒவ்வொருவரும் தம் பிதா மாதாக்களின் சுக்கில சுரோணித சேர்க்கையினால் மாதாவின் கர்ப்பத்தில் கருக்கூடி சிறு பிண்டமாகியும், பிறகு நாளாவட்டத்தில் கர சரணாதி அவயவங்களுடன் பல்கிப்

பிராணனையும் பெற்று மாதா உண்ணும் உணவினால் ஓர் வித உணவும் பெற்றும், நிச்சிந்தையாகவுமிருந்து, பத்தாவது மாதத்தில் பிரபஞ்சத்தில் பிறக்கிறது. சிசுவானது தாயின் கர்ப்பமாகிய அந்தகாரத்தில் அசைவதற்குப் போதுமான இடமும், சுகத்துக்கு வேண்டிய மற்ற சாதனங்களும் அற்று இருக்கையில் மௌன யோகியைப்போலிருந்துவிட்டு, பிரகாசமும் போதுமான இடம் பொருள் ஏவல் முதலான பல சாதனங்களும் உள்ள பிரபஞ்சத்தில் வந்த மாத்திரத்தில் கதறிக் கதறி அழுகின்றது. அப்படி அழுவதற்குக் காரணம் யாதென்று நிதானித்துப் பார்ப்போமாகில் விந்தையாக விளங்கும். சிசுவானது தன் தாயின் கர்ப்பத்தில் இருந்தபோது கேவலம் அந்தகாரத்தில், தன் கர சரணாதிகள் அசைந்தாடச் சாதனங்களற்று இருந்தது. அந்த சிசுவானது இனி உலகத்துக்கு வேண்டிய வியாபாரங்களை நடாத்தும் பொருட்டும், அதற்குத் தன்னிடம் இயற்கையாகவிருக்கும் பரமாத்மசம்பந்தமான பக்தியை யநுஷ்டிக்க வேண்டியே சிசுவின் கண்கள் தம் தொழில்களைச் செய்ய பிரகாசத்தையும், கரசரணாதி கருவிகளை அசைத்து ஆட்டி நீட்டிக்கூட்டி தம் தொழில்களைச் செய்ய காற்றும், உஷ்ணமும், குளிர் முதலானவைகள் அபரிமிதமாகப் பிரபஞ்ச வெளியில் படைக்கப்பட்டும், அவைகள் அந்தச் சிசுவுக்கு இதற்கு முன் கண்டுங் கேட்டுமறியாத அநியாயமான அற்புதங்களாயிருப்பதாலும், அவைகளைக் கண்டும் கேட்டும் பயந்து பீதியால் அழுகின்றது. இந்தப் பீதி அல்லது பயம் என்பதொன்றில்லாவிட்டால், அந்த சிசுவானது வரிசைக்கிரமமாக ஓங்கி வளர வகையில்லை. ஆனதுபற்றியே, அருள் வள்ளலாகிய பரமேசுவரருக்குப் பிரபஞ்சத்தில் தொண்டு செய்யத் தேவ தூதனாக வந்த சிசுவுக்கு அதன் சிசுப் பிரகிருதியையும்

அதன் காலத்தையும் அநுசரித்து பக்தியின் முதல் படியாகிய பயத்தை நியமித்திருக்கிறார்.

சிசுவானது தாயின் கர்ப்பத்திலிருந்தபோது அதன் அங்கங்களை ஆட்டியாட்ட அவைகளுக்கு வேண்டிய சாதனங்களையும், அச்சாதனங்களால் திடனையும் பெறுவதற்கு எப்போது பிரபஞ்சத்தில் பிறப்போமோ என்று ஏக்கம் கொண்டிருந்தது. இந்த ஏக்கம் இயற்கை நியமனம்; இந்த ஏக்கத்தின்படி பிறந்த பிறகு தனக்குத் தோன்றும் சகல பூதங்களும் தனது மேற்கதிக்கு (future life) அநுகூலமாகப் படைக்கப்பட்டிருந்தாலும், அவைகள் தனக்கு அக்கால ஸ்திதிக்குத் தக்கபடி அமைந்திருப்பதை யறியும்படியான ஞானமற்று அவைகள் தனக்கு கிடைக்குமோ கிட்டாவோ என்னும் பாவனையாகப் பயந்து அடிக்கடி யழுதும், அவைகளை யடைவதற்கு அடிக்கடி கண்களைத் திறந்து பார்த்து, மூடியும் கர சரணுதிகளை யடிக்கடி அசைத்தாட்டியும், அவைகள் கிட்டியபோது புந்நகையால் காட்டியும், அச்சாதனங்களைப் பின்னும் அதிகமாகப் பெற அடிக்கடி புரண்டு விழுந்தும், தவழ்ந்தும், குந்தியும், குனிந்தும், உட்கார்ந்தும், நிமிர்ந்தும், நின்றும், தத்தித் தாவி நடந்தும், ஓடியும் இத்தியாதி கருமங்கள் அனைத்தும் செய்வதெல்லாங்கூடி சிசுவானது ஓர் தேவ தூதனை இந்த உலகில் ஜனித்திருப்பதால், அதற்கு இரவும் பகலும் தன் தேவ தொழிலைச் செய்து முடித்து மேற்கதியை நாடிச்செல்ல பல இடையூறுகள் இருப்பதாகப் பாவித்து பயந்து பல கஷ்டங்களை யநுபவிக்கின்றது. பயம் என்னும் பதத்திற்கு இலக்கிய விலக்கண நூல்களிற் பல பொருள்கள் சொல்லப்பட்டிருக்கினும், பெரியோர் சிலர் அதற்குத் தம் அநுபவார்த்தங்களைச் சொல்லுகின்றனர். அதாவது : பயம் என்னும் பதத்தில் ப=பகவான், அம்=ஜீவாத்

மா=பிரபஞ்ச பொருள்ரூபமாகவிருக்கும் பகவானை ஜீவாத்மா பார்த்துப் பேசி யடைவதற்கு சிசு பிரகிருதி யின் அழுகையால் காட்டுவதேயாம். பிறகு நாளேற நாளேற சிறு உணவுகளை யுண்டும், உடல் வளர வளர கிஞ் சித் புத்தியும் தைரியமும் விருத்தியாகியும், பெற்றோர் பிறந்தோர் இனத்தாருடனும், தம்மைப்போன்ற வயது டைய பிள்ளைகளோடுங் கூடிக் குலாவி நடக்க ஆரம்பிக் கிறது. இந்தத் தசையிலும் தனது மேற்கதிக்கு வேண் டியவைகள் கிடைக்குமோ கிடைக்காதோ வென்று பயந் து அழுது பிரயாசப்படுகையில், பெற்றோர்களைப்போல பேசவும் நடக்கவும் அவர்களைப்போல போலித்தொழி லைச் செய்யவும் ஆரம்பிக்கையில், பெற்றோருடைய சகா யத்தினாலோ அல்லது மற்றவர்கள் சகாயத்தினாலோ கல் வித் துறையில் பிரவேசித்து பலவித நூற்களைக் கற்றுத் தெளியத் தெளிய முன் தான் சிசுப் பிரகிருதி தசையில் எங்கெந்த பூதங்களையும் காரியங்களையும் கண்டு பயந்தா னோ அவைகள் இன்னின்னவை யென்றும், அவற்றின் தத்துவங்கள் இன்னின்னவையென்றும் விசாரிக்கப் பிர வர்த்திக்கிறான். இப்படிப் பிரவர்த்திக்கும்போது தனக்கு இயற்கையாகப் படைக்கப்பட்டிருந்த பீதி அல்லது பயம் என்னும் பக்தியின் முதல் படியானது சற்று மாறி, அதுவே பிரீதி அல்லது பிரியம் அல்லது அன்பு என் னும் இரண்டாவது படியை யடைகிறான். இந்த இரண் டாவது படியாகிய பிரீதி அல்லது அன்பினால் ஜகத்தில் வாழும் ஜனங்களுடைய பெரும்பாகமான காரியங்கள் நடப்பதால் இனி அதைப்பற்றி சற்று விசாரிப்போம்.

299—வது.

## பக்தியின் இரண்டாவது படியாகிய பிரீதி அல்லது பிரியம் அல்லது அன்பு.

பிரீதி அல்லது பிரியம் என்பது ஸமஸ்கிருத பாஷா பதம். இந்த பதத்துக்கும் இதற்கு முன் படியாக நின்ற பயம் என்னும் பதத்துக்கும் வித்தியாசம் இடையிலுள்ள ரீ என்ற ஒரு எழுத்து மாத்திரமே அதிகம். இதற்குச் சரியான தமிழ்ப் பதம் அன்பு. இந்த அன்பு என்பது இன்னதென்று அங்காதிபாத சாஸ்திரிகளும், இரசாயன சாஸ்திரிகளும் தெரிந்து சொன்னார்களில்லை. அணுதரிசினி அல்லது சூக்ஷ்மவீக்ஷிணி முதலான கருவிகளை உபயோகப்படுத்தும் நிபுணர்களும் நிரூபித்தார்களில்லை, இதன் இருப்பைப்பற்றி,

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூசறரும்"—என்று

திருவள்ளுவ நாயனார் சொல்லியிருக்கிறார். அதாவது:—அன்பு என்பது எல்லாருடைய ஹிருதயத்தி லிருப்பதென்பதற்கு அதன் தொழிலாகிய சுக துக்கங்களைக் காட்ட அவரவர்கள் கண்களிலிருந் தொழுகும்கண்ணீரே சாக்ஷி யென்று சொன்னார்; என்றால், அன்பு என்பது ஒவ்வொருவருடைய உள்ளத்தில் பதியப்பட்டிருப்பதினால் தான், மாந்தர் மிதமிஞ்சிய மகிழ்ச்சியை யடையும் போதும், மிதமிஞ்சிய துக்கத்தை யநுபவிக்கும் போதும் அன்பின் இருப்பைக்காட்ட கண்களிலிருந்து இயற்கையாக கண்ணீர் வடிந்து வந்து காட்டுகின்றது என்று பாடினார். மேலும், அன்பு என்பது இத்தன்மைத்தெனக் காட்ட தருக்கசாஸ்திரத்தில் க்ஷீரோதக நியாயஞ் சொல்லப்பட்டிருக்கிறதை இவ்விடத்தில் சுருக்கிக்காட்டுகின்றனம்.

ஆவின்பாலில் பெரும்பாகமான கலப்பு தண்ணீர் என்பது அனைவருக்கும் தெரிந்ததே. அதை ஒரு பாத்திரத்தில் வார்த்து அடுப்பில் வைத்து காய்ச்சப்படுகையில் பாலுக்கு உண்டாகும் உருத்தத்தை அதைச்சார்ந்திருக்கும் தண்ணீர் பரிதபித்து, தான் சகித்துக்கொண்டு (பாலாகிய) அன்பனைக்காக்கும் பொருட்டு தான் சுண்டிப்போக, பாலானது அந்தோ! தனது அன்பனாகிய (தன்னோடு சதா கலந்திருக்கும்) தண்ணீருக்கு இக்கஷ்டமுண்டானதே என்று வருந்தி, சகிக்கமுடியாததுபோல அப்பாத்திரத்திலிருந்து (பால்) பொங்கி எழுந்து தீயில் விழுந்து எரிந்துபோக முயலுகையில், தண்ணீர் சகிக்காமல் மறுபடியும் அப் பால் மேல் விழுந்து அப் பால் நெருப்பில் விழாதபடி தடுப்பதுபோல் அன்பானது பரஸ்பர க்ஷேமத்தில் பந்தப்பட்டிருப்பது பிரத்தியக்ஷம்.

மேலும் அன்பின் இலக்ஷணத்தைப்பற்றி ஆழ்ந்து ஆராய்ந்து பார்ப்போமாகில் அது (1) சராசரப்பொருள் அன்பு, (2) தலைவி தலைவன் அன்பு, (3) ஆன்ம அன்பு என மூன்று பிரிவினையாக வகுக்கக் கூடியதாக விருக்கிறது.

எப்படியெனில், முதலாவதாகிய சராசரப் பொருளன்பினால், பிரபஞ்ச ஜடாஜடப் பொருள்களின் தாரதம்மியத்தைத் தக்கபடி விசாரித்தறிந்து, பொதுவாக விவேகிகளான உத்தம சிநேகிதர்களுடைய அன்பைத் தேடிச்சேர்வதாம். அதிகாரமும் அர்த்தமும் உண்டான காலத்தில் அநேகர் வந்து அன்பைக் காட்டுவார்கள். அவர்கள் அன்பு உண்மையானதாவென்று அறிவதற்கு தரித்திரம் உரைகல்லாகக்கொண்டு சோதித்துச் சேர்வதேயாம். இப்படி சோதனையினால் கண்டு தெளிந்த சிநேக அன்பு பல வருஷங்கள் வரையில் பாராட்டி வரலாம்.

ஆனால் ஒருவன் உலகில் உள்ளநாள் உள்ளவரையில் ஓயா த அன்பினால் கட்டுண்டு வாழ்வதற்கு மேற்சொன்ன சாதாரண சிநேகிதர்களுடைய அன்பினால் முடியாதாகை யால், (2) இரண்டாவதாகிய தலைவி தலைவன் அன்பு இன்றியமையாததாயிருக்கிறது. இப்பூவுலகில் ஒரு வன் கல்வி கேள்விகளில் எவ்வளவு சிறந்தவனாகிலும், பெற்றோர் பெரியோர்களால் பலவித புத்திமதி, நீதி நூற்கள் சொல்லப்பட்டும், பண்டு பலாதி கனக பூஷ ணாதிகளையெல்லாம் வேண்டியமட்டுங் கொடுக்கப்பட்டும் பாராட்டி சீராட்டி வளர்த்துவந்தாலும், நீதி வழிகளில் நெறி பிசகாமல் நடக்கும் நல்லாரோடு கூடிக் குலாவி வரும்படி செய்தாலும், அவனுக்குப் பாலியதசை கிட்டி வருமாகில் (தனது மனோரஞ்சியத்துக்குவந்த) மங்கை யிடம் மனது புகுந்து பதறிப்பதறிப் பரிதவிப்பது பிரத் யக்ஷம். இதைப்பற்றியே யல்லவா! "பலவான் இந்தி ரியக்ராமோ விதவாம்ஸ மபிகர்ஷதி" என்ற வாக்கியத் தை முன்னோருரைத்திருக்கின்றனர். இந்த வாக்கியத் தைச் சொன்னதற்குக்காரணம்,—

"வேதவியாசரிடத்தில் பிரம்ம வித்தையை அப்பிய சித்தவர்களில், வெகு திருடசித்தரும் நியதாசாரருமா கிய ஜைமினி என்கிற ஒரு ரிஷி ஒரு காலத்தில் வியாச ரால் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தைப் படிக்கும்போது, அதில் "வித்வாம்ஸ மபிகர்ஷதி" என்கிற வாக்கியத் தைக்கண்டு "இது என்ன புதுமை, நம்மையொத்த பண்டிதர்களும் காமவிஷயத்தில் மதிமயங்குவது சாத்தி யமோ, வியாச நூலாசிரியர் பிழையாய் எழுதினார்" என் று யோசித்து, அதைத் திருத்தி "வித்வாம்ஸந்நாபகர் ஷதி" என்று திருத்தினார். அதை அறிந்த வியாஸர் அவ ருக்குத் தம் கருத்தை திருஷ்டாந்தப்படுத்த ஒரு நாள் தன் ஆசிரமத்தைக்காக்க அந்த ரிஷியை வைத்து வெளி

யில் எழுந்தருளின சமயத்தில், கனமழை பெய்ய ஆரம்பித்தது. பிறகு சற்றுநேரத்தில் அந்த வியாசரே அப்ஸரசுகளெல்லாம் பணி செய்யத்தக்கவும், சிருஷ்டியிலுள்ள அழகெலாம் திரண்டு வந்தாற்போலவும் ஒரு பெண்ணுருவங்கொண்டு, மழைக்காக ஆசிரமத்தில் தங்க வந்தது போலும் அவ்விடத்திலுள்ள சிஷ்யரைக்கண்டு அஞ்சியது போலும், நடித்த அதன் உண்மையை அறியாத அந்த ரிஷியானவர், "அம்மா நீர் அஞ்சவேண்டாம், இந்த அறையிற்சென்று பீகமுத்திரை செய்துகொண்டு சுகமாயிருக்கலாம்" என்று சொல்லிவிட்டுப்போய், அருகிருந்த ஓர் அரசமரத்தடியிற் படுக்க, மழைநின்று பூர்ணசந்திரனுதிக்கக்கண்டார். நிலவைப் பகலென்றெண்ணி குயில்கள் கூவ, காமத்தீமூட்டும் தென்றல் மோத, விருக்ஷங்களின் இலைகள் ஒத்துபாட, சிறந்த புஷ்பங்களின் கந்தம்வீச, ஏகாந்த ஆசிரமம் இசைந்திருக்க, அழகில் ஒப்பற்றவள் உள்ளிருக்க, மதனவெறி கொண்ட அந்த ரிஷியானவர் கதவைத் திறக்கும்படிப் பலவாறாய்ப் பஞ்சிக் கெஞ்சிக் கேட்டும் திறவாமைகண்டு, காமநோய் பொறுக்காது இறப்பேறி, கூரைமீதேறிப் பிரித்துக் குதித்த உடனே, காலாந்தகனைக்கண்ட கடுவெளியைப்போல திடுக்குற்றுப் பயமடைந்து, மெய்மறந்து, பிறகு கண்விழித்து, தான் காணக்கோரிய பெண்ணுக்குப்பதில், அங்கு ஜடையும், மரவுரியும், கையுங் கமண்டலமுமாய் வியாசரெழுந்தருளி யிருக்கக்கண்டு "சுவாமி நான் கெட்டேன் கெட்டேன், என் அகங்காரத்துக்குப்பட்டேன் பட்டேன்" என சாஷ்டாங்கமாய் விழுந்து அபராதக்ஷமாபணம் செய்துகொண்டு முன் திருத்திய நூலை யெடுத்து "கர்ஷதி கர்ஷதி கர்ஷத்யேவ" என்று மும்மடங்கு எழுதினரெனப் பெரியோருரைக்கக் கேட்டிருக்கிறோமல்லவா?

இம்மட்டோ, விசுவாமித்திராதி மஹா தபோதனரும், மங்கையர் மோகத்தினால் தமது அரிய பெரிய தவங்களைக் கெடுத்துக்கொண்டதன்றியில், இராவணாதி மஹா சூரர்களும் மாண்டுபோனதாக மேன்மைபெற்ற இராமாயணாதி கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றனவல்லவா? இதே மாதிரியாகவே மண்ணுலகில் மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு முதலானவைகளைப் பூஷணங்களாகவுடைய பாவையரும், பாலிய பக்குவ காலத்தில் தம்மைப்பெற்றோரால் பலவித ஆடையாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டு, தெய்வ பக்தி நீதி போதனைகளால் தினே தினே தேற்றப்பட்டு, பாலிய புருஷன் பார்க்காதபடி அந்தப்புரத்தில் அடைத்து வைக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு வந்தாலும், தமது அருமையான பிதா மாதாக்களுடைய புத்திமதிகளையுங் கடந்து, தெய்வபக்தி நீதி போதனைகளையுந் துறந்து, தனக்குரிய அழகு நாயகனை யடைய, இரவும் பகலும் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏழைபோலேங்கி, மன்மத வேதனையால் மனம் புண்ணாகி நொந்து ஏக்கமுற்று, சில சமயங்களில் தசாவஸ்தையையு மநுபவிப்பது சஹஜமேயல்லவா? இதைப் பற்றியன்றோ சீதை, ருக்மணி, தமயந்தி முதலான இராஜ மஹிஷிகளெல்லாம் தாம் விரும்பிய நாயகர்களுடன் தமக்குத் தர்மவிவாகம் நடந்தேறுவதற்கு முன்பே அவர்கள்மேல் தாங்கொண்ட காதலினால் கண்டவரைத் தூதனுப்பி, காமக் காய்ச்சலினால் திண்டாடியதாகக் கதைகளில் கேட்டிருக்கிறோமல்லவா? இஃதின்றேல் இவ்வுலக பிரஜாவிருத்தி பாழ்ந்துப்போம். ஆனதுபற்றியே ஆங்கிலேய நாட்டு அறிவாளிகளுக்குள் அரசனாகச் சிறந்த (Lord Bacon) லார்டு பேகன் என்னும் வித்வான் "தலைவி தலைவன் அன்பு மானிடஜன்மத்தை விருத்தியாக்கும், சிநேகிதர் அன்பு அதைப் பூரணப்படுத்

தும், மிதமிஞ்சிய அன்பு அதைக் கெடுக்கும்" என்று சொன்னர். என்றால் (1) தலைவி தலைவன் அன்பினுல் பிரஜாவிருத்தியாக, (2) சிநேகிதர் அன்பினுல் அதை சிரேஷ்டப்படுத்த வேண்டுமே யொழிய (3) மிதமிஞ்சிய அன்பினுல் சிற்றின்பத்தில் மூழ்கித் தாமும் கெட்டு தம் சந்ததியாரையும் கெடுக்கா வண்ணம் ஜாக்கிரதையாக விருக்க வேண்டுமென்பது கருத்து. இப்படி ஜாக்கிரதையாகயிருந்து சம்ஸார அன்பைப் பாராட்டி வர வர அதுவும் பெரும்பாலும் தீராத் தொல்லைகளையும், கவலைகளையும் கொடுத்துக்கொண்டு வருவது சஹஜம். உற்றுப் பார்க்கும்போது இந்த அன்பும் க்ஷணபங்குரமானதாயும், கேவலம் சுயலாபத்தைக் கருதியதாயும் இருப்பதுடன், சதா சஞ்சலத்திலிருக்கச் செய்விக்கும். இதைச் சதாகாலம் சகிக்க முடியாமல், கடைசியாக தாமரை இலைக்கும் தவளைக்குமிருக்கும் சம்பந்தத்தைப் போல (சம்சார சுகத்தில் அடிபட்ட) அன்பு தினே தினே மாறி துல்லியமாகிக்கொண்டே வந்து, பிறகு பிரபஞ்சத்திலிருக்கும் சகல ஆன்மகோடிகளிடத்தும் பரவிப் பொது நலத்துக்கீடுபட, சகலான்மாக்கள் தன்னிலும், தான் சகலான்மாக்களிலும் சஞ்சரிப்பதாகக் காணப் பிரவர்த்திக்கின்றது. இப்படிப் பிரவிர்த்திப்பதே ஆன்ம அன்பு. இந்தத் தசையையடைவது சகலருக்கும் சாதாரணமான காரியமல்ல. சம்ஸார கோலாஹலத்தில் சிக்கித் தவிக்கும் மாந்தர் யாவரும் பூரண ஆத்ம ஞானமடையவாவது, அல்லது அடையும்படி பிறருக்குப் போதித்து, போதிப்பதைப்போலவே தாமும் முன்னடையாக நடத்திக் காட்டவாவது எல்லோராலும் முடியாதென்று அவரவர் அநுபவமே சாக்ஷி சொல்லும்; ஆனதுபற்றியே, கருணாநிதியாகிய கடவுள் சுகர், சங்கரர் முதலானவர்களைப் போன்ற சிலரைச் சுத்த பிரம்மச்சாரிகளாயிருக்கச்செய்து அவர்

கள் மூலமாக இப்பிரபஞ்சத்தில் மிகமிஞ்சிய சிற்றின்பத்தில் ஜனங்கள் மூழ்கிக் கெட்டுப்போகாமல் தர்மோபதேசங்களைச் செய்விக்கின்றனர். இவ்வுலகத்திற்கு இல்லறமே சிறந்த தருமமாக இருக்கினும், பொது நலத்துக்கும், சத்தியத்துக்கும், சுவாமி பக்திக்கும் பாடுபடக் கருதுவோருக்குத் துறவறமும், பிரம்மச்சாரி விரதமும் சில சமயங்களில் சிரேஷ்டமானவையாகத் தோன்றுகின்றன. இல்லறத்திலிருக்கும்படியான அவ்வளவு கவலைகளும், அவ்வளவு தொல்லைகளும், துறவறத்திலும், பிரமச்சாரி விரதத்திலும் குறைந்திருக்கிற படியால் பிரம்மச்சாரிகளும், சந்நியாசிகளும் பொதுநலத்துக்கும், ஈசுவர பக்திக்கும் பாடுபடப் போதுமான காலமும், இடமும் மற்ற சாதனங்களும் அநுகூலமாகவிருக்கின்றன. இவைகளுடன் ஈசுவரனுடைய கிருபையும் இருப்பதால், இவர்களைத் தாக்கவரும் காமக்ரோதாதி மிருகங்களுக்குச் சற்றும் அஞ்சாமல், சுத்த வீரரைப்போல் அவைகளைக் கண்டித்துத் துண்டித்து விடுகின்றனர். இதற்கோர் திருஷ்டாந்தத்தைப் பாருங்கள்.

ஒரு காலத்தில் ஜனக மஹாராஜாவானவர், இப்பரதகண்டத்தில் பிரகாசிக்கும் மஹா ரிஷிகள், தபோதனர்கள், யதிகள், முனிகள் முதலானவர்களுடைய சரித்திரங்களையும், பரிசுத்த தன்மையையும்பற்றி விசாரிக்கையில், சுகப்பிரம்ம ரிஷியானவர் சுத்த கௌபீன சுத்தரென்று கேள்விப்பட்டு அதிசயித்து, அவருடைய பரிசுத்தத் தன்மையைப் பரீக்ஷித்தறியும் பொருட்டு, அவரைத் தருவித்து தகுந்த உபசாரங்களைச் செய்தும், அந்தப்புரத்தில் விட்டும், மன்மதனையே மயக்குவிக்கும் மேனியும், குயில்களை யிகழுங் குரலும், சந்திர பிம்பத்தைப்போன்ற முகாரவிந்தமும், சிறந்த மேனோக்குமுடைய மங்கையர் பலரைக் கொண்டு அந்தச் சுகப்பிரம்ம ரிஷிக்கு ஸ்நா

ன பான போஜனாதிகளால் உபசாரம் செய்யும்படி நியமிக்க; அந்த சுகர், இடத்தையும், தசையையும், காலத்தையும் அருகிற் சதாவிருக்கும் அழகு யாவுந் திரண்டு வந்த அப்ஸர ஸ்திரீகளைப் போன்ற அரிவையர் மோக வலைக்கு அகப்படாமல்,

"மன்னவன் சனகன் றந்த போகத்தின் மகிழ்ச்சி யாவும்
அன்னவன் முன்னஞ் செய்த வவமதித் துன்பம் யாவு
மின்னவன் மனதைச் சற்று மிழுத்தில விளமுன் றென்றல்
பொன்னசலத்தின் மிக்க பொருப்பினை யிழுக்க வன்றே",

என்னும் பாட்டில் சொல்லியபடி அந்த சுகப்பிரம்ம ரிஷியின் மனம், இளங்காற்றின் இடையிலிருக்கும் பேரு பர்வதம் எப்படி அசைவற்றிருக்குமோ, அப்படி மங்கையர் மோகத்தில் மயங்காமல் சலனமற்றிருப்பதைக் கண்டு அதிசயித்தனராம். இதனால் கேவலமான மானவ ஜாதியாருக்கு இயற்கை இலக்ஷணமாகிய அன்பானது சுக, சங்கராதி மஹாத்மாக்களுக்கு இல்லையென்றல்ல; அவர்கள் அன்பு கேவலம் உலக சிற்றின்பத்தைச் சாராது, பொது ஜன சமூஹத்தைச் சார்ந்திருந்தது. மானவ ஜாதியாருக்குச் சிறந்த இலக்ஷணமாகிய அன்பு அவர்களுடைய மனைவி மக்களைச் சார்ந்து நிற்காவிட்டால், அது பொது தருமச் செயல்களில் பேரவா உற்றிருக்கும்படித் தூண்டி விடுதல் இயற்கை. ஆகவே இவ்வித அன்பிற்குத் தான் ஆத்ம அன்பு என்று பெயர். இதைப்பற்றியன்றோ ஸ்ரீ தாயுமானஸ்வாமிகள் :—

"எவ்வுயிரு மென்னுயிர்போலெண்ணி யிரங்கவுநின்
தெய்வ கருணையருள் செய்வாய் பராபரமே"ம—என்றும்
"எல்லாரு மின்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே"

என்றும் பாடினார்.

தேசோபகாரமாகவும், ஜனோபகாரமாகவும் தம் பிராணனையே பலிகொடுத்து சுத்த வீரராக சுவர்க்கத்தை யடைந்த உத்தம புருஷர்களனைவரும் ஆன்ம அன்பு உடையவராவர்கள். இந்த ஆன்ம அன்புடையார், காணப்பட்ட பிரபஞ்சாதி பூதங்கள் யாவும் க்ஷணபங்குரமானவைகளாகக் கொண்டும், இவை யாவற்றிற்கும் காரண பூதரான பரமேசுவரரே நிரந்தரமான வஸ்துவென்றும், அவரை யடைந்தாலன்றி தமக்கு நிரந்தர சுகங் கிடையாதென்றுந் தெளிந்து, அவருக்குச் சதா தொண்டராகில், அப்போது அவர்கள் அன்பு பூரண அன்பாகிப் பிரகாசிப்பார்கள். இந்தப் பூரண அன்பைத் தான் பரமேசுவர பக்தி யென்றும், ஈசுவர விசுவாசமென்றும், ஈசுவர நம்பிக்கையென்றும், பற்பல தேசத்தார்களும், பற்பல பாஷைக்காரர்களும், பற்பல பெயர்களால் வழங்கி தொன்றுதொட்டு அநுஷ்டித்து வருகின்றனர்.

## பக்தியின் மூன்றாவது படி.

பக்தி எனனும பதம் வடமொழிப் பதம். இந்தப் பதத்திற்கு முன் சொன்ன முதலிரண்டு படிகளாகிய பீதி, பிரீதி, என்பவைபோல இதுவும் ப எழுத்திலாரம்பித்திருக்கிறது. இப்பதத்திற்குச் சரியான பொருள் என்னவென்று விசாரிப்போமாகில், அமரம் அல்லது நாமலிங்காநுசாசனமென்னும் கிரந்த வியாக்கியானமாகிய குருபால பிரபோதம் என்னும் கிரந்தம், துவிதீய காண்டம் 623-வதில் "பிஸ்ஸா ஸ்ரீபக்தமம் தொன்ன மோதனோ ஸ்ரீஸதிதிவி" என்ற சுலோகத்தினல் பக்தி என்னும் பதமானது "பஜ்ஜதி இதி பக்தம்; பஜ ஸேவயாம்=ஆசிரயிக்கக்கூடியது" என்றும், சமஸ்கிருத சப்தார்த்த கல்பதரு என்னும் பெரிய ஸமஸ்கிருத அகராதியில்,

பக்தி என்னும் பதத்துக்கு, 'பாக=பாகம், ஸேவாயாம்=ஸேவித்தல்' என்று பொருளாகுமென நானார்த்த ரத்னமாலா என்னும் கிரந்தத்தில் சொல்லப்பட்டிருப்பதாகவும், 'சப்த லிங்கார்த்த சந்திரிகா' என்னுங் கிரந்தத்தில் யோகே, பக்தியோகம், செய்தல், க்பாவே, அபிப்பிராயம் என்றாதிபொருள்கள் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும், சாண்டில்ய ரிஷியவர்கள் செய்த பக்தி சூத்திரங்களுக்கு வியாக்கியானம் செய்த ஸ்வப்பனேஸ்வர சுவாமிகள் அந்த கிரந்தத்தின் 56-வது சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்தபோது, பக்தி என்ற பதமானது பஜன் என்னும் பதத்துக்குப் பொருளென்றும், இந்த இரண்டு பதங்களும் பஜ் என்னுந் தாதுவிலிருந்துண்டானதென்றும்,—அதாவது பஜயதி, இபிஹி என்பதனால், பரமேசுவரரைப் பஜிக்குந் தொழிலுக்குப் பக்தி என்றும், பஜி என்ற பதம், சகார ஜகார இலக்கண சந்தி பேதங்களினால் பக்தி என்றாயிற்றென்றும் சொல்லியிருக்கிறார். மேலும், சைதன்னிய சுவாமிகள் பக்தி என்னும் பதத்திலிருக்கும் 'ப' எழுத்து பரமேசுவரரையும், 'க்' ஜீவாத்மாவையும், 'தி' சேர்ப்பதெதுவோ அது பக்தி என்றுசொல்வதற்கநுகூலமாகவே, வேத மூர்த்திகளான ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய சிவானந்தலஹரி என்னுங் கிரந்தத்தில் "அங்கோலம்நிஜபீஜஸந்ததிரயஸ் காந்தோபலம்ஸூசிகா, ஸாத்வீநைஜவிபும்லதாக்ஷிதிருஹம் ஸிந்துஸ்ஸரித்வல்லபம், பிராப்னோதீஹயதாததாபசுபதே! பாதாரவிந்தத்வயம், சேதோவ்ருத்திருபேத்யதிஷ்டதிஸதாஸா பக்திரித்யுச்யதே"=அழிஞ்சிற் செடியின் விதைகள் பக்குவமான காலத்தில் பூமியில் உதிர்ந்து மறுபடியும் யாதொருவருடைய பிரயத்தனமில்லாமல் அழி செடியில் தம்மிடத்தை நாடிச் செல்லுவதைப்போலவும், ஊசிகள்

காந்தத்தை நாடிச் செல்வதைப் போலவும், பதிவிரதையானவள் தன் நாயகன் பாதத்தை நாடிச் சேர்வதைப் போலவும், கொடிகள் விருக்ஷங்களை நாடிப் படருவதைப் போலவும், நதியானது சமுத்திரத்தை நாடிச் செல்வதைப்போலவும், சித்தத்தினுடைய வியாபாரமானது சதா பரமேசுவரருடைய பாதாரவிந்தங்களை நாடுவதென்பதெதுவோ அதற்குத்தான் பக்தி என்று செப்பியிருக்கின்றனர்.

மந்தரசாஸ்திரத்தில் பக்தி என்னும் பதம் ப-க-தி என்பதிலிருந்து உண்டாகியது என்றும், அதாவது ப— என்னும் எழுத்தினால் ஜனன மரணங்களைப் போக்கியும், க-என்னும் எழுத்தினால் மோக்ஷத்தைக் கொடுத்தும், தி- என்னும் எழுத்தினால் பிரம்மஞானத்தைப் பிரசாதிப்பது என்னும் பொருளைத் தருகிறதாம். என்றால், ஒருவனை பிரம்மஞானவானாகச் செய்தும், அதனால் அவன் ஜனன மரணாதி கஷ்டங்களையடையாமல் தடுத்து, மோக்ஷத்தை யடையச்செய்யும் சாதனத்திற்குப் பக்தி என்னும் பொருள் எனச் சொல்லப்பெற்றிருக்கிறது. சில சாஸ்திரங்களில் பரமேசுவரனே நமது நாயகனாகவும், நாம் அப்பரமேசுவரனுக்கு உண்மையான அடிமையாகவுங் கொண்டு நிற்கும் நிலைமைக்குப் பக்தி என்று சொல்லப்பெற்றிருக்கிறது.

விஷ்ணுபுராணத்தில் —“சாஸ்திரோக்தமாக சத்கருமங்களைச் செய்தும், சர்வேசுவரனுடைய ஆக்ஞையின்படி நடப்பதே பக்தி என்றும்,—சாஹித்ய சாஸ்திரத்தில் சாத்விக குணமுடையவனுடைய உண்மையான (பிரஹ்ம) ஞானமே பக்தியென்றும் சொல்லப்பெற்றிருக்கிறது. இத்யாதிகளால் பக்தி என்பது தனது சுயலாபத்தையும் உலகப் பற்றுகளையும் விட்டொழித்து, தம

க்கு யாதோன்றையும் தரும்படி வேண்டாமல், தமது உடல் பொருள் ஆவியைப் பரமாத்மாவினிடம் தத்தம் செய்வதே என்று ஸ்பஷ்டமாகும்.

இந்தப்பக்தியில், பிஹாஈதி பக்தி என்றும், அபிஹாஈதி பக்தி என்றும் இரண்டு வகுப்புகளுண்டு. இவைகளில் பிஹாஈதி பக்தி என்பது சாஸ்திர விதிகளின்படி அநுஷ்டித்தலாம். அபிஹாஈதி பக்தியானது நான்கு வகைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. அவைகளில் முதலாவது (1) கோபிகளைப்போலக் கடவுளிடத்துத் தமது காமியார்த்தங்களையடைய விரும்புவதாம். இரண்டாவது (2) இராவணனைப் போல பரமேசுவரனுக்கு பகையாளியாகவிருந்து அவரை அடைவதாம். மூன்றாவது (3) கம்சனைப்போலக் கடவுளிடத்தில் பயந்து அவரை அடைவதாம். நான்காவது (4) நாரதர், சனகர், சவுனகாதிகளைப் போல் பூரண அன்பினால் அவரை யடைவதாம். இந்நான்கில் முன்சொன்ன இரண்டு சாதனங்களைப்பார்க்கிலும், பின்சொன்ன இரண்டு சாதனங்கள் உபாசனையால் கிடைப்பனவாதலால், இவ்விரண்டே சிறந்த பக்தி சாதனங்களெனப் பெரியோர் கருத்து. ஆகவே இந்த பிஹாஈதி, அபிஹாஈதி என்னும் பக்தி மார்க்கங்களில் அபிஹாஈதி பக்திமார்க்கமே சிறந்தது. ஏனெனில், அபிஹாஈதி பக்தியானது சாஸ்திரபோதனையின்றி சுதந்தரமாகவே பரமேசுவரனிடம் இயற்கையாக இருக்கும் பூரண பக்தியானதினாலேதான்.

இந்த அபிஹாஈதி பக்தியையும், ஞானாங்க பக்தி, ஸ்வதந்திர பக்தி என இருவகைகளாக வகுக்கலாம். இவைகளில் ஞானாங்க பக்தியானது கல்வி, கேள்வி, ஞானத்தினால் கடவுளை யடைவதாம். ஸ்வதந்திர பக்தியானது யாதொருவருடைய உதவியற்று கிஞ்சித்ஞானத்தினால்

பரமேசுவரனை நேராக அடைவதாம். ஆனதுபற்றியே பகவத் கீதையில் "மோக்ஷத்தை விரும்புகிறவன் தனது முழு ஹிருதயத்தோடும், தனது முழு ஆத்மஞானத்தோடும் என்னை நேராக வணங்கட்டும்" என்று சொல்லப் பெற்றிருக்கிறது.

மேலும் இந்த பக்தியானது உத்தமபக்தி, மத்திம பக்தி, பிரகிருதி பக்தி என்று சொல்லும்படியான மூன்று விதங்களாயிருக்கின்றது. இவைகளில், உத்தமபக்தி யானது பிரபஞ்சப் பொருள்களிலெல்லாம் பரமாத்மாவே இருப்பதாகவும், பரமாத்மாவுக்குள் எல்லாப் பொருள்களுமிருப்பதாகவும் காண்பதேயாம். மத்திம பக்தி யானது பரமேசுவரனை விஸ்வாசித்தும், அவனது அடியார்களைத் தமது அன்பர்களாகக்கொண்டும், விரோதிகளின் நட்பை விட்டொழித்தும், காருண்யம், தயை, பச்சாதாபமுதலான சுகுணங்களைப் பெற்றிருத்தலாம். பிரகிருதி பக்தியானது பரப்பிரம்மத்துக்குப் பிரதிநிதியாக விக்கிரகங்களை வைத்துப் பூஜித்து பக்தர்களை விசுவாசிக்காமல் வீண் பக்தியைக் காட்டுதலாம். இதையே மூடபக்தி என்று சொல்லப்படும். பாகவத புராணத்தில், பக்தியானது, (1) சாத்வீக பக்தி, (2) இராஜசீக பக்தி, (3) தாமசீகபக்தி என பின்னும் மூன்று விதங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இவைகளில் சாத்வீக பக்தியானது பிரஹ்லாதரைப்போல யாதொரு பிரதிபலனையும் விரும்பாமல் பகவத் பக்தி செய்வதாம். இராஜசீக பக்தியானது துருவரைப்போலவும், கஜேந்திரரைப்போலவும் யாதாமொரு வேண்டுதலைப்பற்றிச் செய்வதாம். தாமஸீக பக்தியானது இராக்ஷதனாகும் விருத்திராசுரன் என்னும் பகைவனை வெல்லுவதற்கு தேவேந்திரனைப்போல் வரம் பெறவேண்டிச்செய்வதாம். மேலும், பக்தியானது மானசீக பக்தி, வாசகபக்தி, காயகபக்தி என்று வகுக்கப்பட்டி

299—வைச.

ருக்கிறதோடு ஆர்த்தபக்தி, ஜிஞ்ஞாசுபக்தி, அர்த்தார்த்த பக்தி, ஞான பக்தி என பின்னும் நான்கு வகைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

இவைகளில் ஆர்த்த பக்தி யானது துருவபதி முதலானவர்களுக்கு ஆபத்து வந்தபோது காட்டியதைப் போல கஷ்டகாலத்தில் காட்டும் பக்தியாம். ஜிஞ்ஞாசு பக்தி யானது, பரீக்ஷித்து பரலோக வாழ்வைக் கருதிச் செய்ததுபோலாம். அர்த்தார்த்த பக்தி யானது இவ்வுலக சுகத்தைக் கருதி துருவர் செய்தது போலச் செய்வதாம். ஞான பக்தி யானது பிரஹ்லாதர் போல பூரண பாரமார்த்திக தசையையடையச் செய்தது போலாம்.

ஸ்ரீமத் இராமாநுஜாசாரியாரவர்கள் தாம் இயற்றிய வேதார்த்த சங்கிரஹமெனும் கிரந்தத்தில் பக்தியைப்பற்றி பின்வருகிறபடி சொல்லுயிருக்கின்றனர். அதாவது,

உலகில், சுயலாபத்தை முற்றும் விட்டொழித்து உடல், பொருள், ஆவியைப் பரமாத்மாவிடம் தத்தஞ்செய்யும் மனோகத்துவமெதுவோ அதுவே பக்தியாம் என்றும், அது சாதன பக்தி என்றும், சாத்திய பக்தி அல்லது பரபக்தி என்றும் இருவகையாக வகுக்கக்கூடியதென்றும், இவ்விரண்டில் முதலாவதாகிய சாதன பக்தி என்றால்=மனம், வாக்குக் காயத்தைப் பரிசுத்தமாக்கியும், தான் செய்யவேண்டிய கடமைகளைத் திருப்திகரமாகச் செய்தும், பகவத்கீதையில் சொல்லியிருக்கிறபடி காமக் குரோத லோப டம்ப அஹங்காரங்களை விட்டொழித்துக் கொண்டும், ஜனன மரண பிணி மூப்புகளைப்பற்றி அடிக்கடி சிந்தித்தும், சுக துக்கங்களைச் சமமாகக்கொண்டும், கஷ்ட நிஷ்டூரங்களைச் சகித்தும், மனைவி மக்களாதி சம்

சார சுகத்தில் வெறுப்புற்றும், சுயலாபத்தைக் கருதாமலும், சத்தியம், சாந்தம், பரிசுத்தம், குரு விஸ்வாசத்துடனும் சுத்தமான விடத்திலிருந்து பரமாத்மாவைத் தவிர வேறு பொருளைச் சற்றுங் கவனிக்காமலும், இயமநியமாதி அஷ்டாங்க யோகத்தினால் சுத்த ஞானம் பெற்றுழைத்து வருதலென்றும் இதனால் பரபக்தி தசையை யடையலாமென்றும், இப்படிப்பட்ட சாதனங்களால் அடையக்கூடிய பரபக்தியானது பரமாத்மாவினிடம் பூரண அன்பு வைப்பதனால், ஜீவாத்மா சமாதி தசையடைந்து, அந்த பரமாத்மாவை பிரத்தியக்ஷமாகப் பார்க்கச்செய்யுமென்றும், இந்தத் தசையை யடைந்த பக்தன் சகல ஆசாபாசங்களற்று, கேவலம் தனது பிராரப்தகருமம் முடிகிற வரையில் ஜீவன் முக்தனாக ஜ்வலிப்பானென்றும், இந்தத் தசையில் அவன் யாதாவது கருமத்தைச் செய்யில அதைக் கேவலம் உலகப்பொதுநன்மைக்கு செய்து ஈசுவரார்ப்பிதம் செய்வானென்றும், இந்தத் தசைக்கு வேதனம் அல்லது நிதித்பாசனமென்றும், இதுவே மோக்ஷத்தையடைய சுவல்ப சாதனமென்று மாண்டூக்யாதி உபஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கிறதென்றும் சொல்லியிருக்கின்றனர்.

இப்படிப் பக்தியில் பல வகுப்புகளும் விதங்களுமிருப்பதாகத் தோற்றினும், உற்று நோக்குபவருக்கு இதன் கருத்துகள் பட்டப்பகல்போலப் பிரகாசமாகும். அதாவது பக்தி என்பதினால் பரமாத்மாவினிடம் பூரண அன்பு வைப்பதனால், பக்தனுடைய ஜீவாத்மாவானது, பரமாத்மாவுக்குள் ஐக்கியமாகிய விடத்து, மோக்ஷம் அடைவிப்பதாம். இதையே பக்தியோகமென்று சொல்லப்பெறும். தமிழ் நாட்டார் இந்தப்பக்தியை பத்தி என்று சொல்வது வழக்கம். பக்தி, பிரியம், காதல், அன்பு என்பன ஒரு பொருட் சொற்களாம்.

பந்தி என்பது பற்றுதல் என்னும் பொருள்பெற்ற ஒரு சொல்லாம். பற்றுதல் என்னுமிடத்து பற்றப்படுவ தற்கு ஒரு பொருளும், பற்றுவதற்கு ஒரு பொருளும், பற்றுதலாகும் ஓர் தொழிலும் வேண்டப்படுவன. அதாவது பற்றுதல் என்பது தன்னோடு தொடர்புடையா ரிடத்தில் நிகழும் அன்பு அல்லது உள்ளக்கிளர்ச்சியாம். நான் என்னும் பதத்திற்குத் தேகமே பொருளாகக்கொ ண்டு அதன் சம்பந்தமான மனைவி, மக்கள், தன தான் யாதிகளாகிய பிரபஞ்சப் பொருள் கூடியதென்றும், அந்த நான் என்னும் பதத்திற்கு ஜீவாத்மாவைப் பொருளாகக்கொண்டு, அதன் சம்பந்தமான பரமாத்மா ஒன்றும் ஆகப் பற்றப்படும் பொருள்கள் இரண்டாம். பற்றும்பொருள் ஜீவன் அல்லது ஜீவாத்மா; பற்றுதல் செய்வதற்குக் கருவியாக இருப்பது மனம் அல்லது உள்ளமாம். ஆகவே ஜீவாத்மாவானது மனதைக் கருவியாகக்கொண்டு, பிரபஞ்சப் பொருள்களிடத்தும், பரமாத்மாவினிடத்தும் பற்றுதலைச் செய்வதற்குப் பக்தி என்று சொல்லப்பெறும்.

இப்பக்தியானது பாச விஷயமாகிய பிரபஞ்சப் பொருள்களைப் பற்றுகையால், "மாறிமாறிப் பல்பிறப் பும் பிறந்தும் செத்தும்," என்றபடி, 'பிறந்திறந்து உழல்வதாகிய துக்கச்சுழலிற் சூழ்ந்துகிடந்து அலை' என் னும்படியான துன்பமும், பரமாத்மாவைப் பற்றுகை யால், அத்துன்பங்களினின்று நீங்கி அந்தமில்பேரி ன்பமான நித்தியாநந்தப் பெருவாழ்வைப் பெறுவதும் பயனாகும். ஆதலால்—

"பிறந்தேன் பெற்றமக்கள் பெண்டிரென்றிவர் பின்னுதவா
தறிந்தேன் நீபணித்த அருளென்னும் ஒள்வாளுருவி
எறிந்தேன் ஐம்புலன்க ளிடர்தீர எறிந்துவந்து
செறிந்தேனின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே."

என நம்மாழ்வாரருளியபடி, பிரபஞ்ச விஷயத்தில் பற்றுதலைத் துறந்து, 'துறந்தமையால் சிறந்தேன் நின்னடிக்கே அடிமை' என்றபடி பரமாத்மாவிடத்திற் பற்றுதலைச் செய்ய முயற்சி செய்யவேண்டும். நல்லொழுக்கம், தீயொழுக்கம், கூடாவொழுக்கம் என ஒழுக்கம் பலவகையாக விருக்கினும், அடைகொடாது ஒழுக்கம் என்று கூறுதலினாலே, நல்லொழுக்கம் ஒன்றினையே குறிப்பிப்பதுபோல, இங்கு அடையின்றிகூறும் பக்தி என்னும் பதத்திற்குப் பரமாத்மாவிடத்துப் பக்தி செய்வதாகிய பரமேசுவர பக்தியையே பொருளாகக் குறிக்கும். இந்தப் பரமேசுவர பக்தியில் உறைந்து நிற்பதனால் தான் பாசப்பற்று நீங்கவேண்டும். அனது பற்றியே,

"பற்றுகபற்றற்றான்பற்றினைஅப்பற்றைப்
பற்றுகபற்றுவிடற்கு"

எனப் பொய்யாமொழிப்புலவர் சொன்னார். இப்பாசப்பற்று நீங்கவே, பிறப்பற்ற வீடுபேறுறும். இதனை "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்," "அற்றது பற்றெனில் உற்றது வீடு;" என்று முன்னோர் மொழிந்திருக்கின்றனர். இப்பூவுலகில், ஒருவர் மற்றொருவரிடத்திற் பற்றுவைக்குங் கால், அவருக்கும் இவரிடத்துப் பரஸ்பரம் பற்றுண்டாவது இயல்பேயாம். அப்படி உண்டாகாதிருக்குமாயின் அவரை யாரும் மதியுடையாரென மதியார். இதுபோலவே, எல்லாம் வல்ல பேரறிவுடைய பரமேசுவரரிடத்து பற்று அல்லது பக்தி வைக்குங்கால் அவரும் நம்மிடம் பக்தி வையாதிரார். ஆனல், நாம் அவரிடத்து வைக்கும் பக்திக்கும், அவர் நம்மிடத்து வைக்கும் பக்திக்கும் பேதமுண்டு. எப்படியெனில், நாம் அவரிடம் வைக்கும் பக்திக்கு அன்பு என்றும், பரமேசுவரன் நம்மிடத்து வைக்கும் பக்திக்கு அருள் என்றும்

சொல்லலாம். இதன் உண்மையை விரிவாகக் கூறுமிடத்துத் தாழ்ந்தோர் உயர்ந்தோரிடத்து வைக்கும் பக்திக்கு அன்பு என்றும், உயர்ந்தோர் தாழ்ந்தோரிடத்து வைக்கும் பக்திக்கு அருள் என்றும் சொல்லப்பெறும். இதனை "அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம், புல்லார் புரளவிடல்," என்னும் திருக்குறளுக்கு உரையாசிரியர் உரைகூறுமிடத்து,'அருளொடு' என்னும் பதத்திற்கு அரசன் குடிகளிடத்து வைக்கும் பக்தியையும்,'அன்பொடு' என்னும் பதத்திற்குக் குடிகள் அரசனிடத்தில் வைக்கும் பக்தியையும் பொருளாகக் கூறி இருக்கின்றார். இப்படிக் கூறியவதனால் பக்தி என்பதும் அன்பு என்பதும் ஒரு பொருள் பயப்பனவாயிருப்பினும், பரமேசுவரனிடத்தில் உலக விருத்தியோடு கூடிநின்ற நிலைக்குப் பக்தி என்றும், விருத்தி இறந்த நிலைக்கு அன்பு என்றும் ஆன்றோர் அறைந்திருக்கின்றனர். இவற்றில் பக்தி விருத்தியோடு கூடினதென்பதை "முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப் பத்திநெறி யறிவித்து" என்றும், அன்பு விருத்தி இறந்த நிலை யென்பதனை, "அன்பினில் விளைந்த ஆரமுதே" என்றும் ஸ்ரீமாணிக்க வாசகரும், "அன்பாவாய், ஆரமுதாவாய், அடியேனுக்கின்பாவாய், எல்லாமும் நீயாவாய்," "ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே" என ஆழ்வாரும் சொல்லி இருக்கிறார். ஆகவே பரமாத்மாவினிடம் ஜீவாத்மாவானது யாதொரு பிரதிபலனைக் கருதாமலும் உலகப் பற்றுகளை முற்றுமற்று கலந்திருப்பதேயாம். இதுவே பக்தியோகமென்னப்படும்.

உண்மையான பக்தி இன்னதென்றும், உண்மையான பக்தனுடைய இலக்ஷணங்கள் இப்படிப்பட்டவைகளென்றும் இதைப் படிப்பவருக்கும், கேட்பவருக்கும்

வியக்தமாகுமாகையால் இனிமேலாகிலும் உண்மையான பக்தியை யநுஷ்டித்துப் பாவப்பிணிகளைப் போக்கிக் கொண்டு ஸ்ரீ பூரணாநந்தத்தை அடைவோமாகவும்.

இப்படி பக்தியைப்பற்றி நமது நாட்டு புராதன சுருதி ஸ்மிருதி புராணங்கள் சொன்னதன்றியில், நாரதர், பராசர், புண்டரீகர், அம்பரீஷர், பீஷ்மர், அஜாமளர், விபீஷணர், துருவர், பிரஹ்லாதர், துரௌபதி முதலானவர்களும், மத்திய காலத்தில் ஜனித்த சங்கராசாரியர், நீலகண்ட சிவாசாரியர், இராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர், சைதன்யர், இராமாநந்தர், வல்லபாசாரியார், குரு கோவிந்தர் முதலான மஹோத்தாரர்களும்; இராமாநந்தர், ஜயதேவர், துளசீதாஸ், துக்காராம், கபீர்தாஸ், நாமதேவர், ஞானதேவர், நிவிர்த்திதேவர், முக்தாபாய், கூர்மதாஸர், ராக்கர், கோராகும்பர், ஜகமித்ரர், நாகநாதர், சோகா பரமாநந்தர், நரஹரிபக்தர், ஜானிபாய், முக்சேந்திரர், சாரங்கர், சோகமவுனர், பத்மநாபர், ரோகிதாசர், பீபாசார், பராங்குசர், இராமமோஹனர், தேவேந்திர நாதர், கேசவ சந்திரர் முதலான பக்த சிரோன்மணிகளும்; தென்னாட்டில் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலான சைவசித்தாந்த பூஷணர்களும், நந்தனார் முதலான 63-நாயன்மார்களும்; தாயுமானவர், பட்டணத்தார், பத்திரகிரியார் முதலான பக்த சிரேஷ்டர்களும்; பெரியாழ்வார் முதலான வைணவ சிகாமணிகளும் பக்தி மார்க்கமே இகபர சுகத்துக்கு இன்றியமையாத சாதனமெனக்கண்டு, தாமும் அநுஷ்டித்து, பிறரும் பின்பற்றும்படி பிரபல நியாயங்களுடன் போதித்தனர்.

# TRUE FAITH.

## Exhortation.

O YE who profess to be God's followers, establish your hearts in faith, lest in the day of trial ye be found wanting.

For temptations abound in the path of life, and storms and perils there are many, and whoso encountereth them without faith shall surely fall.

Neither your boasted wisdom nor goodness nor piety shall stand in the day of trial; these shall crumble even at the first shock.

For faith is the foundation whereupon these must stand, and if faith be wanting, shall not the house fall?

Therefore build your life on the rock of True Faith, and though roaring surges beat against it, it shall not give way.

### FAITH IN GOD.

FAITH is direct vision; it beholdeth God and it beholdeth immortality.

It is no dogma of books, no tradition of venerable antiquity.

It relieth upon no evidence but the eye-sight, and will have no mediation.

It neither borroweth an idea of God from metaphysics nor a narrative of God from history.

It doth not bow its neck before a logical or historical deity.

It adoreth the ever-living and ever-present Reality.

The God of faith is the sublime I AM.

In time He is always *now*, in space always *here*.

Hence faith has a short creed, which owns no pilgrimage to distant age or clime, for nearer than aught can be is God the immanent Spirit.

As outwardly in all objects so inwardly in the recesses of the heart faith beholdeth the living God.

The eyes close, and the inward kingdom revealeth God.

There in ineffable beauty He shineth as the Life of life; the dependent soul quickened by mysterious animation worshippeth Him, and lentereth into joyful communion with Him.

The eyes open, and all objects in external nature reveal the resplendent Spirit and breathe His presence.

East, west, north and south, He filleth all space.

The universe is God's vast cathedral, where nature both quick and inanimate chanteth hymns unto His glory in solemn music.

The soul roused by sympathy joineth the service and swelleth the chorus.

Thus within and without faith liveth always in the midst of blazing fire, the fire of God's presence.

It is a presence to be seen and felt, not learned or remembered.

It is a presence not be put by, so pervading, so interwoven with life and nature.

Verily Divine presence hath electricity; it quickeneth the heart and the nerves, and maketh the very hairs of the body stand erect.

Hence true worship is no ceremony or form in honour of a dead or distant deity, but the living homage of the soul unto the living and near God.

But the near is dear by nature's law.

And God is both living and loving.

Hence faith holds living and loving communion with Him who is dearer than life.

It establisheth a personal relation, even that between the son and the father.

It buildeth a domestic altar in the heart for the Author of the universe, and saith—*My* God, *My* Father.

The Thou of its prayers is as much a reality perceived by the spiritual eye as a personal God held in personal attachment.

The vividness of preception is equal to the warmth of the heart, for in faith knowledge and love, belief and trust are one.

## FAITH IN IMMORTALITY.

Faith liveth in anticipation.

The future is its dwelling-house.

It fixes the foundations of life on the realities of the next world and eternity, not on the vanities of this world and time.

299—श्रद्धा.

Verily the world is a toy shop and time a running stream, and true wisdom shuns both.

The fool delighteth in toys and doth revel in vanities, but faith is not deceived thereby, it seeketh substance and reality.

It knoweth well that all is vanity and hollowness here, and never selleth its desires, hopes and affections to temporal objects.

It is above all the fleeting phenomena of the world, above its joys and sorrows.

Earthly afflictions cannot torment it, nor can earthly sorceries fascinate it, for it is dead unto their influence.

Faith is a new creation.

It is the death of the flesh and the regeneration of the spirit.

Hence it is dead to all the temptations and fears of this world, and is alive unto God and eternity.

It is ever encompassed by the realities of eternity, it firmly walketh on its solid ground, feedeth on its luxuriant harvests, and stretcheth its endless life on the lap of the Ever-lasting Spirit.

It liveth in and unto the next world, and careth solely for immortal life.

And so far as this little world is preparatory thereto, it engageth the serious thought of faith.

Thus where others purchase toys and dance in giddy merriment, faith gathereth discipline and provisions for immortality.

299—[illegible].

Its in the vast kingdom beyond the grave, v ...ecognises its true home and its Father, ...s comforted.

Th world is to it not an abstract concept a scene of homely realities.

Therein it feels domestic interest, its sweet and blessed home for ever.

How to render that home happy is its sole object and aim.

To dwell for ever in that home under the guradianship of Infinite Mercy, free from sin, far from suffering, and secure against death, is its only hope and prayer.

## FAITH IN THE MORAL LAW.

WHEN the heart is fixed on God and immortality and perceiveth its relation to both, it devoteth itselff to the one and prepareth itself for the other.

Thus faith ever striveth after righteousness, for righteousness is the true service of God and the provision of immortality.

And as the law of righteousness is absolute and immutable even as the will of the Supreme Governor.

Faith upholdeth it in its integrity and fulness.

In all that it thinks and says and does it is pledged to adhere to truth, all truth and nothing but the truth.

And with the unswerving fidelity of a covenanter it followeth in all circumstances that which is right and abjureth what is wrong.

It despiseth compromise and hateth fractional religon which divideth its service between God and Mammon.

It serveth God as its only Master.

It never justifieth evil, whether great or small.

The least contact with iniquity is abomination and defilement in its sight.

It loveth purity and holiness, and abhorreth every form and manner of sin.

It strictly followeth in all things the high standard of God's moral law, and layeth up purity and righteousness with great care.

Faith conquereth weakness, want and woe, for it findeth in God manifold power, sustenance and joy.

It is the victory of the spirit over the flesh, of truth over the world.

Faith counteah the thought of weakness weakedness and the language of weakness and abomination.

*I cannot*—Faith never uttereth that odious phrase.

For betwixt the will and work it findeth the path straight.

That it willeth that it doth, and never doubteth success.

Faith is a mighty giant whose nerves are of steel and whose eyes speak defiance.

It feareth no man and despiseth the threats and intimidations of the mighty.

Sovereigns quail before it, and from crowned heads it exacteth homage.

It prostrateth millions in open encounter and planteth God's banners before the cannon's flash.

It worketh wonders and achieveth impossibilities, and the world in amazement doth say —what manner of man is this who worketh these miracles?

For faith is strong in the strength of the Almighty and hath invincible power.

## RESIGNATION.

Faith is the promise of daily bread and its fulfilment.

Nature is its granary and the world its storehouse of provisions.

Its habitation is in the regions of content and it knoweth no want.

Where others cry for food it mocketh privation and enjoyeth life with confidence.

It taketh no thought for the morrow and deemeth it scepticism to lay up provisions for the future.

For faith liveth in resignation and hath absolute trust in Providence.

It dwelleth secure under the kind care of that God who feedeth the fowls of the aird thean

beasts of the wilderness and the fishes of the sea and the trees which do grow without toil.

Confident and thoughtless even as they, faith careth not for food or raiment.

And as they are cheerful and glad though nought be in store, even so is faith albeit penniless and ragged.

## JOY.

FAITH rejoiceth in the All-Blissful God and findeth joy immeasurable in His service.

It is ever calm and is not ruffled by the fluctuations fickle fortune.

It is the deep full ocean of peace and doth never ebb.

Though midnight gloom surrounds it, it enjoyeth within meridian sunshine.

With forbearance and resignation it blunteth the edge of sorrow.

With hope and patience it converteth the bed of tuorns into a bed of roses.

It is beyond the reach of penury, for its riches are the treasures of grace.

Even on death-bed it looketh bright and cheerful, and besetting clouds do but add to its beauty and glory.

## SELF-SACRIFICE.

FAITH is the surrender of self to God.

It thinketh not what it shall eat or drink, but how it shall serve and glorify the Lord.

It sacrificeth self and the world on the altar of God, that it may say with wholeness of heart—I am thine.

It selleth all it hath and followeth God, and reserveth nought for self.

It dedicateth its whole life, heart and soul, mind and body unto Him and saith—Not my will but thy will be done.

It thinketh not of joy or sorrow, but maketh duty its only concern and the divine will its sole aim.

But the maturity of faith is love, for love completeth the union which faith beginneth.

Then duty and desire harmonize.

Then the soul saith—I and my Father are one.

## HUMILITY.

FAITH has no merit in its own eyes. It liveth more in the passivity of obedience than the activity of the will.

It acteth under extreme force of moral compulson, which enfeebleth the sense of will.

It delighteth in resignation not egotism, in prayer not self-sufficiency, in the Master's glory, not its own.

Faith is but the instrument of God in good works, and never ventures to think, *I* do.

Only the sins and shortcomings are its own.

God is glorified in its godliness, but self convicted in its failings.

So likewise all the glory and all the praise for good works it invariably giveth unto the Lord.

But suffering and odium, tribulation and death it readily accepteth as its portion.

It boasteth not of the good that is done, but it feels mortified for what is not done.

It keepeth account only of its omissions and imperfections, its misdeeds and idleness.

Though it may do much good and bless untold nations and generations it knoweth well the light is not its own, and belongeth to the Son of Holiness.

Such is its mysterious dependence upon the Master that humility is at once its criterion and ornament.

By it faith is known, in it lies its beaty.

## WISDOM.

Faith is true wisdom, which is noble and divine.

It loathes prudence, which is earthly and mean.

Prudence is the arithmetic of fools.

It weigheth consequences, counteth loss and gain, and measureth utility, but hath no regard for truth.

And as the wind tosseth the dry leaf so do fear and shame lead the worldly-wise hither and thither.

They have no wisdom of their own but traffic in other men's opinions, always using those in demand.

They are not their own selves, but other men's selves.

Having no principle to guide them they turn with the wind and move along the tide.

A rude rustic is wiser than they, and a child can overturn the very foundations of their philosophy.

Deluded men! wise in their own conceit, they are but the slaves of fashion and popularity.

But faith never courteth popularitp nor doth it accommodate itself to fashion.

It is firm and unyielding and is built on immovable principles.

Its wisdom is the wisdom of truth, which never varies though fire should become as cold as ice and the sun breathe darkness.

Faith has originality, freedom and self-reliance, and never deigneth to take lessons from the world.

It firmly walketh upon the counsels of conscience, which are the revelations of God.

## PROGRESS.

FAITH is perpetual progress heavenward.

It disdains the beaten track, it soars while others crawl.

It scorns the world's control and defies its command—Thus far shalt thou go.

God is its aim, it refuses to obey the law of limitation.

Progress is its life, to stop is to die.

The highest form of virtue doth not satisfy ti, though it may contain the whole of the world's righteousness.

Above the highest it seeketh a higher still, and beneath the deepest it seeketh a deeper still.

## SINGULARITY.

FAITH is singular and moveth in its own ways, which are past finding out.

Geography cannot find its latitude and longitude.

Nor can arithmetic compute its age, nor history portray its true life.

Philosophy hideth its face in shame after vainly labouring to ascertain its why and wherefore.

Veriey its actions are unintelligible to the world, and its life is a deep mystery.

Hence it is charged with idiocy and madness.

Its enthusiasm is indeed madness in the eye of the world, and all its movements are folly.

Faith is fool because it mocketh the idols which the world doth gravely worship and setteth equal value on gold and straw.

And faith is mad because it forsaketh the ways of the world and with wild enthusiasm effecteth its peculiar purposes and maketh much mischief.

It hath no respect for custom and speaketh and acteth outright as it thinketh,

It findeth honour in slander and joy in privation and it danceth in the midst of great tribulation.

It smileth where others weep, and it goeth into sack cloth and mourning where others exult.

Faith has many eccentricities which the world must needs deride.

But these eccentricities have their centre, which verily is higher than any the world can see or conceive.

Faith dwelleth high in its own world and is above all earthly computations and sympathies.

And is known only to cognate spirits who, of whatever age or clime, live with it in that invisible world.

## PERSECUTION.

THE progress of faith is to be gauged by its distance from the world.

The more it advances the fewer its companions, the smaller the circle of sympathy, and the more inveterate the world's antagonism.

Persecution is inevitable; mild at first but deadly in the end.

It is the price due to the world for living above it.

Hence some laugh at it, others hate it, some revile it, others denounce it.

The world cannot bear with it and at last puts away this living fire with dirt and death.

Ridicule is the seal wherewith the world marks its disapprobation of faith when it begins its mission.

As faith advances the reprobate world waxes wrathful and malicious, charges it with arrogance and selfishness and condemns it as a dangerous imposter.

If faith still persists in its obstinate work the world's tribunal passes severer sentence.

Deadly tortures are inflicted, and behold he martyr of faith glorified amid the blaze or on the cross!

Thus ridicule and contempt, anger and hatred, slander and reviling, coercion and torture' violence and death, these are the unavoidable recompense of them that seek the honour of living unto freedom and faith in this wicked world.

## DEIFICATION.

AND yet some there are who through simplicity and ignorance run to the other extreme.

They kneel down and offer homage and worship to faith for they think it to be of God.

They idolize it, attribute to it all manner of supernatural power and adore it as God incarnate.

But the phenomena of persecution and deification are essentially one and betray the same ignorance.

Whether men crucify or deify they only confess the superhuman excellence of faith and their inability to comprehend it.

The one is nagative, the other is positive testimony.

The one hateth away faith from the world and thereby acknowledgeth it is not earthly, the other exalteth it to the skies and confesseth it is divine.

## RESURRECTION.

THE world cannot discern faith when it lies too near.

And it requireth due distance to lend clearness to the sight.

Hence it is that the prophet who is hated and condemned at home is honoured abroad, and while the land of his birth denies him, distant nations gratefully acknowledge him as their own.

Or the world needeth a glass to rectify its vision, and this death alone presents.

For through death faith is seen in truye colours and better understood.

Then the refraction through prejudice, envy and ignorance is corrected.

Hence unto the prophet that leaveth the world loaded with indignities a shrine of posthumous glory is built.

And thus it is that faith shineth more in resurrection than in life.

*—Brahmananda Kesava Chandra Sen.*

# 5-வது அத்தியாயம்.

## பிரார்த்தனையின் இலக்ஷணம்.

## PRAYER.

வினா—பிரார்த்தனை என்பதென்ன?

விடை—பிரார்த்தனை என்றால்-நமக்கிருக்கும் குறைவுகளை நீக்கிக் கொள்ளவும், இல்லாதவைகளைக் கொடுக்கும்படிக்கும், பிறரை வேண்டிக்கொள்வதாம். இங்கு பிரார்த்தனை எனில், பரமேசுவரனுடைய கட்டளையைக் கடந்து நாம் செய்த குற்றங்களுக்காக அநுதாபப்பட்டு அப்பாவங்களை மன்னித்தருளவும்; ஆத்மோஜீவனத்திற்கு வேண்டிய சத்தியம், சாந்தம், பக்தி, பரிசுத்தம், முதலானதுகளைக் கொடுக்கவும்; துர்மார்க்கங்களுக்கெல்லாம் மூலமான காமக்குரோதாதி வலைகளுக்குட்படாமல் விலக்கவும்; சன்மார்க்கமாக வாழ சக்தியைக் கொடுக்கவும் (பரமேசுவரனை) ஹிருதயபூர்வமாக வேண்டிக் கொள்வதேயாம். இந்தப் பிரார்த்தனையானது ஸ்தோத்திரம், வந்தனம், தியானம், அநுதாப முதலான பல அங்கங்களையுடைய ஈஸ்வரோபாசனையின் ஒரு அங்கமாம்.

வினா—ஈசுவரோபாசனையின் ஓரங்கமாகிய பிரார்த்தனையானது ஆரியவர்த்தத்தில் ஆதியானதா? அல்லது மத்தியகாலத்தில் கிறுஸ்து முதலான மதங்களினுலுண்டாகியதா? அவைகளைப் பற்றி சற்று விவரமாகச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—இப்பிரபஞ்சத்திற்கு சிருஷ்டிகர்த்தனும், பிரபுவும் உண்டென்னும் நம்பிக்கை எங்கெங்கு உண்டோ, அங்கெங்கெல்லாம் ஈசுவரோபாசன பிரார்த்தனை ஆதிமுதல் இன்றளவும்

இருக்கிறதாக உலகசரித்திரம் முறையிடுகின்றது. காடு கரடு பர்வத பிரதேசங்களி லிருக்கும் கல்வியறிவுஞ் சீர்திருத்தமு மற்ற மூடர் முதல், நாடு நகரங்களில் வசிக்கும் ஜனசமூகத்தாரும், தத்தம் கல்விகேள்விகளுக் கேற்றபடி, தம்மைச் சிருஷ்டித்துப் பாதுகாக்கும் பரமேஸ்வரனை பூஜித்து வருவது இப்போதும் பிரதியக்ஷம். மானவஜாதியார் வீடுவாசல்களைக் கட்டிக்கொள்ளத் தெரியாதிருந்த காலத்தில், கடவுளை காடு வனாந்திரங்களில் வணங்கி பூஜித்தவர்கள், வீடுவாசல்களைக் கட்டத் தெரிந்தபிறகு தத்தம் கடவுளுக்கும் கோயில் கோபுரங்களையுங் கட்டி வணங்க ஆரம்பித்தார்கள்; ஆகையால், பிரார்த்தனையானது சிருஷ்டிகாலமுதல் இருந்து வருகிறதென்பது திண்ணம். நாகரீகமற்ற மனுஷர்கள் தம்மையாளும் அரசர் முதலான பிரபுக்களை வணங்கி பிரார்த்திப்பதற்கு முந்தியே, ஈசுவர பிரார்த்தனை இருக்கிறதாக பிரபல நூல்கள் ஸ்பஷ்டமாகுகின்றன.

நமது நாட்டார்களின் நான்கு வேதங்களில் ஒன்றாகிய ரிக்கு வேதத்தின் பெரும்பாகம் ஈசுவர பிரார்த்தனையேயாகும். அப்பாட்டுகளினால் சுரங்கள் ஜனித்து, அவற்றால் சங்கீதமுண்டாகியது. அக்காலத்திய ஆரியர்கள் பாலியதசையி லிருந்தபடியால் தமக்கு எதெது சிறப்பும், மகிமையும் பெற்றதாகத் தோன்றிற்றோ, அவைகளைத் தேவதாம்சங்களாகக் கொண்டும், சூரிய சந்திராதிகளையும்; மற்றும் அக்கினி வாயுவாதி பஞ்ச பூதங்களையும் பிரார்த்தித்து வந்தார்கள். பிறகு கல்வியும் ஞானமுஞ்சற்று விருத்தியாக, அச்சூரிய சந்திரர்கள் ஈசுவரனுடைய நேத்திரங்களாக பாவித்துப் பாடிப்பிரார்த்தித்தும், கடைசியில் அச்சூரிய சந்திராதிகளும், மற்ற பிரபஞ்சப் பொருள்களைப்போல படைக்கப் பட்டவைகள் எனக் கண்டு கொண்டு, அவைகளை வணங்காமல் விட்டு, அவைகளை எல்லாம் படைத்த அப்பரமேசுவர னொருவனையேபாடிப் பிரார்த்தித்தார்கள். அன்றியும் ஆதியிலுள்ள ஆரியர்கள் அஞ்ஞானதசையி லிருந்தபோது சுயலாபதுரந்தரர்களாகி தமக்கும், தமது மனைவி மக்களுக்கும், தமது குக்கிராமங்களுக்கும் வேண்டிய இகலோக சுக லாபங்களையே முக்கியமாகக்கருதி, அவைகளுக்காக பலி, யாகம் காணிக்கைகளால் தமது குலதெய்வங்களைப் பிரார்த்தனை செய்து வந்ததைப்பற்றி அதர்வணாதி வேதங்களில் வெளியாகின்றது. பிறகு நாளேற நாளேற கல்வியும் ஞானமும் விருத்தியாகவே, தாம் முன்

வணங்கிவந்த குத்சித கிராமதேவதை, காணிக்கை, பலி, யாக முத லான பூஜைகளை விட்டொழித்தும்; இப் பிரபஞ்சங்களை எல்லாம் படைத்தழித்தாக்கவல்ல ஏக பரமாத்துமாவே பரம பிதாவாக நம்பி யும், அவரால் படைக்கப்பட்ட யாவரும் சகோதர சகோதரிகளெ னக் கொண்டும், தம்முடையவும், தம்மைப்போன்ற பிறருடைய வும், பொது நலத்துக்கு பாடுபட்டுழைக்கவும் பிரார்த்தித்தார்கள்; ஆகவே, பிரார்த்தனையானது இந்நாட்டில் ஆதிகாலந்தொட்டு இரு க்கிறதே யொழிய இடையில் இதர மதஸ்தர்களால் கற்பிக்கப்பட் டுவந்ததன்று.

வினா—இப்போதிய மனிதர் போதுமான கல்வியறிவைப் பெற்றி ருப்பதால், தமது குறைவு குற்றங்களைத் தமது புத்தியின் வலி மையால் நீக்கிக்கொள்ளக் கூடுமல்லவா? ஆகவே இனிப் பிரார் த்தனை என்னத்திற்கு?

விடை—இக்காலத்திய மானிடர் எவ்வளவு கற்றவர்களாக பிரகா சிக்கினும், மானிடரென்று உடம்பெடுத்த ஒவ்வொருவரும் அபரிபூரணரும், பரதந்திரர்களு மாகையால்; தமக்கு வேண் டிய இகபரசாதனங்களை முற்றும் பெற்றுய்வது அபூர்வம்; ஆகவே, சர்வசக்தியும், சர்வஞானமும், சர்வகாருண்யமு மு டைய பரமேசுவரனைத் தமக்குள் உண்டாகும் பயங்கரமான ஆசாபாசங்களை விட்டொழிக்கவும், சத்கருமங்களை அநுஷ்டிக் கவும் வேண்டிய புத்தியையும், சக்தியையும் பிரசாதிக்கும்படி உண்மையாக பிரார்த்திக்க வேண்டும்.

வினா—கடவுள் சர்வசக்தியும், சர்வஞானமும், சர்வகாருணியமு முடையவ ரென்று சொல்லுகிறீர்கள்; அப்படியானால், அவர் நம்முடைய குறைவு குற்றங்களைத் தாமே கண்டு அவைகளை நீக்கிவிடக் கூடுமல்லவா?

விடை—ஆம்! நீக்கக் கூடும்; ஆனால், பிரபஞ்சத்தில் பிள்ளைகளு டைய குறைவு குற்றங்களைப் பற்றி தமது பிதாமாதாக் களி டம் சொல்லி அவைகளுக்காக மன்னிப்பைப் பெறுவத னால், அவர்களுடைய மனது நிம்மதியை யடைந்து, இனி யப்படிப்பட்ட குறைவு குற்றங்களைச் செய்ய பயப்படுவது பிர த்தியக்ஷமல்லவா? நமக்குச் சம்பவிக்கும் கஷ்டநிஷ்டூரங்களை

நமது ஆப்தர்களிடம் சொல்லி முறையிடுவதில் நமக்கு துக்க சாந்தியும், சந்தோஷமு முண்டாகிறதல்லவா? அதே மாதிரி யாகவே, நமது பரமபிதாவும், பரம சிநேகிதனுமாகிய பரமாத்துமாவினிடம் பிரதி நிமிஷமும் செய்யும் பிரார்த்தனையினுல் தெரிவிப்பதில் மனச் சந்தோஷமும், தைரியமும், ஈசுவர பக்தியும் தினே தினே அதிக மதிகமாகப் பரிசுத்தனுகிப் பாவகாரியங்களை விட்டொழிக்க அநுகூலமாகு மல்லவா? சத்தியம் சாந்தம், சுவாமிபக்தி முதலான குணச்சிறப்புகளைப் பெற்றிருக்கும் ஒரு பெரிய மனுஷனுக்கு முன்பாக ஒரு துஷ்டன் அடிக்கடிபோய் நின்ருல், அத்துஷ்டனுக்கு அப்பெரிய மநுஷனுடைய பரிசுத்த நடவடிக்கைகளைக் காணுந்தோறும், அத்துஷ்டனுக்குப் பயமுண்டாகித், தனது துஷ்ட எண்ணங்களும்,கருமங்களும் மாற்றம் பெற்றுக்கொண்டேவா,அப்பெரிய மனுஷன்மீது பிரியமு முண்டாக்கச் செய்வது சஹஜமேயல்லவா? அதே மாதிரியாகவே. பாவ தாபங்களால் பிடிபெற்றவர், அப்பாவ தாபங்களைப் போக்கவல்ல பரமேசுவரனிடம் அடிக்கடி உண்மையான பிரார்த்தனைகளைச் செய்து, தமது ஆத்மாவை அப்பரமாத்மாவிடம் தத்தம் செய்யுந்தோறும், அந்த ஆத்மா பரமேசுவரனுடைய ஞானநேத்திரத்திற்கு முன்பாக நேர் நேராக நின்று முறையிடுகையில், அப்பாவ தாபங்கள் போவதோடு; இனி அப்படிப்பட்ட பாவங்களைச் செய்ய பயத்தை யுண்டாக்கு மல்லவா? மேலும் பரமாத்துமாவை நாடி நித்தியபிரார்த்தனை செய்யாதவனைப் பார்க்கிலும், நித்திய பிரார்த்தனையைச் செய்பவன் காமக்குரோதாதி வலைகளிற் சிக்காமல் எச்சரிக்கையாக இருக்கக்கூடும்.

மானவஜாதியார்தமது பாவத்திலிருந்து தம்மைநீக்கும்படிக்குச் செய்யும் பிரார்த்தனைகளே அவர்களை அப்பாவங்களுக்குத்தூரத்தில் விலகியிருக்கச் செய்யும்; அன்றியும் தமது பாவத்தைப் போக்கும்படி அடிக்கடி பிரார்த்திப்பதனுல், அவர்களை அப்பாவ வழிகளில் போகாதிருக்கும் படியான சக்தியை யுண்டாக்கும்; ஆகவே, மனுஷருடைய பிரார்த்தனைகளால் அவர்கள் பாவகாரியங்களிலிருந்து விடுவிக்கப் படாதபக்ஷத்தில்,அப்பாவகாரியங்கள் அவர்களைப்பிரார்த்தனையிலிருந்து விடாதிருக்கும்படி செய்கின்ற தல்லவா? பாவங்களிலிருந்து நீக்கும்படி ஹிருதய பூர்வகமாக பிரார்த்திப்பதும்,

அப்பாவகாரியங்களேயே மறுபடியு மறுபடியும் செய்வதுமாகிய இரண்டுகாரியங்களேயும் ஏககாலத்தில்செய்ய சாத்தியமாகாது. இரண்டில் யாதாவதொன்றை விடவேண்டும். பரிசுத்தனுக வேண்டுமென்று பிரார்த்தித்தால் பரிசுத்தனுக வேண்டும், இன்றேல், ஹிருதய பூர்வகமான பிரார்த்தனை இல்லாதகாலத்தில் பாவியாகவாவது ஆகவேண்டும். பிரார்த்தனை நிஜமானதும், நிஷ்கபடமானதுமாகும் பக்ஷத்தில், பக்தி விசுவாசத்தினுல் மனவலிமை பலப் பட்டு, மனுஷனுக்கு வேண்டியதை அடையச் சக்தியுண்டாக்குமென்பது திண்ணம்.

மானவஜாதியார் பாவகர்மங்களினுல் நிறைந்து பரமாத்துமாவுக்கு வெகுதூரத்தில் இருப்பதால், பலஹீனர்களாக இருக்கிருர்கள்; ஆகவே, அப்பாவகர்மங்களை நீக்க சக்தியைக் கொடுக்கவும், கஷ்ட நிஷ்டூரங்களிலிருந்து விடுபட்டு ஆறுதலேயடையவும், மனப்பூர்வகமான பிரார்த்தனையைச் செய்யவேண்டும். பரமேசுவரன் பிரபஞ்சத்தின்பொது பிதாவாகவும், பிரபுவாகவும், இருப்பதால், அவருடைய மக்களாகிய மாணிடர் பிரார்த்தனை செய்வது இயற்கையேயாம். பிரதி நிமிஷமும், பிரதி தினமும் செய்யும் பிரார்த்தனைகள் ஜீவாத்துமாவுக்கும் பரமாத்துமாவுக்கும் இருக்கும் பிதாபுத்திர சம்பந்தத்தை பலப்படுத்தியும், உலகாடம்பரங்களால் உண்டாகும் ஆசாபாசங்களைக் கிரமேணு நீக்கியும், பாவபந்தங்களை விட்டொழிக்கவும் செய்யும்; ஆகையால், பிரார்த்தனை யானது பலஹீனர்களுக்குப் பலத்தையும், பேடிகளுக்குத் தீரத்துவத்தையும், ஆசையற்றவர்களுக்கு அக்கரையையும், மூடர்களுக்கு விவேகத்தையும், துஷ்டர்களுக்கு நற்குணத்தையும், கஷ்டங்கள் சம்பவிக்கும்போது அவைகளைச சகிக்கச் சக்தியையும், காமக்குரோதாதிகள் ஹிருதையத்தைப் பாவ வழிகளில் இழுக்கும்போது அவைகளைத் தடுத்து விலக்கிக் கொள்ளவும் செய்யும் என்பது திண்ணம்! திண்ணம்!!

வினு—பிரார்த்தனை செய்தால் பரமேசுவரன் நமக்கு வேண்டியவைகளெல்லா வற்றையும் கொடுப்பாரா?

விடை——ஒரு குடும்பத்தில் பெற்ருேருக்குப் பலபிள்ளைகள் இருக்கிறதாகவும், அவர்களிற் சிலர்பால்குடிக்கும் குழந்தைகளாகவும், சிலர் இரண்டு மூன்று வயதுள்ள வர்களாகவும், சிலர் ஐந்தாறு வயதுள்ள வர்களாகவும், சிலர் பத்துப் பதினேந்து வய

துள்ளவர்களாகவும், இன்னும் பலர் பற்பல வயதுடையவர் களா யிருப்பதாகவும் கொள்வோம். அப்பிள்ளைகள் தத்தமக்கு வேண்டிய வைகளைப்பற்றி பெற்ருேர்களிடம் பிரார்த்தித்தால், அப்பெற்ருேர்கள்: தம் மக்களின் வயது, யோக்கியதை, புத்தி முதலானவைகளை நிதானித்து, அவர்களுக்கு இன்றியமை யாதவைகளை மாத்திரம் கொடுத்தும், அவர்களுக்கு உபயோக மற்றவைகளையும், அவர்களுக்கு அபாய முண்டாக்குபவைக ளையும் கொடாதிருத்தல் பிரதியக்ஷ மல்லவா? அதே மாதிரி யாகவே, பரமாத்துமாவானவர் தமது மக்களாகிய மானிடர் கர்ப் பத்தில் பிண்டமாகியது முதல் அவர்கள் பிரபஞ்சத்தில் ஜனி த்துச் சாகும்வரையில் வேண்டிய பலவித உணவுகளையும், உடை களையும், போஷிக்கப் பிதாமாதாக்களையும், போகிக்கப்பெண்டு பிள்ளைகளையும், சரசமாடச் சிநேகிதர்களையும், சுகிக்கச்சம்பத்து களையும், கீர்த்திகளையும்; வியாதிகளை நீக்கச் சிதோஷ்ணங்களை யும், வருஷாதி ரிதுக்களையும், திவ்விய ஔஷதங்களையும் மற் றும் மனிதர் இவ்வுலகத்தில் இகலோக சுகமாக உள்ளநாள் உள்ளவரையில் அனுபவிக்கத்தக்க பலபேறுகளை எல்லாம் சிருஷ்டித்திருப்பதால்; அவைகளைப்பற்றி பிரார்த்தித்தால் பிர யோஜன மற்றதேயாகும்; ஏனெனில், இப்பிரபஞ்சத்தில் மனுஷருக்கு இகலோக சுகத்திற்கு இன்றியமையாத சாதன ங்களைப் பரமேசுவரர் மானவ ஜாதியாரனைவருக்கும் பொது வாக முன்பே படைத்திருக்க, அவைகளைக் காலதேச வர்த்த மானங்களைத் தழுவித் தக்கபடி உழைத்து அனுபவிக்க வேண் டியது கடமையாக இருக்கிறது. ஆனதுபற்றியே சிலர் ஒவ் வொருவருடைய கடமையையும், கிருஷியையும் ஒருவித புதுப் பிரார்த்தனை என்று எண்ணுகிருர்கள். அந்தக் கிருஷியைவி ட்டுச் சோம்பேறிகளாக சுவாமியைப் பிரார்த்திப்பதினுல் பல னடையக் கூடுமோ? கிருஷிசெய்யாமல் தனதானியக் கீர்த்தி கள்கிட்டுமோ? சுகாதாரங்களை நாடாமல் பிரார்த்தனையினல் பலனும், ஆரோக்கியமும் கிட்டுமோ? இப்படியே மனுஷர் இவ்வுலக சுகத்துக்கு வேண்டியவைகளை எல்லாம் தக்கபடி யனுபவிக்கவேண்டிய பொருள்களையும், புத்தியையும், பெற் றிருக்க, சோம்பலினுல் அவைகளைத் தக்கபடி உபயோகிக்க கிருஷிசெய்யாமல் விட்டு, கடவுளைப் பிரார்த்தித்தால் அக்கட வுள் அப்பிரார்த்தனையைக் கேட்டுவந்து சோம்பலுள்ள மனு

ஷருக்கு வேண்டிய இகலோக சுகங்களுக்கேற்ற கிருஷிகளைச் செய்து கொடுப்பாரோ? ஒருவனுடைய காலில் யாதாவது ஒரு கூரியமுள் தைத்தால், அவன் அம்முள்ளைப் பிடுங்கிவிட்டு, அவ்விடத்திற்குயாதாவது அனுகுணமான மருந்தைப்போடாமல்,கடவுளே! என்காலில்முள்தைத்து நோவெடுக்கிறதென்று அழுது பிரார்த்தித்தால் கடவுள் வந்துஅந்த முள்ளைப்பிடுங்கி மருந்து போடுவாரோ? பிடுங்க மாட்டாரல்லவா? ஆகவே,மானிடர் இகலோக சுகத்தைக்கருதி பிரார்த்தனைசெய்வதானது வாலிபர், புத்தி குன்றியவர்கள் செய்யும் பிரயோஜனமற்றபிரார்த்தனையே யாகும்.

இனி பிரயோஜனமாகும் உண்மையான பிரார்த்தனை எதுவெனில், அத்யாத்மிக ஞானத்தைப் பற்றியும், அத்யாத்மிக பலத்தைப் பற்றியும், அத்யாத்மிக பரிசுத்தத்தைப் பற்றியும், அத்யாத்மிக சுகங்களைப் பற்றியும், பரமேசுவரனை நாடி ஆத்மபூர்வகமாகச் செய்யும் பிரார்த்தனையேயாம். அதாவது-மானிடர் எந்தெந்த பாவங்களைச் செய்து, அவற்றிற்காக அநுதாபப் பட்டும், தாம் செய்யும் சத்காரியங்களுக்குப் போதுமான சக்தியற்றிருந்தால், அச்சக்தியைப் பிரசாதிக்கும்படிக்கும், தமக்கிருக்கும் குறைவு குற்றங்களையறிந்து அவைகளை க்ஷமிக்கும்படிக்கும், செய்யும் பிரார்த்தனையே உண்மையான பிரார்த்தனையாகும்.

வினா—கடவுள் அசஞ்சலன் என்று சொல்லி இருக்க, அவருடைய இயற்கையான கருத்தையும், கருமத்தையும, இடையில் நம் மிஷ்டப்படி பிரார்த்தனைகளுக்காக மாற்றுவாரோ?

விடை—பரமேசுவரன் நிஸ்சலன் என்பது உண்மையே; ஆகவே அவருடைய கருத்தையும், கருமத்தையும் இடையில் நமது பிரார்த்தனைகளுக்கு மாற்றமாட்டார் என்பது உண்மையே ஆயினும், மனுஷர் ஹிருதய பூர்வகமாகவும், சிரத்தையாகவும், மனநிர்மல மாகவும், ஆத்ம சுகத்தைத் தரும்படியாகவும், மனோதுக்கத்தை நீக்கும்படியாகவும், செய்வதுகூட அவருடைய ஸ்திரமான கருத்தும், கருமமுமாகவும் இருக்கின்றன.

பிரார்த்தனைகளினால் ஜீவாத்துமாவுக்கு பரமாத்மாவோடு சம்பந்தம் ஸ்திரமாகும் பக்ஷத்தில், அந்தபரம சம்பந்தத்தினால், பரமசு

த்து மாவினிடமிருந்து கருணையாதி கலியாண குணமிர்த பிரவாஹம் கிறகச்சிறக ஜீவாத்துமாவுக்குள் பிரவேசித்து, அதைச் சுத்தப்படுத்தி நிர்மலமானதாகச் செய்துவிடு மல்லவா? அவருடைய கருத்தும். கருமமும் நம்முடைய சுகத்தைக் கருதியவைகளாகையால், அவைகளை நமது புத்திசாமார்த்தியத்தினால் அவரது இயற்கையை யநுசரித்துக் கிருஷிசெய்து யனுபவிக்க வேண்டு மென்பதே அவருடைய கருத்தாம்; எப்படியெனில்,

பரமேசுவரன் படைத்த இந்த உலகம், ஆதியில் பயங்கரமான பருவதங்களாலும், நதிகளாலும், காடு வனாந்திரங்களாலும், வெட்டவெளிகளாலும் நிறைந்திருந்து. இப்படிப்பட்ட இயற்கையையுடைய இந்த உலகத்தில், மநுஷர் தமது புத்தி யுக்திகளினால் வனாந்திரக்காடுகளை யெல்லாம் பரப்பி, அவைகளில் சுகமாக வாழ்ந்துய்யத்தக்க வீடு வாசல்களையும், கோயில் கோபுரங்களையும் கட்டிக்கொண்டு வாழவும், பட்டினியாகச் சாகாதபடி பயிர் பச்சைகளை விளைவித்து உண்ணவும். திகம்பரிகளாகத் திரிந்து குளிர் காய்ச்சலினால் கஷ்டப்படாமல், துணிமணிகளை நெய்துக் கொள்ளவும், இப்படியே இவ்வுலக சுகத்துக்கு இன்றியமையாச்சாதனங்களை ஈசுவரனுடைய இயற்கையை யநுசரித்துச் செய்துக்கொள்வதோடு; சிலர், தமது மனவலிமையின் விருத்தியினால் பயங்கரமான சமுத்திரங்களைச் சுலபமாகத்தாண்டிப் போய்வரக் கப்பல்களையும், தூரமென்பதைப் பற்றிச் சிந்திக்காதபடி போய்வரும் புகைவண்டிகளையும், க்ஷணப்பொழுதில் க்ஷேமசமாச்சார மறியத்தகக்க தந்தித் தபால்களையும், பிரம்மாண்டமான ஆறுகளைக்கடக்க அணை, பாலங்களையும்; பயங்கரமான காற்றையும் வசப்படுத்தி விண்ணுலகில் பக்ஷிகளைப் போல போய்வர ஆகாய விமானங்களையும், ககனத்திலாடும் சூரிய சந்திராதி அண்ட கோளங்களை விவரமாக அறிய தூரவீக்ஷணிக்கண்ணாடிகளையும், சூக்ஷம வஸ்துக்களை யறிய அணுதரிசனிக் கருவிகளையும், மற்றும் மானிடருடைய இகலோக சுகவாழ்வுக்கின்றியமையாத பலசாதனங்களை எல்லாம் இயற்கைக்கு விரோதமாகாமல் அதைத்தழுவியே தமது உபயோகத்துக்குத் தக்கபடி செய்துக்கொண்டு வருவது பிரதியக்ஷம். உதாரணமாக,

ஒரு சட்டியில் ஒரு புஷ்பச்செடியைவைத்து விளைவிக்கிறோம். அச்தச்செடி கடவுளுடைய இயற்கைப் பிரமாணங்களினால்விளைகின்

றது. அந்தச்செடிக்கு ஜலம், உஷ்ணம், வெளிச்சம், காற்று முதலான இயற்கை சாதனங்கள் இன்றி யமையாதவையன்றோ. அவ்வித சாதனங்கள் அற்று மறைவான விடங்களில் அச்செடியை வைத்தால், அச்செடி தினே தினே வளர்விலும், வடிவிலும் வருணத்திலும், குறைவுபட்டுக் கெட்டுப் போதல் பிரதியக்ஷமல்லவா? அதே செடியை அச்செடிக்கேற்ற ஜலம், காற்று, உஷ்ணம், வெளிச்சம் முதலானதுகள் கிடைக்குமிடத்தில் வைத்தால், அச்செடி தினே தினே பல்கிப் பெருகிப் பலவர்ணம் பெற்றுப் பூத்துப் பழம் தருகிறதல்லவா? இப்படிச் செய்வதனால், நாம் கடவுளுடைய இயற்கைக் கருத்தையும், கருமத்தையும் மாற்றவில்லை, அவரும் மாற்றவில்லை; ஆனால், அவருடைய இயற்கைக் கருத்தையும், கருமத்தையும் தழுவி கிருஷி செய்வதனால் நமக்கு வேண்டிய பலன் கிடைக்கின்றது.

சிலர், மழை வருஷிக்கவேண்டு மென்று பிரார்த்திக்கிறார்கள். அவர்களிஷ்டப்படி அவர்களிருக்கும் இடத்தில் மழைபெய்வித்தால், அவர்களுக்குச் சற்று தூரத்திலிருப்பவருக்கு பிரதிகூலமாகவும், ஆபத்தாகவு முடியக்கூடும். இக்கஷ்டத்தை மழைக்காக பிரார்த்திப்போர் அறியார்கள். சிலர், பூகம்பம், பேதி, பிளேகு, பஞ்ச முதலான பயங்கர சம்பவங்களுண் டாகாதபடிக்கும், தமக்கும், தம்மனைவி மக்களுக்கும் வியாதி வியாகூலம் மரணமுண்டாகும் காலங்களிலும் அவைகளை நிவர்த்திக்கப் பிரார்த்திப்பதும் சஹஜமே. ஆனால், அவைகளால் பிற்காலத்தில் பிரபஞ்சத்திற்கும், அதன் பிரஜைகளுக்கும் உண்டாகும் சுகிர்தங்கள் இன்னவை என்று அறியாத ஜனங்களுடைய அறிவற்ற பிரார்த்தனைகளுக்கு, சர்வ ஞானமுள்ள கடவுள் தமது இயற்கைக் கருத்துகளையும், கருமங்களையும் இடையில் மாற்றுவரோ? ஒருவனுடைய காலில் முள் தைத்துக் கொண்டு; கடவுளே நோய் பொறுக்கக்கூட வில்லையே, என்று பிரார்த்தித்தால், அந்த நோவை சகிக்கும்படியான சக்தியையும், சாந்தத்தையும் கொடுப்பாரே யொழிய, கடவுள் வந்து காலில் குத்திக்கொண்டிருக்கும் முள்ளைப் பிடுங்குவாரென் றெதிர்பார்ப்பது புத்தியில்லாமையே யல்லவா?

இப்படிச் செய்வது உண்மையான பிரார்த்தனைகளாகுமோ? உண்மையான பிரார்த்தனை எதுவெனில், கடவுளுடைய இயற்கைக் கருத்தையும், கருமங்களையும், தழுவி இகலோக சுகத்திற்கு

வேண்டிய கிருஷிகளைச் செய்தும், அநுபவிக்கவிடாமுயற்சியையும், சக்தியையும், மனவலிமையையும் பிரசாதிக்கும் படிக்கும்; பிறகு இவற்றிற்கு மேலான பரலோக சுகத்திற்கு வேண்டிய சக்தி, சத்யம், சாந்தம், பரிசுத்த முதலான திவ்விய குணங்களால் ஆத்மோன்னஸ்திதியை யடைவிக்கும்படிக்கும் செய்வதேயாம். இப்படிப்பட்ட உண்மையான பிரார்த்தனை செய்பவர்களுடைய ஞான நேத்திரங்களுக்கு ஜகதீசுவரன் பிரதியக்ஷமாகி, அப்பாகவதர்களுடைய பிரார்த்தனைகளுக்காகப் பலன்களைக் கொடுப்பார் என்பது திண்ணம்.

இகலோக சுகத்தைக்கருதி மானிடர் தமது மனவலிமையினால் பூதாதிகளைத்தம்வசப்படுத்தி, அவைகளால்தமக்குவேண்டிய உதவிகளையடையும் படியான சக்தியுண்டாகி இருக்கையில், இனிச்சர்வ சக்தியும், சர்வஞானமும், சர்வகாருண்யமு முடைய பரமாத்துமாவை உண்மையாகப் பிரார்த்தித்து அவருடைய அருளைப் பெறுவோர் எவ்வளவோ அற்புதகாரியங்களைச் செய்யக் கூடுமல்லவா? அப்படியே அநேக அற்புதங்களைச் செய்திருக்கிறார்கள். இன்றும் அப்படியே செய்து வருகிறார்களாகையால், உண்மையான பிரார்த்தனையானது அத்யாத்மிக சம்பந்தமானதேயன்றி, கடவுளுடைய இயற்கைக்கருத்தையும், கருமத்தையும் மாற்றுவ தன்றாம்.

வினா—அப்படியானால் சிலர் இரவும் பகலும்பிரார்த்தனை செய்து கொண்டே இருக்க, பலனைப்பெற்றார்கள் இல்லையே. அதற்குக் காரணமென்ன?

விடை—உலக மெய்ப்புக்காகச் சிலர்கண்களை மூடிக்கொண்டு, கைகளை எட்டிய வரையில் தூக்கிகொண்டும், பாடி யாடிப் பிரார்த்திப்பது உண்மையான பிரார்த்தனையல்ல. விபூதி ருத்திராக்ஷங்களையும், நாமம் துளசி மாலைகளையும் தரித்தும், பழம் தேங்காய் தூப தீபங்களை விக்கிரகங்களுக்குக்காட்டியும், பூஜிப்பது உண்மையான பிராத்தனைகளல்ல. ஆடு கோழிகளை வெட்டியும், அக்கினி குண்டங்களிலாடிப் பாடிக் குதிப்பதும், உண்மையான பிரார்த்தனையல்ல, இவைகளெல்லாம் உலகப் பகட்டுகளான மோசமான வீண் பிரார்த்தனைகளேயாகும்; ஆகவே அப்பிரார்த் தனைகளினால் பலன் கிடைக்கவே மாட்டாது. முன்னொருக்கால் த்ரௌபதியின் சிலயை இராஜசபையில்அவி

ழ்த்தபோது, அந்த த்ரௌபதி தனது மானத்தைக்காக்க, ஒருகையில் சீலையைப் பிடித்துக்கொண்டும், மற்ற ஒருகையில் கிருஷ்ணனையும் பிரார்த்திக்க, அவளுடைய மானாபிமானத்தையறிந்து, அது உண்மையான பிரார்த்தனை யல்லவென்று உதவி செய்யாதிருக்க, பிறகு அத்ரௌபதி தனதுமானாபிமானத்தை மறந்து, இருகைகளால் அபயம் தர வேண்ட, அவளுடைய உண்மையான பிரார்த்தனைக் கிரங்கி மானத்தைக் காத்ததாகக் கதைகளிற் கேட்டிருக்கிறோமல்லவா? இதனால் உண்மையான பிரார்த்தனையின் பலன் பிரதியக்ஷமாகும்? உண்மையான பிரார்த்தனையினால் அல்லவா பிரகலாதனும், மார்க்கண்டேயனும் மகிமை பெற்றார்கள். உண்மையான பிரார்த்தனைகளினால் இக்காலத்திலும் அநேகர்கொடிய புலி சிங்க முதலான வைகளையும், இராஜாதி ராஜர்களையும் வென்று, ஜயவீரர்களானதன்றியில், தமது சக்திக்கு மிஞ்சின அநேக தருமங்களையும் செய்வித்து, உலகத்தாருக்குப் பேருதவிகளைச் செய்யவில்லையா? ஆனது பற்றி யன்றோ, அழுத பிள்ளைக்கு பால் கிடைக்கும் என்றும், கேட்டால் கொடுக்கப்படும் என்றும், தட்டினால் திறக்கப்படும் என்றுதிய பழமொழிகளைப் பெரியோர் அநுபவத்தாற்கண்டு சொன்னார்கள்; ஆகவே, உண்மையான பிரார்த்தனையே பலனைத்தருமேயன்றி பொய்ப் பிரார்த்தனைகள் பலனைத் தரா.

வினா—மானிடருக்குப் பிரார்த்தனை இன்றியமையாததா?

விடை—ஆம். பிரார்த்தனையே பிரஜைகளுக்கு பிராணன். பிரார்த்தனை யற்ற மதம் உப்பற்ற பதார்த்தம்போலாகும். மானிடர் பரதந்திரிகளும், துர்ப்பலருமாகையால், உலகஆசாபாசங்களை வெல்லுவதற்கு அவர்களுடைய கேவலமான சக்தி போதாது, அவைகட்கு வேண்டிய சக்தியை உண்மையான பிரார்த்தனையினாலேயே பெறவேண்டும். பிரதி நிமிஷமும், பரமேசுவரனுடைய சமீபத்தை நடைந்துய்ய பிரார்த்தனையைவிட சுலபமும், சிறந்த வழியுமில்லை. மானிடரின் கஷ்ட நிஷ்டூரங்களை மறந்து, அபயம் பெற்று ஆத்மசாந்தியை யடைவதற்குப் பிரார்த்தனையை விடச்சிறந்த சாதன முண்டோ? மனுஷன் இவ்வுலகத்திலும், மற்றெவ்வுலகத்திலும் அடையக் கூடிய உத்கிருஷ்ட

மான ஆநந்தங்களை எல்லாம் பிரார்த்தனைகளினாலேயே யடையக்கூடும். ஆனதுபற்றியே பட்டிக்காட்டில் வசிக்கும் படிப்பும் பகுத்தறிவு மற்றவர்களும் பிரார்தனை செய்கிறார்கள். அவர்களைப்பார்த்து என் பிரார்த்தனை செய்கிறீர்களென்று கேட்டால் அதற்குபதில் சொல்லத் தெரியார்கள். அப்படியிருந்தும்பிரார்தனையை செய்யாமலிரார்கள். அதுமானிடரின் இயற்கையாம், கெட்ட எண்ணங்களையும். கெட்டச் செய்கைகளையும் பஞ்சாகப் பறக்கடிப்பதும் உண்மையான பிரார்த்தனையேயாம். சித்த சுத்தியுடனே பிரார்தித்தால் அப்பிரார்த்தனையி லிருந்து எழும்போதே ஆத்மோ ஜீவனம் கிடைத்து நூதன பலமும், தைரியமும், சந்தோஷமும், பரிசுத்தமு முண்டாகும். ஆகவே, பிரார்த்தனையே இகலோக சுகத்தையும். பரலோகசுகத்தையும் கொடுக்கச் சுலபமும் சிறந்ததுமானசாதனம். பரமார்த்திப் **பக்தியோக** மிதுவேயாம் மற்ற மோக்ஷசாதனங்களான யோகமும், ஞானமுதலான படிகளில் சுகமடையக் கல்வியறிவிற் சிறந்த சிலரால் மாத்திரம் கூடும்,பிரார்த்தனையோ எந்த ஜாதியாரும், எந்த மதத்தாரும், எந்த ஸ்திதியிலுள்ள கல்விஞான மற்றவர்களும், சாதாரணமான ஏழைகளும் சுகமடையக்கூடும். இப்பிரார்த்தனையின் பெருமையை இந்நாட்டார் மாத்திரமல்ல பூலோகத்தில் பிரபலமான கிறுஸ்து, மகமதியர் முதலான மதஸ்தர்கள் யாவரும் எவ்விடத்திலும், எக்காலத்திலும் பிரார்த்தனையைச செய்துவருவது பிரத்தியக்ஷம். இம்மட்டோ? உன்னத பருவதங்களும், அகன்ற ஆறுகளும், பிரார்த்தனையால் பரமனைப் பாடிக்கொண்டே இருக்கின்றன. காணும் கந்த மூலங்களும்; பறக்கும் பக்ஷிகளும், கிரிமிகிடங்களும், தமக்கு வேண்டியவைகளைப் பெற்றுய்ய தத்தம் பாஷைகளில் தம்மைப்படைத்தபரமேசுவரனைப் பிரார்த்தித்துக்கொண்டே இருக்கின்றன, ஆகவே, பிரார்த்தனை மானிடருக்கு இன்றியமையாத சாதனம் ஆகையால் அனைவரும்பிரார்த்தனையைச் செய்யவேண்டும்.

வினா—இப்பிரார்த்தனைகளில் பற்பல வகுப்புகளுமுண்டோ?

விடை—ஆம் உண்டு, அவை அந்தரங்கமல்லது இரகஸியப் பிரார்த்தனை, குடும்பப் பிரார்த்தனை, ஜனசமூஹப் பிரார்த்தனை, பொதுஜனசமாஜப் பிரார்த்தனை ஏகாந்தப் பிரார்த்தனை என்றுதி பலவகுப்புகளு முண்டு.

வினா—அவற்றின் விவரங்களைச்சற்றுசங் கிரஹமாகச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை-1-வது அந்தரங்கபிரார்த்தனை என்றால்- பிரதிதினமும்காலை மாலைகளிலும், அர்த்தராத்திரி காலங்களிலும், நிற்கும்போதும் நடக்கும்போதும், தம்முள்ளிருக்கும். பரமாத்துமாவோடு சந்தித்து நேர் நேராகச செய்யும் பிரார்த்தனையேயாம். மனிதருடைய குறைவுகுற்றங்களைபிறர் அறியும்படி பகிரங்கமாகச் சொல்லி பிரார்தனை செய்ய கூச்சப்படுபவரெல்லாம் இந்தஅந்தரங்க பிரார்த்தனையின் மூலியமாக தனியேக பரமபிதாவிடம் இரகஷியமாகச் சொல்லி, தமது குறைவு குற்றங்களை நீக்கும்படி முறையிடுவதாம். இந்த அந்தரங்க பிரார்த்தனைக்கு குறிப்பான இடம் காலமுதலானவை இருக்க வேண்டுமென்கிற நியமமில்லை. எந்த விடத்தில், எக்காலத்தில், பாவ எண்ணங்களும், பாவ கருமங்களுமுண்டாகு மென்று தோன்றுகிறதோ, அப்போதே அவ்விடத்தில் தமது அபயகர்த்தாவாகிய ஜகதீசுவரனிடம் முறையிட்டு, அப்பாவ எண்ணங்களையும், பாவ கர்மங்களையும்,நசிக்கும்படி செய்யும்படி பிரார்ததிப்பதேயாம். இந்த அந்தரங்க பிரார்த்தனையானது படுக்கும்போதும், அர்த்தராத்திரியிலும், காலையிலும், மாலையிலும், மத்தியானத்திலும், மனைவிமக்கள் முதலான ஜனசமுகத்தாரோடு இருக்கும் போதும், வெளியிலும், வேலையிலும், மற்றெங்கிருக்கினும், யாது செய்யினும், அப்போதெல்லாம் தமக்கு வேண்டிய பல வரங்களையும் பிரசாதிக்கும்படி, பிறரறியாமல் பரமாத்துமாவிடம் நேர் நேராக நின்று இரகசியமாகச் செய்வதாகையால்; இப்பிரார்த்தனை மற்றெல்லாவித பிரார்த்தனைகளிலும் சிறந்ததாம்.

2—வது குடும்பபிரார்தனை என்றால்—ஒருகுடும்பத்தைச்சார்ந்த நாயகனும், நாயகியும், மக்களும், மற்றபந்துக்களும் கூடிசெய்யும் பிரார்த்தனையாம், இக்குடும்ப பிரார்த்தனையே பகிரங்கபிரார்த்தனைக்கு மூலமும், முதன்மையானதாகும். இந்த பிரார்த்தனையினால் குடும்பங்களுக்கு பரிசுத்தமும், ஐகமத்தியமும், நீம் மதியும், சுகமுமுண்டாகும். இதனால் முக்கியமாக மக்களுக்கு பிதாமாதாபந்துக்களுடையபெருமையறியும் தன்மையும், பக்தியும், பிரியமுதலான சுகங்களு முண்டாகும். இதனால் குடும்ப

ங்களைச் சார்ந்த பந்துக்களுக்குள் அன்யோன்ய சிநேக பந்தமும்பலப்படும். இதனால் குடும்பங்களிலுள்ள துஷ்டர்கள் சாதுக்களாவார்கள், புத்திஹீனர் அறிவாளிகளாவார்கள், ஈசுவர பக்தியுள்ளவர்களுமாவார்களாகையால், இப்படிப்பட்ட குடும்பங்கள் பூலோக சுவர்க்கலோகங்களாகப் பிரகாசிக்கும். இப்படிப்பட்ட குடும்பபிரார்த்தனைகளில்லா குடும்பங்களில் புருஷன் பிரம்ம மதமும், பெண்டுகள் விக்கிரகவீண் பக்திமதமும், மக்கள் மனம்போனபடி நடக்கும் துர்மதமும் உண்டாகி, இகபர சுகத்தையடைய இடையூறுகளுண்டாகு மாகையால், இல்லறத்தாருக்கு குடும்பபிரார்த்தனை இன்றியமையாததேயாம்.

3—வது **ஜனசமூஹபிரார்த்தனை** என்றால், குடும்ப பிரார்த்தனைக்கு வந்து சேராத சில சிநேகிதர்கள் கூடிசெய்யும் பிரார்த்தனையாம். இந்தப்பிரார்த்தனையினால், ஒரேவித கருத்தும், கருமமுமுடையவர்கள் யாதாவதொரு வீடு அல்லது கோயில் முதலான விடங்களில் கூடி தமது ஆத்மாக்களை பரமாத்துமாவினிடம் சந்திக்கச் செய்வதேயாம். இப்படிப்பட்ட பிரார்த்தனைகள் சிநேகிதர்களுடைய ஹிருதயங்களைக் குளிர்ச்சிசெய்தும், அடிக்கடி மாறும் தன்மையுள்ள பக்தியை, மாறாதபடி உறுதிபடச்செய்தும், அன்பருக்குள் அநுதாப அந்நியோந்நியத்தையும் உண்டாக்கி உலகில் சுகமாக வாழச்செய்வதாம்.

4—வது **பகிரங்கமான பொதுஜன சமாஜ பிரார்த்தனை** என்றால், பரமேசுவரன் ஒருவனே உலகபிதாவென்றும், அவரால் படைக்கப்பட்ட மானவஜாதியார் யாவரும், சகோதர சகோதிரர்களென்றும், எண்ணுபவரெல்லாரும் யாதாவது ஒரு கோயில் அல்லது மடத்தில், குறித்ததினத்தில், கூடி தமது பொதுவாகிய பரமபிதாவை பிரார்த்திப்பதேயாம். மானவஜாதியார் எப்போதும் பரஸ்பர சம்பந்த சகாயத்தினாலே சுகமடைய வேண்டியவர்களாகையால், அவர்களுக்கு பொதுவான சமாஜ பிரார்த்தனை அவசியகரமானதாக விருக்கிறது. பொதுஜன சமாஜபிராாத்தனைக்குப் பெரியோர், சிறியோர், பெற்றோர், பெண்டுகள், கற்றோர், கசடர், கனவான், தனவான், தரித்திரர் முதலான பல வகுப்பார்கள் ஏககாலத்தில், ஓரிடம் கூடி, ஒருவர் க்ஷேமத்தை ஒருவர் நாடி, தமது பொதுப் பிதாவாகிய

பரமேசுவரனைத் துதித்து பாடி பிரார்த்தனை செய்வதனால், அச்சமாஜத்தாருக்குள் துவேஷாதி குணங்கள் நீங்கி, பரஸ்பரசகோதர சகோதரி நேசமும், ஐக்கியமு முண்டாகி, பரோபகார குணங்களும், ஜகமததியமும், அன்யோன்ய சஹாயங்களும், சற்குணங்களும், பரமேசுவரபக்தியும் பிரபலப்படும்.

5—வது ஏகாந்தபிரார்த்தனை என்றால்,—உலக ஆசாபாசங்களிற்சிக்கித் தவிப்போர், தமதில்லிடங்களை விட்டும், பர்வத பிரதேசங்களுக்கும், நதிதீரங்களுக்கும், சிங்கார வனங்களுக்கும், தனியாகப்போய் அங்கு சிலநாள்கள் தங்கி பரமேசுவரனுடைய இயற்கை யற்புதங்களைக்கண்டு வியந்து, தமது ஆசாபாசங்களை நீக்க ஸ்துதித்து பிரார்த்திப்பதாம். இதுவே ஏகாந்தசேவையாம்.

வினா—பிரார்த்தனையைச் செய்வதற்கு காலம், இடம், முதலான சாதனங்கள் அவசியமோ?

விடை—எங்கும் நிறைந்து, எப்போதும் நான்! நான், என்று பிரகாசிக்கும் பரமேசுவரனை பிராத்தனைசெய்ய காலம், இடமுதலான சாதனங்களனாவசியமே. எங்கு,எப்போது,மனது.துலியமடைந்து,பரமேசுவரனை பிரார்த்தனைசெய்ய, காலம் இடமுதலான சாதனங்களனா வசியமே. எங்கு எப்போது மனது துலியமடைந்து, பரமேசுவரனை யணுகி, பிரார்த்திக்கிறதோ அந்தக்காலமும், அந்த இடமுமே பிரார்த்தனைக் கேற்றகாலமாகும்; ஆயினும்,பிரதிதினமும் அருணோதயத்திற்கு முன்எழுந்தும்,சுத்தமாக ஸ்நானம்செய்தும்,சுத்தமான உடைகளைதரித்தும்,சுத்தமானவிடத்திலிருந்தும், மனதைப் பொறிப்புலன்களின் வழியேபோக விடாமல் நிலைநிறுத்தியும்,தமக்குள் அந்தர்யாமியாக இருக்கும் ஜகதீசுவரனை தியானித்தும், அன்று தாம் எண்ணும் எண்ணிக்கைகளும்,புரியும் தொழில்களும் பரிசுத்தமானவைகளாக இருக்கும்படி பிரார்த்தித்தும், பிறகு உலக உத்தியோக வியாபாரங்களில் பிரவேசித்தும்; மறுபடியும் மாலைப்பொழுதில் ஸ்நானம் செய்தாகிலும், அல்லது கால் கை முதலான துகளைசுத்திசெய்துக்கொண்டும்,சுத்தியானவிடத்தி அமர்ந்தும், தாம் அன்றுசெய்த நடவடிக்கைகளிலும்,எண்ணங்களிலும் எவ்வளவு நியாமமானவை? எவ்வவு அநியாயமான

வை? என்பவற்றைப்பற்றி சிந்தித்தும், தாம் பிசகிப்போனவை களைப்பற்றி க்ஷமிக்கும்படிக்கும், இனி அப்படிப் பிசகிப்போகாதபடி வண்மையையும், மன உறுதியையும், பரிசுத்தத்தையும் பிரசாதிக்கும்படிக்கும், அநுதாபசாதனங்களோடு பிரார்த்தனைசெய்தால், அச்சாதனங்கள் ளனுகூலமானவைகளே யாகும்.

வி௦—ஈசுவரோபாசனையைச் சார்ந்த ஓர் அங்கமாகிய பிரார்த்தனையைப்பற்றி இவ்வளவுதூரம் சொன்னதற்கு சந்தோஷமே; ஆனால், ஈசுவரோபாசனையைச்சார்ந்த ஸ்தோத்திரம், வந்தனம், தியானம், என்னும் பல அங்கங்களின் கருத்தை சங்கிரகமாக அறிவிக்கவேண்டும். என்னை? சகலலோக இராஜாதி ராஜனும், ஜகத் பிதாவுமாகிய சர்வேசுவரன் ஸ்தோத்திரப்பிரியனோ? அவரை ஸ்தோத்திரிப்பதில் அவருக்கு யாதாவது பிரயோஜன முண்டோ?

விடை—சர்வேசுவரன் ஸ்தோத்திர பிரியனல்லன். மனுஷருடைய ஸ்தோத்திரங்களினால் அவருக்கு பிரயோஜனமில்லைதான். ஆயினும், நாம் இவ்வுலகில் பறக்கும் பறவைகட்கு யாதாவது இரையைப்போட, அது நன்றியறிந்து அடிக்கடி வந்து இராகங்களாலும் முகங்களாலும் நம்மை ஸ்துதிக்கவில்லையா! ஒரு நாய்க்குட்டிக்கு யாதாவதொருவர் இரை போட்டால் அது நன்றியறிந்து தனது வாலையாட்டி முகத்தையுங்காட்டி ஸ்துதிக்கவில்லையா? கேவலமான அற்பபிராணிகள் தமது உபகாரிகளுக்கு நன்றிகாட்டி ஸ்துதிக்கையில், மானிடர்-கர்ப்பத்திலிருந்து முதல் பிரபஞ்சத்தில் ஜனித்து சாகுமளவும் வேண்டிய உணவு முதலானதுகளையும், மற்றும் வேண்டிய சகல சுகங்களையும் பரமபிதாவாகவும், சிநேகிதனாகவும் இருந்து வலிய உதவிசெய்யும் பரமேசுவரனுக்கு நன்றியறிந்த ஸ்துதியைச் செய்யாவிடில் மானிடத்தன்மைக் கொக்குமோ? ஆகையால் கருணாமயனை கடவுளை ஸ்தோத்திரம் செய்தல் நமது கடமையாம், ஆகவே.

ஸ்தோத்திர மானது, கடவுளது குறைவற்ற காருண்ணியத்தையும், நித்திய லக்ஷணங்களையு முன்னி, நமது பக்தி, சிரத்தைகளை வெளியிடுகையாம்.

**வந்தனமானது,** நமது உடலையும், உயிரையும், சம்ரக்ஷணை செய்யும், அவரது அளவற்ற கருணையைக் கருதி நமக்குள்ள நன்றியறிவைத் தெரிவிக்கையாம்.

**தியானமாவது,** ஈசுவரனுடைய, ஸர்வ வியாபகத்துவம், ஸர்வஞ்ஞத்துவம், ஸர்வ காருணியத்துவம், ஸர்வ நிர்மலத்துவம், என்பவற்றைச சிந்தித்து, அவரது அதிஸமீப ஸாந்நித்யத்தைமனக் கண்ணுல் காணமுயலுகை யாம்.

இவ்வுபாசனையின் நோக்கம், நமதுள்ளத்தில் ஆழ்ந்த ஈசுவர பக்தியும், நிஷ்கபடமான நன்றியறிவும், பூரணமாய் வியாபித்து, ஈசுவர ஸாந்நித்தியத்தை உணரவேண்டுமென்னும் ஆசைநிறைவேறி, பாப பந்த நிவாரணேச்சை பரி பூர்த்தியாயின், முடிவு பெற்றதாகும். சில காலங்களில் இவற்றில் சில அதிகரித்தும், சில குறைந்தும் நிகழும். எப்படி யெனில், எதிர்பாராத நன்மை ஒன்றை அடையப்பெறின், நன்றியறிவு அதிகப்படும்; துக்கமும் துன்பமும் அதிகப்படுங்காலத்தில் பிரார்த்தனை அதிகப்படும். இவ்வித சமயோசித உணர்வெழுச்சியுண்டாவது இயற்கை; அதைத் தடுப்பது தீங்கு.

ஆனல் ஸமாஜி கோபாசனையில் பக்திக்குரிய பலவித உணர்ச்சிகள் எழுச்சியுற்று திருப்தியடையும் படிக்கு இந்த நான்கங்கங்களும் நிறைந்திருத்தல் வேண்டும்.

வினு—இத்தேசத்தின் ஆதி ஆரியர்களும், மத்திய காலத்தாரும் தற்காலத்தாரும் செய்த பிரார்த்தனைகளிற் சிலவற்றைச் சொல்லுங்கள் கேட்போம்.

விடை—அப்படியே சொல்லுகிறேம் கேள்:—

## ஆரியர் வேதபிரார்த்தனைகள்.

### ருக்வேதம் 1-127-ல்

"விஸ்வா சாம் த்வா விசாம் பக்திம் ஹவா மஹேஸர் வாஸாம் ஸாமாநம் தம்பதிம் புஜே ஸத்ய கீர்வஹஸம்புஜே"

எமது குடும்பத்தின் குலதெய்வமே! பொது வானவனே! குடும்பத் தலைவனே, ஸத்திய ஞான லோலனே, நினது அருளை நாடி வணங்கச் சித்தமாகிறேம்-என்றும்,

